ஸ்ரீராமஜயம்.





# ॥ श्रीमद्भागवतम् ॥

( दशमस्कन्धम् )

# ஸ்ரீமத் பாகவதம்

## தசமஸ்கந்தம்

பூர்வார்த்தம்

(தேவநாகர ச்லோகங்களுடன் தமிழில்)

ஸ்ரீவைகுண்டம் டாக்டர்

**வீ. யக்ஞராமய்யர்** எல். எம். & எஸ்.

அவர்களால் இயற்றப்பட்டு,

ஸ்ரீவைகுண்டம்

ஸ்ரீ கான வித்யா பிரஸ்ஸில்

பதிப்பிக்கப்பட்டது.

1937

 [விலை ரு. 1—8—0.

# Foreword

Along with the political renaissance of our people there ought to be and there is a cultural renaissance. That is as it ought to be. No nation can live on bread alone. Of course, the immediate problem for India is that of bread, but Indian culture is so ancient, so rich, and so vital that we dare not ignore that heritage. I have therefore noticed with great pleasure the attempts of many scholars to make available to the people of India in their own languages the rich treasures imbedded in our immortal Sanskrit literature. Among the epics Srimadh Bhagavatham holds a unique place. The Dasamaskandam has been translated into Tamil and published by Dr. V. Yegnarama Iyer, a notable contribution in this behalf. Translation is a difficult art. It may be either too literal or too free. The attempt to translate Sanskrit into Tamil will succeed only if there is no hesitation to use Sanskrit words free. This translation has adopted this method and is therefore a success. I sincerely hope and trust that this translation will be widely read and appreciated by the Tamilians in and outside our country. I am confident that such study will amply repay itself in a new spiritual outlook, in a new culture, and in a renewed affection for the great literature and civilisation of our country. I wish very wide circulation for the book which it amply deserves.

S. SATYAMURTI

# முன்னுரை



நம் மக்களின் இராஜ்ய மறுமலர்ச்சியுடன் நம் கலைகளிலும் ஓர் மறுமலர்ச்சியைக் காண்கிறோம். அது இன்றியமையாதது; அதுவே முறையுமாம். ஏனெனில் ஒரு தேசமும் உணவைத் தேடி ஊனைவளர்ப்பதையே லக்ஷியமாகக் கொண்டு வாழ முடியாது. தற்சமயம் நம்மவருக்கு மிக்க அவசியமானது உணவே. எனினும், நம்முன்னோர் நமக்கீந்துள்ள இந்தியக் கலைகளை நாம் புறக்கணிக்கத் துணியோம். இதற்குக் காரணம் அவற்றின் தொன்மையும், வளமும், முக்கியமுமாம். ஆகலால் அழிவிலா ஸம்ஸ்கிருத இலக்கியத்தில் புதைந்து கிடக்கும் செல்வக் களஞ்சியங்களைத் தாய்மொழி மூலம் யாவரும் அனுபவிக்குமாறு பண்டிதர் பலரும் முயன்று வருவதைக் கண்டு மிக்க மகிழ்வுறுகிறேன். புராணங்களில் ஸ்ரீமத் பாகவதம் ஓர் தனி ஸ்தானம் வகிக்கின்றது. டாக்டர் எக்ஞராமய்யர் இதனது பத்தாவது ஸ்கந்தத்தை தமிழில் மொழிபெயர்த்து வெளியிட்டிருப்பது குறிப்பிடத் தக்க சேவையாகும். நூல்களைச் செவ்வனே மொழிபெயர்த்தல் சிரமம் மிகுந்த காரியம். ரஸமின்றி வார்த்தைக்கு வார்த்தை எழுதி விடலாம்; அல்லது முதநூலின் போக்கைவிட்டு அகல விலகி எழுதிவிடலாம். ஸம்ஸ்கிருதத்திலிருந்து வெற்றிபெற தமிழில் மொழிபெயர்ப்பதில் ஸம்ஸ்கிருத பதங்களைச் சற்றும் தயங்காமல் தாராளமாய் உபயோகிக்க வேண்டும். இவ்வழியை இந்நூலாசிரியர் பின்பற்றியிருப்பதால் இவரது மொழிபெயர்ப்புச் சிறந்ததாக இருக்கின்றது. நம் தேசத்திலும் அதற்கு வெளியிலும் வசிக்கும் தமிழ் மக்களனைவரும் இதை வாசித்துப் போற்றவேண்டுமென்பது எனது எண்ணம். அவர்கள் அவ்வாறே செய்வார்கள் என்றும் நம்புகிறேன். இதை வாசிப்பதன் மூலம் நாம் புதிய முறையில் ஆத்ம சிந்தனையில் ஆழ்ந்து, நற்துறையில் பயிற்சி பெற்று, நம் தேசத்தின் சீர் மிகுந்த இலக்கியத்தின் பாலும் நாகரீகத்தின் பாலும் நமக்குள்ள அன்பைப் பலப்படுத்திக் கொள்வோம் என்பது எனது திட நம்பிக்கை. இப் புத்தகம் பரந்து வாசிக்கப்பட வேண்டுமென்று நான் விரும்புகிறேன்; அதற்கு இப்புஸ்தகம் எல்லா வழிகளிலும் உரியது.

எஸ். சத்தியமூர்த்தி

# முகவுரை.

आनन्दस्य हरेर्लीला ग्रन्धार्थो भवति स्मृतः । ஸ்ரீமத் பாகவதம் ஆனந்த ரூபியான ஹரியின் லீலைகளையே முழுதும் வர்ணிக்கின்றது. அமிருதமயமானது.

अत्र सर्गो विसर्गश्च स्थानं पोषणमूतयः ।
मन्वन्तरेशानुकथा निरोधो मुक्तिराश्रयः ॥

अशरीरस्य विष्णोः पुरुषशरीरस्वीकारः सर्गः । पुरुषाद्ब्रह्मादीनां उत्पत्तिः विसर्गः । तेषामाधारस्य लोकपञ्चस्य व्यवस्था स्थानम् । स्थितानां अभिवृद्धिः पोषणम् । पुष्टानां आचारः ऊतिः । तत्रापि सदाचारो मन्वन्तरम् । तत्रापि विष्णुभक्तिः ईशानुकथा । विष्णुभक्तानां प्रपञ्चाभावो निरोधः । निष्प्रपञ्चानां स्वरूपलाभो मुक्तिः । मुक्तानां ब्रह्मस्वरूपेण अवस्थानं आश्रयः ॥

12-ஸ்கந்தங்கள் அடங்கியது. ஸர்க்கம் முதலிய 10 லக்ஷணங்கள் அமைந்தது. (1) அசரீரியாயிருக்கும் விஷ்ணு விராட் புருஷசரீரத்தை எடுப்பது ஸர்க்கம் எனப்படும். (2) விராட்புருஷனிடமிருந்து உலக சிருஷ்டியைச் செய்பவர்களான பிரஜாபதிகளின் உத்பத்தி விஸர்க்கம் எனப்படும். (3) அந்த பிரஜாபதிகளுக்கு ஆதாரமாயிருக்கும் உலகங்களின் வ்யவஸ்தை ஸ்தானமெனப்படும். (4) இவ்விதமிருப்பவர்களைக் காத்து விருத்திசெய்வதுபோஷணம். (5) இவ்விதம் பாதுகாக்கப்படும் ஜீவர்களின் ஆசாரம் (கர்மவாஸனை) ஊதி எனப்படும். (6) அதிலும் ஸாதுக்களின் ஆசாரம் மன்வந்தரம் எனப்படும். (7) அதிலும் ஸதாசாரத்துடனிருந்து விஷ்ணு பக்தி செய்வது ஈசானுகதா எனப்படும். (8) மேற்கூறிய பக்தர்கள் பிரபஞ்சத்தின் தோற்றத்தை மறந்திருப்பது நிரோதம் எனப்படும். (9) அத்தகைய பிரபஞ்சத் தோற்றமற்றவர்கள் பகவத் ஸ்வரூபத்தை அடைவது முக்தி எனப்படும். (10) முக்தர்களின் ஸச்சிதானந்த அத்விதீய பிரம்ம பாவம் ஆச்ரயம் எனப்படும்.

I. முதலாவது ஸ்கந்தம்:—

இதில் வக்தா, சுரோதா, (சொல்லுகிறவர், கேட்பவர்) இவர்களின் லக்ஷணங்களைக் கூறி அவர்களின் நிலைமைக்குத் தகுந்தபடி 3 பேதங்கள் கூறப்பட்டன.

श्रोतारः शौनको व्यासः परीक्षिच्च उत्तमाः क्रमात् ।
वक्तारोऽपि तथा सूतो नारदः शुक इत्यपि ।
वैराग्यस्य प्रकर्षेण प्रकर्षोऽत्र विवक्षितः ॥

(1) சௌனகரும் ஸூதரும் மந்தாதிகாரிகள் (2) வியாஸரும் நாரதரும் மத்திபமாதிகாரிகள் (3) பரீக்ஷித்தும் சுகரும் உத்தமாதிகாரிகள். பரீக்ஷித்தின் வைராக்கியத்தின் ஆதிக்கியத்தால் அவரை வியாஸர் நாரதர் முதலியவர்களுக்கும் மேலாகக் கூறியிருக்கிறது.

स्वपरप्रतिबन्धोनं स्फीतं राज्यं जहौ नृपः ।
इति वैराग्यदार्ढ्योक्त्यै प्रोक्ता द्रौणिजयादयः ॥

பாண்டவர்களான ஞாதிகளிடமிருந்தோ, கிருஷ்ணபகவான் யாதவவீரர்கள், அச்வத்தாமன் முதலிய மற்றவர்களிடமிருந்தோ, எவ்வகை இடையூறுமில்லாதிருந்தும், சக்கிரவர்த்தியான பரீக்ஷித், செழிப்பான தமது ராஜ்யத்தைத் தியாகஞ் செய்தது அவரது வைராக்கியத்தின் மேன்மையை விளக்குகிறது. அச்வத்தாமனை அர்ஜுனன் ஜயித்ததும், கிருஷ்ண பகவான் வீரர்களான யாதவர்களை உபஸம்ஹாரஞ் செய்துவிட்டு வைகுண்டாரோஹணம் செய்ததும், பாண்டவர்கள் மஹாப்பிரஸ்தானம் செய்ததும், பரீக்ஷித்துக்கு எவ்வகை இடையூறுமில்லையென்று காட்டுவதற்கே இந்த ஸ்கந்தத்தில் கூறப்பட்டன.

II. இரண்டாவது ஸ்கந்தம்:—

(2.) द्वितीये श्रवणाङ्गानि ध्यानं श्रद्धा विमर्शनम् । द्विद्विषड्भिः दशाध्याये ध्यानं साधारणे हरेः ॥ देहेऽसाधारणे जीवैः श्रद्धा श्रोतरि वक्तरि । उत्पत्तौ च उपपत्तौ च विमर्शस्तत्र देहयोः ॥ उत्पत्तिः त्रिविधान्यस्य मूर्तामूर्तविभागतः । उपपत्तिः त्रिधाऽऽक्षेपसमाधानप्रयोजनैः॥ त्रयाणां दशभिर्भेदैः इत्यध्याया दश क्रमात् ।

இதில் சிரவணவிதிகள் அல்லது சிரவணாங்கங்கள் கூறப்படுகின்றன. அவைபாவன:— (1) தியானம் (2) சிரத்தை (3) ஆராய்ச்சி. (1) தியானம்:- இது 2 விதம்.

1. மானிட சரீரம்போன்ற ஸாதாரணதேகத்தில் பகவானைத் தியானித்தல். 2. பகவானுடைய அத்புதமான சரீரத்தில் பகவானைத் தியானித்தல். இவை 1, 2 அத்தியாயங்கள்.

(2) சிரத்தை அதாவது ஆஸ்திகபுத்தி. இது 2 விதம். 1. வக்தாவின் (சொல்லுகிறவரின்) சிரத்தை 2. சுரோதாவின் (கேட்பவரின்) சிரத்தை. இவை 3, 4 அத்தியாயங்கள்.

(3) ஆராய்ச்சி. இது இரண்டுவிதம். 1. தியானத்திற் கூறிய தேகங்களின் உத்பத்தி விஷயமாக்ச் செய்யும் ஆராய்ச்சி. உத்பத்தி 3 விதம்:— 1. தியானத்திற்குரிய ஸாதாரண சரீரத்தில் மூர்த்தம், (காரணவஸ்துக்கள் உலகரூபமாக அமைந்த தன்மை) 2. அமூர்த்தம், (காரணவஸ்துக்கள் காரணரூபமாகவே இருக்கும் தன்மை.) 3. அஸாதாரணமான சரீரம்:- இது ஒரேவிதம். இவை 5, 6, 7 அத்தியாயங்களில் முறையே கூறப்பட்டன. 2. உபபத்தி:- மேற்கூறிய சரீரங்களின் உத்பத்தியின் பொருத்தத்தைப் பற்றி விசாரிப்பது. 8-வது அத்தியாயத்தில் அச்சரீரங்கள் ஏற்படமுடியாதென்று ஆக்ஷேபம். 9-ல் அவை ஏற்படக்கூடும் என்று ஸமாதானம். 10-ல் உத்பத்தியின் பிரயோஜனம்.

III. மூன்றுவது ஸ்கந்தம்:—ஸர்க்கம். இது 2-விதம்.

(3.) सर्गः कारणसंभूतिः भिन्नासा योगसांख्ययोः । विदुरायोक्तवान्योगं मैत्रेयः देवहूतये ॥ कपिलः सांख्यमित्येतौ इतिहासाविहोदितौ ॥ ऊनविंशतिराद्योत्र चतुर्भिः विदुरागमः । अष्टभिः सर्गविस्तारः सप्तभिः क्रीडता हरेः ॥ सर्गाधारधरोद्धर्तुः द्वितीयस्तु चतुर्दश ॥ एकेन तत्रसंक्षिप्तः सर्गस्तद्विस्तरोक्तये । चतुर्भिः कपिलोत्पत्तिः नवभिः कपिलोक्तयः ॥

(1) யோக இதிஹாஸ ஸர்க்கம்:— இதை மைத்திரேயர் விதுரருக்குக் கூறினர். 4 அத்தியாயங்களால் விதுரர் மைத்திரேயரை அடைவதும், 8 அத்தியாயங்களால் ஸர்க்க வர்ணனைகளும், 7 அத்தியாயங்களால் வராஹாவதாரமும் அதன் காரணமும், சொல்லப்பட்டன. ஸிருஷ்டிக்கு ஆதாரமாயிருக்கும் பூமியை பகவான் வராஹாவதாரஞ் செய்து உத்தாரணஞ் செய்ததால், அவ்வவதாரம் இங்கு கூறப்பட்டது. (2) ஸாங்கிய இதிஹாஸ ஸர்க்கம்:— இதை 14 அத்தியாயங்களால் கபிலர் தேவஹூதிக்கு உபதேசித்தார். 1 அத்தியாயத்தால் ஸிருஷ்டியின் சுருக்கம்; 4 அத்தியாயங்களால் கபிலரின் உத்பத்தி; 9 அத்தியாயங்களால் கபிலரின் உபதேசங்கள். ஆகவே இதில் 2 பிரகரணங்கள்.

**IV.** நான்காவது ஸ்கந்தம்:— விஸர்க்கம்.

(4.) स्त्रीबालप्रौढवृद्धत्वे चतुःप्रकरणीकृता ।
सतीध्रुवपृथुप्राचीनेतिहासास्तदुक्तये ॥

புருஷஸிருஷ்டி:— வைவஸ்வத மனுவாலும் அவரது புத்திரர்களாலும், புத்திரிகளாலும் விருத்தியடைந்த ஸிருஷ்டி கூறப்படுகிறது. தவிர ஆண் பெண் பாலன் விருத்தன் எல்லோரும் மோக்ஷத்துக் குரியவர்கள் என்பதைக் காட்டுவதற்காக, ஸதிதேவி, துருவன், பிருது சக்கிரவர்த்தி, பிராசீனபர்ஹிஸ் இவர்களின் சரித்திரம் இங்கு சொல்லப்பட்டது.

पुण्यं पुत्रस्य पितुरप्यन्तःकरणशुद्धये ।
भवेदिति द्योतयितुं प्रचेतोवृत्तिवर्णनम् ॥

புத்திரன் செய்த புண்ணியம் பிதாவின் அந்தக்கரண சுத்திக்குக் காரணமாயுமிருக்கும் என்பதை விளக்கவே ப்ரசேதஸ்ஸுகளின் கதை சொல்லப்பட்டது.

**V.** ஐந்தாவது ஸ்கந்தம்:— ஸ்தானம்.

(5.) मर्यादापालनं स्थानं तास्तिस्रो लोकभेदतः । लोकाः क्षिति-द्योपातालं प्रियव्रततदुद्भवैः ॥ क्षितेः द्वीपादिमर्यादाः कृताः प्रोक्तः तदन्वयः ॥

ஸ்தானம்:— பகவான் ஏற்படுத்திய வரம்புகளை ரக்ஷிப்பது. லோக பேதத்தால் 3 வகை—(1) பூமி (2) சுவர்க்கம் (3) பாதாளம். பூமியில் த்விபம் முதலிய பேதங்களை யெல்லாம் செய்து பரிபாலித்த பிரயவ்ரதரின் வம்சம் 15 அத்தியாயங்களால் கூறப்பட்டது.

**VI.** ஆறுவது ஸ்கந்தம்:— போஷணம்.

(6.) षष्ठे एकोनविंशत्या पुष्टिस्साऽनुग्रहोहरेः । कृतेऽपि पातके यत्र न पातः प्रत्युतोन्नतिः । सोऽनुग्रहः अजामिलस्य भुवीन्द्रस्य यथा दिवि । अतिलङ्घितमर्यादभक्तरक्षणलक्षणम् ॥

புஷ்டி என்பது மஹாபாதகத்தைச் செய்தவர்களைக் கீழே தள்ளாது, கருணையுடன் அவர்களுக்கு உயர்பதவி யளிப்பது. பூலோகத்தில் அஜாமிளனும் சுவர்க்கத்தில் இந்திரனும் மஹா பாதகத்தைச் செய்தவர்கள். இந்திரன், விச்வரூபன் விருத்திரன் மருத்துக்கள் இவர்களை வதம் செய்தான். ஆயினும் பகவான் அவர்களைக் கருணையுடன் பாதுகாத்தார் என்பது சொல்லப்பட்டது.

VII. ஏழாவது ஸ்கந்தம்:— ஊதி.

(7.) सप्तमे पञ्चदशभिः अध्यायैः ऊतिवर्णनम् । ऊतिः प्राक्कर्मजा कर्ता भोक्तासीत्यादिवासना ॥ प्रह्लादस्य परो रागो द्वेषः पितृपितृव्ययोः । विष्णौ तयोरविषये कर्मणोऽसुरभावदात् ॥

ஊதி என்பது முன்கர்மவாஸனை. அதற்கேற்றவாறு ஒருவன் மறுஜன்மங்களிலும் கர்மங்களைச் செய்து அவைகளின் பலனை அடைகிறான். பிரஹ்லாதனுக்கு விஷ்ணுவிடம் மேலான பக்தியும், அவனது தந்தைக்கும் சிற்றப்பனுக்கும் அதே விஷ்ணுவிடம் த்வேஷமும், வாஸனையால் ஏற்பட்டன.

प्राङ्निष्कामसकामाभ्यां भक्तिभ्यां वासनाद्वयम् । चतुस्सनो हि प्रह्लादः इतरौ विजयोजयः । द्वयोरप्येकफलता कर्मणो भोगतः क्षयात् ॥

ஸனகாதிகள் நிஷ்காம பக்தி செய்து வந்ததால் அவர்கள் இப்பொழுது பிரஹ்லாதனாகப் பிறந்தும் பிரேமவாஸனையால் குழந்தை முதல் ஹரியிடம் இடைவிடாப் பக்தி செய்தார்கள். ஜயவிஜயர்கள் ஸகாம பக்தி செய்ததால் ஹிரண்யாக்ஷன் ஹிரண்யகசிபு இவர்களாகப் பிறந்து ஹரியிடம் விரோதங்களைக் கொண்டார்கள். ஆயினும் அவர்களிருவருக்கும் பலன் ஒன்றே. அதாவது பகவானுடைய ஸன்னிதியை யடைவது.

VIII. எட்டாவது ஸ்கந்தம்:— மன்வந்தரம்.

(8.) मन्वन्तराणि प्रत्येकं ब्राह्माण्डेषु चतुर्दश । चत्वारि आद्येऽत्र तुर्यस्थं त्रिषु नागेन्द्रमोक्षणम् ॥ द्वे पञ्चमेऽत्र षष्ठस्थं सप्तस्वमृतमन्थनम् ।

त्रयोदशेऽष्टौ नवसु सप्तमे बलिबन्धनम् ॥ चतुर्विंशे मत्स्यकथा षष्ठसप्तम सन्धिजा ॥

பிரம்மாவின் ஒரு தினத்தில் 14-மன்வந்தரங்கள் உண்டு 1-வது அத்தியாயத்தில் நாலுமன்வந்தரங்களும், 5-ல் இரண்டும், 13-ல் எட்டும்சொல்லப்பட்டன. 4-வது மன்வந்தரத்தில் நடந்த கஜேந்திர மோக்ஷம் 2–4 அத்தியாயங்களிலும், 6-ல் நடந்த அமிருதமதனம் 6–12 அத்தியாயங்களிலும், 7-ல் நடந்த பலி சக்கிரவர்த்தியின் கதை 15–23 அத்தியாயங்களிலும் கூறப்பட்டன. 6–7 மன்வந்தரங்களின் சந்தியில் நடந்த மத்ஸ்யகதை 24வது அத்தியாயத்தில் கூறப்பட்டது.

मन्वन्तरं सतां धर्मः मनुभिः यः प्रकाश्यते । स्मरणाचरणाख्यानैः स्वे स्वे सर्पिभिरन्तरे ॥ विपद्यात्मानं ईशाने संपद्यर्थिषु चार्पयेत् । उभयत्र प्रतिज्ञातं निर्वहेदिति स त्रिधा ॥ गजेन्द्रमोक्षणेऽम्भोधिमन्थने बलिबन्धने ॥ सव्यक्तः तं झषो ज्ञाता तत्वतस्तेन ताः कथाः ॥

(1) ஆபத்தில் தன்னை ஈச்வரனுக்கு கஜேந்திரன் போன்று அர்ப்பணம் செய்யவேணும். (2) சமுத்திரம் அமிருதமதனத்தில் லக்ஷ்மீதேவி, கௌஸ்துபமணி, ஐராவதம், இவைகளைப் பிறருக்குக் கொடுத்தது போன்று, செழிப்புற்றகாலத்தில் ஒருவன் தனது ஸம்பத்தை ஈச்வரனுக்கும் யாசகர்களுக்கும் மனப்பூரணமாய் அர்ப்பணம் செய்யவேண்டும். (3) ஆபத்திலோ, ஸம்பத்திலோ, பலிசக்கிரவர்த்திபோன்று, தான் வாக்களித்ததை நிறைவேற்ற வேண்டும். மன்வந்தரம் என்பது ஸாதுக்களின் தர்மமாகும். அந்த ஸாதுக்கள் ஞானதிருஷ்டியால் ஸத்தர்மங்களை அறிந்து அப்படியே தாங்களும் நடத்திக் காட்டினார்கள் என்பது கருத்து. இதை மத்ஸ்ய மூர்த்தியான பகவானே நன்கு அறிந்தவராதலால் அவரே 24-வது அத்தியாயத்தில் இதை உபதேசிக்கிறார்.

IX. ஒன்பதாவது ஸ்கந்தம்:— ஈசானுகதை.

(9.) नवमे तु चतुर्विंशत्यध्यायैः ईशानुकीर्तनम् । ईशा भूपतयस्तत्र रामकृष्णादयस्स्वयम् । इतरे तन्नियोगेन तत्कथा ईशानुकीर्तनम् ।

इलः पृषध्रः शर्यातिः अंबरीषोऽजविप्रयोः । मान्धाताथहरिश्चन्द्रः सगरोऽथ भगीरथः । रामोराष्ट्रभ्रंशलब्धयोः कुशोऽथ मिथिलेश्वरः ॥

ஈசர்கள் என்றால் பூமிக்கு அதிபதிகள். அவர்கள் ராமகிருஷ்ணர்களே. மற்றவர்கள் அவர்களின் ஆக்ஞை பெற்று அரசர்களாக வழங்குகிறார்கள். இளன், பிருஷத்ரன், சர்யாதி, அம்பரீஷன், மாந்தாதா, ஹரிச்சந்திரன், ஸகரன், பகீரதன், ஸ்ரீராமர், குசன், மிதிலேச்வரரான ஜனகர், இவர்கள் ஸூர்ய வம்சத்தைச் சேர்ந்தவர்கள். இவர்களின் சரித்திரம் முதலில் சொல்லப்பட்டது.

ऐलो रामोऽर्जुनक्षत्रवधयोः क्षत्रवृद्धकः । ययातिर्भुक्तिमुक्त्योश्च पूरुस्त्विषु यदुर्द्वयोः । दौष्यन्तिरन्तिभीष्माणां प्राधान्यात् वृष्णिकृष्णयोः ॥

பிறகு சந்திரவம்சத்திலுதித்த புரூரவஸ், பரசுராமர், க்ஷத்ரவிருத்தன், யயாதி, புருவம்சத்தைச் சார்ந்த பரதன் ரந்திதேவர் பீஷ்மர், யதுவம்சத்திலுதித்த விருஷ்ணிகள் பலராமர் ஸ்ரீ கிருஷ்ண பகவான், இவர்களின் கதை முக்கியமாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

X. பத்தாவது ஸ்கந்தம்:—நிரோதம் = பகவானிடம் லயித்தல்.

பத்தாவது ஸ்கந்தத்தில் ஸ்ரீகிருஷ்ண பகவானுடைய சரித்திரம் விஸ்தாரமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. வால்மீகி ராமாயணத்தில் சுந்தரகாண்டம் எத்தகையதோ அத்தகையது ஸ்ரீமத் பாகவதத்தில் தசமஸ்கந்தம். சுந்தரகாண்டத்தைப் பாராயணம்செய்வது போன்று இத் தசமஸ்கந்தத்தைப் பாராயணம் செய்வதற்கு முக்கியமாக எடுத்திருக்கிறது. இது கிருஷ்ணபக்தியையே முக்கியமாகக்கொண்டது.

वेदः पुराणं काव्यं च प्रभुर्मित्रं प्रियेव च ।
वोधयन्तीति हि प्राहुः त्रिवद्भागवतं पुनः ॥

நற்புத்தி புகட்டும் நூல்கள் 3. (1) அரசன்போல் கட்டளையிடும் வேதங்கள். (2) நண்பன்போல் நன்மை தீமைகளை எடுத்துரைத்து, நல்வழியில் திருப்பும் புராணங்கள், (3) காதலிபோல் தன் ரஸங்களால் முதலில் தன் வசப்படுத்திக்கொண்டு, பின் நற்போதனை செய்யும் தன்மைவாய்ந்த காவிய நாடகங்கள். ஆனால்

இந்த பாகவதம் இம்மூன்றின் தன்மை வாய்ந்தது. அதிலும் தசமஸ்கந்தம் விசேஷ ரஸத்துடன் கூடியது.

अनुग्रहाय भूतानां मानुषं देहमास्थितः ।
भजते तादृशीः क्रीडा याः श्रुत्वा तत्परो भवेत् ॥

பகவான் பாமர ஜனங்களின் மனதையும் திருப்பித் தன்னிடம் ஈடுபடுத்துவதற்கென்றே மனுஷசரீரத்தை எடுத்து ராஸக்கிரீடை முதலிய லீலைகளைச் செய்தார்.

धर्मः स्वनुष्ठितः पुंसां विष्वक्सेनकथासु यः ।
नोत्पादयेद्यदि रतिं श्रम एव हि केवलम् ॥

தர்மத்தை எவ்வளவு அனுஷ்டித்தும், அது கிருஷ்ண பகவானுடைய அநந்த கல்யாண குண லீலைகளில் ருசியை உண்டுபண்ணாவிடில், அத்தர்மம் உபயோகமற்றதாகும். அந்த பகவானுடைய கதைகளை எளியநடையில் எல்லோரும் தெரிந்து கொள்ளும்படி எழுதி தேவநாகரத்தில் சுலோகங்களுடன் அச்சிட்டிருக்கிறேன். கதையின் தொடர்ச்சியை விடாமலும் திரும்பத் திரும்பச் சொன்னவைகளை விட்டும், முக்கியமான விடங்களில் விஷயத்தைத் தெளிவாகப் பிரித்தும் எழுதியிருக்கிறேன். தேவநாகரம் எழுத்துத் தெரியாதவர்களுக்கு, தனித் தமிழிலும் அச்சிட்டிருக்கிறேன். பாராயணத்துக்கு உபயோகமாக இருக்கும்படி தனித் தேவநாகரத்தில் தசமஸ்கந்தம் முழுதும் அச்சிட்டிருக்கிறேன். இதன் இரண்டாம் பாகம் இன்னும் 2-மாதங்களில் வெளிவரும். இப் பாகவதத்தை எழுதி அச்சிட்டு வெளியிடுவதற்கு உதவி புரிந்த காரனேஷன் ஹைஸ்கூல் ஸம்ஸ்கிருத பண்டிதர் பிரம்மஸ்ரீ வேங்கடசுப்பிரமணியசாஸ்திரி அவர்களுக்கும், மிஸ்டர் எஸ். நடராஜன், G. M. V. C.; மிஸ்டர் ராமசந்திர ராவ், பி. ஏ., டீச்சர், காரனேஷன் ஹைஸ்கூல், இவர்களுக்கும் இன்னும் முழுமனதுடன் உதவிபுரிந்த மற்றுமுள்ள என் சிநேகிதர்களுக்கும், என் மனமார்ந்த வந்தனத்தைச் செலுத்துகிறேன்.

ஸ்ரீவைகுண்டம்,
28—7—37.

வீ. யக்ஞராமய்யர்.

# அட்டவணை



# ஸ்ரீமத் பாகவதம், தசமஸ்கந்தம்.

---

## முதற் பாகம்.

உ

ஸ்ரீராமஜயம்.



# ॥ श्रीमद्भागवतम् ॥

# ஸ்ரீமத் பாகவதம்.

## ॥ दशमस्कन्धः प्रारभ्यते ॥

## (பத்தாவது ஸ்கந்தம்.)

---

जन्माद्यस्य यतोऽन्वयादितरतश्चार्थेष्वभिज्ञः स्वराट्
तेने ब्रह्म हृदा य आदिकवये मुह्यन्ति यत्सूरयः ।
तेजोवारिमृदां यथाविनिमयो यत्र त्रिसर्गो मृषा
धाम्ना स्वेन सदा निरस्तकुहकं सत्यं परं धीमहि ॥
यं प्रव्रजन्तमनुपेतमपेतकृत्यं द्वैपायनो विरहकातर आजुहाव ।
पुत्रेति तन्मयतया तरवोऽभिनेदुस्तं सर्वभूतहृदयं मुनिमानतोस्मि ॥
नारायणं नमस्कृत्य नरं चैव नरोत्तमम् ।
देवीं सरस्वतीं व्यासं ततो जयमुदीरयेत् ॥

ஸ்ரீ கிருஷ்ண கதையின் சுருக்கம்

ஸ்ரீசுகாசாரியர், ஸூரிய வம்சத்தையும் சந்திர வம்சத்தையும் விரிவாக வர்ணித்து, யதுமஹாராஜனின் வம்சத்தைக் கூறி, பகவான் வஸுதேவருக்கும் தேவகிக்கும் புத்திரனாக அவதரித்த வரலாற்றை இரண்டுசுலோகங்களால் சுருக்கமாய்ச் சொல்லி முடித்தார்.

जातो गतः पितृगृहाद्व्रजमेधितार्थो हत्वा रिपून्सुतशतानि कृतोरुदारः ।
उत्पाद्य तेषु पुरुषः क्रतुभिः समीजे आत्मानमात्मनिगमं प्रथयन् जनेषु ॥

கிருஷ்ணபகவான் காராகிருஹத்தில் திவ்விய அமைப்புடன் பிறந்து பின் மானிடக் குழந்தை போலானார். பிறகு பிதாவின் கிருஹத்தினின்று கோகுலத்தில் விடப்பட்டு, அங்கே வளர்ந்துவரும்பொழுது கோகுலமனைத்தையும் செழிப்புறச் செய்தார். துஷ்ட அரசர்களான சத்துருக்களைக் கொன்று, பல உத்தம மாதர்களை விவாஹஞ்செய்து அவர்களிடத்தில் தமக்கொப்பான பல புத்திரர்களை அடைந்தார். அதன்பின் தம்முடைய ஆஞ்ஞாரூபமான வேதமார்க்கத்தை உலகத்தில் பரவச்செய்து பல யாகங்களால் பரமாத்மாவை ஆராதித்தார்.

**पृथ्व्याः स वा उरुभरं क्षपयन्कुरूणामन्तः समुत्थकलिना युधि भूपचक्रम् ।**
**दृष्ट्या विधूय विजये जयमुद्विघुष्य प्रोच्योद्धवाय च परमं समगात्स्वधाम ॥**

கௌரவர்களுள் பகை உண்டாகி, ஒருவரோடொருவர் சண்டையிடவே, பகவான் பூமியின் பெரும்பாரத்தைப் போக்கி, துஷ்ட அரசர்களைத் தம் பார்வையாலேயே அழித்து "அர்ஜுனன் ஜயித்தான்" என்று வெற்றி கோஷத்தை முழக்கி, உத்தவருக்கு ஆத்மஞானத்தை உபதேசித்து, வைகுண்ட லோகத்திற்குச் சென்றார்.

# முதலாவது அத்தியாயம்

कृष्णावतारचरितश्रवणामृतनिर्वृतः ।
उक्तानुवादेनौत्सुक्याद्राजा पृच्छति तत्पुनः ॥

[ஸ்ரீ கிருஷ்ணவதாரத்தைக் கேட்டுக் களித்த பரீக்ஷித்தரசன் மறுபடியும் அதை விரிவாக வினவுதல்.]

कथितो वंशविस्तारो भवता सोमसूर्ययोः ।
राज्ञां चोभयवंश्यानां चरितं परमाद्भुतम् ॥
यदोश्च धर्मशीलस्य नितरां मुनिसत्तम ।
तत्रांशेनावतीर्णस्य विष्णोर्वीर्याणि शंस नः ॥
अवतीर्य यदोर्वंशे भगवान्भूतभावनः ।
कृतवान्यानि विश्वात्मा तानि नो वद विस्तरात् ॥

சுகமுனிவர் கிருஷ்ண வரலாற்றைச் சுருக்கமாய்க் கூறி முடிந்ததும் பரீக்ஷித்தரசன், "முனிவரிற் சிறந்தவரே! சூரிய

பரீக்ஷித்தின் வினா.

வம்சத்தையும் சந்திர வம்சத்தையும், அவைகளி லுதித்த அரசர்களையும், அவர்களின் அற்புதமான வரலாற்றையும் விஸ்தாரமாக வர்ணித்தீர்கள். தர்மநெறி வழுவாத யதுமஹாராஜனின் வம்சத்தையும் நன்குரைத்தீர்கள். ஆயினும் அந்த வம்சத்தில் ஆதிசேஷனுடைய கலையுடன் அவதரித்த விஷ்ணுவின் மகிமைகளை வெகுவாக உரைக்கவேண்டும். முனிவரே! அண்டபிண்ட சராசரங்களை ரக்ஷிக்கும் பகவான் யதுவின் வம்சத்திலவதரித்து என்னென்ன அமானுஷமான லீலைகளைச் செய்தனரோ அவைகளை விஸ்தாரமாக வர்ணிக்க வேண்டும்.

निवृत्ततर्षैः उपगीयमानात् भवौषधात् श्रोत्रमनोऽभिरामात् ।
क उत्तमश्लोकगुणानुवादात् पुमान्विरज्येत विना पशुघ्नात् ॥
पितामहा मे समरेऽमरञ्जयैः देवव्रताद्यातिरथैः तिमिङ्गिलैः ।
दुरत्ययं कौरवसैन्यसागरं कृत्वाऽतरन् वत्सपदं स्म यत्प्लवाः ॥

இவ்வுலகத்தில் முக்தர்கள், மோக்ஷத்தையடைய விரும்புகிறவர்கள், கேவலம் விஷயசுகங்களில் பற்றுள்ளவர்களாகிய மூவகை ஜனங்களுள் எந்த அறிஞன், அப்புருஷோத்தமனுடைய குணங்களைக் கேட்பதில் ஆசைகொள்ளாதிருப்பான்? விருப்பு வெறுப்பற்ற நாரதாதி முனிகளும் அவருடைய புகழைக் கானஞ்செய்கிறார்கள். மோக்ஷத்தை விரும்புகிறவர்கள் சம்சாரத்தினின்றும் கரையேறுவதற்கு இதையே சிறந்த ஸாதனமென்று கருதுகின்றனர். கேவலம் இந்திரிய சுகத்தை நாடுகின்றவர்களும், காதுக்கினிமையா யிருக்கிறதென்று இதை விரும்புகிறார்கள். ஆகலால் புருஷோத்தமனுடைய கதைகளைக் கேட்பதில் ஆசைகொள்ளாதவன், ஆத்மாவின் உண்மை அறியாத மூடனேயாவான். குரு பாண்டவ யுத்தத்தில் கௌரவ சைனியம் சமுத்திரம்போன்று அளவு கடந்திருந்தது. அதில், திமிங்கிலம்போல் பயங்கரமாய் யுத்தஞ்செய்யும் பீஷ்மர் முதலான பல வீரர்கள் இருந்தார்கள். அவர்கள் போரில் தேவர்களையும் ஜயிக்கத்தக்க ஆற்றலும், திறமையும் உடையவர்கள். கடத்தற்கரிய கடலை ஓடத்தினுதவியால் எளிதில் தாண்டுவது போன்று, ஜயித்தற்கரிய கௌரவ சைனியத்தை கிருஷ்ண பகவானின் உதவியால் என் முன்

ஞேர்கள் எளிதில் ஜயித்தார்கள். கிருஷ்ணனை ஓடமாகக்கொண்ட என் முன்னேர்களுக்கு சமுத்திரமும் கன்றின் குளப்படி நீராயிற்று.

द्रौण्यस्त्रविप्लुष्टमिदं मदङ्गं सन्तानवीजं कुरुपाण्डवानाम् ।
जुगोप कुक्षिं गत आत्तचक्रो मातुश्च मे यः शरणं गतायाः ॥
वीर्याणि तस्याखिलदेहभाजाम् अन्तर्वहिः पूरुषकाल रूपैः ।
प्रयच्छतो मृत्युमुतामृतं च मायामनुष्यस्य वदस्व विद्वन् ॥

அது மாத்திரமா! இதோ என் சரீரத்தைப் பாரும்! அசுவத்தாமனின் பிரும்மாஸ்திரம் குரு பாண்டவ வம்சத்தில் எஞ்சியிருக்கும் என்னைப் பின்தொடர்ந்து என் சரீரத்தை எரிக்கவே, என் தாய் உத்தரை, கிருஷ்ணனைச் சரண மடைந்தாள். அப்பொழுது அவர் சக்கிராயுதத்தைக் கையிலேந்தி அவளுடைய கர்ப்பத்தில் நுழைந்து என்னைப் பிழைப்பித்தாரன்றே? ஆத்மஸ்வரூபத்தை அறிந்தவரே! எல்லாப் பிராணிகளின் உள்ளும் புறமும் இருக்கும் அந்த கிருஷ்ண பரமாத்மா, தம்மைப் பஜித்தவர்களுக்கு அந்தர்யாமியாயிருந்து மோக்ஷத்தையும், தம்மைப் பஜிக்காது அற்ப போகங்களில் மூழ்கிக் கிடப்பவர்களுக்கு காலரூபியாயிருந்து ஸம்ஸாரத்தையும், கொடுக்கின்றாரன்றே! அவர் மாயா மானிடனாக அவதரித்ததின் மகிமைகளை வர்ணிக்கவேண்டும்.

रोहिण्यास्तनयः प्रोक्तो रामः संकर्षणस्त्वया ।
देवक्या गर्भसंवन्धः कुतो देहान्तरं विना ॥
कस्मान्मुकुन्दो भगवान्पितुर्गेहाद्व्रजम् गतः ।
क्व वासं ज्ञातिभिः सार्धं कृतवान्सात्वतां पतिः ॥
व्रजे वसन्किमकरोन्मधुपुर्यां च केशवः ।
भ्रातरं चावधीत्कंसं मातुराद्धाऽतदर्हणम् ॥

ஆதிசேஷனின் கலையான பலராமரை ரோஹிணி புத்திரனென்று உரைத்தீர்கள். அவரை இப்பொழுது தேவகியின் புதல்வரென்று கூறுவது எங்ஙனம்? எக்காரணத்தால், பகவான் பிதாவின் கிருஹத்தினின்று நந்தகோகுலஞ் சென்றார்? பந்துக்களுடன் எவ்விடத்தில் வசித்துவந்தார்? கோகுலத்திலும், மதுராபுரியிலும் பகவான் வசித்து வருங்கால் அவர் என்னென்ன அற்புதமான காரி

யங்களைச் செய்தார்? கம்ஸனை எதற்காகக் கொன்றார்? தாயின் சகோதரனைக்கொல்லுவது எங்ஙனம் பொருத்தமாகும்?

देहं मानुषमाश्रित्य कति वर्षाणि वृष्णिभिः ।
यदुपुर्यां सहावात्सीत्पत्न्यः कत्यभवन्प्रभोः ॥
एतदन्यच्च सर्वं मे मुने कृष्णविचेष्टितम् ।
वक्तुमर्हसि सर्वज्ञ श्रद्दधानाय विस्तृतम् ॥
नैषाऽतिदुःसहा क्षुन्मां त्यक्तोदमपि वाधते ।
௰ पिवन्तं त्वन्मुखांभोजच्युतं हरिकथामृतम् ॥

மானிடசரீரத்தை எடுத்து, யாதவர்களுடன் பகவான் யதுநகரத்தில் எவ்வளவு காலம் வசித்தார். எத்தனை மாதர்களை மணம் புரிந்தார்? முனிவரே! ஸர்வஞ்ஞரே! நான் கேட்டவைகளையும், என் கேள்விகளில் அடங்காதவைகளையும் எனக்கு உரைக்கவேண்டும். நான் கிருஷ்ண பகவானின் வரலாற்றைக் கேட்பதில் மிகுதியும் ஆவல் கொள்ளுகிறேன். முன் எனக்குப் பாபத்தை விளைவித்த இக்கொடிய பசி, இப்பொழுது ஜலபானமும் செய்யாது உம்முடைய முகத்தாமரையினின்று பெருகும் கிருஷ்ண கதையாகிற அமுதத்தை இடைவிடாது பானஞ்செய்யுமென்னை, சிறிதும் துன்புறுத்தவில்லை."

एवं निशम्य भृगुनन्दनसाधुवादं वैयासकिः स भगवानथ विष्णुरातम् ।
प्रत्यर्च्य कृष्णचरितं कलिकल्मषघ्नं व्याहर्तुमारभत भागवतप्रधानः ॥

கிருஷ்ணாவதார காரணம்.

இவ்விதம் பரீக்ஷித்ராஜன் கூறிய நன்மொழிகளைக் கேட்டு பகவத்பக்தர்களுக்குள் சிறந்தவரும், முக்காலத்தை அறிந்தவருமான சுகர், மன்னவனை வெகுவாகப் புகழ்ந்து, கலியின் பாபத்தைப் போக்குகின்ற கிருஷ்ணபரமாத்மாவின் கதைகளை சொல்லலுற்றார்.

सम्यग्व्यवसिता वुद्धिस्तव राजर्षिसत्तम ।
वासुदेवकथायां ते यज्जाता नैष्ठिकी रतिः ॥
भूमिर्दृप्तनृपव्याजदैत्यानीकशतायुतैः ।
आक्रान्ता भूरिभारेण व्रह्माणं शरणं ययौ ॥

"ராஜரிஷிகளில் முதல்வரே! உம்முடைய புத்தி நல்வழியில் வேரூன்றியிருக்கிறது என்பது திண்ணம். அதனாலன்றோ வாசுதேவனுடைய கதைகளைக் கேட்பதில் உம்முடைய மனம்

இயற்கையில் நாடிற்று. முன்னொரு சமயம் துஷ்ட அசுரர்கள், ராஜாக்கள் என்ற வியாஜத்தால் பூமியைத் துன்புறுத்தி, எங்கும் வியாபித்துக் கொண்டார்கள்.

गौर्भूत्वाऽश्रुमुखी खिन्ना क्रन्दन्ती करुणं विभोः ।
उपस्थितान्तिके तस्मै व्यसनं स्वमवोचत ॥
ब्रह्मा तदुपधार्याथ सह देवैस्तया सह ।
जगाम सत्रिनयनस्तीरं क्षीरपयोनिधेः ॥
तत्र गत्वा जगन्नाथं देवदेवं वृषाकपिम् ।
पुरुषं पुरुषसूक्तेन उपतस्थे समाहितः ॥

பூதேவி பசு ரூபத்தை எடுத்து, கண்ணீரைப் பெருக்கி "ஹோ" வென்று கதறிக்கொண்டு, பிரம்மதேவரிடஞ் சென்று, தனக்கு நேர்ந்திருக்கும் கஷ்டத்தைத் தெரிவித்தாள். நான்முகக்கடவுளும் அவள் படும் பாட்டை யறிந்து, தேவர்களையும் பரமசிவனை யும் அழைத்துக்கொண்டு க்ஷீரசமுத்திரஞ் சென்றார். அங்குசென்று மனதை யடக்கி ஜகந்நாதரான வாசுதேவரைப் புருஷஸூக்த முறை யால் தியானஞ் செய்யலானார்.

गिरं समाधौ गगने समीरितां निशम्य वेधास्त्रिदशानुवाच ह ।
गां पौरुषीं मे शृणुतामराः पुनर्विधीयतामाशु तथैव माचिरम् ॥
पुरैव पुंसाऽवधृतो धराज्वरो भवद्भिरंशैर्यदुषूपजन्यताम् ।
स यावदुर्व्या भरमीश्वरेश्वरः स्वकालशक्त्या क्षपयंश्चरेद्भुवि ॥

அப்பொழுது அவருடைய இருதயத்தினின்று ஒரு குரல் கிளம்பிற்று. அதைக்கேள்வியுற்ற பிரம்மதேவர், தேவர்களைப் பார்த்துப் பின்வருமாறு சொல்லலுற்றார். "தேவர்காள்! புருஷோத்தமனின் வார்த்தைகளைக் கேளுங்கள். பிறகு அதன்படி நடவுங்கள். இதில் தாமதஞ் செய்யாதீர்கள். பூமிக்கு நேர்ந்திருக்கும் கஷ்டத்தை அவர் முன்னரே அறிந்திருக்கிறார். ஈசனுக்கும் ஈசனான பகவான், தம் கால சக்தியால் பூமியின் பாரத்தைப் போக்கி எவ்வளவுகாலம் பூமியில் சஞ்சரிக்கின்றனரோ அதுவரை நீங்கள் உங்கள் தேவசக்தியுடன் யதுகுலத்தில் தோன்றி அவருக்கு உதவுங்கள்.

वसुदेवगृहे साक्षाद्भगवान्पुरुषः परः।
जनिष्यते तत्प्रियार्थं संभवन्तु सुरस्त्रियः ॥

वासुदेवकलानन्तः सहस्रवदनः स्वराट् ।
अग्रजो भविता देवः हरेः प्रियचिकीर्षया ॥
विष्णोर्माया भगवती यया संमोहितं जगत् ।
आदिष्टा प्रभुणांशेन कार्यार्थे संभविष्यति ॥

அந்தப் பரம்புருஷனே வசுதேவரின் கிருஹத்தில் பூர்ண கலையுடன் அவதரிக்கப் போகிறார். தேவமாதர்களும் பூமியில் தோன்றி அவருக்குப் பணிவிடை செய்க. வாசுதேவரின் கலையாகிய ஆதிசேஷனும் தமையனாக அவதரித்து, அவருக்கு மனமகிழ்ச்சியைச் செய்வார். எல்லோரையும் மயங்கச்செய்யும் விஷ்ணுவின் மாயை, அவரது கட்டளையின்படி மாயாசக்தியுடன் அவதரித்து, இக்காரியத்தில் உதவி புரிவாள்."

इत्यादिश्यामरगणान् प्रजापतिपतिर्विभुः ।
आश्वास्य च महीं गीर्भिः स्वधाम परमं ययौ ॥

இவ்விதம் தேவர்களைக் கட்டளையிட்ட பிறகு பிரம்மதேவர் பூதேவியை அன்பான வார்த்தைகளால் மறுபடியும் சமாதானஞ் செய்து பிரம்மலோகஞ் சென்றார்.

शूरसेनो यदुपतिर्मथुरामावसन्पुरीम् ।
माथुरान् शूरसेनांश्च विषयान्बुभुजे पुरा ॥
राजधानी ततः साभूत्सर्वयादवभूभुजाम् ।
मथुरा भगवान्यत्र नित्यं सन्निहितो हरिः ।
तस्यां तु कर्हिचिच्छौरिर्वसुदेवः कृतोद्वहः ।
देवक्या सूर्यया सार्धं प्रयाणे रथमारुहत् ॥

மதுராபுரியில் சூரசேனன் என்று ஓரரசன் இருந்தான். அவன் யாதவர்களுக்குத் தலைவன். மதுரையைச்சார்ந்த சூரசேனம் முதலிய தேசங்களை ஆண்டுவந்தான். ஆதலால் வசுதேவர் மதுராபுரி யாதவ அரசர்கட்குப் பிரதான நகரமா தேவகியை பிற்று. இம்மதுராபுரியை கிருஷ்ணபகவான் என் மணம்புரிதல். றைக்கும் தமக்குகந்த இடமாகக்கொண்டு பக்தர்களுக்கு அருள்புரிந்து வருகிறார். அப்பட்டணத்தில் ஒரு சமயம், சூரரின் புதல்வர் வசுதேவரென்பார், தேவகியை மணந்து அவளுடன் ரதத்திலேறித் தம் கிருஹத்திற்கு ஏகினர்.

उग्रसेनसुतः कंसः स्वसुः प्रियचिकीर्षया ।
रश्मीन्हयानां जग्राह रौक्मै रथशतैर्वृतः ॥
शङ्खतूर्यमृदङ्गाश्च नेदुर्दुन्दुभयः समम् ।
प्रयाणप्रक्रमे तावद्वरवध्वोः सुमङ्गलम् ॥

உக்கிரசேனனின் மைந்தன் கம்ஸனென்பவன், சகோதரி தேவகி பால் வைத்த அன்பின் மிகுதியால், ரதத்திலேறி, அதை ஓட்டத் தொடங்கினன். அத்தருணம் சங்கு முதலிய வாத்தியங்கள் வெகுவாக முழங்கின. யானைகளும், குதிரைகளும் ஆயிரக்கணக்காகப் பின்தொடர்ந்து சென்றன.

पथि प्रग्रहिणं कंसमाभाष्याऽऽहाशरीरवाक् ।
अस्यास्त्वामष्टमो गर्भो हन्ता यां वहसेऽबुध ॥
इत्युक्तः स खलः पापो भोजानां कुलपांसनः ।
भगिनीं हन्तुमारब्धः खड्गपाणिः कचेऽग्रहीत् ॥

இவ்விதம் கம்ஸன் கடிவாளத்தைப் பிடித்து ரதத்தை ஓட்டும்பொழுது வழியில் ஆகாசவாணி, 'அடே கம்ஸா! அறிவு கெட்டவனே! நீ எவளிடம் அன்புவைத்து ரதத்தை ஓட்டுகின்றனையோ, அவளுடைய எட்டாவது குழந்தை உன்னைக் கொல்லப் போகின்றது" என்று உரக்க உரைத்தது. இக்கூற்றைச் செவிமடுத்த கம்ஸன், கூரிய கத்தியைக் கையிலேந்தி தேவகியின் தலைமுடியை இழுத்து, அவளைக் கொல்லுவதற்கு எத்தனித்தான். தன் குலத்திற்கு நேரிடும் அபகீர்த்தியையும், அவள் தன் சகோதரி என்பதையும், அவன் சிறிதும் கவனிக்கவில்லை.

तं जुगुप्सितकर्माणं नृशंसं निरपत्रपम् ।
वसुदेवो महाभाग उवाच परिसान्त्वयन् ॥

கொடிய சித்தமுள்ளவனும், நாணமிழந்தவனும், எல்லோராலும் பழிக்கத்தக்கவனுமான கம்ஸனைப் பார்த்து, வசுதேவர் அவன் மனம் இளகுமாறு பல நல்வார்த்தைகளைக் கூறலானார்.

श्लाघनीयगुणः शूरैर्भवान्भोजयशस्करः ।
स कथं भगिनीं हन्यात्स्त्रियमुद्वाहपर्वणि ॥
मृत्युर्जन्मवतां वीर देहेन सह जायते ।
अद्य वाऽब्दशतान्ते वा मृत्युर्वै प्राणिनां ध्रुवः ॥

"சூரனே! நீ போஜவம்சத்திற்கே புகழை வளர்ப்பவனன்றோ! உன்னுடைய சிறந்த குணங்களைச் சூரர்களும் கொண்டாடுகிறார்களே. அப்படியிருக்க விவாஹ சமயத்தில் உன் சகோதரியைக் கொல்லுவதற்கு எங்ஙனம் மனங்கொண்டாய்? வீரனே! பிறப்பெடுத்தவர்களுக்குத் தேகத்துடன் யமனும் கூடவே பிறக்கிறான் என்பதை நீ அறியாயோ? இன்றைக்கோ, அல்லது வெகுகாலத்திற்குப் பிறகோ எல்லாப் பிராணிகளும் மரணமுறுவது நிச்சயம்.

देहे पञ्चत्वमापन्ने देहीकर्मानुगोऽवशः ।
देहान्तरमनुप्राप्य प्राक्तनं त्यजते वपुः ॥
व्रजंस्तिष्ठन्पदैकेन यथैवैकेन गच्छति ।
यथा तृणजलूकैवं देहीकर्मगतिं गतः ॥

இந்த தேகம் மரிக்கும் தருவாயில் இருக்கும்பொழுது அந்த தேகத்தின் உள்ளிருக்கும் "ஆத்மா" முன்ஜன்மத்தில் செய்த வினைக்குத்தக்கவாறு, வேறு தேகத்தை அடைந்து அதன் பின் இந்த தேகத்தை விடுகின்றது. எவ்விதம் மனிதன் ஒரு காலை பூமியில் வைத்து நின்றுகொண்டு மற்றொரு காலை வேறிடத்தில் வைத்து நடக்கிறானோ, எவ்விதம் புல்லுப்பூச்சி, ஒரு புல்லில் ஊர்ந்துகொண்டு மற்றொரு புல்லைப் பிடித்த பிறகே முன்னிருந்த புல்லை விடுகிறதோ, அவைபோன்று இந்த லிங்கசரீரமும், தன் கர்மத்தின் பயனை அனுசரித்து வேறு சரீரத்தை அடைந்து, முன் சரீரத்தை விடுகிறது.

स्वप्ने यथा पश्यति देहमीदृशं मनोरथेनाभिनिविष्टचेतनः ।
दृष्टश्रुताभ्यां मनसाऽनुचिन्तयन्प्रपद्यते तत्किमपि ह्यपस्मृतिः ॥
यतो यतो धावति दैवचोदितं मनो विकारात्मकमाप पञ्चसु ।
गुणेषु मायारचितेषु देह्यसौ प्रपद्यमानः सह तेन जायते ॥

அழகான வஸ்துக்களைப் பார்த்தும், இனிய குரல்களைக் கேட்டும் மகிழ்ந்த ஒருவன், அவைகளையே மனதில் நினைத்துக்கொண்டு தூங்கும்பொழுது, அத்தகைய விருப்பங்களையே வேறு சரீரத்தை எடுத்து எவ்விதம் அனுபவிக்கிறானோ, அவ்விதமே இந்த சரீரம் இறந்த பிறகும், அதனுள்ளிருந்த ஆத்மா, தான் செய்த வினைக்கேற்ப வேறு சரீரத்தை அடைகிறது. முன் ஜன்மத்தில்

செய்த தீவினையின் வசத்தால், மனம் மாயாகுணங்களிற் பற்றுண்டு அந்தந்தக் குணங்களையே யடைந்து, மறுபடியும் அந்தக் குணங்களுடன் பிறப்பை யடைகிறது.

तस्मान्न कस्यचित् द्रोहमाचरेत्स तथाविधः ।
आत्मनः क्षेममन्विच्छन्द्रोग्धुर्वै परतो भयम् ॥
एषा तवानुजा बाला कृपणा पुत्रिकोपमा ।
हन्तुं नार्हसि कल्याणीमिमां त्वं दीनवत्सल ॥

ஆதலால் தன்னுடைய க்ஷேமத்தைக் கருதுகின்ற மனிதன், இவைகளை நன்காராய்ந்து ஒருவருக்கும் ஒருவகைக்கெடுதியும் செய்யமாட்டான். ஆனால் பிறருக்குத் தீங்கிழைப்பவனே, இம்மையிலும், மறுமையிலும் பயத்தை அடைகிறான். இவளோ உம்முடைய சகோதரி; சிறுபெண்; அனாதை; இவளைக் கொல்லுவது சரியன்று.

न ह्यस्यास्ते भयं सौम्य यद्वागाहाशरीरिणी ।
पुत्रान्समर्पयिष्येऽस्या यतस्ते भयमुत्थितम् ॥

சிறந்த குணங்கள் வாய்ந்தவரே! அசரீரிவாக்கும் இவளிடமிருந்து உமக்குப் பயத்தைக் கூறவில்லையே. இவளிடமிருந்துண்டாகும் குழந்தைகளிடமிருந்தல்லவோ உமக்குப் பயம் நேர்ந்திருக்கிறது. ஆதலால், பிறந்தவுடன் குழந்தைகளை உம்மிடம் அர்ப்பணஞ் செய்கிறேன். இவளை விட்டுவிடும்."

स्वसुर्वधान्निववृते कंसस्तद्वाक्यसारवित् ।
वसुदेवोऽपि तं प्रीतः प्रशस्य प्राविशद्गृहम् ॥

வசுதேவர் கூறிய அறமொழிகளைக் கேட்டு, அவைகளின் சாரத்தை நன்குணர்ந்த கம்ஸன், சகோதரியைக் கொல்லவேண்டுமென்ற எண்ணத்தை விலக்கினான். வசுதேவரும் அவனிடம் திருப்தியடைந்து, அவனை வெகுவாகப் புகழ்ந்து, தன்னில்லஞ் சென்றார்.

अथ काल उपावृत्ते देवकी सर्वदेवता ।
पुत्रान्प्रसुषुवे चाष्टौ कन्यां चैवानुवत्सरम् ॥
कीर्तिमन्तं प्रथमजं कंसायानकदुन्दुभिः ।
अर्पयामास कृच्छ्रेण सोऽनृतादतिविह्वलः ॥

சிலகாலஞ் சென்றபிறகு ஸர்வதேவதா வடிவமான தேவகி, வருஷத்திற்கு ஒரு குழந்தையாக எட்டு பிள்ளைகளையும் ஒரு பெண்ணையும் பெற்றாள். அவைகளில் கீர்த்திமானென்ற முதல் குழந்தை பிறந்தவுடன், வசுதேவர் வாடின முகத்துடன் அதை எடுத்துக்கொண்டு கம்ஸனிடஞ் சென்றார். தம் வாக்கைப் பொய்ப்பிக்க அவர் நடுங்கினர். அரசே! இதில் என்ன ஆச்சரியமிருக்கிறது.

किं दुःसहं नु साधूनां विदुषां किमपेक्षितम् ।
किमकार्यं कदर्याणां दुस्त्यजं किं धृतात्मनाम् ॥

ஸத்திய ஸந்தர்கள் எந்தக் கஷ்டத்தைத்தான் பொறுக்கார்கள்? ஆத்மஞானிகள் எந்தச்சுகத்தைத்தான் விரும்புவார்கள்? துஷ்டர்கள் எக்கொடிய காரியத்தைத்தான் செய்யார்கள்? பகவானிடம் மனதைச் செலுத்தியவர்கள் எதைத்தான் தியாகஞ்செய்யார்கள்?

दृष्ट्वा समत्वं तच्छौरेः सत्ये चैव व्यवस्थितिम् ।
कंसस्तुष्टमना राजन्प्रहसन्निदमब्रवीत् ॥

அரசே! மெய்த்திருவிலும் வெந்துயரிலும் ஒத்திருக்கும் வசுதேவரது மனவுறுதியையும், அவர் சத்தியத்தில் சலியாது நிலைநின்றதையும் உணர்ந்து, கம்ஸன் அவரிடம் திருப்தியடைந்து சிறிது முறுவல் பூத்து,

प्रतियातु कुमारोऽयं न ह्यस्मादस्ति मे भयम् ।
अष्टमाद्युवयोर्गर्भान्मृत्युर्मे विहितः किल ॥

"நீர் இக்குழந்தையை எடுத்துக்கொண்டு உமது கிருஹத்திற்குச் செல்லும். இதன் மூலம் எனக்குப் பயம் தோன்றவில்லை. அசரீரியும் உங்கள் எட்டாவது குழந்தையினிடமிருந்தன்றோ எனக்கு மரணத்தைக் கூறியது" என்றான்.

तथेति सुतमादाय ययावानकदुंदुभिः ।
नाभ्यनन्दत तद्वाक्यम् असतोऽविजितात्मनः ॥

பிறகு வசுதேவர், "அப்படியே ஆகட்டும்" என்று சொல்லிக் குழந்தையை எடுத்துச்சென்றார். ஆயினும் அவர் சஞ்சல மனமுடைய கம்ஸனின் வார்த்தைகளைச் சிறிதும் நம்பவில்லை. இக்கயவனது மனம் எச்சமயம் மாறுகிறதோவென்று நினைக்கலானர்.

नन्दाद्या ये व्रजे गोपा याश्चामीषां च योषितः ।
वृष्णयो वसुदेवाद्या देवक्याद्या यदुस्त्रियः ॥
सर्वे वै देवताप्राया उभयोरपि भारत ।
एतत्कंसाय भगवान् शशंसाभ्येत्य नारदः ।
भूमेर्भारायमाणानां दैत्यानां च वधोद्यमम् ॥

அச்சமயம், நாரதர், கம்ஸனிடம் தனிமையாய்ச்சென்று கோகுலத்திலுள்ள நந்தர் முதலிய கோபாலர்களும், அவர்களது பெண்டிர்களும், வசுதேவர் முதலிய விருஷ்ணிகளும், தேவகி முதலிய ஸ்திரீகளும் தேவர்களின் அம்சமென்றும் உரைத்து, ஆசுரர்களைக் கொன்று பூமியின் பாரத்தைப் போக்குவதற்குத் தேவர்கள் செய்யும் கடும் முயற்சியையும் அவனிடம் தெரிவித்தார்.

ऋषेर्विनिर्गमे कंसो यदून्मत्वा सुरानिति ।
देवक्या गर्भसंभूतं विष्णुं च स्ववधं प्रति ॥

முனிவர் சென்றதும், கம்ஸன் யாதவர்களை தேவர்களாக நினைக்கலானான். அவ்விதமே தேவகியின் கர்ப்பத்திலிருந்து விஷ்ணுபகவான் அவதரித்துத் தன்னைக் கொல்லப் போகிறார் என்பதையும் உணர்ந்தான்.

देवकीं वसुदेवं च निगृह्य निगडैर्गृहे ।
जातं जातमहन्पुत्रं तयोरजन शङ्कया ॥

பிறகு அவன், தேவகியையும், வசுதேவரையும் விலங்கிலிட்டுச் சிறைப்படுத்தி, கீர்த்திமானென்ற முதற் குழந்தையைக் கொன்று, அவர்கட்குப் பிறக்கும் குழந்தைகளை விஷ்ணுவென்றே சந்தேகித்து ஒவ்வொரு குழந்தையையும் பிறந்தவுடன் கொல்லலானான்.

उग्रसेनं च पितरं यदुभोजान्धकाधिपम् ।
स्वयं निगृह्य बुभुजे शूरसेनान्महाबलः ॥

மிக்க பலம் வாய்ந்த கம்ஸன், யாதவர்கள், போஜர்கள், அந்தகர்களாகிய மூவர்கட்கும் அரசனான உக்கிரசேன மகாராஜனை நேரில் விலங்கிட்டு அவருடைய சிம்மாசனத்திலேறி, சூரசேன ராஜ்யங்களை அரசு புரிந்தான்.

---

# இரண்டாவது அத்தியாயம்.

{ द्वितीये कंसघाताय देवक्या गर्भगो हरिः ।
ब्रह्मादिभिः स्तुतः साच सान्त्वितेति निरूप्यते ॥ }

[கம்ஸனைக் கொல்லுவதின் பொருட்டு தேவகியின் கர்ப்பத்திலிருக்கும் பகவானை தேவர்கள் துதித்தல்–தேவர்கள் தேவகியைத் தேற்றுதல்.]

प्रलंब बक चाणूर तृणावर्तमहाशनैः ।
मुष्टिकारिष्टद्विविदपूतनाकेशिधेनुकैः ॥
अन्यैश्चासुरभूपालैः बाणभौमादिभिर्युतः ।
यदूनां कदनं चक्रे बली मागधसंश्रयः ॥

கம்ஸன் அரசுபுரியுங்கால், பிரலம்பன், பகன், சாணூரன், திருணாவர்த்தன், அகாசுரன், முஷ்டிகன், அரிஷ்டன், த்விதன், பூதனை, கேசி, தேனுகன் முதலிய பல அரக்கர்கள் அவனை எப்பொழுதும் சூழ்ந்திருந்தார்கள். பாணன், நரகன் முதலிய அசுர மன்னவர்கள் அவனுடன் நட்புக்கொண்டனர். ஜராசந்தன் தன்னிரு பெண்களையும் அவனுக்குக் கொடுத்தான். இத்தகைய பலம் வாய்ந்த கம்ஸன் தன் பலத்தில் செருக்குண்டு யாதவர்களைக் கதறச் செய்தான்.

ते पीडिता निविविशुः कुरुपाञ्चालकेकयान् ।
शाल्वान्विदर्भान्निषधान्विदेहान्कोसलानपि ॥
एके तमनुरुन्धाना ज्ञातयः पर्युपासते ।

அவர்கள் கம்ஸனால் பீடிக்கப்பட்டு குருதேசம், பாஞ்சாலதேசம், கேகய தேசம், விதர்ப்ப தேசம் முதலிய இடங்களுக்குச் சென்று வசித்து வந்தார்கள். அக்ரூரர் போன்ற சிலர் உறவினர்கள் மட்டும் அனுசரித்தாற்போன்று அவனுடன் வாழ்ந்து வந்தார்கள்.

हतेषु षट्सु बालेषु देवक्या औग्रसेनिना ॥
सप्तमो वैष्णवं धाम यमनन्तं प्रचक्षते ।
गर्भो बभूव देवक्या हर्षशोकविवर्धनः ॥

இவ்விதமிருக்கையில் கூற்றன் கம்ஸன் தேவகியின் ஆறு குழந்தைகளைக் கொன்றான். அதன்பின் தேவகி வைஷ்ணவ சக்தி வாய்ந்த ஆதிசேஷனை ஏழாவது கர்ப்பத்தில் தரிக்கலானாள். தேவகி ஆனந்த ரூபியான பகவானைக் கர்ப்பத்தில் தரித்ததால் சந்தோஷத்தையும், கம்ஸனிடமிருந்து பயந்ததால் துக்கத்தையும் ஒருங்கே கொண்டாள்.

भगवानपि विश्वात्मा विदित्वा कंसजं भयम् ।
यदूनां निजनाथानां योगमायां समादिशत् ॥
गच्छ देवि व्रजं भद्रे गोपगोभिरलंकृतम् ।
रोहिणी वसुदेवस्य भार्याऽऽस्ते नन्दगोकुले ।
देवक्या जठरे गर्भं शेषाख्यं धाम मामकम् ।
तत्सन्निकृष्य रोहिण्या उदरे सन्निवेशय ॥

தன்னையே நாதனாகக்கொண்ட யாதவர்கள் கம்ஸனிடமிருந்து பயப்படுவதைப் பார்த்து பகவான் மாயாசக்தியை அழைத்துப் பின்வருமாறு கட்டளையிட்டார். "மாற்றருஞ் சிறப்புவாய்ந்தவளே! தேவி! கோபாலர்களும் பசுக்களும் மிகுதியாயிருக்கும் கோகுலஞ்செல். அங்கு நந்தரின் கிருஹத்தில் வசுதேவரின் மனைவி ரோஹிணி என்பவள் வசித்துவருகிறாள். தேவகியின் கர்ப்பத்திலிருக்கும் என் கலையாகிற ஆதிசேஷனை, உன் யோகத்திறமையாலெடுத்து, ரோஹிணியின் வயிற்றில் வைக்கவேண்டும்.

अथाहमंशभागेन देवक्याः पुत्रतां शुभे ।
प्राप्स्यामि त्वं यशोदायां नन्दपत्न्यां भविष्यसि ॥
अर्चिष्यन्ति मनुष्यास्त्वां सर्वकामवरेश्वरीम् ।
नामधेयानि कुर्वन्ति स्थानानि च नरा भुवि ।
दुर्गेति भद्रकालीति विजया वैष्णवीति च ॥
माया नारायणीशानी शारदेत्यम्बिकेति च ॥
गर्भसंकर्षणात्तं वै प्राहुः संकर्षणं भुवि ।
रामेति लोकरमणात् बलं बलवदुच्छ्रयात् ॥

தேவி! என் பரிபூர்ணகலையுடன் நான் தேவகியின் கர்ப்பத்தில் தோன்றி பூமியில் அவதரிக்கப்போகிறேன். நீயும் நந்தரின் மனைவி யசோதையிடம் பிறக்கவேண்டும். வரங்கொடுக்கும் உன்னைப் பற்

பல பெயர்கொண்டு ஜனங்கள் ஆராதிப்பார்கள். துர்க்கை, பத்ர காளி, நாராயணி, சாரதா, அம்பிகா என்று பல பெயர்களை நீ அடைவாய் ரோஹிணியின் புதல்வனை ஸங்கர்ஷணனென்றும், ராமனென்றும் பலன் என்றும் அழைப்பார்கள்."

संदिष्टैवं भगवता तथेत्योमिति तद्वचः ।
प्रतिगृह्य परिक्रम्य गां गता तत्तथाकरोत् ॥
गर्भे प्रणीते देवक्या रोहिणीं योगनिद्रया ।
अहो विस्रंसितो गर्भ इति पौरा विचुक्रुशुः ॥

பகவான் இவ்வாறு கட்டளையிடவே மாயை "அப்படியே ஆகட்டும்" என்று ஏற்றுக்கொண்டு, அவரை வலம்வந்து, பூலோகஞ் சென்று, தேவகியின் கர்ப்பத்தை எடுத்து ரோஹிணியின் உதரத்தில் வைத்தாள். அப்பொழுது நாட்டார் நகரத்தாரனைவரும் தேவகியின் கர்ப்பம் குலைந்ததென்று மிக்க வருத்தத்துடன் பேசிக் கொண்டார்கள்.

भगवानपि विश्वात्मा भक्तानामभयंकरः ।
आविवेशांशभागेन मन आनकदुन्दुभेः ॥
स बिभ्रत्पौरुषं धाम भ्राजमानो यथा रविः ।
दुरासदोऽतिदुर्धर्षो भूतानां संबभूवह ॥

**பகவான் தேவகியின் கர்ப்பத்தை அடைதல்**

எப்பொருளகத்தும் நண்ணுகின்ற நாராயணன், பூபாரத்தைப் போக்கி பக்தர்களுக்கு அபயத்தை யளிப்பதற்காக, தம் பூர்ண கலையுடன் வசுதேவரின் மனத்து வந்தடைந்தார். வசுதேவர் தம் அகத்திலுள் தோன்றிய பெருஞ்சுடரைத் தாங்கியதும், கோடி சூரியன் போன்று பிரகாசிக்கலானார். ஆனால் அவருடைய ஒளியை ஒருவராலும் தாங்கமுடியவில்லை; பார்ப்பவர்களின் கண்களோ மழுங்கின.

ततो जगन्मङ्गलमच्युतांशं समाहितं शूरसुतेन देवी ।
दधार सर्वात्मकमात्मभूतं काष्ठा यथाऽऽनन्दकरं मनस्तः ॥

பிறகு சூரரின் புதல்வரான வசுதேவர், பகவானுடைய சக்திவாய்ந்ததும், உலகத்திற்கு நன்மையைச் செய்வதுமான அந்தச்சுடரை, தேவகியிடம் அர்ப்பணஞ்செய்தார். உலகத்தை மகிழச்

செய்யும் வெண்ணிலாக் கதிர்மதியைக் கீழ்த்திசை பொறப்பது போல், தேவகியும் விஷ்ணுவின் கலையை மனத்திலேந்தி, தனக்குள் பொறுத்தனள்.

**सा देवकी सर्वजगन्निवासनिवासभूता नितरां न रेजे ।**
**भोजेन्द्रगेहेऽग्निशिखेव रुद्धा सरस्वती ज्ञानखले यथा सती ॥**

எல்லா உலகங்களுக்கும் இருப்பிடமான கிருஷ்ண பகவான் தேவகியின் உதரத்தை அடைந்தும் தேவகி அதிகமான ஸந்தோஷத்தையடையவில்லை. குடத்தினுள் வைக்கப்பட்ட மாமணி விளக்குப் போன்றும், கயவன் கற்ற நூல் போன்றும், கம்ஸனுடைய காராகிருஹத்தில் தளையிடப்பட்ட தேவகி, முகமலர்ச்சியுடன் நன்கு சோபிக்கவில்லை.

**तां वीक्ष्य कंसः प्रभयाऽजितान्तरां विरोचयन्तीं भवनं शुचिस्मिताम् ।**
**आहैष मे प्राणहरो हरिर्गुहां ध्रुवं श्रितो यन्न पुरेयमीदृशी ॥**

ஆயினும் அவளுடைய தேககாந்தி வீட்டின் மூலைகளையும் பிரகாசப் படுத்திற்று. அவளுடைய மந்தஹாஸம், அவள் மனத்தெளிவை நன்கு விளக்கிற்று. இத்தோற்றத்தைக் கண்ணுற்ற கம்ஸன், "இச்சுடரிழையாள் பண்டைத் தேவகியல்லள். மாயன் ஹரியே, சிங்கம் குகையில் மறைந்திருப்பது போன்று, இவள் வயிற்றகத்து வந்தடைந்தார்; கூற்றுவன்போல் என் உயிரையும் குடிப்பார்" என்று உணர்ந்தான்.

**किमद्य तस्मिन्करणीयमाशु मे यदर्थतन्त्रो नविहन्ति विक्रमम् ।**
**स्त्रियाः स्वसुर्गुरुमत्या वधोऽयं यशः श्रियं हन्त्यनुकालमायुः ॥**

"ஆயினும் இப்பொழுது இவ்விஷயத்தில் நான் என் செய்வது? தன் காரியத்தில் கண்ணுயிருப்பவன் ஆலோசனையின்றி ஒரு காரியத்தைச் செய்து, தன் பலத்தை வீணுக்கலாகாது. அதிலும் தேவகாரியத்தில் கருத்துவைத்த பகவான், தம் பராக்கிரமத்தை வீணுக்கமாட்டார். ஆதலால் இப்பொழுது, தேவகியைக் கொல்லுவேனாகில், பெண்ணைக் கொன்ற பாபமும், தங்கையைக் கொன்ற பாபமும், கர்ப்பிணியைக் கொன்ற பாபமும், என்னை அடையும். அதனால் என் புகழும், ஐசுவரியமும், ஆயுளும் அழிந்துவிடும் என்பது நிச்சயம்.

स एष जीवन्खलु संपरेतो वर्ततेयोऽत्यन्तनृशंसितेन ।
देहे मृते तं मनुजाः शपन्ति गन्ता तमोऽन्धं तनुमानिनो ध्रुवम् ॥

இத்தகைய கொடுஞ்செயலைச் செய்தவன் உயிருடனிருந்தும் இறந்தவனாகக் கருதப்படுவான். அவனை ஜனங்கள் பலவாறு பழிப்பார்கள். அவன் கெட்ட நரகங்களிற் புகுந்து பல கஷ்டங்களை யனுபவிப்பான்".

इति घोरतमाद्भावात्सन्निवृत्तः स्वयं प्रभुः ।
आस्ते प्रतीक्षंस्तज्जन्म हरेर्वैरानुबन्धकृत् ॥

பிரபுவான கம்ஸன், இவ்வாறு தனக்குள் ஆலோசித்து, அக்கொடிய செயலினின்றும் தானாகவே விலகிக்கொண்டான். பிறகு அவன், விஷ்ணுவினிடம் கடும் விரோதத்தை வைத்து, அவர் எப்பொழுது உதயமாகிறார் என்பதையே எதிர்பார்த்திருந்தான்.

आसीनः संविशंस्तिष्ठन्भुञ्जानः पर्यटन्पिबन् ।
चिन्तयानो हृषीकेशमपश्यत्तन्मयं जगत् ॥

இருக்கும் பொழுதும், நிற்கும் பொழுதும், மற்று எகும் பொழுதும், மெல்லணையில் படுக்கும் பொழுதும், உரைக்கும் பொழுதும், உண்ணும் பொழுதும், ஹரியையே மனதினால் சிந்தித்து, நோக்குழி நோக்குழி யெல்லாம் அவரது உருவமே கண்டான்.

ब्रह्मा भवश्च तत्रैत्य मुनिभिर्नारदादिभिः ।
देवैः सानुचरैः साकं गीर्भिर्वृषणमैडयन् ॥

அச்சமயத்தில் பிரம்மா, பரமசிவன், நாரதர் முதலிய ரிஷிகள், தேவர்கள், எல்லோரும் தங்கள் தங்கள் பரிவாரங்களுடன் தேவகியின் காராகிருஹத்திற்குச் சென்று, பகவானை, மதுரமான சொற்களால் துதித்தார்கள்.

सत्यव्रतं सत्यपरं त्रिसत्यं सत्यस्य योनिं निहितं च सत्ये ।
सत्यस्य सत्यमृतसत्यनेत्रं सत्यात्मकं त्वां शरणं प्रपन्नाः ॥

" ஸத்தியத்தையே விரதமாகக்கொண்டு, ஸத்திய வடிவமாயிருக்கும் உம்மை நாங்கள் சரணமடைகிறோம். உம்முடைய ஸங்கல்பம் ஒருவராலும் தடுக்கமுடியாதது. பஞ்ச பூதங்களால் அமைந்துள்ள இப் பிரபஞ்சத்திற்கும் நீர் மேலானவர். மூன்று காலத்திலும் நீர் ஒருவரே

தேவர்கள் துதித்தல்.

உண்மைப் பொருளாக விளங்குகிறீர். ஸத்தியம் உம்மிடம் ஒருபொழுதும் சலிப்பதில்லை. இப்பிரபஞ்சம் உம்மிடமிருந்து தோன்றி, உம்மால் ரக்ஷிக்கப்பட்டு, உம்மிடத்தில் லயத்தை அடைகிறது. நீரொருவரே எல்லோரையும் சமமாய்ப் பார்ப்பவர். இன் சொல்லும் ஸத்தியமும் உமது கண்கள்.

**एकायनोऽसौ द्विफलस्त्रिमूलश्चतूरसः पञ्चविधः षडात्मा ।**
**सप्तत्वगष्टविटपो नवाक्षो दशच्छदी द्विखगो ह्यादिवृक्षः ॥**

இந்த பிரபஞ்சமாகிற ஆதி விருக்ஷத்திற்கு மூலப் பிரகிருதி அடிமரமாகும். புண்ணியமும் பாபமும், சுகமும் துக்கமும் இரண்டு பழங்களாகும். ஸத்வம், ரஜஸ், தமஸ் ஆகிய முக்குணங்களும் மூன்று வேர்களாகின்றன. தர்மம். அர்த்தம், காமம், மோக்ஷம் ஆகிய நான்கு புருஷார்த்தங்களும், நான்கு ரஸங்களாகின்றன. சப்தம். ரூபம், ரஸம், கந்தம், ஸ்பர்சம் முதலிய ஐந்து தன் மாத்திரைகளும் ஐந்து விழுதுகளாகும். இவ்விரண்டிற்கும் பிறத்தல், இருத்தல், வளர்தல். முதிர்தல், குறைதல், அழிதல் ஆகிய இவைகள் ஆறும் அறுவகை சுபாவமாகும். தோல், மாமிசம், இரத்தம். கொழுப்பு, மச்சை, எலும்பு, ரேதஸ் முதலிய எழு தாதுக்களும் எழு பட்டைகளாகும். இரண்டு கால்களும், இரண்டு கைகளும், தலையும், கழுத்தும், மார்பும், வயிறும் எட்டுக் கொப்புகளாகும். ஒன்பது துவாரங்களும் ஒன்பது பொந்துகளாகும். ஐந்து பிராணன்களும் ஐந்து உபப்பிராணன்களும் பத்து இலைகளாகும். ஜீவாத்மாவும், பரமாத்மாவும் மரத்திலுட்கார்ந்திருக்கும் இரண்டு பக்ஷிகளாகும்.

**त्वमेक एवास्य सतःप्रसूतिस्त्वं सन्निधानं त्वमनुग्रहश्च ।**
**त्वन्मायया संवृतचेतसस्त्वां पश्यन्ति नाना नविपश्चितो ये ॥**

நீர் ஒருவரே இந்த ஜகத்திற்குக் காரணமாக இருக்கிறீர். நீரே இதை ரக்ஷிக்கிறீர். உம்மிடத்திலேயே இப்பிரபஞ்சம் லயத்தை அடைகின்றது. ஆயினும் உமது மாயையால் வஞ்சிக்கப்பட்டவர்கள், உம்மை மூவராகவும் பலராகவும், பார்க்கிறார்கள். அவர்கள் உம்மை நன்கு மதிப்பார்களோ? ஆனால் உள்ளத்தில் தெளிவுற்றோர்களே உம்மை ஒருவராகப் பார்க்கிறார்கள்.

बिभर्षि रूपाण्यवबोध आत्मा क्षेमाय लोकस्य चराचरस्य ।
सत्त्वोपपन्नानि सुखावहानि सतामभद्राणि मुहुः खलानाम् ॥

[ஞானக்கொழுந்தே! ஆனந்தவெள்ளமே! இவ்வுலகங்களிலுள்ள சராசரங்களைக் காப்பதற்கு நீர் பல அமலமான உருவங்களை எடுக்கிறீர். 'உமது அவதாரம் தீயோரைத் தீர்ப்பதற்கும், நல்லோரைக் காப்பதற்கும் உளது' என்று பெரியோர்கள் கூறுகின்றனர்.

त्वय्यम्बुजाक्षाखिलसत्त्वधाम्नि समाधिनाऽऽवेशितचेतसैके ।
त्वत्पादपोतेन महत्कृतेन कुर्वन्ति गोवत्सपदं भवाब्धिम् ॥

செந்தாமரைக்கண்ணா! எல்லாப் புவனங்களுக்கும் இருப்பிடமான உம்மிடத்தில் சில வித்வான்கள், ஸமாதியால் தங்கள் மனதைச் செலுத்தி, மகான்களின் உபதேசம் பெற்று, உம்முடைய திருவடியாகிய கப்பலின் உதவிகொண்டு ஜனனமரணமாகிற ஸம்ஸார ஸாகரத்தைக் கன்றின் குளம்படிநீர் போல் எளிதில் தாண்டுகிறார்கள்

स्वयं समुत्तीर्य सुदुस्तरं द्युमन्भवार्णवं भीममदभ्रसौहृदाः ।
भवत्पदाम्भोरुहनावमत्र ते निधाय याताः सदनुग्रहो भवान् ॥

அழிவிலா ஐசுவரியம் உடையவரே! அம்மகான்கள், தாண்டுதற்கரிய பயங்கரமான பிறவிக்கடலைக் கடந்து, பிராணிகளிடத்தில் வைத்த கருணையின் மிகுதியால், உம்முடைய பாதாரவிந்தமாகிற கப்பலை அவ்விடமே வைத்துவிட்டு, பரமபதஞ் சென்றார்கள். ஏனெனில் அக்கப்பலின் உதவியால் மற்றவர்களும் உம்முடைய அனுக்கிரஹத்தை பெற்று, நற்கதி யடையலாமன்றோ!

येऽन्येऽरविन्दाक्ष विमुक्तमानिनस्त्वय्यस्तभावादविशुद्धबुद्धयः ।
आरुह्य कृच्छ्रेण परं पदं ततः पतन्त्यधोऽनादृतयुष्मदङ्घ्रयः ॥

தாமரைக்கண்ணா! எவர், தம் யோகப்பயிர்ச்சியில் செருக்குண்டு உம்மைப் பஜியாதிருக்கிறார்களோ, அவர்கள் கெடுமதியுடையவர்களே. அம்மூடர்கள், பல ஜன்மங்களில் செய்த யோகப்பயிர்ச்சியால் மோக்ஷத்துக்குரியவர்களாயினும், உம்முடைய பாதாரவிந்தத்தை ஸேவிக்காத ஒரு காரணத்தால் அதோ கதியாய் விழுகிறார்கள்.

तथा न ते माधव तावकाः क्वचिद्भ्रश्यन्ति मार्गात्त्वयि बद्धसौहृदाः ।
त्वयाभिगुप्ता विचरन्ति निर्भया विनायकानीकपमूर्धसु प्रभो ॥

மாதவ. பிரம்மஞ்ஞானத்தை அளிப்பவரே! மோக்ஷமார்க்கத்திற் செல்லும் உம்முடைய ஏகாந்த பக்தர்களோவெனில், ஒரு காலத்திலும் அவ்விதம் விழுவதில்லை. பிரபுவே! நீர் அவர்களை நன்கு பாதுகாப்பதால், அவர்கள் சிறிதும் பயமின்றிச் சத்துருவின் தலைமேல் சஞ்சரிக்கின்றனர்.

न नामरूपे गुणजन्मकर्मभिर्निरूपितव्ये तव तस्य साक्षिणः ।
मनोवचोभ्यामनुमेयवर्त्मनो देव क्रियायां प्रतियन्त्यथापि हि ॥

ஆக்கமும் அழிதலுமின்றி, அகண்டமாய்ப் பரவி நிற்கும் ஸாக்ஷியே! வாக்குடன் மனதுக்கும் எட்டாத வள்ளலே! பெயர் வடிவம், குணம், கருமம் இவை உமக்கில்லாவிடினும், அறத்தின் வாழ்வாக இருத்தலால், நீர், வேள்வியில் பக்தர்கள் எப்பெயரால் உம்மை அழைக்கிறார்களோ, அப்பெயருக்குரிய வடிவத்தை எடுத்துக்கொண்டு அவர்களின் பூஜையை ஏற்றுக்கொள்கிறீர்.

शृण्वन् गृणन् संस्मरयंश्च चिन्तयन्नामानि रूपाणि च मङ्गलानि ते ।
क्रियासु यः त्वच्चरणारविन्दयोः आविष्टचेता न भवाय कल्पते ॥

ஈசா! எவர்கள் உம்முடைய நாமாவையும், அழகு வாய்ந்த உருவங்களையும், காதால் செவிமடுத்து, வாயால் ஓதி, கருத்தினால் சிந்தித்து, கண்களால் களிப்புறக்கண்டு, உமது சீரடிக்கமலத்தைத் தியானஞ் செய்கிறார்களோ, அவர்கள் மோக்ஷ சுகங்களையெல்லாம் கொள்ளைகொண்டு உண்ணுகிறார்கள்; பிறவிக்கடலில் விழுவதில்லை.

दिष्ट्या हरेऽस्या भवतः पदो भुवो भारोऽपनीतस्तव जन्मनेशितुः ।
दिष्ट्याङ्कितां त्वत्पदकैः सुशोभनैः द्रक्ष्याम गां द्यां च तवानुकम्पिताम् ॥

சரணமடைந்தவர்களின் கஷ்டங்களை நாசஞ்செய்யும் ஹரியே! எங்கள் அதிர்ஷ்ட வசத்தால் நீர் இப்புவியில் தோன்றி பூபாரத்தைப் போக்கினீர். உம்முடைய அழகான அடிவைப்புகள் பூமியை அலங்காரஞ்செய்வதை நாங்கள் பார்க்கப்போகிறோம். அதுபோன்று நீர், சுவர்க்கத்தையும் கருணையுடன் கடாக்ஷிப்பதை நாங்கள் பார்ப்போம்.

न तेऽभवस्येश भवस्य कारणं विना विनोदं बत तर्कयामहे ।
भवो निरोधः स्थितिरप्यविद्यया कृता यतः त्वय्यभयाश्रयात्मनि ॥

ஈசா! நீர் பிறப்பற்றவராயிருந்தும் விளையாட்டாகவே பல சரீரங்களை எடுக்கிறீர். விளையாட்டைத் தவிர வேறு என்ன காரணத்தைக் கூறுவது? பிறந்தலும் மாய்தலும் மாயையால் நேர்ந்தனவேயன்றி, வாய்மையாக மன்னுயிருக்கும் இல்லையென்று வித்வான்கள் கூறுகிறார்கள். அவ்விதமிருக்க, மாயையைக் கடந்து நின்ற உமக்கு அவை எங்ஙனம் இருக்கும்!

मत्स्याश्वकच्छपवराहनृसिंहहंसराजन्यविप्रविबुधेषु कृतावतारः ।
त्वं पासि नस्त्रिभुवनं च तथाधुनेश भारं भुवो हर यदूत्तम वन्दनं ते ॥

ஈசா! நீர் மத்ஸ்ய கூர்ம வராஹ நரஸிம்ஹாதி பல்வகை அவதாரங்களை யெடுத்து எங்களையும் மூவுலகங்களையும் இதற்கு முன் எவ்விதம் ரக்ஷித்தீரோ, அவ்விதமே இப்பொழுதும், யது சிரேஷ்டராக அவதரித்து, பூபாரத்தைப் போக்கி, எங்களனைவரையும் காத்தருள வேண்டும். உம்மை வணங்குகிறோம்.

दिष्ट्याऽम्ब ते कुक्षिगतः परः पुमानंशेन साक्षाद्भगवान्भवाय नः ।
माभूद्भयं भोजपतेर्मुमूर्षोर्गोप्ता यदूनां भविता तवात्मजः ॥

தாயே! அதிர்ஷ்டவசத்தால், பகவான் தம் பரிபூர்ண கலையுடன் உம்முடைய உதரத்தில் தோன்றி, எங்களுக்கு க்ஷேமத்தைச் செய்யப்போகிறார். இனி நீர் கம்ஸனிடமிருந்து அஞ்சவேண்டாம். உமது மைந்தன், கம்ஸனைத் திட்டமாகக் கொன்று யதுக்களையும் ரக்ஷிப்பார்; இதில் ஐயமில்லை."

इत्यभिष्टूय पुरुषं यद्रूपमनिदं यथा ।
ब्रह्मेशानौ पुरोधाय देवाः प्रतिययुर्दिवम् ॥

எல்லா உலகங்களையும் தன் வயிற்றினுள் வைத்துக்கொண்டு, மற்றொரு மடந்தையின் வயிற்றில் மாயனாகவாழும் புருஷோத்தமனை தேவர்கள், பிரம்ம ஸ்வரூபமாகவும், மாயா குணங்களற்றவனாகவும் இவ்வாறு துதித்துவிட்டு, பிரம்மதேவரையும், பரமசிவனையும் முன்னிட்டுக்கொண்டு, சுவர்க்கலோகஞ் சென்றார்கள்.



# மூன்றாவது அத்தியாயம்.

तृतीये निजरूपेण संभूतस्तु हरि स्वयम् ।
पितृभ्यां संस्तुतो नीतः पित्रा भीतेन गोकुलम् ॥

[சுயரூபத்துடன் பகவான் அவதரித்தல்–வசுதேவ தேவகி துதித்தல்–கம்ஸனிடமிருந்து பயந்து வசுதேவர் பகவானைக் கோகுலம் எடுத்துச் செல்வுதல்.]

अथ सर्वगुणोपेतः कालः परमशोभनः ।
यर्ह्येवाजनजन्मर्क्षं शान्तर्क्षग्रहतारकम् ॥
दिशः प्रसेदुर्गगनं निर्मलोडुगणोदयम् ।
मही मङ्गलभूयिष्ठपुरग्रामव्रजाकरा ॥

**திரு அவதாரக் காலச்சிறப்பு.** பிறகு பிரம்மதேவரின் நக்ஷத்திரமான ரோஹிணியில், பகவான் அவதரிக்கும், காலம் நெருங்கவே, பூமியிலும், ஆகாசத்திலும் பல சுப சகுனங்கள் தோன்றின. காலம் எல்லா ருதுக்களின் குணங்களுடன்கூடி மங்களமாய் விளங்கிற்று. நக்ஷத்திரங்களும், கிரஹங்களும், சப்தரிஷி மண்டலங்களும், சண்டையின்றி சாந்தமாய்ப் பொலிந்தன. திசைகள் பிரஸன்னமாயும் வானம் நிர்மலமாயும், நக்ஷத்திரங்கள் பிரகாசமாயும் விளங்கின. அப்பொழுது பூமி மிகுந்த பலனைக்கொடுத்தது. பட்டணங்களிலும், கிராமங்களிலும், சேரிகளிலும் மங்கள வாத்தியங்கள் ஒலித்தன.

नद्यः प्रसन्नसलिला ह्रदा जलरुहश्रिय ।
द्विजालिकुलसंनादस्तवका वनराजयः ॥

நதிகளில் தண்ணீர் தெளிவாய் ஓடிற்று. இரவிலும், தடாகங்களில் தாமரை மலர்கள் நன்றாய்ப் பூத்திருந்தன. மரங்களோ மலர்களும் கனிகளும் நிறைந்தும், தேன்மலிந்துமிருந்தன. பறவைகளும் வண்டினங்களும், அவைகளில் உட்கார்ந்து இனிமையாக சப்தித்தன.

ववौ वायुः सुखस्पर्शः पुण्यगन्धवहः शुचिः ।
अग्नयश्च द्विजातीनां शान्तास्तत्र समिन्धत ॥

காற்று, ஹோமஞ்செய்த ஹவிஸின் நறுமண முடையதாய், தூசியின்றி சுகமாய் வீசிற்று. பிராமணோத்தமர்களின் அக்னி ஹோமம் செய்து அடங்கின பிறகும், ஜ்வாலையுடன் பிரகாசித்தது.

मनांस्यासन्प्रसन्नानि साधूनामसुरद्रुहाम् ।
जायमानेऽजने तस्मिन्नेदुर्दुन्दुभयो दिवि ॥
जगुः किन्नरगन्धर्वास्तुष्टुवुः सिद्धचारणाः ।
विद्याधर्यश्च ननृतुरप्सरोभिः समं तदा ॥
मुमुचुर्मुनयो देवाः सुमनांसि मुदान्विताः ।

பிறப்பற்ற பகவான் அவதரிக்குங்கால், கம்ஸன் நீங்கலாக எல்லாச் சாதுக்களின் மனங்களும் சந்தோஷமாயிருந்தன. அப்பொழுது தேவர்கள் சுவர்க்கத்தில் துந்துபி வாத்தியத்தை முழக்கினார்கள். கின்னரர்களும் கந்தர்வர்களும் கானஞ்செய்தார்கள். சித்தர்களும் சாரணர்களும் பகவானைப் பலவாறு போற்றிப் புகழ்ந்தார்கள். வித்யாதரப் பெண்களும் அப்ஸரஸ்திரீகளும் களிப்புற்றுக் கூத்தாடினார்கள். முனிவர்களும் தேவர்களும் சந்தோஷமாய்ப் புஷ்பங்களைப் பொழிந்தார்கள்.

मन्दं मन्दं जलधरा जगर्जुरनुसागरम् ॥
निशीथे तम उद्भूते जायमाने जनार्दने ।
देवक्यां देवरूपिण्यां विष्णुः सर्वगुहाशयः ।
आविरासीद्यथा प्राच्यां दिशीन्दुरिव पुष्कलः ॥

கிருஷ்ணவதாரம்

இவ்விதம் நள்ளிரவில், எங்கும் இருள் மூடியிருக்கும் சமயத்தில், பகவான் ஜனார்த்தனர் அவதரிக்கும் காலம் நெருங்கவே, சமுத்திரத்திற்கருகில் மேகங்கள் மெள்ள மெள்ள இடிமுழக்கத்துடன் கர்ஜித்தன. அப்பொழுது எல்லாப் பிராணிகளின் இருதயத்தில் அந்தர்யாமியாக விளங்குகின்ற பகவான், தம் பரிபூர்ண கலையுடன் கீழ்த்திசையினின்று சந்திரன் உதயமாவதுபோல் தெய்வத்தன்மை வாய்ந்த தேவகியிடமிருந்து உதயமானார்.

तमद्भुतं बालकमम्बुजेक्षणं चतुर्भुजं शङ्खगदार्युदायुधम् ।
श्रीवत्सलक्ष्मं गलशोभिकौस्तुभं पीताम्बरं सान्द्रपयोदसौभगम् ॥
महार्हवैडूर्यकिरीटकुण्डलत्विषा परिष्वक्तसहस्रकुन्तलम् ।
उद्दामकाञ्च्यङ्गदकङ्कणादिभिर्विरोचमानं वसुदेव ऐक्षत ॥

வசுதேவர், முன் பார்த்திராத உருவுடன் அருள் பொருந்தி, அற்புதக் குழவியாய்த்தோன்றும் பகவானைக் கண்ணுற்றார். அக்

குழந்தை செந்தாமரைபோன்ற கண்களுடனும் நாலு கைகளுடனும் விளங்கிற்று. குழந்தை சங்கு, சக்கிரம், கதை, தாமரை இவைகளை நான்கு கைகளிலும் வைத்துக்கொண்டிருந்தது. வசுதேவர், அக் குழந்தையின் மார்பில் ஸ்ரீ வத்ஸம் என்ற மருவையும், கழுத்தில் அழகாக விளங்கும் கௌஸ்துப ரத்தினத்தையும் பார்த்தார். கார் காலத்து மேகம் போன்று மனோகரமான திருமேனியுடன் அக் குழந்தை விளங்கிற்று. மேலும் அக்குழந்தை உயர்ந்த பீதாம் பரத்தையும், விலையுயர்ந்த ரத்தினங்கள் பதித்த கிரீடத்தையும், மகரகுண்டலங்களையும் அணிந்திருந்தது. அவைகளின் ஒளி கூந்த லில் விழுந்து அதன் அழகை அதிகரித்தது. இன்னும் அக்குழந்தை, விலையுயர்ந்த மாலை, தோள்வளைகள், கைவளைகள், அரைஞாண் இவைகளை அணிந்து, அற்புதமாகவும் அழகாகவும் விளங்கிற்று.

स विस्मयोत्फुल्लविलोचनो हरिं सुतं विलोक्याऽऽनकदुन्दुभिस्तदा ।
कृष्णावतारोत्सवसंभ्रमोऽस्पृशन्मुदा द्विजेभ्योऽयुतमाप्लुतो गवाम् ॥

வசுதேவரின் துதி.

அக்குழந்தையை வசுதேவர் பார்த்து வியப்படைந்து, மறு படியும், கண்களை நன்றாய்த் திறந்து, பகவானே தமக்குக் குழந்தையாக அவதரித்ததைக் கண்டு, மிக்க சந்தோஷமடைந்தார். பிறகு அவர் அதிக பரபரப்பை யடைந்து, இன்னது செய்வதென்று தெரியாதவராய், மனதினால் மட்டும் பிராமணர்களுக்கு ஆயிரம் பசுக் களைத் தானஞ்செய்தார்.

अथैनमस्तौदवधार्य पूरुषं परं नताङ्गः कृतधीः कृताञ्जलिः ।
स्वरोचिषा भारत सूतिकागृहं विरोचयन्तं गतभीः प्रभाववित् ॥

பரீக்ஷித்தரசனே! தன்னுடைய தேக காந்தியால் கர்ப்ப கிருஹத்தைப் பிரகாசப் படுத்திக்கொண்டு கோடி சூரியன்போல் ஜொலிக்கும் அக்குழந்தையைப் பரம புருஷனென்றே வசுதேவர் நிச்சயித்து, அவர் மகிமையை நன்குணர்ந்ததால் கம்ஸனிடமிருந்த பயத்தை ஒருவாறு அகற்றிக்கொண்டார். அதன்பின் அவர் பகவானை வணங்கி, கூப்பிய கைகளுடன் பின் வருமாறு துதிக்க லானார்.

विदितोऽसि भवान्साक्षात्पुरुषः प्रकृतेः परः ।
केवलानुभवानन्दस्वरूपः सर्वबुद्धिदृक ॥
स एव स्वप्रकृत्येदं सृष्ट्वाऽग्रे त्रिगुणात्मकम् ।
तदनु त्वं ह्यप्रविष्टः प्रविष्ट इव भाव्यसे ॥

"நீரே ஸாக்ஷாத் பரமபுருஷன் என்பதை அறிந்தேன். நீர் பிரகிருதியை அடக்கி ஆளுபவர்; துக்கக் கலப்பில்லாத ஆனந்த வடிவமானவர்; அதனாலே ஸம்ஸாரி ஜீவர்களுக்கு மேலானவர்; நீர் ஞானவடிவமானவர், ஸர்வஞ்ஞர்; அதனால் முக்த ஜீவர்களுக்கும் மேலானவர். நீர் உமது மாயாசக்தியால் முக்குணங்களுடன் கூடின இப்பிரபஞ்சத்தைச் சிருஷ்டித்தீர். அதனால் நித்ய ஜீவர்களுக்கும் மேலானவர். மாயாகுணங்களின் சம்பந்த மற்றவராயிருந்தும் நீர் அவைகளிற் பிரவேசித்தவர்போன்று தோன்றுகிறீர்.

यथेमेऽविकृता भावास्तथा ते विकृतैः सह ।
नानावीर्याः पृथग्भूता विराजं जनयन्ति हि ॥
संनिपत्य समुत्पाद्य दृश्यन्तेऽनुगता इव ।

எவ்விதம் மஹத் அஹங்காரம் முதலிய தத்துவங்கள் மாறுதலடையாமல் பிரம்மாண்டத்தைச் சிருஷ்டிசெய்து அதனுள் பிரவேசித்தவைபோல் காணப்படுகின்றனவோ, அதுபோன்று நீரும் மாயாகுணங்களின் சம்பந்தத்தை அடைந்தவர் போன்று காணப்படுகிறீர்.

य आत्मजो दृश्यगुणेषु सन्निति व्यवस्यते स्वव्यतिरेकतोऽबुधः ।
विनाऽनुवादं न च तन्मनीषितं सम्यग्यतस्त्यक्तमुपाददत्पुमान् ॥

எவன் ஆத்மாவைக் காட்டிலும் வேறுபட்டதும், தன்னால் அறியக் கூடியதுமான இந்தச்சரீராதிகளை நித்தியமென்று நினைக்கிறானோ அவன் மூடனே யாவான். விசாரிக்குமளவில் அவைகட்குத் தனிமையாக இருக்குந்தன்மை கிடையாது. ஆகையால் அவைகள் அஸத் வஸ்துக்கள் என்று தள்ளப்பட்டவை.

त्वत्तोऽस्य जन्मस्थितिसंयमान्विभो वदन्त्यनीहादगुणादविक्रियात् ।
त्वयीश्वरे ब्रह्मणि नो विरुध्यते त्वदाश्रयत्वादुपचर्यते गुणैः ॥

எங்கும் நிறைந்தவரே! நீர் குணங்களற்றவராயும், ஆசைகளையும் சேஷ்டைகளையும் ஒழித்தவராயும், மாறுதலடையாதவராயும் இருந்தும் உம்மிடத்திலிருந்தே இப்பிரபஞ்சத்தின் சிருஷ்டியையும், ஸ்திதி

[illegible]த்தையும் கூறுகின்றனர். நீர் ஈசனாயிருத்தல் பற்றி [illegible] கூறுவதில் உமக்கு ஒரு தோஷமும் இல்லை. ஏனெனில், அக்குணங்கள் மாயையினிடத்தில் காணப்படுவதாலும், அந்த மாயை உம்மைச் சார்ந்திருப்பதாலும், அந்த மாயா குணங்களை உம்மிடத்திலேயே இருப்பதாக உபசாரமாய்க் கூறுகின்றனர்.

**त्वमस्य लोकस्य विभो रिरक्षिषुर्गृहेऽवतीर्णोऽसि ममाखिलेश्वर ।**
**राजन्यसंज्ञासुरकोटियूथपैर्निर्व्यूह्यमाना निहनिष्यसे चमूः ॥**

ஸர்வேச்வரா! எங்கும் நிறைந்தவரே! நீர் இவ்வுலகத்தை துஷ்டர்களிடமிருந்து பாதுகாப்பதற்காகவே, என்னுடைய கிருஹத்தில் அவதரித்தீர். அசுரசைன்யங்களைச் சீக்கிரத்தில் கொல்லப்போகிறீர்.

**अयं त्वसभ्यस्तव जन्म नो गृहे श्रुत्वाऽग्रजांस्ते न्यवधीत्सुरेश्वर ।**
**स तेऽवतारं पुरुषैः समर्पितं श्रुत्वाऽधुनैवाभिसरत्युदायुधः ॥**

கொடிய கம்ஸன், நீர் என்னுடைய கிருஹத்தில் அவதரிக்கப் போகிறீர் என்பதை முன்னரே கேள்வியுற்று, உம்முடைய தமையன்மார்களைக் கொன்றான். இப்பொழுதும் தூதர்கள் மூலம் நீர் அவதரித்ததை அறிவானேயாகில், உடனே ஆயுதத்தைக் கையிலேந்தி இவ்விடத்திற்கு விரைவில் வருவான்."

**अथैनमात्मजं वीक्ष्य महापुरुषलक्षणम् ।**
**देवकी तमुपाधावत्कंसाद्भीता शुचिस्मिता ॥**

இவ்வாறு வசுதேவர் பகவானைத் துதித்தபின் தேவகி ஸர்வேச்வரனுடைய லக்ஷணங்களைத் தன் குழந்தையின் அங்கங்களில் கண்ணுற்று, கம்ஸனிடமிருந்த பயத்தை ஒழித்து முகமலர்ச்சியடைந்து, பகவானைத் துதிக்கலானாள்.

**रूपं यत्तत्प्राहुरव्यक्तमाद्यं ब्रह्मज्योतिर्निर्गुणं निर्विकारम् ।**
**सत्तामात्रं निर्विशेषं निरीहं स त्वं साक्षाद्विष्णुरध्यात्मदीपः ॥**

வேதங்கள் எந்த ஸ்வரூபத்தை, ஆதியாகவும், பெரியதாகவும், பிரகாசமுள்ளதாகவும், இச்சையற்றதாகவும், குணமற்றதாகவும், மாறுதலற்றதாகவும், ஸன்மாத்ரமாகவும் கோஷிக்கின்றனவோ அந்த ஸ்வரூபமே நீர். நீர்தான் ஸாக்ஷாத் விஷ்ணு. சரீரம், இந்திரியம் முதலியவைகளைத் தீபம்போன்று பிரகாசப்படுத்துபவரும் நீரே.

नष्टे लोके द्विपरार्धावसाने महाभूतेष्वादिभूतं गतेषु ।
व्यक्तेऽव्यक्तं कालवेगेन याते भवानेकः शिष्यते शेषसंज्ञः ॥

நான்முகனின் நூறு வருஷங்கொண்ட காலந்தீர்ந்து பிரளயம் நேரிடும் பொழுது, காலமாகிற வெள்ளப் பெருக்கில் உலகங்கள் அழிந்து, மண் முதலியவனைத்தும் நின்னுற ஒழியுங்கால் நீர் ஒருவரே எஞ்சி நின்றீர். ஆதலால் உம்மைச் சேஷன் என்று உரைக்கிறார்கள்.

मर्त्यो मृत्युव्यालभीतः पलायँल्लोकान्सर्वान्निर्भयं नाध्यगच्छत् ।
त्वत्पादाब्जं प्राप्य यदृच्छयाऽऽद्य स्वस्थः शेते मृत्युरस्मादपैति ॥

மரிக்கும் மனிதன் மிருத்புவாகிற ஸர்ப்பத்தினின்று பயந்து எங்கு ஓடியும் தனக்கு அபய மளிப்பவரைக் காணாது எப்பொழுது உம்முடைய பாதாரவிந்தத்தை அடைகிறானோ அப்பொழுதே அவன் சுகமாக நித்திரை செய்கிறான். அவனைத் தொடர்ந்து சென்ற மிருத்புவும் அவனிடமிருந்து விலகிவிடுகிறான்.

जन्म ते मय्यसौ पापो मा विद्यान्मधुसूदन ।
समुद्विजे भवद्धेतोः कंसादहमधीरधीः ॥
उपसंहर विश्वात्मन्नदो रूपमलौकिकम् ।
शङ्खचक्रगदापद्मश्रिया जुष्टं चतुर्भुजम् ॥

கம்ஸன் நீர் என்னிடம் அவதரித்ததை அறியாமலிருக்கட்டும். பேதையாகிய நான், உமக்கு நேரிடும் ஆபத்தை யோசிக்குமளவில் கம்ஸனிடமிருந்து மிகுந்த பயத்தை அடைகிறேன். எங்கும் நிறைந்தவரே! சங்கு, சக்கிரம், கதை, பத்மம், இவைகளுடன் கூடிய நான்கு கைகளையும், இத்திவ்ய சரீரத்தையும் உமக்குள் அடக்கிக்கொள்ளும்.

विश्वं यदेतत् स्वतनौ निशान्ते यथावकाशं पुरुषः परो भवान् ।
बिभर्ति सोऽयं मम गर्भगोऽभूदहो नृलोकस्य विडम्बनं हि तत् ॥

பகவானே! நான்முகனின் ஓரிரவு கழிந்ததும், தடங்கடல் உலகெலாம் அழியும்பொழுது நீர் ஒருவரே பிரம்மாண்ட மனைத்தையும் உமது குக்ஷியில் விஸ்தாரமாக விற்றிருக்கச்செய்து அவைகளைத் தாங்கினீர். அந்த புருஷோத்தமன் என்னுடைய கர்ப்பத்தில் பிரவேசித்தது எனக்கு வியப்பைத் தருகின்றது. மண்ணுலகத்தோர் இதை ஏளனம் செய்வார்கள்."

श्रीभगवानुवाच-त्वमेव पूर्वसर्गेऽभूः पृश्निः स्वायंभुवे सति ।
तदाऽयं सुतपा नाम प्रजापतिरकल्मषः ॥
युवां वै ब्रह्मणादिष्टौ प्रजासर्गे यदा ततः ।
संनियम्येन्द्रियग्रामं तेपाथे परमं तपः ॥

வசுதேவ தேவகிகளின் முற்பிறப்புகள்

தேவகி இவ்வாறு கூறியதைக் கேட்டு பகவான் "உத்தமி! முன் பிறப்பில் ஸ்வாயம்புவ மன்வந்தரத்தில், நீ பிரச்னி என்ற பெயருடனிருந்தாய். அப்பொழுது வசுதேவர் சுதபஸ் என்ற பெயருடன் பிரஜாபதிகளில் ஒருவராக இருந்தார். நீங்களிருவர்களும் பிரஜைகளைச் சிருஷ்டிப்பதற்காக, பிரம்ம தேவரின் கட்டளையைச் சிரமேற்கொண்டு ஐம்புலன்களையும் அடக்கி, கடுந்தவம் புரிந்தீர்கள்.

वर्षवातातपहिमघर्मकालगुणाननु ।
सहमानौ श्वासरोधविनिर्धूतमनोमलौ ॥
शीर्णपर्णानिलाहारावुपशान्तेन चेतसा ।
मत्तः कामानभीप्सन्तौ मदाराधनमीहतुः ॥

மழை, காற்று, வெய்யில், பனி, கோடை இவைகளைப் பொறுத்துக்கொண்டு சுவாசத்தை யடக்கி மனத்தினின்றும் பாபத்தைப் போக்கினீர்கள். உதிர்ந்த இலை காற்று இவைகளை உண்டு, காமாதி வாசனைகளை அகற்றி, என்னிடமிருந்து வரத்தை எதிர்பார்த்துக்கொண்டு, என்னை இடைவிடாது பஜித்தீர்கள்.

एवं वां तप्यतोस्तीव्रं तपः परमदुष्करम् ।
दिव्यवर्षसहस्राणि द्वादशेयुर्मदात्मनोः ॥
तदा वां परितुष्टोऽहममुना वपुषाऽनघे ।
प्रादुरासं वरदराड् युवयोः कामदित्सया ।
व्रियतां वर इत्युक्ते मादृशो वां वृतः सुतः ॥

இவ்விதம் என்னிடத்தில் மனதைச் செலுத்தி பல வருஷங்கள் தவஞ் செய்தீர்கள். பாபமற்றவளே! நான் உங்களிடம் சந்தோஷமடைந்து, விரும்பிய வரனை அளிக்க எண்ணங்கொண்டு, இந்த திவ்ய விக்கிரஹ ஸ்வரூபத்துடன உங்களுக்குத் தரிசனம் கொடுத்தேன். "என்னென்ன வரம் வேண்டுமோ அதைவரியுங்கள்"

என்று நான் கூறியதைக் கேள்வியுற்று, நீங்கள் "உம்போன்ற புதல் வனை உதவும்" என்றீர்கள்.

अजुष्टग्राम्यविषयावनपत्यौ च दंपती ।
न वव्राथेऽपवर्गं मे मोहितौ देवमायया ॥
अदृष्ट्वाऽन्यतमं लोके शीलौदार्यगुणैः समम् ।
अहं सुतो वामभवं पृश्निगर्भ इति श्रुतः ॥

இல்லற சுகத்தை அனுபவித்து அதில் திருப்தியடை யாததாலும், மக்கட்பேறு இல்லாததாலும், நீங்கள் என்னிடம் மோக்ஷத்தைக் கேட்கவில்லை. என் மாயையால் புத்தி மோகத்தை அடைந்தீர்கள். குணத்திலும், ஔதார்யத்திலும் எனக்கு நிகர் நானே யாதலாலும், வேறு இல்லையாதலாலும், நானே உங்களுக்குப் புத்திர னகப் பிறந்து, பிரச்னிகர்ப்பன் என்ற பெயரை யடைந்தேன்.

तयोर्वां पुनरेवाहमदित्यामास कश्यपात् ।
उपेन्द्र इति विख्यातो वामनत्वाच्च वामनः ॥
तृतीयेऽस्मिन्भवेऽहं वै तेनैव वपुषाऽथ वाम् ।
जातो भूयस्तयोरेव सत्यं मे व्याहृतं सति ॥

மறுபடி நீங்கள் அதிதியாகவும் கச்யபராகவும் பிறந்தீர்கள். அப்பொழுதும் நான் உங்களுக்குக் குழந்தையாக அவதரித்து, இந்திர னுக்குத் தம்பியாகப் பிறந்ததால் உபேந்திரன் என்றும், குட்டை யாக இருந்ததால் வாமனனென்றும் பிரஸித்தியடைந்தேன். தோஷ மற்றவளே! இப்பொழுது மூன்றாவது ஜன்மத்தை நீங்கள் எடுத் திருக்கிறீர்கள். நான், அதே சரீரத்துடன் மறுபடியும் உங்களுக் குப் புத்திரனாக அவதரித்து என் வார்த்தையைச் சத்தியமாகச் செய்து முடித்தேன்.

एतद्वां दर्शितं रूपं प्राग्जन्मस्मरणाय मे ।
नान्यथा मद्भवं ज्ञानं मर्त्यलिङ्गेन जायते ॥
युवां मां पुत्रभावेन ब्रह्मभावेन चासकृत् ।
चिन्तयन्तौ कृतस्नेहौ यास्येथे मद्गतिं पराम् "

முன் ஜன்மங்களின் ஞாபகம் குன்றியிருக்கவே, நான்கு கைகளுடன் கூடின இச்சரீரத்தை உங்களுக்குக் காண் பித்தேன். அவ்விதமின்றிச் சாதாரண மானிட சரீரத்துடன்

பிறந்திருப்பேனேயானால் நீங்கள், நான் அவதரித்ததை அறியமாட்டீர்கள். என்னைப் புத்திரனென்று நினைத்தோ, ஈசுவரன் என்று நினைத்தோ என்னிடத்தில் அதிகமான அன்பு காட்டி, அதனால் என்னுடைய உயர்தரப் பதவியை அடைவீர்கள். வசுதேவரே!

यदि कंसाद्बिभेषि त्वं तर्हि मां गोकुलं नय ।
मन्मायामानयाऽऽशु त्वं यशोदागर्भसंभवाम् ॥

நீர் கம்ஸனைக் கண்டு அஞ்சுவீரானால், என்னைக் கோகுலத்திற்கு எடுத்துச்சென்று, அவ்விடத்தில் என்னை வைத்துவிட்டு, யசோதையிடம் பெண்ணாகப் பிறந்திருக்கும் யோகமாயையை இவ்விடத்திற்கு எடுத்துவாரும்" என்றார்.

इत्युक्त्वाऽऽसीद्धरिस्तूष्णीं भगवानात्ममायया ।
पित्रोः संपश्यतोः सद्यो बभूव प्राकृतः शिशुः ॥

பகவான் வசுதேவரிடம் இவ்வாறு கூறிவிட்டுச் சிறிது நேரம் மௌனமாயிருந்தார். பிறகு தாய் தந்தையர்கள் முன்பு தனது மாயையைப் பரப்பி, அவர்கள் பார்த்துக் கொண்டிருக்கும் பொழுதே பசுங்குழவி போலாயினார்.

ततश्च शौरिर्भगवत्प्रचोदितः सुतं समादाय स सूतिकागृहात् ।
यदा बहिर्गन्तुमियेष तर्ह्यजा या योगमायाऽजनि नन्दजायया ॥

வசுதேவர் குழந்தையை கோகுலம் எடுத்துச் செல்லல்

பின் வசுதேவர் பகவான் கூறியபடி குழந்தையை எடுத்துக் கொண்டு கர்ப்ப கிருஹத்தினின்றும் வெளியேற எண்ணங்கொண்டார். அந்தக்ஷணமே யோகமாயை நந்தகோபரின் மனைவியான யசோதையிடம் ஒரு பெண்ணாகப் பிறந்தாள்.

तया हृतप्रत्ययसर्ववृत्तिषु द्वास्थेषु पौरेष्वपि शायितेष्वथ ।
द्वारस्तु सर्वाः पिहिता दुरत्यया बृहत्कवाटायसकीलशृङ्खलैः ॥
ताः कृष्णवाहे वसुदेव आगते स्वयं व्यवर्यन्त यथा तमो रवेः ।
ववर्ष पर्जन्य उपांशुगर्जितः शेषोऽन्वगाद्वारि निवारयन्फणैः ॥

பட்டணவாசிகளும் அரண்மனைக் காவலர்களும் மெய்மறந்து நித்திரை செய்தார்கள். வசுதேவர், குழந்தையை எடுத்து வருகையில், நன்றாக மூடியிருந்த பெருங்கதவுகளின் தாழ்களும் சூரியனைக் கண்ட இருள்போல் தாமாகவே திறந்தன. அப்பொழுது மேகங்

கள் மெதுவாக இடிமுழக்கத்துடன் ஜலத்துளிகளை வருஷித்தன. ஆதிசேஷனும் தன் ஆயிரம் தலைகளை பகவானுக்குக் குடைபோன்று அமைத்துக்கொண்டு வசுதேவரைப் பின் தொடர்ந்து சென்றான்.

मघोनि वर्षत्यसकृद्यमानुजा गंभीरतोयौघजवोर्मिफेनिला ।
भयानकावर्तशताकुला नदी मार्गं ददौ सिन्धुरिव श्रियः पतेः ॥
नन्दव्रजं शौरिरुपेत्य तत्र तान् गोपान्प्रसुप्तानुपलभ्य निद्रया ।
सुतं यशोदाशयने निधाय तत्सुतामुपादाय पुनर्गृहानगात् ॥

பட்டணத்து வெளியில் மழை இடைவிடாது பெய்தது. அதனால் யமுனா நதி அதிக வெள்ளப்பெருக்கையடைந்து, அலை நுரை இவைகளுடன் கரைபுரண்டோடிற்று. ஆங்காங்கு அச்சத்தை விளைவிக்கும் பல சுழிகள் காணப்பட்டன, அவ்விதமிருந்தும் ஸ்ரீராமபிரானுக்கு சமுத்திர ராஜன் இடங்கொடுத்தாற்போன்று, யமுனா நதியும் வசுதேவருக்கு வழிகொடுத் துதவிற்று. வசுதேவர் கோகுலத்தை யடைந்து, அங்கு எல்லாக் கோபாலர்களும் நித்திரையில் அமர்ந்திருப்பதைக் கண்டு, யசோதையின் படுக்கையில் குழந்தையை வைத்துவிட்டு அவளுடைய பெண் குழந்தையை எடுத்துக்கொண்டு, மறுபடியும் வீட்டிற்குத் திரும்பினார்.

देवक्याः शयने न्यस्य वसुदेवोऽथ दारिकाम् ।
प्रतिमुच्य पदोर्लोहमास्ते पूर्ववदावृतः ॥
यशोदा नन्दपत्नी च जातं परमबुध्यत ।
न तल्लिङ्गं परिश्रान्ता निद्रयाऽपगतस्मृतिः ॥

வசுதேவர் தேவகியின் படுக்கையில் அப்பெண் குழந்தையை வைத்துவிட்டு, தன் கால்களில் விலங்கை மாட்டிக்கொண்டு முன்போலவே இருக்கலானார். அப்பொழுது அரண்மனைக் கதவுகளும் முன்போலவே பூட்டிக்கொண்டன. நந்தரின் மனைவி யசோதை "இன்னதோர் குழந்தை ஈன்றோம்" என்பதை மட்டும் அறிந்தாளேயன்றி அது ஆணா பெண்ணா என்பதை அறியவில்லை. பிரஸவத்தில் நேர்ந்த களைப்பினாலும், யோகமாயையால் புத்தி மோகத்தை அடைந்திருந்ததாலும், குழந்தையை பிரஸவித்தவுடன் நித்திரையில் ஆழ்ந்தாள்.



# நான்காவது அத்தியாயம்

{ चतुर्थे चण्डिकावाक्यमाकर्ण्यातिभयाकुलः ।
दुर्मन्त्रिभिर्हितं मेने कंसो बालादिहिंसनम् ॥ }

[காளியின் வார்த்தையைக் கேட்டு, கம்ஸன் பயமடைதல்—
துர் மந்திரிகளுடன் ஆலோசித்தல்—சிசு ஹத்தி செய்யத் தீர்மானித்தல்.]

वहिरन्तः पुरद्वारः सर्वाः पूर्ववदावृताः ।
ततो बालध्वनिं श्रुत्वा गृहपालाः समुत्थिताः ॥
ते तु तूर्णमुपव्रज्य देवक्या गर्भजन्म तत् ।
आचख्युर्भोजराजाय यदुद्विग्नः प्रतीक्षते ॥

வசுதேவர் காராகிருஹத்திற்குள் சென்றதும் அரண்மனையின் வெளியிலும் உட்புரத்திலும் உள்ள கதவுகளனைத்தும் முன்போன்று தாமாகவே பூட்டிக்கொண்டன. குழந்தையும் அழலாயிற்று. குழந்தையின் இன்னொலியைக் கேட்டுக் காவலாளர்கள் விழித்துக் கொண்டார்கள். விழித்துக் கொண்டபின் அவர்கள், கம்ஸனிடம் விரைவில் ஓடிச்சென்று தேவகியின் பிரஸவத்தைத் தெரிவித்தார்கள். அவன் இச்செய்தியைத்தான் வெகுநாளாகக் கலங்கிய மனத்துடன் எதிர்பார்த்திருந்தான்.

கம்ஸன் யோகமாயையைக் கொல்ல முயலுதல்.

स तल्पात् तूर्णमुत्थाय कालोऽयमिति विह्वलः ।
सूतीगृहमगात्तूर्णं प्रस्खलन्मुक्तमूर्धजः ॥

இதைக்கேட்டதும் கம்ஸன், திடீரென்று படுக்கையிலிருந்து எழுந்து மரண காலம் நெருங்கிவிட்டது என்று பயந்து, தலைவிரிகோலமாய்க் கால்கள் தடுமாற, தேவகியின் கர்ப்பகிருஹத்தை நோக்கி விரைந்து சென்றான்.

तमाह भ्रातरं देवी कृपणा करुणं सती ।
स्नुषेयं तव कल्याण स्त्रियं मा हन्तुमर्हसि ॥
बहवो हिंसिता भ्रातः शिशवः पावकोपमाः ।
त्वया दैवनिसृष्टेन पुत्रिकैका प्रदीयताम् ॥

கற்புக்கரசியாகிய தேவகி, கொடிய நினைப்புள்ள தமையனைப் பார்த்து வணக்கத்துடன் "நற்குணமுடையவரே! இக்குழந்தை உமது திருமகன் கோடற்காகும் அழகியமாது. ஆதலால் இதைக் கொல்வது தகுதியன்று. அண்ணா! பொன்போன்ற பல குழந்தைகளை நீர் கொன்றீர். அதற்குக் காரணம் நீரன்று. தெய்வமே உம்மைத் தூண்டியதுபோலும். இந்த ஒரு பெண்ணையாவது எனக்குக் கொடுத்தருளக்கூடாதா?

नन्वहं ते ह्यवरजा दीना हतसुता प्रभो ।
दातुमर्हसि मन्दाया अङ्गेमां चरमां प्रजाम् ॥

நற்குணம் வாய்ந்தவரே! பிரபுவே! நான் உம்முடைய தங்கையல்லவோ; உம்மைத் தவிர எனக்கு உறவினர் யார் உளர்? அநேகம் குழந்தைகளை இழந்து அதனால் மந்த பாக்யத்தைக் குறித்து வருந்தும் எனக்கு, இக்கடைசிக் குழந்தையையாவது கொடுத்தருளும்" என்று பார்ப்போர் மனம் இளகும்படி வேண்டினாள்.

उपगुह्यात्मजामेवं रुदत्या दीनदीनवत् ।
याचितस्तां विनिर्भर्त्स्य हस्तादाचिच्छिदे खलः ॥
तां गृहीत्वा चरणयोर्जातमात्रां स्वसुः सुताम् ।
अपोथयत् शिलापृष्ठे स्वार्थोन्मूलितसौहृदः ॥

இவ்விதம் தேவகி, அனாதை போன்றுக் கதறி, கண்ணீரை வடித்து, குழந்தையை மார்போடு வாரி யணைத்துக்கொண்டு, மறுபடியும் மறுபடியும் குழந்தைக்கு உயிர்ப் பிச்சை அளிக்கும்படி கம்ஸனிடத்தில் நயந்து வேண்டினாள். ஆயினும் கூடா வொழுக்க முடைய கம்ஸன் அவளை உதறித் தள்ளிவிட்டு, அவள் கையினின்றும் குழந்தையை வலிதில் வாங்கினான். அதன்பின் அவன், குழந்தையின் இரு கால்களையும் இறுகப் பிடித்து உயரே தூக்கி அருகிலிருந்த பளிக்குப் பாறைமேல் ஓங்கி யடிக்க யத்தனித்தான்.

सा तद्धस्तात्समुत्पत्य सद्यो देव्यम्बरं गता ।
अदृश्यतानुजा विष्णोः सायुधाष्टमहाभुजा ॥
दिव्यस्रगम्बरालेपरत्नाभरणभूषिता ।
धनुः शूलेषुचर्मासिशङ्खचक्रगदाधरा ॥

அச்சமயம் அச்சிறு குழந்தை அவன் கையினின்றும் மேலே எழுந்து ஆயுதந்தாங்கிய எட்டுக் கைகளுடன் விண்ணில் தேவியாக விளங்கிற்று.

**காளியின் கூற்று**

ஆகாயத்தில் நின்ற தேவி, அழகான மாலைகளையும் உயர்ந்த ஆடைகளையும் அணிந்து கொண்டும், குங்குமம் சந்தனம் இவைகளைத் தரித்துக்கொண்டும், உயர்ந்த ரத்தினங்கள் பதிக்கப்பெற்ற அணிகலங்களைப் பூண்டுகொண்டும், சூலம், கத்தி முதலிய படைகளைக் கையிலேந்திக்கொண்டும் நின்றாள்.

सिद्धचारणगन्धर्वैरप्सरःकिन्नरोरगैः ।
उपाहृतोरुबलिभिः स्तूयमानेदमब्रवीत् ॥
किं मया हतया मन्द जातः खलु तवान्तकृत् ।
यत्र क्व वा पूर्वशत्रुर्मा हिंसीः कृपणान् वृथा ॥

சித்தர்களும், சாரணர்களும், அப்ஸரஸ்திரீகளும், உரகர்களும், கந்தர்வர்களும், பல காணிக்கைகள் கொண்டு அவளைப் போற்றினார்கள். அப்பொழுது அந்தக் காளி, கம்ஸனை விளித்துப் பின்வருமாறு சொல்லலானாள். "ஏ மூடா! என்னை அறைவதால் யாது பயன்? உன்னைக் கொல்லுவதற்குப் பகவான் ஏதோ ஓரிடத்தில் அவதரித்து வளர்பிறைச் சந்திரன்போல் உறைகின்றார். முன் ஜன்மத்தில் நீ அவரைப் பகைத்துக்கொண்டாய். துஷ்டா! ஒரு பாவமுமறியாதவர்களை வீணாக வருத்தாதே."

तयाभिहितमाकर्ण्य कंसः परमविस्मितः ।
देवकीं वसुदेवं च विमुच्य प्रश्रितोऽब्रवीत् ॥
अहो भगिन्यहो भाम मया वां बत पाप्मना ।
पुरुषाद इवापत्यं बहवो हिंसिताः सुताः ॥

இவ்வாறு யோகமாயை கூறியதைக் கேள்வியுற்று கம்ஸன் அதிக வியப்படைந்தான்.

**கம்ஸன் வசுதேவ தேவகிகளைப் பணிதல்.**

பிறகு அவன், வசுதேவரையும் தேவகியையும் சிறையினின்று விடுவித்து, அவர்களிடம் வணக்கத்துடன் மன்னிப்புக் கேட்கலானான். "பாபச் செயலைப் புரியும் ராக்ஷஸன் போன்று நான் உங்களுடைய குற்றமற்ற பல குழந்தைகளைக் கொன்றேன்.

स त्वहं त्यक्तकारुण्यस्त्यक्तज्ञातिसुहृत्खलः ।
काँल्लोकान्वै गमिष्यामि ब्रह्महेव मृतः श्वसन् ॥
दैवमप्यनृतं वक्ति न मर्त्या एव केवलम् ।
यद्विश्रम्भादहं पापः स्वसुर्निहतवान् शिशून् ॥

உற்றார் உறவினர் என்பதை மறந்து கருணையின்றி, துஷ்டனைப் போல் உங்களிடம் நடந்தேன். ஆதலால் நான் உயிருடனிருந்தும் இறந்தவன் போலாகிறேன். தேவகி! நான் என்னென்ன நரகங்களை யடையப் போகிறேனோ? அந்தோ! மானிடன் மட்டுமல்ல; தெய்வமும்பொய் யுரைச் செப்பிற்றே! அசரீரி கூற்றில் நம்பிக்கை வைத்தல்லவோ நான் குழந்தைகளைக் கொன்று, பல பாபச் செயல்களைப் புரிந்தேன்.

मा शोचतं महाभागावात्मजान्स्वकृतंभुजः ।
जन्तवो न सदैकत्र दैवाधीनास्सहासते ॥
भुवि भौमानि भूतानि यथा यान्त्यपयान्ति च ।
नायमात्मा तथैतेषु विपर्यैति यथैव भूः ॥

உத்தமர்களே! நீங்கள் இனி வருந்தவேண்டாம். உங்களுடைய குழந்தைகள் தத்தம் வினைப் பயனையே அடைந்தன. வெவ்வினை விளைவை யார்தான் விலக்க வல்லவராவார்கள். எல்லாப் பிராணிகளும் ஊழ் வயப்பட்டு ஒருபொழுதும் ஓரிடத்தில் ஸ்திரமாக இருப்பதில்லை. மண்ணாலாய குடம், பானை முதலியவை அழிந்தபோதும், முதற்கருவியாகிய மண் மாறுபாடின்றி இருத்தல்போல், ஆத்மாவும், சரீரங்கள் உண்டாகி அழியும்பொழுது, தனக்கொரு நாசமின்றி முன்போலவே இருக்கிறது.

तस्माद्भद्रे स्वतनयान् मया व्यापादितानपि ।
मानुशोच यतः सर्वः स्वकृतं विन्दतेऽवशः ॥
यावद्धतोऽस्मि हन्ताऽस्मीत्यात्मानं मन्यतेऽस्वदृक् ।
तावत्तदभिमान्यज्ञो बाध्यबाधकतामियात् ॥

ஆகையால் சுந்தரி! உன் குழந்தைகளை நான் கொன்றதாக எண்ணி வருந்தவேண்டாம். நான் கொல்லப்படுகிறேன், நான் கொல்லுகிறேன், என்று கருதுகிறவன் மூடனே. இத்தகைய அறியாமையால் இந்த தேகத்தில், நான் என்னுடையது, என்ற அகப்புறப் பற்றுகளைக் கொண்டு அதனுல் கஷ்டத்தை யனுபவிக்கிறான்.

क्षमध्वं मम दौरात्म्यं साधवो दीनवत्सलाः ।
इत्युक्त्वाश्रुमुखः पादौ श्यालस्वस्रोरथाग्रहीत् ॥
कंस एवं प्रसन्नाभ्यां अनुज्ञातोऽविशद्गृहम् ॥

சாதுக்களே! பந்துக்களிடத்தில் அன்புடையவர்களே! நான் புரிந்த பிழையனைத்தும் பொறுங்கள்" என்று கண்ணீரைப் பெருக்கி அவர்கள் பாதங்களில் விழுந்து வணங்கி, அவர்களிடம் விடைபெற்றுக்கொண்டு தன் வீட்டிற்குச் சென்றான்.

तस्यां रात्र्यां व्यतीतायां कंस आहूय मन्त्रिणः ।
तेभ्य आचष्ट तत् सर्वं यदुक्तं योगनिद्रया ॥
आकर्ण्य भर्तुर्गदितं तमूचुर्देवशत्रवः ।
देवान्प्रति कृतामर्षा दैतेया नातिकोविदाः ॥

அன்றிரவு கழிந்ததும் கம்ஸன், படை அமைச்சர்களைக் கூப்பிட்டு அவர்களிடம் யோகமாயை கூறியதை ஒன்று விடாது உரைத்
தான். தேவர்களிடம் நெடுநாளாகக் கடும் விரோதத்
மந்திராலோசனை தைச் செய்துவந்த அந்த துஷ்ட மந்திரிகள், அரசன்
செய்தல் கூறியதைக் கேட்டு தேவர்களைச் சினந்துகொண்டு
மதியின்மையால் பின்வருமாறு உரைக்கலானார்கள்.

एवं चेत्तर्हि भोजेन्द्र पुरग्रामव्रजादिषु ।
अनिर्दशान्निर्दशांश्च हनिष्यामोऽद्य वै शिशून् ॥
किमुद्यमैः करिष्यन्ति देवाः समरभीरवः ।
नित्यमुद्विग्नमनसो ज्याघोषैर्धनुषस्तव ॥

“போஜேந்திரா! யோகமாயை உம்மிடம் கூறியபடி உம்மைக் கொல்லுவதற்காக பகவான் எங்கேயாவது மறைவாய் வளர்ந்து வருகிறார் என்பது உண்மையானால், இப்பொழுதே நாம், பட்டணங்களிலும், கிராமங்களிலும், இன்னும் சேரிகளிலும், பத்து நாட்களுக்குட்பட்ட குழந்தைகளையும் அதற்கு மேற்பட்ட குழந்தைகளையும் கொன்று விடுவோம். யுத்தத்திற்கு அஞ்சுகிறவர்களும் உம்முடைய வில்லின் நாணொலியைக் கேட்ட மாத்திரத்தில் நடுங்குகின்றவர்களுமான தேவர்கள், உம்மைக் கொல்லுவதற்காக என்ன முயற்சியைத் தான் செய்யப்போகிறார்கள்?

किं क्षेमशूरैर्विबुधैरसंयुगविकत्थनैः
रहोजुषा किं हरिणा शम्भुना वा वनौकसा ।
किमिन्द्रेणाल्पवीर्येण ब्रह्मणा वा तपस्यता ॥
तथाऽपि देवाः सापत्न्यान्नोपेक्ष्या इति मन्महे ।

யுத்தமில்லாத காலத்தில் தங்களைச் சூரர்களென்று மெச்சிக்கொள்ளும் தேவர்கள், உம்மை என்ன செய்யப் போகிறார்கள்? மறைந்து வாழும் விஷ்ணுவால் உமக்கு என்ன பயம் நேரிடக்கூடும்? அல்லது காட்டில் வாழும் பரமசிவனால்தான் உமக்கு என்ன தீங்கு நேரிடும்? வலியும் ஆண்மையுமற்ற இந்திரனால் பயமேது? அல்லும் பகலும் தவம்புரியும் நான்முகனால் தான் அச்சமென்? ஆயினும் போஜேந்திரா! நமது சத்துருக்களான தேவர்களை ஒருபொழுதும் அலக்ஷியம் செய்யக்கூடாது என்று எண்ணுகிறோம்.

ततस्तन्मूलखनने नियुङ्क्ष्वास्माननुव्रतान् ॥
मूलं हि विष्णुर्देवानां यत्र धर्मः सनातनः ।
तस्य च ब्रह्मगोविप्रास्तपोयज्ञाः सदक्षिणाः ॥
तस्मात्सर्वात्मना राजन्ब्राह्मणान्ब्रह्मवादिनः ।
तपस्विनो यज्ञशीलान्गाश्च हन्मो हविर्दुघाः ॥

ஆகையால் அவர்களை வேருடன் களைவதற்கு எங்களைக் கட்டளையிடும். நாங்கள் உமது ஆணைப்படி நடக்கச் சித்தமாயிருக்கிறோம். விஷ்ணு தேவர்களுக்கு மூலபலம். அவர், எந்த இடத்தில் தர்மம் வழுவாது அனுஷ்டிக்கப்படுகிறதோ அந்த இடத்தில்தான் விளங்குகிறார். வேதம், பசு, பிராமணர்கள், தபசு, யாகம் இவைகள் தர்மத்திற்கு இருப்பிடமாகும். ஆகையால் அரச! எவ்விதத்திலும் பிராமணர்களையும் பசுக்களையும் கொல்லுவதே சிறந்ததாகும்.

विप्रा गावश्च वेदाश्च तपः सत्यं दमः शमः ।
श्रद्धा दया तितिक्षा च क्रतवश्च हरेस्तनूः ॥
स हि सर्वसुराध्यक्षो ह्यसुरद्विड् गुहाशयः ।
तन्मूला देवताः सर्वाः सेश्वराः सचतुर्मुखाः ।
अयं वै तद्वधोपायो यदृषीणां विहिंसनम् ॥

ஏனெனில் பிராமணர்களும், வேதங்களும், தபசும், விஷ்ணுவின் சரீரமாகக் கருதப்படுகின்றன. அந்த விஷ்ணுவோ தேவர்களுக்கு ஈசன்; அசுரர்களுக்குச் சத்துரு; எப்பொழுதும் ஹிருதய குகையில் வசிப்பவர்; பிரும்மா முதல் எல்லா தேவர்களும் அவருடைய பலத்தையே சார்ந்திருக்கிறார்கள். ஆகையால் அவரைக் கொல்லுவதற்கு ஒரு உபாயம் தோன்றுகிறது; அதாவது ரிஷிகளைப் பீடிப்பதே."

एवं दुर्मन्त्रिभिः कंसः सह संमन्त्र्य दुर्मतिः ।
ब्रह्महिंसां हितं मेने कालपाशावृतोऽसुरः ॥
संदिश्य साधुलोकस्य कदने कदनप्रियान् ।
कामरूपधरान्दिक्षु दानवान् गृहमाविशत् ॥

மதியிழந்த கம்ஸன், துஷ்ட மந்திரிகளுடன் இவ்வாறு ஆலோசனை செய்து, கால பாசத்தால் கட்டுண்டு பிராமணர்களை ஹிம்சிப்பதே நலமெனக் கொண்டான். அந்த துஷ்டன், சாதுக்களைத் துன்புறுத்துவதையே விளையாட்டாகக் கொண்டவர்களும், தங்களிஷ்டப்படி பலவடிவங்களை எடுக்க வல்லவர்களுமான பல அசுரர்களை எண்டிசைகளிலும் அனுப்பிவிட்டு, தன் கிருஹத்திற்குச் சென்றான்.

ते वै रजःप्रकृतयस्तमसा मूढचेतसः ।
सतां विद्वेषमाचेरुरारादागतमृत्यवः ॥

இயற்கையிலேயே போரில் ஆவல்கொண்டவர்களும், மதியிழந்தவர்களுமான அவ்வரக்கர்கள், தங்களுக்கு மரணம் கிட்டியதையும் அறியாது சாதுக்களைத் துன்புறுத்தி, அவர்களைப் பகைத்துக் கொண்டார்கள்.

---

## ஐந்தாவது அத்தியாயம்.

{ पञ्चमे जातकं नन्दः सूनोः कृत्वा महोत्सवम् ।
गत्वाथ मथुरां प्राप वसुदेवागमोत्सवम् ॥ }

[நந்தர் பகவானுக்கு ஜாதகர்மம் செய்தல்-மதுரை சென்று வசுதேவரைக் கண்டு களித்தல்.]

नन्दस्त्वात्मज उत्पन्ने जाताह्लादो महामनाः ।
आहूय विप्रान् वेदज्ञान्स्नातः शुचिरलंकृतः ॥

वाचयित्वा स्वस्त्ययनं जातकर्मात्मजस्य वै ।
कारयामास विधिवत्पितृदेवार्चनं तथा ॥

உதார மனமுடைய நந்தர் தமக்குக் குழந்தை பிறந்திருப்பதை யறிந்து கரையிலா ஆனந்தக்கடலில் மூழ்கினர். அவர், நீராடி தூய உடைகளையணிந்து அந்தணர்களை வரவழைத்து, குழந்தைக்கு ஜாதகர்மம் புண்ணியாவாசனம் முதலிய தோற்றச் செய்வினைகளை விதிப்படி இயற்றினர். அவ்விதமே தேவர்களையும் பிதிருக்களையும் ஆராதித்தார்.

धेनूनां नियुते प्रादाद्विप्रेभ्यः समलंकृते ।
सौमङ्गल्यगिरो विप्राः सूतमागधवन्दिनः ।
गायकाश्च जगुर्नेदुर्भेर्यो दुंदुभयो मुहुः ॥
व्रजः संमृष्टसंसिक्तद्वाराजिरगृहान्तरः ।
चित्रध्वजपताकास्रक्चैलपल्लवतोरणैः ॥

நன்றாக அலங்காரம் செய்யப்பட்ட இரண்டு லக்ஷம் பசுக்களைப் பிராமணர்களுக்கு தானஞ்செய்தார். அவர்கள் மங்களமான வார்த்தைகளைக்கூறி வாழ்த்தினார்கள். வந்திகள் ஸ்தோத்திரஞ்செய்தார்கள். பாடகர்கள் பாடினார்கள். துந்துபி, பேரி முதலிய வாத்தியங்கள் வெகுவாய் முழங்கின. நந்தகோகுலம் முழுவதும் நன்றாய்ப் பெருக்கி ஜலந்தெளித்து கோலமிட்டும், கொடி, தோரணங்கள் முதலியவைகளால் அலங்காரஞ் செய்யப்பட்டும் இருந்தது.

गोपाः समाययू राजन् नानोपायनपाणयः ॥
गोप्यश्चाकर्ण्य मुदिता यशोदायाः सुतोद्भवम् ।
आत्मानंभूषयांचक्रुर्वस्त्राकल्पाञ्जनादिभिः ॥

கோபாலர்கள் உயர்ந்த ஆடையாபரணங்களை அணிந்து தங்கள் தங்கள் சக்திக்குத் தகுந்தபடி காணிக்கைகளை எடுத்துச் சென்றார்கள். கோபஸ்திரீகளும் யசோதை ஆண் குழந்தையைப் பெற்றாள் என்று சந்தோஷமடைந்து வஸ்திரம், ஆபரணம், குங்குமம் முதலியவைகளால் தங்களை அலங்காரஞ்செய்துகொண்டார்கள்.

गोप्यः सुमृष्टमणिकुण्डलनिष्ककण्ठ्यः
चित्राम्बराः पथि शिखाच्युतमाल्यवर्षाः ।

नन्दालयं सवलया व्रजतीर्विरेजुः
व्यालोलकुण्डलपयोधरहारशोभाः ॥

அவர்கள், காதில் ரத்தினங்கள் பதித்த குண்டலங்களையும், கழுத்தில் விலையுயர்ந்த பதக்கங்களையும் அணிந்து, பல வர்ணங் கொண்ட வஸ்திரத்தை உடுத்தி நந்தரின் மாளிகைக்கு வெகு வேகமாய்ச் சென்றார்கள். அப்பொழுது அவர்கள் தலையினின்று புஷ்பங்கள் நழுவி, வழியில் சிதறி விழுந்தன.

ता आशिषः प्रयुञ्जानाश्चिरं पाहीति बालके ।
हरिद्राचूर्णतैलाद्भिः सिञ्चन्त्योऽजनमुज्जगुः ॥
अवाद्यन्त विचित्राणि वादित्राणि महोत्सवे ।
कृष्णे विश्वेश्वरेऽनन्ते नन्दस्य व्रजमागते ॥

அதன்பின், அவர்கள் குழந்தைவடிவம் கொண்ட பகவானுக்கு குங்குமம், அக்ஷதை முதலியவைகளை இட்டு, "நீ வெகு காலம் ஜீவித்திருந்து எங்களை ரக்ஷிக்கவேண்டும்" என்று ஆசிர்வதித்தார்கள். எல்லா உலகங்களுக்கும் ஈசனான கிருஷ்ண பகவான் கோகுலத்தில் அவதரித்த பொழுது அற்புதமான பல வாத்தியங்கள் முழங்கின. பெருந்தன்மை வாய்ந்த நந்தகோபர் கோபாலர்களுக்கு வஸ்திரம் ஆபரணம் பசு முதலியவைகளைக் கொடுத்தார்.

तत आरभ्य नन्दस्य व्रजः सर्वसमृद्धिमान् ।
हरेर्निवासात्मगुणैरमाक्रीडमभून्नृप ॥

அன்று தொடங்கி கோகுலம் செழிப்புடனும் ஐசுவரியத்துடனும் திருமகளின் இருப்பிடமாக விளங்கிற்று. பகவான் அங்கு வசித்ததமையால் லக்ஷ்மீதேவியும் அவ்விடத்தில் சந்தோஷமாய் எப்பொழுதும் விளையாடிக்கொண்டிருந்தாள்.

गोपान् गोकुलरक्षायां निरूप्य मधुरां गतः ।
नन्दः कंसस्य वार्षिक्यं करं दातुं कुरूद्वह ॥
वसुदेव उपश्रुत्य भ्रातरं नन्दमागतम् ।
ज्ञात्वा दत्तकरं राज्ञे ययौ तदवमोचनम् ॥

ஒரு சமயம் நந்தர் கோபாலர்களை கோகுலத்தைக் காப்பதின் பொருட்டு வைத்துவிட்டு கம்ஸனுக்குரிய பணத்தைச் செலுத்துவ

தற்கு மதுராபுரிக்குச் சென்றார். வசுதேவர் அவர் வரவை யறிந்து அவர் இருக்குமிடத்திற்குச் சென்றார்.

तं दृष्ट्वा सहसोत्थाय देहः प्राणमिवागतम् ।
प्रीतः प्रियतमं दोर्भ्यां सस्वजे प्रेमविह्वलः ॥
पूजितः सुखमासीनः पृष्ट्वानामयमादृतः ।
प्रसक्तधीः स्वात्मजयोरिदमाह विशांपते ॥

வசுதேவரைக் கண்டதும் நந்தர் மூர்ச்சை தெளிந்தவன் எழுந்திருப்பதுபோன்று எழுந்து அன்புடன் அவரை ஆலிங்கனஞ்செய்து ஆஸனத்திலமர்த்தி க்ஷேம சமாசாரத்தை விசாரித்தார். அதன்பின் வசுதேவர் தன்னிரு மைந்தர்களையும்பற்றி அன்புடன் வினவலானார்.

दिष्ट्या भ्रातः प्रवयसः इदानीमप्रजस्य ते ।
प्रजाशाया निवृत्तस्य प्रजा यत्समपद्यत ॥
उपलब्धो भवानद्य दुर्लभं प्रियदर्शनम् ॥

“ நண்பரே! புத்திரப்பேறின்றி, பல வருஷங்களாகி இனி சந்ததியை அடைவோமோ வென்று வருந்திக்கொண்டிருக்கையில், அதிருஷ்ட வசத்தால் நல்லதோர் குழந்தையை அடைந்தீர். தெய்வ வசத்தால் எளிதில் கிடையாத சிநேகிதரின் தரிசனம் எனக்குக் கிடைத்தது.

कच्चित्पशव्यं निरुजं भूर्यम्बुतृणवीरुधम् ।
बृहद्वनं तदधुना यत्रास्से त्वं सुहृद्वृतः ॥
भ्रातर्मम सुतः कच्चिन्मात्रा सह भवद्व्रजे ।
तातं भवन्तं मन्वानो भवद्भ्यामुपलालितः ॥

உம்முடைய தேசம் நீர் நிரம்பி பயிர் பச்சைகளால் செழிப்புற்றிருக்கிறதா? பசுக்கள் பிணியின்றி யிருக்கின்றனவா ? பிருஹத்வனம், புற்பூண்டுகளும் நீர்வளங்களும் நிறைந்து செழிப்புற்றிருக்கின்றதா ? நீர் உமது பந்துக்களுடன் கூடி சுகமாய் வாழ்ந்து வருகிறீரா ? நண்ப ! என்னுடைய குழந்தை தன் தாயுடன் உம்முடைய கோகுலத்தில் க்ஷேமமா யிருக்கிறானா ? அன்புடன் வளர்த்துவரும் உம்மை அவன் தந்தையாகப் பாவித்து அவ்விதமே நடக்கிறானா ? ”

नन्द उवाच—अहो ते देवकीपुत्राः कंसेन बहवो हताः ।
एकावशिष्टावरजा कन्या सापि दिवं गता ॥

नूनं ह्यदृष्टनिष्ठोऽयमदृष्टपरमो जनः ।
अदृष्टमात्मनस्तत्त्वं यो वेद न स मुह्यति ॥

வசுதேவர் இவ்வாறு கூறிமுடித்ததும் நந்தர், அவரை அன்புடன் பார்த்து, "வசுதேவரே! கம்ஸன் தேவகியின் குழந்தைகள் அனைவரையும் கொன்றான். கடைசியில் பெண் குழந்தை ஒன்றே மிஞ்சிற்று. அக்குழந்தையும் சுவர்க்கஞ் சென்றது. கஷ்டம்! எல்லாப் பிராணிகளும் முற் பிறப்பில் செய்த வினையின் பயனை அடைகிறார்கள் என்பது உண்மையே. அவ்வினையைத் தடுக்க ஒருவராலும் முடியாது. எவன், தன் வினையே தன் சுக துக்கங்களுக்குக் காரணமென்று உணர்கிறானே, அவன் புத்திமயக்கத்தை அடைகிறதில்லை" என்று பதிலுரைத்தார்.

करो वै वार्षिको दत्तो राज्ञे दृष्टाऽवयं च वः ।
नेह स्थेयं बहुतिथं सन्त्युत्पाताश्च गोकुले ॥
इति नन्दादयो गोपाः प्रोक्तास्ते शौरिणा ययुः ।
अनोभिरनडुद्युक्तैस्तमनुज्ञाप्य गोकुलम् ॥

பிறகு வசுதேவர் மறுபடியும் நந்தரைப் பார்த்து "நண்பரே கம்ஸனிடம் இறைப்பணத்தைச் செலுத்திவிட்டீர். என்போன்ற சிநேகிதர்களையும் பார்த்தாய்விட்டது. ஆதலால் இனி இவ்விடத்தில் அதிககோம் தாமதிக்கவேண்டாம். தவிரவும் கோகுலத்தில் பல உத்பாதங்கள் தோன்றுகின்றன" என்றார். உடனே நந்தகோபரும் மற்றுமுள்ள கோபாலர்களும் அவரிடம் அனுமதி பெற்றுக்கொண்டு காளைகள் பூட்டிய வண்டிகளில் ஏறிக் கோகுலஞ் சென்றார்கள்.

---

## ஆறாவது அத்தியாயம்.

---

{ षष्ठे सख्युर्गिरा नन्दो व्रजं गच्छन्मृतां पथि ।
दृष्ट्वा तु राक्षसीं तस्या मृत्युं श्रुत्वाथ विस्मितः ॥ }

[பூதனையின் மோக்ஷம்—வசுதேவர் கூறியபடி நந்தர் விரைவில் கோகுலம் செல்லுதல்—வழியில் மாண்டு கிடக்கும் பூதனையைப் பார்த்து வியப்புறுதல்.]

नन्दः पथि वचः शौरेर्न मृषेति विचिन्तयन् ।
हरिं जगाम शरणमुत्पातागमशङ्कितः ॥
कंसेन प्रहिता घोरा पूतना बालघातिनी ।
शिशूंश्चचार निघ्नन्ती पुरग्रामव्रजादिषु ॥

கோகுலத்திற்குத் திரும்பி வரும் பொழுது வழியில் நந்தர் சில துர்நிமித்தங்களைப்பார்த்து வசுதேவர் கூறியமொழிகளை மனதில் நினைத்து ஏதேனும் உத்பாதம் ஏற்படக்கூடுமென நிச்சயித்து ஹரியைத் தியானஞ் செய்பலானர். இதுநிற்க, கம்ஸன் பயங்கரமான உருவத்தையுடைய பூதனையென்னும் அரக்கியை அழைத்துச் சிறு குழந்தைகளைக் கொன்றுவரும்படி ஆஞ்ஞாபித்தான். அவ்வரக்கியும் அவ்விதமே ஆகட்டும் என்று சொல்லி பட்டணங்களிலும் கிராமங் களிலும் சென்று ஆங்காங்கு குழந்தைகளைக் கொல்லத் தொடங்கி ஞள்.

सा खेचर्येकदोपेत्य पूतना नन्दगोकुलम् ।
योषित्वा माययाऽऽत्मानं प्राविशत्कामरूपिणी ॥

ஒருசமயம் அக்கொடிய வரக்கி மாயையால் ஒரு அழகிய அணங்கு உருவங்கொண்டு கோகுலஞ்சென்ருள்.

तां केशबन्धव्यतिषक्तमल्लिकां बृहन्नितम्बस्तनकृच्छ्रमध्यमाम् ।
सुवाससं कम्पितकर्णभूषणत्विषोल्लसत्कुन्तलमण्डिताननाम् ॥
वल्गुस्मितापाङ्गविसर्गवीक्षितैर्मनो हरन्तीं वनितां व्रजौकसाम् ।
अमंसताम्भोजकरेण रूपिणीं गोप्यः श्रियं द्रष्टुमिवागतां पतिम् ॥

இஷ்டப்படி சஞ்சரிக்கும் பூதனை தன் கூந்தலை அழகாகக் கட் டிக்கொண்டு அதில் மல்லிகைப்புஷ்பத்தைத் தரித்திருந்தாள். அன் றலர்ந்த தாமரையைக் கையிலேந்தி அடிக்கடி அதை முகர்ந்து கொண்டு, அழகிய புன்சிரிப்புடனும், குளிர்ந்த பார்வையுடனும் எல் லோரையும் மயக்கினுள். கோபமாதர்கள் அவளுடைய அகன்ற மார்பையும் பருத்த பின்பாகத்தையும் கொடிபோல் ஒடிகின்ற இடையையும் சுந்தரவதனத்தையும் பார்த்து மதிமயங்கி, தன் நாய கனைப் பார்க்கவந்த லக்ஷ்மீதேவி யென்றே அவளை எண்ணினுர்கள்.

बालग्रहस्तत्र विचिन्वती शिशून्यदृच्छया नन्दगृहेऽसदन्तकम् ।
बालं प्रतिच्छन्ननिजोरुतेजसं ददर्श तल्पेऽग्निमिवाहितं भसि ॥

विबुध्य तां बालकमारिकाग्रहं चराचरात्माऽऽस निमीलितेक्षणः ।
अनन्तमारोपयदङ्कमन्तकं यथोरगं सुप्तमबुद्धिरज्जुधीः ॥

குழந்தைகளைக் கொன்றுவரும் பிசாசாகிய அப்பூதனை ஆங்காங்கு குழந்தைகளைத் தேடிச்சென்று தற்செயலாய் நந்தகோபரின் வீட்டிற்குள் நுழைந்தாள். அங்கே துஷ்டர்களை வதைக்கும் யமன் சிறு குழந்தையாயிருப்பதை யறியாது அதன் மகிமை இன்னதென்று தெரியாமல் சாதாரணக் குழந்தையென்றே எண்ணினாள். அச்சமயம் பகவான் தம் பலத்தைத் தமக்குள் மறைத்துக்கொண்டு நீறு பூத்த நெருப்புபோல் விளங்கா நின்றார். அசையும் பொருள் அசையாப்பொருள் ஆகிய இரண்டையும் ரக்ஷிக்கும் பகவான் தம்மைக் கொல்லுவதற்கு அருகில் வந்து நிற்கும் பூதனையைப் பார்த்து கண்களைச் சிறிது மூடிக்கொண்டு தூங்குவதுபோல் பாவனை செய்தார். மூவுலகங்களுக்கும் ஈச்வரனாயிருப்பினும் பகவான் அவளிடம் ஒன்றும் உரையாது குழந்தை போன்றே நடித்தார். அவ்வரக்கியோ உறங்கும் பாம்பைக் கயிர் என எண்ணும் மூடன் போன்று கூற்றுவனாகிய குழந்தையை மடியில் வைத்துக்கொண்டாள்.

तां तीक्ष्णचित्तामतिवामचेष्टितां वीक्ष्यान्तराकोशपरिच्छदासिवत् ।
वरस्त्रियं तत्प्रभया च धर्षिते निरीक्षमाणे जननी ह्यतिष्ठताम् ॥

அப்பொழுது அவள் எண்ணம் உறைக்குள் மறைத்து வைத்திருக்கும் கூரிய கத்திபோன்று கொடியதாயிருந்தும், அவள் நடத்தை மிகவும் மனோகரமாயிருந்தது. யசோதை, ரோஹிணீ முதலிய மாதர்களும் அவளழகில் மதிமயங்கி அவளைத் தடுக்காமல் மௌனமாயிருந்தனர்.

तस्मिन्स्तनं दुर्जरवीर्यमुल्बणं घोराङ्कमादाय शिशोर्ददावथ ।
गाढं कराभ्यां भगवान्प्रपीड्य तत्प्राणैः समं रोषसमन्वितोऽपिवत् ॥
सा मुञ्च मुञ्चालमिति प्रभाषिणी निष्पीड्यमानाखिलजीवमर्मणि ।
विवृत्य नेत्रे चरणौ भुजौ मुहुः प्रस्विन्नगात्रा क्षिपती रुरोद ह ॥

பிறகு கொடிய சித்தமுடைய பூதனை குழந்தையை மார்போடணைத்து உக்கிரமான விஷத்தைப் பெருக்கும் ஸ்தனத்தை ஊட்டினாள். பகவான் தன்னிரு கைகளாலும் அவள் ஸ்தனத்தை இறுகப்பிடித்து கோபத்துடன் அவளுடைய பிராணனையும் சேர்த்து

உறிஞ்சவே அவள், மணிக்கட்டுகளிலும் மர்மஸ்தானங்களிலும் மிகுந்த கஷ்டத்தை யடைந்து அதைச் சகிக்கமுடியாமல் "குழந்தாய்! விட்டுவிடு! குழந்தாய்! விட்டுவிடு!" என்று கூக்குரலிட்டாள். கண்கள் சுழன்று உடல் வியர்த்தது. அவள் தன் இரு கைகளையும் கால்களையும் உதறி "ஹோ" வென்று கதறலானாள்.

तस्याः स्वनेनातिगभीररंहसा सादि्रर्मही द्यौश्च चचाल सग्रहा ।
रसा दिशश्च प्रतिनेदिरे जनाः पेतुः क्षितौ वज्रनिपातशङ्कया ॥

அவளிட்ட பெருங்கூக்குரலால் மலைகளுடன்கூடிய பூமி நடுங்கிற்று. ஆகாசமும் வெடித்ததுபோலிருந்தது. நவக்கிரகங்களும் தங்கள் ஸ்தானத்தைவிட்டுச் சலித்தன. பாதாளம் பிளவுண்டது. திசைகள் எதிரொலி செய்தன. ஜனங்கள் இடிவிழுந்ததென பயந்து உணர்ச்சியற்றுக் கீழே விழுந்தார்கள்.

निशाचरीत्थं व्यथितस्तना व्यसुर्व्यादाय केशांश्चरणौ भुजावपि ।
प्रसार्य गोष्ठे निजरूपमास्थिता वज्राहतो वृत्र इवापतन्नृप ॥

இவ்விதம் அவ்வரக்கி வாயைத் திறந்துகொண்டும் கைகளையும் கால்களையும் விரித்துக்கொண்டும் உயிரிழந்து தலைவிரிகோலமாய்க் கீழே விழுந்தாள். அப்பொழுது அவளது அழகிய வடிவம் நீங்க அவள் தன் உண்மை ஸ்வரூபத்தை யடைந்து இந்திரனுடைய வஜ்ராயுதத்தால் விருத்திராசுரன் அடிபட்டுச் சாய்ந்ததுபோல் கீழே சாய்ந்தாள்.

संतत्रसुः स्म तद्वीक्ष्य गोपा गोप्यः कलेवरम् ।
बालं च तस्या उरसि क्रीडन्तमकुतोभयम् ।
गोप्यस्तूर्णं समभ्येत्य जगृहुर्जातसंभ्रमाः ॥
यशोदारोहिणीभ्यां ताः समं बालस्य सर्वतः ।
रक्षां विदधिरे सम्यग्गोपुच्छभ्रमणादिभिः ॥

மலைபோன்ற அவள் சரீரத்தைப் பார்த்து கோபாலர்களும் கோபிகைகளும் நடுக்கமுற்றார்கள். அவள் மார்பில் பயமின்றி குழந்தை விளையாடிக் கொண்டிருப்பதைப் பார்த்து கோபிகைகள் பரபரப்புடன் வேகமாகச்சென்று குழந்தையை எடுத்தார்கள். பிறகு அவர்கள் யசோதையையும் ரோஹிணியையும் அழைத்துக் குழந்தைக்கு பல ரக்ஷைகளைச் செய்தார்கள்.

तावन्नन्दादयो गोपा मथुराया व्रजं गताः ।
विलोक्य पूतनादेहं बभूवुरतिविस्मिताः ॥
कलेवरं परशुभिश्छित्वा तत्ते व्रजौकसः ।
दूरे क्षिप्त्वाऽवयवशोन्यदहन्काष्ठवेष्टितम् ॥

இதற்குள் நந்தரும் மற்றுமுள்ள கோபாலர்களும் மதுரையினின்றும் திரும்பிவந்தார்கள். அவர்கள் பூதனையின் சரீரத்தைப் பார்த்து மிகுந்த ஆச்சரியமடைந்தார்கள். அதன்பின் அதை கோடாரிகளால் துண்டுதுண்டாக வெட்டி வெகுதூரத்திற்கப்பால் எடுத்துச்சென்று அதன்மேல் விறகுகளையடுக்கி அதை எரித்தார்கள்.

दह्यमानस्य देहस्य धूमश्चागरुसौरभः ।
उत्थितः कृष्णनिर्भुक्तसपद्याहतपाप्मनः ॥
पूतना लोकबालघ्नी राक्षसी रुधिराशना ।
जिघांसयापि हरये स्तनं दत्त्वाऽऽप सद्गतिम् ॥

எம்பெருமானுக்குப் பாலூட்டி பாபமனைத்தும் ஒருங்கே ஒழித்து புனிதமடைந்த பூதனையின் உடல் சுடுபடுகையில் அகிலின் நறுமணங்கமழும் புகை விண்ணோக்கி எழுந்தது. பூதனை ஒரு அரக்கி; குழந்தைகளைக்கொன்று வந்தவள்; உதிரபானத்தில் ஆசையுள்ளவள்; பகவானைக் கொல்லுவதற்கென்றே முயன்றவள். ஆயினும் ஆதிகதிரான பகவானுக்குப் பாலூட்டின ஒரே காரணத்தால் அவள் நற்கதியை அடைந்தாள்.

किं पुनः श्रद्धया भक्त्या कृष्णाय परमात्मने ।
यच्छन्प्रियतमं किं नु रक्तास्तन्मातरो यथा ॥
नन्दः स्वपुत्रमादाय प्रेत्यागतमुदारधीः ।
मूर्ध्न्युपाघ्राय परमां मुदं लेभे कुरूद्वह ॥

அவ்விதமிருக்க பரீக்ஷித்தே! கிருஷ்ண பகவானிடம் நல்லபக்தியுடனும் சிரத்தையுடனும் தொண்டாற்றி, பரமாத்மாவென்ற நினைப்புடன் அவருக்குத் தங்கள் ஆவியையும் அர்ப்பணஞ்செய்த கோபமாதர்கள், அவருடைய தாயின் கதியை அடைவார்கள் என்பதில் ஐயமுண்டோ! குரு சிரேஷ்டனே! நந்தர் தன் வீட்டிற்குச் சென்று ஆபத்தினின்றும் தப்பிய குழந்தையை எடுத்து, உச்சி முகர்ந்து அளவிலா ஆனந்தத்தை யடைந்தார்.

# ஏழாவது அத்தியாயம்.

उत्क्षिपन् शकटं व्योम्नि तृणावर्तमधः क्षिपन् ।
दर्शयन्विश्वमास्ये च कृष्णः क्रीडति सप्तमे ॥

[சகடாசுரனை உதைத்தல்–திருணாவர்த்தனை வீழ்த்தல்.]

कदाचिदौत्थानिककौतुकाप्लवे जन्मर्क्षयोगे समवेतयोषिताम् ।
वादित्रगीतद्विजमन्त्रवाचकैश्चकार सूनोरभिषेचनं सती ॥
नन्दस्य पत्नी कृतमज्जनादिकं विप्रैः कृतस्वस्त्ययनं सुपूजितैः ।
अन्नाद्यवासःस्रगभीष्टधेनुभिः संजातनिद्राक्षमशीशयच्छनैः ॥

பகவான் கோகுலத்தில் அவதரித்து மூன்று மாதங்கள் சென்றதும் ஒருநாள் யசோதை ஔத்தானிகம் என்ற பிறந்த திருநாள் விழாவை நடத்துவதற்காக பந்துக்களை அழைத்துக்கொண்டு அருகிலிருந்த ஒரு கோவிலுக்குச் சென்றாள். அங்கு பிராமணர்கள் வாத்திய கோஷத்துடன் வேத மந்திரத்தை ஜபித்தார்கள். யசோதை, குழந்தைக்கு மங்கள ஸ்நானம் செய்வித்து பிராமணர்களுக்கு ஆடை, மாலை, அன்னம், பசுக்கள் இவைகளை அளித்தாள். பிறகு யசோதை துயில் கொள்ளக்கருதும் குழந்தையை ஓர் வண்டியின்கீழ் தூளியில் படுக்க வைத்துத் தாலாட்டினாள்.

औत्थानिकौत्सुक्यमना मनस्विनी समागतान्पूजयती व्रजौकसः ।
नैवाशृणोद्वै रुदितम् सुतस्य सा रुदन्स्तनार्थी चरणावुदक्षिपत् ॥
अधःशयानस्य शिशोरनल्पकप्रवालमृद्वङ्घ्रिहतं व्यवर्तत ।
विध्वस्तनानारसकुप्यभाजनं व्यत्यस्तचक्राक्षविभिन्नकूबरम् ॥

சற்று நேரஞ் சென்றதும் அக்குழந்தை மறுபடியும் விழித்துக் கொண்டு பசியால் வருந்தி அழுது கொண்டிருந்தது. ஆனால் அங்குவந்த உறவினர்களை உபசரிப்பதில் கவனமாயிருந்த யசோதை குழந்தையின் அழுகைக் குரலைக்கேட்கவில்லை. வெகுநேரம் அழுதும் தாயைக் காணாமல் குழந்தை தன் கால்களை மேலே நீட்டி வண்டியை உதைக்கலாயிற்று. இளந்தளிர் போன்றிருந்த குழந்தையின் கால்கள் வண்டியில் படவே அவ்வண்டி மாறிச் சுருண்டு கட்டுக்குலைந்து கீழே விழுந்தது. அதிலிருந்த அநேக வகை பாத்திரங்களும் கீழே விழுந்து சிதறின. வண்டியின் சக்கிரம் அச்சு முதலியவைகள் சிதறியும் குடங்கள் நொருங்கியும் போயின.

दृष्ट्वा यशोदाप्रमुखा व्रजस्त्रिय औत्थानिके कर्मणि याः समागताः ।
नन्दादयश्चाद्भुतदर्शनाकुलाः कथं स्वयं वै शकटं विपर्यगात् ।
[इति ब्रुवन्तोऽतिविवादमोहिता जनाः समन्तात्परिवव्रुरार्तवत्] ॥

ஔத்தானிகம் என்ற பிறந்தநாள் திருவிழாவிற்காக வந்த யசோதை முதலிய மாதர்களும் நந்தர் முதலிய கோபாலர்களும் இந்த ஆச்சரியத்தைப்பார்த்து மிகுந்த பரபரப்பையடைந்து வண்டி எவ்விதம் தானாகவே சிதறிவிழக்கூடும் என்று எண்ணலானார்கள். அவர்களெல்லோரும் குழந்தையினருகிற் சென்று அங்கிருந்த சிறுவர்களைக் கேட்கவே,

ऊचुरव्यवसितमतीन्गोपान्गोपींश्च बालकाः ।
रुदतानेन पादेन क्षिप्तमेतन्न संशयः ॥
न ते श्रद्दधिरे गोपा बालभाषितमित्युत ।
अप्रमेयं बलं तस्य बालकस्य न ते विदुः ॥

அச்சிறுவர்கள், "இக்குழந்தை அழுதுகொண்டு வண்டியை உதைத்துத் தள்ளிற்று. இதில் சற்றேனும் சந்தேகமில்லை என்று பதிலுரைத்தார்கள். ஆனால் அவர்கள் சிறுவர்களின் வார்த்தையில் நம்பிக்கை வைக்கவில்லை. ஏனெனில் யசோதையின் குழந்தையின் மகிமை இன்னது என்று அவர்கள் அறிந்தார்களில்லை.

रुदन्तं सुतमादाय यशोदाग्रहशङ्किता ।
कृतस्वस्त्ययनं विप्रैः सूक्तैः स्तनमपाययत् ॥
वाचयित्वा स्वस्त्ययनं नन्दगोपः समाहितः ।
हुत्वाचाग्निंद्विजातिभ्यः प्रादादन्नं महागुणम् ॥
गावः सर्वगुणोपेता वासःस्रग्रुक्ममालिनीः ।
आत्मजाभ्युदयार्थाय प्रादात्ते चान्वयुञ्जत ॥

குழந்தை வெகுநேரம் அழுதுகொண்டிருப்பதைப் பார்த்து ஏதாவது பிசாசைக் கண்டு பயந்திருக்கலாமென்று யசோதை சந்தேகித்து பிராமணர்களை யழைத்து மந்திரங்களை ஜபிக்கச் செய்து ரக்ஷைகளைக் கட்டி, அதன் பின் குழந்தைக்குப் பாலூட்டினாள். நந்தகோபர் தன் குழந்தைக்கு ஆயுளும் ஆரோக்கியமான சரீரமும் உண்டாவதற்காக பக்தியுடன் ஹோமம் செய்து, பிராமணர்களுக்கு உணவளித்து, நற்குணம் வாய்ந்தவைகளும், பட்டு, சுவர்ணம்,

இவைகளால் அலங்காரம் செய்யப்பட்டவைகளுமான பசுக்களைத் தானஞ் செய்தார். அவர்களும் நன்கு ஆசிர்வதித்தார்கள்.

एकदाऽऽरोहमारूढं लालयन्ती सुतं सती ।
गरिमाणं शिशोर्वोढुं न सेहे गिरिकूटवत् ॥
भूमौ निधाय तं गोपी विस्मिता भारपीडिता ।
महापुरुषमादध्यौ जगतामासकर्मसु ॥

ஒரு சமயம் யசோதை குழந்தையை இடுப்பில் வைத்து விளையாடி லாலனை செய்யும் பொழுது அக்குழந்தை மலையின் கொடிமுடிபோல் தாங்கமுடியாத கனத்துடனிருப்பதாகக் கண்டாள். உடனே அவள் அதிக வியப்படைந்து குழந்தையைக் கீழே வைத்துவிட்டு ஈசுவரனை தியானஞ் செய்துகொண்டு வீட்டு வேலைகளைச் செய்யலானாள்.

திருணாவர்த்தன் வதம்.

दैत्यो नाम्ना तृणावर्तः कंसभृत्यः प्रणोदितः ।
चक्रवातस्वरूपेण जहारासीनमर्भकम् ॥
मुहूर्तमभवद्गोष्ठं रजसातमसावृतम् ।
सुतं यशोदा नापश्यत्तस्मिन् न्यस्तवतीयतः ॥
नापश्यत्कश्चनात्मानं परं चापि विमोहितः ॥

அச்சமயம் கம்ஸனுக்கு ஊழியஞ் செய்யும் திருணாவர்த்தன் என்ற அசுரன் கம்ஸனின்கட்டளைப்படி புயற்காற்று வடிவமெடுத்து கோகுலத்தில் வீசி அங்கு வீற்றிருந்த பகவானை யெடுத்துக்கொண்டு மேலே கிளம்பினான். அப்பொழுது கோகுலம் முழுதும் ஒரு முகூர்த்த காலம் இருள் மூடியது போலாயிற்று. யசோதை, குழந்தையை எடுப்பதற்காக அவ்விடம் வந்து பார்த்த பொழுது குழந்தையைக் காணவில்லை. அந்த இருளில் ஒருவரை யொருவர் பார்ப்பதும் அரிதாயிருந்தது.

इति खरपवनचक्रपांसुवर्षैसुतपदवीमबलाऽविलक्ष्य माता ।
अतिकरुणमनुस्मरन्त्यशोचत् भुवि पतिता मृतवत्सका यथा गौः ॥
रुदितमनु निशम्य तत्र गोप्यो भृशमनुतप्तधियोऽश्रुपूर्णमुख्यः ।
रुरुदुरनुपलभ्य नन्दसूनुं पवन उपारतपांसुवर्षवेगे ॥

இவ்விதம் புயற்காற்று கடுமையாய் வீசி மழைபெய்வது போல் மண்ணை வர்ஷித்தது. அச்சமயம் யசோதை குழந்

தையை எங்கு தேடியும் காணாமல், சிறு பெண்போன்று கதறினாள். கன்றை யிழந்த பசுப் போன்று பார்ப்போர் மனமிரங்கும்படி மிக்க வருத்தத்துடன் கதறிக்கொண்டு பிரஞ்ஞை யற்றுப் பூமியில் விழுந்தாள். கோபஸ்திரீகள் அவளது அழுகைக் குரலைக் கேட்டு மன மிளகி, கண்களிலிருந்து நீரைச் சொரிந்துகொண்டு குழந்தையைத் தேடலானார்கள்.

तृणावर्तः शान्तरयो वात्यारूपधरोहरन् ।
कृष्णं नभोगतो गन्तुं नाशक्नोत् भूरिभारभृत् ॥
तमश्मानं मन्यमान आत्मनो गुरुमत्तया ।
गले गृहीत उत्स्रष्टुं नाशक्नोदद्भुतार्भकम् ॥
गलग्रहणनिश्चेष्टो दैत्यो निर्गतलोचनः ।
अव्यक्तरावो न्यपतत्सहबालो व्यसुर्व्रजे ॥

இதற்குள் காற்றின் வேகம் குறையவே திருணாவர்த்தன், மலைபோன்ற கனத்த கிருஷ்ணனைத் தூக்கிக்கொண்டு ஆகாயத்தில் செல்லுவதற்கு சக்தியற்று, ஒரு பெரிய பாறையைக் கழுத்தில் கட்டிக்கொண்டவன் போன்று வருத்தமடைந்தான். பகவானைக் கீழே தள்ளுவதற்கும் அவனால் முடியவில்லை. பகவான் அவன் கழுத்தை இறுகப் பிடித்ததால் அவ்வசுரனின் கழுத்து நெரிபட்டு கண்விழிகள் பிதுங்கவே அவன் சுவாசமிழந்து உயிர் துறந்து, குழந்தையுடன் ஆகாயத்தினின்றும் கீழே விழுந்தான்.

तमन्तरिक्षात्पतितं शिलायां विशीर्णसर्वावयवं करालम् ।
पुरं यथा रुद्रशरेण विद्धं स्त्रियो रुदत्यो ददृशुस्समेताः ॥

பரமசிவனுடைய அஸ்திரத்தினால் திரிபுரம் எவ்விதம் பொடியாயிற்றோ, அது போன்று ஆகாயத்தினின்று விழுந்த திருணாவர்த்தனுடைய சரீரமும், ஒருபாறையில் மோதுண்டு அவயவங்கள் சிதறிப் பொடியாயிற்று.

प्रदाय मात्रे प्रतिहृत्य विस्मिताः कृष्णं च तस्योरसि लम्बमानम् ।
तं स्वस्तिमन्तं पुरुषादनीतं विहायसा मृत्युमुखात्प्रमुक्तम् ।
गोप्यश्च गोपाः किल नन्दमुख्या लब्ध्वा पुनः प्रापुरतीव मोदम् ॥

கோபஸ்திரீகள் எல்லோரும் ஒன்று சேர்ந்து கண்ணும் கண்ணீருமாய் அவனருகிற் சென்று, குழந்தை அவன் மார்பின்

மேல் விளையாடுவதைக் கண்டு ஆச்சரியமடைந்து, குழந்தையை எடுத்துத் தாயிடம் சேர்ப்பித்தார்கள். யமனிடமிருந்து தப்பியதுபோல் ஆகாசமார்க்கமாய் எடுத்துச்சென்ற அரக்கனிடமிருந்து ஒரு குறைவுமின்றிக் குழந்தை தப்பியதைக்கண்டு நந்தர் முதலிய கோபாலர்களும் கோபஸ்திரீகளும் அளவு கடந்த சந்தோஷத்தை அடைந்தார்கள்.

अहो वतात्यद्भुतमेष रक्षसा बालो निवृत्तिं गमितोऽभ्यगात्पुनः ।
हिंस्रः स्वपापेन विहिंसितः खलः साधुः समत्वेन भयाद्विमुच्यते ॥

"ராக்ஷஸன் கொல்ல யத்தனித்தும் குழந்தை ஈச்வர கிருபையால் உயிர் தப்பிற்று. பிறருக்குக் கெடுதலைச் செய்பவன் தன் பாபச்செயலால் தானே நாசத்தை யடைகிறான். ஸாதுவோ எல்லோரையும் தன் போன்று பார்ப்பதால் எல்லா ஆபத்துகளினின்றும் தப்புகிறான்.

किं नस्तपश्चीर्णमधोक्षजार्चनं पूर्तेष्टदत्तमुत भूतसौहृदम् ।
यत्संपरेतः पुनरेव बालको दिष्ट्या स्वबन्धून्प्रणयन्नुपस्थितः ॥

நாம் முன் ஜன்மத்தில் என்ன தவத்தைச் செய்தோமோ; பகவான் சந்தோஷ மடையும்படி என்ன பூஜையைச் செய்தோமோ; அல்லது கஷ்டப்படுபவரிடம் மனமிரங்கி அவர்களுக்கு வேண்டிய பொருள்களைக் கொடுத்தோமோ; அதனாலேதான் இக்குழந்தை உயிர் போகும் தருணத்திலிருந்தும் உயிர் தப்பி நம்மைச் சந்தோஷிக்கச் செய்தது" என்று பேசிக்கொண்டார்கள்.

एकदाऽर्भकमादाय स्वाङ्कमारोप्य भामिनी ।
प्रस्नुतं पाययामास स्तनं स्नेहपरिप्लुता ॥
पीतप्रायस्य जननी सा तस्य रुचिरस्मितम् ।
मुखं लालयती राजन् जृम्भतो ददृशे इदम् ॥

ஒரு சமயம் யசோதை, குழந்தையை மடியில் வைத்துப் பாலூட்டிவிட்டுக் கொஞ்சிக் குலாவும் பொழுது குழந்தை அங்காந்து வாயைத் திறந்தது. அப்பொழுது யசோதை இந்த பிரும்மாண்டத்தை அதன் வாயில் பார்த்தாள்.

खं रोदसी ज्योतिरनीकमाशाः सूर्येन्दुवह्निश्वसनांबुधींश्च ।
द्वीपान्नगांस्तद्दुहितॄर्वनानि भूतानि यानि स्थिरजङ्गमानि ॥

சுவர்க்கம், ஆகாசம், சூரியன், சந்திரன், நக்ஷத்திரம், திக்கு, அக்னி, வாயு, சமுத்திரம், தீவு, மலை, நதி, அசையும் பொருள்கள், அசையாப் பொருள்கள், இவைகளை யெல்லாம் பார்த்தாள்.

सावीक्ष्य विश्वं सहसा राजन्संजातवेपथुः ।
संमील्य मृगशावाक्षी नेत्रे आसीत्सुविस्मिता ॥

பரீக்ஷித்தே! யசோதை அவ்வுலகங்களைப் பார்த்தவுடன் நடுநடுங்கிக் கண்களை மூடிக்கொண்டு ஆச்சரியமடைந்தாள்.

---

# எட்டாவது அத்தியாயம்.

---

अष्टमे नामकर्मास्य बालक्रीडाकुतूहले ।
मृद्भक्षणाभियोगे च विश्वरूपं निरूप्यते ॥

[ராம கிருஷ்ணர்களுக்கு நாமகரணம் செய்தல்-பால லீலைகள்-பகவான் மண்ணையருந்தி விச்வரூபதரிசனமளித்தல்-நந்தரின்பூர்வ ஜன்மவரலாறு]

गर्गः पुरोहितो राजन्यदूनां सुमहातपाः ।
व्रजं जगाम नन्दस्य वसुदेवप्रचोदितः ॥
तं दृष्ट्वा परमप्रीतः प्रत्युत्थाय कृताञ्जलिः ।
नन्दयित्वाऽब्रवीद्ब्रह्मन्पूर्णस्य करवाम किम् ॥

பரீக்ஷித்தரசனே! யாதவர்களின் புரோகிதரும், தபசிகளிற் சிறந்தவருமான கர்க்காச்சாரியர் வசுதேவரின் வேண்டுகோளுக்கிணங்கிக் கோகுலம் வந்தார். அவரைக் கண்ட கர்க்காச்சாரி தம் நந்தர் மிக்க சந்தோஷமடைந்து, ஆசனத்தியரின் வருகை னின்று எழுந்து கைகூப்பித் தண்டனிட்டு இனிய குரலால் "முனிசிரேஷ்டரே! ஆப்தகாமரான உமக்கு நான் யாது செய்யவேண்டியது?

महद्विचलनं नृणां गृहिणां दीनचेतसाम् ।
निःश्रेयसाय भगवन्कल्पते नान्यथा क्वचित् ॥
ज्योतिषामयनं साक्षाद्यत्तज्ज्ञानमतीन्द्रियम् ।
प्रणीतं भवता येन पुमान्वेद परावरम् ॥

உங்களைப்போன்ற மகான்கள் உலகத்தில் ஆங்காங்கு சஞ்சரிப்பது இல்லறத்தை விடுவதற்கு சக்தியற்ற என்போன்ற கிருஹஸ்தர்களை அனுக்கிரஹம்செய்வதற்கே. இல்லாவிடில் உங்களுக்கு மற்றவர்களால் யாதுபயன்? இந்திரியங்களுக்குப் புலனுகாத விஷயங்களை விளக்கும் ஜோதிஷ சாஸ்திரத்தை நீர் செய்தீர். அதனுல் ஒருவன் முன் ஜன்மத்தில் செய்த கருமங்களையும் அவைகளின் பலனையும் நன்கு அறிந்துகொள்ளுகிருன்.

त्वं हि ब्रह्मविदां श्रेष्ठः संस्कारान्कर्तुमर्हसि ।
बालयोरनयोर्नृणां जन्मना ब्राह्मणो गुरुः ॥

நீர் ஆத்ம ஞானிகளுக்குள் சிறந்தவர். பிறப்பிலோ பிராமணர். ஆதலால் எனக்கு குருவாகிறீர். நீர் என்னிரு குழந்தைகளுக்கும் ஜாதகர்மம் நாமகர்மம் முதலியவைகளைச் செய்யவேண்டும்'' என்ருர்.

एवं संप्रार्थितो विप्रः स्वचिकीर्षितमेव तत् ।
चकार नामकरणं गूढो रहसि बालयोः ॥
अयं हि रोहिणीपुत्रो रमयन्सुहृदो गुणैः ।
आख्यास्यते राम इति बलाधिक्याद्बलं विदुः ।
यदूनामपृथग्भावात् सङ्कर्षणमुशन्त्युत ॥

இவ்வாறு நந்தர் வேண்டிக்கொண்டது முனிவர் அபிப்பிராயத்துடன் ஒத்திருந்தது. முனிவர் ரகசியமானவிடத்தில் அக்குழந்தைகளுக்கு நாமகரணம் செய்யலானுர். ''நந்தரே! இந்த ரோஹிணி புதல்வன் தன்னுடைய அதிசயமான குணங்களால் தன் உறவினர்களை மகிழச் செய்வான். ஆதலால் இவனை ராமன் என்று எல்லோரும் அழைப்பார்கள். இவனிடம் மிகுந்த பலமிருப்பதால் இவனை பலன் என்றும் அழைப்பார்கள். ஒரு சமயம் யாதவர்கள் ஒருவருக்கொருவர் சண்டையிடும் பொழுது அவர்களை ஒருமைப் படுத்தி வைப்பான். ஆதலால் இவன் சங்கர்ஷணன் என்ற பெயருடனும் விளங்கப்போகிருன்.

प्रागयं वसुदेवस्य क्वचिज्जातस्तवाऽऽत्मजः ।
वासुदेव इति श्रीमानभिज्ञाः संप्रचक्षते ॥

वहूनि सन्ति नामानि रूपाणि च सुतस्य ते ।
गुणकर्मानुरूपाणि तान्यहं वेद नो जनाः ॥

உம்முடைய மற்றொரு குழந்தை யோவெனில் முன்னொரு காலத்தில் வசுதேவருக்குப் புத்திரனாக இருந்தான். ஆதலால் அவனை வாசுதேவன் என்று உண்மையறிந்த பெரியோர்கள் கூறுவார்கள். நந்தரே! இக்குழந்தைக்கு அவனது குணத்தையும், கர்மத்தையும் அனுசரித்து அநேகம் பெயர்களும் வடிவங்களும் உண்டு. அவைகளை நான் அறிவேன். மற்றவர்கள் அறியார்கள்.

एष वः श्रेय आधास्यद्गोपगोकुलनन्दनः ।
अनेन सर्वदुर्गाणि यूयमञ्जस्तरिष्यथ ॥
य एतस्मिन्महाभागाः प्रीतिं कुर्वन्ति मानवाः ।
नारयोऽभिभवन्त्येतान्विष्णुपक्षानिवासुराः ॥

இக்குழந்தை உங்களையும் கோகுலத்தையும் மகிழச்செய்து உங்கள் கீர்த்தியை வளர்க்கப்போகிறான். நீங்கள் இக்குழந்தையின் உதவியால் சீக்கிரமாக எல்லா இடையூறுகளையும் தாண்டுவீர்கள். இக்குழந்தையினிடத்தில் எவர்கள் அதிகமான அன்பை வைக்கிறார்களோ அவர்கள் முன் ஜன்மத்தில் மிகுந்த பாக்கியம் செய்தவர்கள். விஷ்ணுவைச் சார்ந்த தேவர்களை அசுரர்கள் எங்ஙனம் அணுக முடியாதோ, அதுபோன்று இவர்களையும் சத்துருக்கள் ஒருக்காலும் ஜயிக்கமுடியாது.

तस्मान्नन्दात्मजोऽयं ते नारायणसमो गुणैः ।
श्रिया कीर्त्याऽनुभावेन गोपायस्व समाहितः ॥

ஆகையால் நந்தகோபரே! உம்முடைய இந்த குழந்தை குணத்திலும், செல்வத்திலும், கீர்த்தியிலும், பராக்கிரமத்திலும் ஸ்ரீமந் நாராயணனை யொத்தவன். அவனை வெகு ஜாக்கிரதையுடன் நன்கு பாதுகாக்க வேண்டும்" என்றார்.

इत्यात्मानं समादिश्य गर्गे च स्वगृहं गते ।
नन्दः प्रमुदितो मेने आत्मानं पूर्णमाशिषाम् ॥
कालेन व्रजताऽल्पेन गोकुले रामकेशवौ ।
जानुभ्यां सहपाणिभ्यां रिङ्गमाणौ विजह्रतुः ॥

கர்க்காச்சாரியார், மறைபொருளாக இவ்வாறு நந்தரிடம் உரைத்துவிட்டுத் தன்னிருப்பிடம் சென்றார். அவரது ஆசீர்வாதங் களைப்பெற்ற நந்தரும், தன்னை கிருதார்த்தராக எண்ணிச் சந்தோஷ மடைந்தார். சிலகாலஞ் சென்றதும் பலராமனும், கிருஷ்ணனும் கோகுலத்தில் கைகளையும், முட்டுகளையும் பூமியில் வைத்து தவழ்ந்து விளையாடத் தொடங்கினார்கள்.

तावङ्घ्रियुग्ममनुकृष्य सरीसृपन्तौ घोषप्रघोषरुचिरं व्रजकर्दमेषु ।
तन्नादहृष्टमनसावनुसृत्य लोकं मुग्धप्रभीतवदुपेयतुरन्ति मात्रोः ॥

அவ்விரு குழந்தைகளும் அழுக்கடைந்த சேரியில் இரு கால்களையும் இழுத்துக்கொண்டு மெள்ள மெள்ள ஊர்ந்து போனார் கள். அப்பொழுது அரையில் கட்டியிருந்த மணியும் காலில் அணிந்திருந்த சலங்கையும் நாதம் செய்தன. அந்த சப்தத்தைக் கேட்டு அவர்கள் அதிக சந்தோஷ மடைந்தார்கள். சாதாரண குழந்தைகள் போன்று சிலசமயத்தில் ஒன்று மறியாதவர்கள் போலவும் சில சமயத்தில் பயந்தவர்கள் போலவும் நடித்துத் தாயிடம் போய்ச் சேருவார்கள்.

तन्मातरौ निजसुतौ घृणया स्नुवन्त्यौ पङ्काङ्गरागरुचिरावुपगुह्य दोर्भ्याम् ।
दत्वा स्तनं प्रपिबतोः स मुखं निरीक्ष्य मुग्धस्मिताल्पदशनं ययतुः प्रमोदम् ॥

அப்பொழுது அவ்விரு தாய்மார்களும் புழுதிபடிந்திருக்கும் குழந்தைகளை அன்போடெடுத்து மார்போடணைத்து பால்பெருகும் ஸ்தனங்களை ஊட்டுவார்கள். அவர்கள் அக்குழந்தைகளின் அழ கான முகத்தைப் பார்த்துக் கொஞ்சும்பொழுது குழந்தைகளின் புன்சிரிப்பையும் சிறு பற்களையும் பார்த்து மிகுந்த சந்தோ ஷத்தை அடைவார்கள்,

कृष्णस्य गोप्यो रुचिरं वीक्ष्य कौमारचापलम् ।
शृण्वत्याः किल तन्मातुरिति होचुः समागताः ॥

பகவானுடைய அழகான விளையாட்டைப் பார்த்து கோப ஸ்திரிகள் ஒன்றுகூடி யசோதையிடம் சென்று அவளைக் கேட்கும் படி செய்து சொல்லலானார்கள்.

वत्सान्मुञ्चन्क्वचिदसमये क्रोशसञ्जातहासः
स्तेयं स्वाद्वत्त्यथ दधिपयः कल्पितैः स्तेययोगैः ।

मर्कान्भोक्ष्यन्विभजति स चेन्नात्ति भाण्डं भिनत्ति
द्रव्यालाभे स गृहकुपितो यात्युपक्रोश्य तोकान् ॥

“யசோதே! உன் குழந்தை கிருஷ்ணன் கோமில்லாத நேரத்தில் கட்டமைந்த கன்றுகளை அவிழ்த்து விளையாடுகிறான். அவைகளை ஹிம்சித்து அடித்து அவைகளைக் கத்தும்படி செய்து தானும் சிரிக்கிறான். எவ்விடம் வைத்திருந்த போதிலும் பல உபாயங்கள் செய்து தயிர், பால், வெண்ணெய் இவைகளைத் திருடிச் சாப்பிடுகிறான். மிஞ்சியதை குரங்குகளுக்குப் போடுகிறான். அவைகள் சாப்பிடவில்லையானால் பாத்திரத்தை உடைக்கிறான். எங்கள் வீடுகளில் அவனுக்கு ஒன்றும் கிடைக்காமற் போனால் எங்களிடம் கோபமடைந்து தொட்டிலில் தூங்கிக்கொண்டிருக்கும் குழந்தைகளைக் கிள்ளி அழவிட்டுப் போகிறான்.

हस्ताग्राह्ये रचयति विधिं पीठकोलूखलाद्यै-
श्छिद्रं ह्यन्तर्निहितवयुनः शिक्यभाण्डेषु तद्वित् ।
ध्वान्तागारे धृतमणिगणं स्वाङ्गमर्थप्रदीपं
काले गोप्यो यर्हि गृहकृत्येषु सुव्यग्रचित्ताः ॥

கைக்கெட்டாத உறியில் வைத்திருந்தால் உரல், பீடம் இவைகளில் ஏறித் திருடுகிறான். அல்லது உறியிலிருக்கும் பானையில் துவாரம் செய்து உள்ளிருப்பது இன்னதென்று அறிந்துகொள்ளுகிறான். வீட்டில் இருட்டறைக்குள் இருந்தாலும் அவ்விடம் சென்று தன் தேகத்தில் அணிந்திருக்கும் நவரத்தினங்களின் ஒளியால் அவ்விடத்தைப் பிரகாசப்படுத்தி இன்னது இன்ன இடத்திலிருக்கிறது என்று அறிந்துகொள்ளுகிறான். நாங்கள் வீட்டு வேலையைச் செய்வதில் கவனமாயிருந்தால் எங்களுக்கு இவ்வளவு கஷ்டங்களையும் விளைவிக்கிறான்.

एवं धार्ष्ट्यान्युशति कुरुते मेहनादीनि वास्तौ
स्तेयोपायैर्विरचितकृतिः सुप्रतीको यथाऽऽस्ते ।
इत्थं स्त्रीभिः सभयनयनश्रीमुखालोकिनीभि-
र्व्याख्यातार्था प्रहसितमुखी न ह्युपालब्धुमैच्छत् ॥

நாங்கள் அவனை அதட்டினால் அவனும் பதில் திட்டுகிறான். அல்லது மெழுகிக் கோலமிட்ட விடத்தில் நீரை விடு

கிருன். ஒரு சமயம் கையும் களவுமாகப் பிடித்தால் ஒன்றும் தெரியாதவன்போல் சாதுவாயிருக்கிருன்." இவ்விதம் கோபஸ்திரீகள் பயந்தவன்போல் நடிக்கும் கிருஷ்ணனின் அழகிய முகத்தைப் பார்த்துக்கொண்டே யசோதையிடம் சொன்னபொழுது அவள் குழந்தையினிடம் கொஞ்சமும் சினங்கொள்ளவில்லை. சந்தோஷத்தையே அடைந்தாள்.

एकदा क्रीडमानास्ते रामाद्या गोपदारकाः ।
कृष्णो मृदं भक्षितवानिति मात्रे न्यवेदयन् ॥
कस्मान्मृदमदान्तात्मन्भवान् भक्षितवान् रहः ।
वदन्ति तावका ह्येते कुमारास्तेऽग्रजोऽप्ययम् ॥

ஒரு சமயம் ராமரும் கிருஷ்ணரும் கோபாலச் சிறுவர்களுடன் விளையாடிக் கொண்டிருக்கும் பொழுது "நங்காய்! கிருஷ்ணன் மண்ணை அருந்தினுன்" என்று யசோதையிடம் அச்சிறுவர்கள் சொல்ல, யசோதை பகவானைப்பார்த்து "நீ எதற்காக மண்ணை ஒளித்துத் தின்ருய்? இச்சிறுவர்களும் உன் தமையனும் நீ மண்ணைத் தின்றதாக சொல்லுகிருர்களே?" என்று கேட்டாள்.

விச்வரூப தரிசனம்

नाहं भक्षितवानंब सर्वे मिथ्याऽभिशंसिनः ।
यदि सत्यगिरस्तर्हि समक्षं पश्य मे मुखम् ॥
यद्येवं तर्हि व्यादेहीत्युक्तः स भगवान्हरिः ।
व्यादत्ताव्याहतैश्वर्यः क्रीडामनुजबालकः ॥

"நான் மண்ணைத் தின்னவில்லை. அவர்கள் பொய்யுரைக்கிருர்கள். அவர்கள் கூறுவது உண்மையானுல் என் வாயைப் பார்" என்று பகவான் பதில் உரைத்தார். யசோதை பகவானைப் பார்த்து "நீ மண்ணைத் தின்னவில்லை என்பது உண்மையானுல் உன் வாயைத் திறந்து காண்பி" என்ருள். அழிவில்லாத ஐசுவரியத்தை யுடையவரும், மாயா மானிடச் சிறுவருமான பகவான், தம் வாயை அங்காந்து காண்பித்தார்.

सा तत्र ददृशे विश्वं जगत्स्थास्नु च खं दिशः ।
साद्रिद्वीपाब्धिभूगोलं सवाय्वग्नीन्दुतारकम् ॥

ज्योतिश्चक्रं जलं तेजो नभस्वान् वियदेव च ।
वैकारिकाणीन्द्रियाणि मनोमात्रा गुणास्त्रयः ॥

அப்பொழுது யசோதை, அம் மணிவண்ணன் வாயில் அசையும் பொருள் அசையாப் பொருளாகிய புவனமனைத்தும் தெரியக் கண்டாள். வான் கண்டாள்; வான் வளைக்கும் வெஞ்சுடருடன் தாரை சூழ்ந் தண் கதிர் விளங்கக் கண்டாள்; திசை கண்டாள்; மண் கண்டாள்; மண் வளைத்த மாக்கடலும் கடல் வளைத்த தீவும் கண்டாள்; மலை கண்டாள்; விண்ணுலகம் கண்டாள்; ஐம்புலனுடன் பஞ்ச பூதமும் கண்டாள்; முக்குணங்கள் கண்டாள்.

एतद्विचित्रं सह जीवकालस्वभावकर्माशयलिङ्गभेदम् ।
सूनोस्तनौ वीक्ष्य विदारितास्ये व्रजं सहात्मानमवाप शङ्काम् ॥
किं स्वप्न एतदुत देवमाया किं वा मदीयो बत बुद्धिमोहः ।
अथो अमुष्यैव ममार्भकस्य यः कश्चनौत्पत्तिक आत्मयोगः ॥

தன்னையும் கண்டாள்; தன்னருகில் பாலனையும் கண்டாள். இவ்வற்புதத்தைப் பார்த்து "இது கனவா? அல்லது தேவர்களின் மாயையா? அல்லது என்னைச் சார்ந்த சித்தப் பிரமையா? அல்லது என் குழந்தைக்குப் பிறவியிலேயே இருக்கும் யோகசித்தியா?" என்று பலவாறு சந்தேகமடைந்தாள். பிறகு அம்மாது சிரோமணி தன் குழந்தையை மகிமை வாய்ந்த ஈசுவரன் என்று உணர்ந்து,

अहं ममासौ पतिरेष मे सुतो व्रजेश्वरस्याखिलवित्तपा सती ।
गोप्यश्च गोपाः सह गोधनाश्च मे यन्माययेत्थं कुमतिः स मे गतिः ॥

"நான் எனது என்ற உணர்ச்சியும், இவன் என் நாயகன், இது என் குழந்தை, நான் இந்த இடையர்களை யாளும் நந்தரின் மனைவி, இந்த கோபாலர்களும், கோபியர்களும், பசுக்களும் என்னைச் சார்ந்தவை, என்ற பொய்யறிவு எந்த பிரம்மத்தையே நன்றாய் அறியாததால் எனக்கு ஏற்பட்டதோ அந்த பிரம்மத்தையே சரணமடைகிறேன்" என்று ஜகத் காரணமான பிரம்மத்தை மனதினால் வணங்கலானாள்.

इत्थं विदिततत्त्वायां गोपिकायां स ईश्वरः ।
वैष्णवीं व्यतनोन्मायां पुत्रस्नेहमयीं विभुः ॥

सद्यो नष्टस्मृतिर्गोपी साऽऽरोप्यारोहमात्मजम् ।
प्रवृद्धस्नेहकलिलहृदयाऽऽसीद्यथा पुरा ॥

இத்தகைய தத்வ ஞானமடைந்த யசோதைக்குப் பகவான் புத்திர வாஞ்சையை விருத்தி செய்ய எண்ணங் கொண்டு அவள் முன் மாயையைப் பரப்பினர். உடனே அவள் குழந்தையை மடியி லெடுத்து வைத்துக்கொண்டு அன்பின் மிகுதியால் முன்போல் மனக் களிப்பை அடைந்தாள்.

द्रोणो वसूनां प्रवरो धरया सह भार्यया ।
करिष्यमाण आदेशान्ब्रह्मणस्तमुवाच ह ॥
जातयोर्नौ महादेवे भुवि विश्वेश्वरे हरौ ।
भक्तिः स्यात्परमा लोके ययाञ्जो दुर्गतिं तरेत् ॥

பிரம்மதேவர் அஷ்டவசுக்களில் முதல்வரான துரோணரையும், அவர் மனைவி தரை என்பவளையும், பூலோகஞ் சென்று பசுக் களைப் பாதுகாக்கும்படி கட்டளை யிட்டார். அவர் நந்தகோபரின் கள் பிரம்மதேவரிட்ட கட்டளையை ஒப்புக்கொண்டு பூர்வ வரலாறு. மறுபடியும் அவரிடம், "நாங்கள் எப் பிறப்பை எடுப்பினும் எங்களுக்குப் பகவானிடத்தில் இடை விடாத பக்தி ஏற்படவேண்டும். ஒன்றுந் தெரியாத மூடனும் எந்தப் பக்தியாகிய சாதனத்தைக் கொண்டு தாண்டுதற்கரிய ஸம்ஸா ரத்தை எளிதில் தாண்டுவானே அத்தகைய உயர்தர பக்தியை எங் களுக்குத் தந்தருளவேண்டும்" என்று வேண்டினர்கள்.

अस्त्वित्युक्तः स भगवान्व्रजे द्रोणो महायशाः ।
जज्ञे नन्द इति ख्यातो यशोदा सा धराऽभवत् ॥
ततोभक्तिर्भगवति पुत्रीभूते जनार्दने ।
दंपत्योर्नितरामासीद्गोपगोपीषु भारत ॥

பிரம்மதேவர் 'அவ்விதமே ஆகுக' என்று உரைத்தார். புகழ்பெற்ற துரோணர் நந்தராகவும், தரை யசோதையாகவும் பிறந்திருக்கிறார்கள். பரீக்ஷித்தே! அதனாலேதான் அவர்களுக்கு பகவானிடத்தில் என்றுங் குன்றாத பக்திபுண்டாயிற்று.

---

# ஒன்பதாவது அத்தியாயம்

{ नवमे पय उद्रिक्तौ गत्वा गोप्यथ तत्कृतम् ।
विलोक्यभांडभङ्गादि कृष्णं दाम्ना ववंध तम ॥ }

[யசோதை பொங்கும் பாலை இறக்கச் செல்லுதல்-கிருஷ்ணன் தயிர்ப் பானையை உடைத்தல்-யசோதை கயிற்றால் கட்டுதல்.]

एकदा गृहदासीषु यशोदा नन्दगेहिनी ।
कर्मान्तरनियुक्तासु निर्ममन्थ स्वयं दधि ॥

ஒருசமயம் யசோதை வேலைக்காரிகளை வேறு காரியங்களில் நியமித்துவிட்டு தானே தயிர் கடைவதற்கு ஆரம்பித்தனள்.

क्षौमं वासः पृथुकटितटे बिभ्रती सूत्रनद्धं
पुत्रस्नेहस्नुतकुचयुगं जातकंपं च सुभ्रूः ।
रज्ज्वाकर्षश्रमभुजचलत्कङ्कणौ कुण्डले च
स्विन्नं वक्त्रं कवरविगलन्मालती निर्ममन्थ ॥

பருத்த பின்பாகத்தை யுடைய அம்மாது இடுப்பில் வெண்பட்டாடை யுடுத்தி மாற்றுயர்ந்த சுவர்ண ஒட்டியாணம் அணிந்திருந்தாள். குழந்தையிடம் வைத்த அன்பின் பெருக்கால் பால் ததும்பப்பெற்ற ஸ்தனங்கள் தயிர் கடையும்போது அலைந்தன. அவள் கயிற்றை முன்னும் பின்னுமாக இழுக்கும்பொழுது அவள் கையிலணிந்திருந்த வளைகள் கலீரென ஒலித்தன. காதிலணிந்திருந்த குண்டலங்கள் மெதுவாய் அசைந்தன. முகத்தில் முத்துப்போன்ற வேர்வைத் துளிகள் அரும்பின. கூந்தல் தானகவே அவிழ்ந்தது. மாலதி புஷ்பங்கள் ஒன்றன்பின் ஒன்றாய் உதிர்ந்து கீழே விழுந்தன.

तां स्तन्यकाम आसाद्य मथ्नन्तीं जननीं हरिः ।
गृहीत्वा दधिमन्थानं न्यषेधत्प्रीतिमावहन् ॥

அப்பொழுது பகவான் பால் பருக விருப்பங்கொண்டு அவளருகிற் சென்று மத்தைக் கையால் பிடித்து அவளைச் சிரிக்கும்படி செய்து தயிர் கடைவதைத் தடுத்தார்.

तमङ्कमारूढमपाययत्स्तनं स्नेहस्नुतं सस्मितमीक्षती मुखम् ।
अतृप्तमुत्सृज्य जवेन सा ययावुत्सिच्यमाने पयसि त्वधिश्रिते ॥

सञ्जातकोपः स्फुरितारुणाधरं संदश्य दद्भिर्दधिमन्थभाजनम् ।
भित्त्वा मृषाऽश्रुर्दृषदश्मना रहो जघास हैयंगवमन्तरं गतः ॥

யசோதை அவரை அன்புடன் மடியிலேற்றி வைத்துக் கொண்டு மந்தஹாஸத்துடன் தன் முகத்தையே பார்த்துக்கொண்டிருக்கும் குழந்தைக்குப் பாலூட்டினாள். அச்சமயம் அடுப்பில் இருந்த பால் பொங்கிற்று. யசோதை குழந்தையை விட்டு விட்டுப் பாலை கீழே இறக்கச் சென்றாள். பகவான் அவளிடம் கோபங் கொண்டு அங்கிருந்த அம்மியின் குழவியினால் தடவுத் தாழியை உடைத்து அவள் மறைத்து வைத்திருந்த வெண்ணெயை எடுத்துக் கொண்டு ஒருவரும் அறியாத இடத்தில் ஒளித்துக் கொண்டார்.

उत्तार्य गोपी सुश्रृतं पयः पुनः प्रविश्य सन्दृश्य च दध्यमत्रकम् ।
भग्नं विलोक्य स्वसुतस्य कर्म तज्जहास तं चापि न तत्र पश्यती ॥

யசோதை அடுப்பிலிருந்து பாலைக் கீழே யிறக்கிவிட்டு மறுபடியும் தயிர் கடையும் இடத்திற்கு வந்தாள். அங்கு தயிர்த் தாழி உடைந்திருப்பதைப் பார்த்து குழந்தை கிருஷ்ணன் தான் செய்திருப்பான் என்று நினைத்து மனதிற்குள் சிரித்துக்கொண்டாள். ஆனால் அந்த இடத்தில் குழந்தையைக் காணவில்லை.

उलूखलाङ्घ्रेरुपरि व्यवस्थितं मर्काय कामं ददतं शिचि स्थितम् ।
हैयंगवं चौर्यविशङ्कितेक्षणं निरीक्ष्य पश्चात्सुतमागमच्छनैः ॥
कृतागसं तं प्ररुदन्तमक्षिणी कर्षन्तमञ्जन्मषिणी स्वपाणिना ।
उद्वीक्षमाणं भयविह्वलेक्षणं हस्ते गृहीत्वा भिषयन्त्यवागुरत् ॥

பிறகு யசோதை குழந்தை கிருஷ்ணனைத் தேடிச் செல்லும்பொழுது கிருஷ்ணன் ஓரிடத்தில் உரலின்மேல் உட்கார்ந்து கொண்டு உறியிலிருந்த வெண்ணெயைத் திருடித் தானும் தின்று குரங்கிற்குப் போடுவதையும் பார்த்தாள். அவர் தம்மை யாராவது பார்த்து விடுவார்களோவென்ற சந்தேகத்துடன் நாற்புறமும் அடிக்கடி திரும்பிப் பார்த்துக்கொண்டிருந்தார். யசோதை கையில் ஒரு பிரம்பை எடுத்துக்கொண்டு அவர் பின்புறம் சென்றாள். தன் குற்றத்தை உணர்ந்த கிருஷ்ணன் அடிக்கடி அழுது கண்களைக் கசக்கி கண்களிலிருந்த மையை முகத்தில் பூசிக்கொண்டு பயத்தால் கண்கள் சுழன்று நடுங்கினவர்போல் பாவனை செய்தார். யசோதை

அவரைக் கட்டியாகப் பிடித்துக்கொண்டு பலவிதமாக அதட்டி உருக்கலானள்.

त्यक्त्वा यष्टिं सुतं भीतं विज्ञायार्भकवत्सला ।
इयेष किल तं बद्धुं दाम्नाऽतद्वीर्यकोविदा ॥
तं मत्वाऽऽत्मजमव्यक्तं मर्त्यलिङ्गमधोक्षजम् ।
गोपिकोलूखले दाम्ना बबन्ध प्राकृतं यथा ॥

குழந்தையினிடத்திலிருந்த அன்பால் தன் கையிலிருந்த தடியைக் கீழே போட்டுவிட்டு பயந்தவர்போல் நடுங்கும் குழந்தையைக் கயிற்ருல் கட்டுவதற்கு எண்ணங்கொண்டாள். பாலவடிவங்கொண்ட ஈச்வரன் என்பதை அவள் அறிந்தாளில்லை. அவரைச் சாதாரண குழந்தை என்றே நினைத்து உரலில் கட்ட முயன்ருள்.

तद्दाम बध्यमानस्य स्वार्भकस्य कृतागसः ।
द्व्यङ्गुलोनमभूत्तेन सन्दधेऽन्यच्च गोपिका ॥
यदासीत्तदपि न्यूनं तेनान्यदपि संदधे ।
तदपि द्व्यङ्गुलं न्यूनं यद्यदादत्त बन्धनम् ॥
एवं स्वगेहदामानि यशोदा सन्दधत्यपि ।
गोपीनां विस्मयन्तीनां स्मयन्ती विस्मिताऽभवत् ॥

குற்றஞ் செய்தவராயிருப்பினும் அவரைக் கயிற்ருல் கட்ட முடியவில்லை. அக்கயிறு இரண்டங்குலம் குறைவாயிருந்தது. பிறகு அத்துடன் மற்ருெரு கயிற்றை இணைத்தாள். அதுவும் இரண்டங்குலம் குறைந்தது. அத்துடன் மற்ருென்றையும் முடித்தாள். அதுவும் குறைவாகவே யிருந்தது. இவ்விதம் வீட்டிலுள்ள எத்தனை கயிறுகளைச் சேர்த்த போதிலும் அவைகள் அவரைக் கட்டுவதற்குப் போதுமான நீளமின்றி இருந்தன. யசோதையும் மற்றுமுள்ள கோபிகைகளும் இதைக்கண்டு ஆச்சரியமடைந்தார்கள்.

स्वमातुः स्विन्नगात्राया विस्रस्तकबरस्रजः ।
दृष्ट्वा परिश्रमं कृष्णः कृपयासीत्स्वबन्धने ॥

கூந்தல் அவிழ்ந்தது. உடல் வியர்த்தது. மாலைகள் கீழே விழுந்தன. கார்முகில் வண்ணன் இவ்விதம் வருந்தும் தாயைப் பார்த்து மனமிரங்கி அவளிஷ்டம்போல் உரலில் கட்டுண்டார்.

एवं सन्दर्शिता ह्यङ्ग हरिणा भृत्यवश्यता ।
स्ववशेनापि कृष्णेन यस्येदं सेश्वरं वशे ॥

பரீக்ஷித் மகாராஜனே! இம்மூவுலகங்களும் லோக பாலர்களும் எவர் வசத்தில் கட்டுண்டு இருக்கிறார்களோ அந்த கிருஷ்ணன் பக்தர்களிடம் மனமிரங்கித் தாம் கட்டுண்டிருப்பதைக் காட்டினார்.

कृष्णस्तु गृहकृत्येषु व्यग्रायां मातरि प्रभुः ।
अद्राक्षीदर्जुनौ पूर्वं गुह्यकौ धनदात्मजौ ॥
पुरा नारदशापेन वृक्षतां प्रापितौ मदात् ।
नलकूवरमणिग्रीवाविति ख्यातौ श्रियाऽन्वितौ ॥

பிறகு யசோதை கிருஷ்ணனை விட்டுவிட்டு வீட்டுக்காரியங்களைச் செய்யலானாள். கிருஷ்ணன் சமீபத்தில் ஓங்கி வளராநின்ற இரண்டு மருத மரங்களைப் பார்த்தார். குபேரனுடைய புத்திரர்களான நளகூபரனும், மணிக்கிரீவனும் பணச்செருக்கால் நாரத சாபத்திற்காளாகி இந்நிலைமையை அடைந்திருப்பதை அறிந்து கொண்டார்.

## பத்தாவது அத்தியாயம்.

---

{ दशमेऽपातयद्रिङ्गन्नन्तरा यमलार्जुनौ ।
तत्रत्याभ्यां च देवाभ्यां कृष्णः स्तुत इतीर्यते ॥ }

[பகவான் மருதமரங்களுக்கிடையில் தவழ்ந்து சென்று அவைகளை வீழ்த்தல்-இரண்டு புருஷர்கள் தோன்றி பகவானைத் துதித்தல்.]

रुद्रस्यानुचरौ भूत्वा सुदृप्तौ धनदात्मजौ ।
वारुणीं मदिरां पीत्वा मदाघूर्णितलोचनौ ॥
अन्तः प्रविश्य गङ्गायां अम्भोजवनराजिनि ।
चिक्रीडतुर्युवतिभिर्गजाविव करेणुभिः ॥

நளகூபரன், மணிக்கிரீவன் என்ற இருவர்களும் குபேரன் குமாரர்கள். பரமசிவனின் சேவகர்கள். ஒருசமயம் அவர்கள் வாருணி என்ற கள்ளைக் குடித்து மதிமயங்கி கண்கள் சுழல தாமரை புஷ்பங்கள் மலர்ந்து அழகாயிருக்கும் கங்கைக்கரை சென்று இளம் பெண்களோடு ஜலக்கிரீடை செய்தார்கள். அவர்கள் புனலாடி

யது இரண்டு மதங்கொண்ட யானைகள் பிடிகளுடன் ஜலத்திற்குள் இறங்கி கரைகுத்தி விளையாடுவது போன்றிருந்தது.

यदृच्छया च देवर्षिर्भगवांस्तत्र कौरव ।
अपश्यन्नारदो देवौ क्षीवाणौ समबुध्यत ॥
तं दृष्ट्वा व्रीडिता देव्यो विवस्त्राः शापशङ्किताः ।
वासांसिपर्यधुः शीघ्रं विवस्त्रौ नैव गुह्यकौ ॥

அச்சமயம் நாரதர் தற்செயலாய் அவ்விடம் வந்தார். அவரைப் பார்த்ததும் தேவமாதர்கள் துயிலொழிந்ததை யுணர்ந்து நாணம் மீதூரப்பெற்று முனிவரின் சாபத்திற்கு அஞ்சிப் பரபரப்புடன் வஸ்திரங்களைத் தரித்துக்கொண்டார்கள். ஆனால் நளகூபரனும் மணிக்கிரிவனும் அவ்விதம் செய்யவில்லை.

तौ दृष्ट्वा मदिरामत्तौ श्रीमदान्धौ सुरात्मजौ ।
तयोरनुग्रहार्थाय शापं दास्यन्निदं जगौ ॥
नह्यन्यो जुषतो जोष्यान् बुद्धिभ्रंशो रजोगुणः ।
श्रीमदादाभिजात्यादिर्यत्र स्त्रीद्यूतमासवः ॥

குபேரனின் புதல்வர்கள் இவ்வாறு மமதை கொண்டு மதியிழந்து துயிலின்றி அமர மாதர்களுடன் புனலாடுவதைக் கண்ணுற்று அவர்களுக்கு நற்புத்தி புகட்டுவதில் எண்ணங்கொண்டு, யாழ் முனிவர் பின்வருமாறு சபித்தார். "விஷயசுகங்களில் ஆசைகொண்டவனை பணச் செருக்குக் கெடுப்பதுபோல் உயர்குடிப் பிறப்பு, கல்வி இவைகளாலாய செருக்குக் கெடுக்காது. எனெனில் பணச் செருக்கால் காதல், கவறுடல், கள்ளுண்டல் முதலியவைகளும் விளைகின்றன.

हन्यंते पशवो यत्र निर्दयैरकृतात्मभिः ।
मन्यमानैरिमं देहमजरामृत्यु नश्वरम् ॥
देवसंज्ञितमप्यन्ते कृमिविड्भस्मसंज्ञितम् ।
भूतध्रुक्तत्कृते स्वार्थं किंवेद निरयो यतः॥

செல்வச் செருக்குடையவர்கள் இந்தச் சரீரத்தை சாசுவதம் என்றெண்ணி இந்திரியங்களை அடக்காது தங்கள் சுகத்திற்காக பிராணி ஹிம்சை செய்கிறார்கள். இந்த சரீரம் மரித்த பிறகு அது நாய் நரிகளுக்கு இரையாகவோ அல்லது தானே அழுகிப் புழுவாகவோ,

அல்லது எரிந்து சாம்பலாகவோ மாறுகிறது. இந்த சரீரத்திற்காக மற்றவர்களை ஹிம்சை செய்பவன் தன் நன்மையை அறியாதவன்.

असतः श्रीमदान्धस्य दारिद्र्यं परमाञ्जनम् ।
आत्मौपम्येन भूतानि दरिद्रः परमीक्षते ॥

பணத் திமிர் என்ற நோயால் குருடானவர்களுக்கு வறுமையே குருட்டைப் போக்கும் சிறந்த அஞ்சனமாகும். தரித்திரனோவெனில் எல்லோரையும் தன்னைப்போன்று பார்க்கிறான்.

यथा कण्टकविद्धाङ्गो जन्तोर्नेच्छति तां व्यथाम् ।
जीवसाम्यं गतो लिङ्गैर्न तथाऽविद्धकण्टकः ॥

காலில் முள் தைத்தவனே முள்ளின் வலியை அறிவான். தன் போன்று பிறரையும் நினைத்து, பிறருக்கும் அக்கஷ்டம் நேர்வதை விரும்பான். முள்ளின் வலிதெரியாதவன் அவ்வாறு நினையான்.

दरिद्रस्यैव युज्यन्ते साधवः समदर्शिनः ।
सद्भिः क्षिणोति तं तर्षं तत आराद्विशुध्यति ॥
साधूनां समचित्तानां मुकुन्दचरणैषिणाम् ।
उपेक्ष्यैः किं धनस्तंभैरसद्भिरसदाश्रयैः ॥

முகுந்தனது பாதசேவையில் ஆவல்கொண்ட ஸாதுக்கள் எல்லோரையும் சமமாகவே பார்ப்பார்கள். அவர்களின் தரிசனத்தால் மனிதன் எத்தகைய பந்தத்தினின்றும் விடுபடுகிறான். ஆனால் அவர்களின் சேர்க்கை தரித்திரனுக்கே கிடைக்கிறது. அந்த சாதுக்கள் பணத்தால் கர்வங்கொண்ட துஷ்டர்களை ஒருபொழுதும் மதியார்கள்.

तदहं मत्तयोर्माध्व्या वारुण्या श्रीमदान्धयोः ।
तमोमदं हनिष्यामि स्त्रैणयोरजितात्मनोः ॥
यदिमौ लोकपालस्य पुत्रौ भूत्वा तमःप्लुतौ ।
न विवाससमात्मानं विजानीतः सुदुर्मदौ ॥

ஆகையால், வாருணி என்ற கள்ளைக் குடித்து பணச்செருக்கால் மதிகெட்டு இந்திரியங்களை அடக்காது அல்லும் பகலும் பெண்டிர்களையே நாடியிருக்கும் உங்கள் மதத்தை நானே அடக்குகிறேன். நீங்கள் லோகபாலனான குபேரனின் புதல்வர்களாயினும் ஆடையின்றிருப்பதை நீங்கள் சற்றேனும் உணராது தமோகுணத்தில் மூழ்கியிருந்தீர்கள்.

अतोऽर्हतः स्थावरतां स्यातां नैवं यथा पुनः ।
स्मृतिः स्यान्मत्प्रसादेन तत्रापि मदनुग्रहात् ॥
वासुदेवस्य सान्निध्यं लब्ध्वा दिव्यशरच्छते ।
वृत्ते स्वर्लोकतां भूयो लब्धभक्ती भविष्यतः ॥

ஆகையால் நீங்கள் மரமாகப் போவதே உத்தமம். அந்நிலைமையி லும் நீங்கள் நல்லொழுக்கத்துடன் இருக்கும்படி நான் அருள்புரி கிறேன். நீங்கள் முன் ஜன்மத்தின் ஞாபகத்தையும் எனது அரு ளால் அடைவீர்கள். இவ்விதம் பல தேவஆண்டுகள் கழிந்த பின் கிருஷ்ணபகவான் உங்கள் அருகில் வந்து உங்களைச் சாபத்திலிருந் தும் விடுவிப்பார். அப்பொழுது நீங்கள் மறுபடியும் உங்கள் உண்மை வடிவத்தை அடைந்து உங்கள் உலகத்திற்குச் செல்வீர்கள். பகவானிடத்தில் உங்களுக்கு மிகுந்த பக்தியும் உண்டாகும்."

ऋषेर्भागवतमुख्यस्य सत्यं कर्तुं वचो हरिः ।
जगाम शनकैस्तत्र यत्राऽऽस्तां यमलार्जुनौ ॥
इत्यन्तरेणार्जुनयोः कृष्णस्तु यमयोर्ययौ ।
आत्मनिर्वेशमात्रेण तिर्यग्गतमुलूखलम् ॥

பாகவதோத்தமரான நாரத முனிவரின் வாக்கியத்தை ஸத் தியமாகச் செய்வதற்கு எண்ணங்கொண்டு பகவான், மெள்ள மெள்ள உரலோடு அவ்விரு மருதமரங்களுக்கிடையில் தவழ்ந்து சென்றார். சென்ற மாத்திரத்தில் உரலும் குறுக்கே விழுந்து நன்றாய்ச் சிக்கிக் கொண்டது.

बालेन निष्कर्षयताऽन्वगुलूखलं तद्दामोदरेण तरसोत्कलिताङ्घ्रिबन्धौ ।
निष्पेततुः परमविक्रमितातिवेपस्कन्धप्रवालविटपौ कृतचण्डशब्दौ ॥
तत्र श्रिया परमया ककुभः स्फुरन्तौ सिद्धावुपेत्य कुजयोरिव जातवेदाः ।
कृष्णं प्रणम्य शिरसाऽखिललोकनाथं बद्धाञ्जली विरजसाविदमूचतुः स्म ॥

அப்பொழுது பாலவடிவங்கொண்ட தாமோதரர், தன் னிடுப்பில் பிணித்திருந்த உரலைத் தன் முழுவலியுடன் இழுக்க லானார். அவ்வலுவைச் சகியாது அவ்விருமரங்களும் வேரறுந்து பூமியினின்றும் கிளம்பி, கொப்புக் கிளைகளுடன் அசைந்து, சண்ட மாருதம்போன்ற பெரும் சப்தத்துடன் கீழே விழுந்தன. அப் பொழுது இரண்டு ஸித்தபுருஷர்கள் அம்மரங்களினின்றும் வெளிக்

கிளம்பி, தங்கள் தேககாந்தியால் திக்குகளைப் பிரகாசப்படுத்தினர்கள். பாபமனைத்தும் ஒருங்கே ஒழித்த அத் தனதன் மைந்தர்கள் உலகங்களுக்கு நாதனான கிருஷ்ணனைத் தலையால் அடிபணிந்து, கைகூப்பித் துதித்தார்கள்.

कृष्णकृष्ण महायोगिंस्त्वमाद्यः पुरुषः परः ।
व्यक्ताव्यक्तमिदं विश्वं रूपं ते ब्रह्मणो विदुः ॥
त्वं महान्प्रकृतिः सूक्ष्मा रजः सत्त्वतमोमयी ।
स भवान् सर्वलोकस्य भवाय विभवाय च ।
अवतीर्णोऽम्शभागेन सांप्रतं पतिराशिषाम् ॥

"கிருஷ்ணா! யோகிச்வரா! நீர் ஆதி புருஷன்; நீர் தான் பரம்பொருள்; ஸ்தூல ஸூக்ஷ்ம வடிவமான இப்பிரபஞ்சம் உம்முடைய சரீரமென்று பெரியோர்கள் கூறுகிறார்கள். நீர்தான் மகத் தத்வம்: நீர்தான் முக்குணங்களின் வடிவமான பிரகிருதி. நீர் லோக க்ஷேமத்திற்காகவும் மோக்ஷத்திற்காகவும் உமது கலையுடன் அவதரித்திருக்கிறீர்.

नमः परमकल्याण नमः परममङ्गल ।
वासुदेवाय शान्ताय यदूनां पतये नमः ॥
अनुजानीहि नौ भूमंस्तवानुचरकिङ्करौ ।
दर्शनं नौ भगवत ऋषेरासीदनुग्रहात् ॥

கல்யாண குணங்கள் உள்ளவரே! உமக்கு நமஸ்காரம். உலகத்திற்கு கைவல்யத்தை அளிப்பவரே! உமக்கு நமஸ்காரம். வசுதேவரின் குமாரரே! வெறுப்பும் ஆர்வமும் அற்றவரே! யாதவக்கொழுந்தே! உம்மை வணங்குகிறோம். ஞானனந்த வெள்ளமே! நாங்கள் உமது பக்தரான நாரதரின் வேலைக்காரர்கள். முனிவர் புகன்ற சாபத்தால் உமது தரிசனம் எங்களுக்குக்கிட்டியது.

वाणी गुणानुकथने श्रवणौ कथायां हस्तौ च कर्मसु मनस्तव पादयोर्नः ।
स्मृत्यां शिरस्तवनिवासजगत्प्रणामे दृष्टिः सतां दर्शनेऽस्तु भवत्तनूनाम् ॥

ஈசா! எங்கள் வாக்கு உம்முடைய புண்ணிய புகழைப் போற்றித் துதிக்கட்டும். செவிகள் உமது சீர்மிக்க கதைகளைக் கேட்கட்டும். கரங்கள் உமக்குத் தொண்டு புரிவதிலே நாடட்டும். நெஞ்சம் உமது சீரடிகளையே நினைக்கட்டும். தலை உமது வாஸஸ்தானமாகிய பூமியை

அடிபணிய, கண் ஸாதுக்களான பக்தர்களைக் கண்டு களிக்கட்டும். இதுவே நாங்கள் பிரார்த்திப்பது."

इत्युक्तौ तौ परिक्रम्य प्रणम्य च पुनःपुनः ।
बद्धोलूखलमामन्त्र्य जग्मतुर्दिशमुत्तराम् ॥

உரலில் கட்டுண்ட பகவானை நளகூபரனும் மணிக்கிரிவனும் இவ்வாறு துதித்துவிட்டு, அவரை வலம்வந்து தெண்டனிட்டு அவரிடம் அநுமதி பெற்றுக்கொண்டு, வடதிசை நோக்கிச் சென்றார்கள்.

---

## பதினொன்றாவது அத்தியாயம்.

---

{ एकादशे समागत्य वृन्दावनमथार्भकैः ।
वत्सान् पालयतानेन हतौ वत्सबकासुरौ ॥ }

[கோபாலர்கள் பிருந்தாவனம் செல்லுதல் — கிருஷ்ணன் சிறுவர்களுடன் கன்று மேய்த்தல்-வத்ஸாஸுரனையும், பகாஸுரனையும் கொல்லுதல்.]

गोपवृद्धा महोत्पातानन्नुभूय बृहद्वने ।
नन्दादयः समागम्य व्रजकार्यं अमन्त्रयन् ॥
उत्थातव्यमितोऽस्माभिर्गोकुलस्य हितैषिभिः ।
आयान्त्यत्र महोत्पाता बालानां नाशहेतवः ॥

நந்தர் முதலிய கோபாலர்கள், கோகுலத்திற்கு அருகிலிருக்கும் பிருஹத் வனத்தில் அடிக்கடி அரிஷ்டங்கள் ஏற்படுவதைக் கவனித்து ஒரு சபை கூட்டி கோகுலத்தின் நன்மையை ஆலோசிக்கலானார்கள். இப்பொழுது ஏற்படும் துர் நிமித்தங்கள் கோகுலத்திற்கு இனிவரும் கஷ்டத்தைத் தெரிவிக்கின்றன. ஆகையால் நம் நன்மையைக் கருதி நாம் இவ்விடமிருந்து வெளிக்கிளம்புவதே நலம்.

பிருந்தாவனஞ் செல்லுதல்

मुक्तः कथंचिद्राक्षस्या बालघ्न्या बालको ह्यसौ ।
हरेरनुग्रहान्नूनमनश्चोपरि नापतत् ॥
चक्रवातेन नीतोऽयं दैत्येन विपदं वियत् ।

शिलायां पतितस्तत्र परित्रातः सुरेश्वरैः ॥
यन्न म्रियेत द्रुमयोरन्तरं प्राप्य बालकः ।

குழந்தைகளைக் கொன்று வந்த பூதனை யிடமிருந்து தெய்வச் செயலால் குழந்தை தப்பினான். வண்டியும் அவன் மீது விழாதது பகவானின் அனுக்கிரஹமே. சுழல் காற்றால் ஆகாயத்திலிருந்து பாறையில் விழுந்த குழந்தையை தேவர்கள் காப்பாற்றினார்கள். மலை போன்ற மருத மரங்களுக்கிடையில் சென்ற குழந்தை ஒருவாறு பிழைத்தது.

यावदौत्पातिकोऽरिष्टो व्रजं नाभिभवेदितः ।
तावद्बालानुपादाय यास्यामोऽन्यत्र सानुगाः ॥
वनं वृन्दावनं नाम पशव्यं नवकाननम् ।
वृन्दावनं संप्रविश्य सर्वकालसुखावहम् ।
तत्र चक्रुर्व्रजावासं शकटैरर्धचन्द्रवत् ॥

இவைகளை கவனிக்குமளவில் இப்பொழுது தோன்றும் துர்நிமித்தங்கள் என்னென்ன இடையூறுகளைத் தெரிவிக்கின்றனவோ, அவைகள் தோன்றி கோகுலத்தை அழிப்பதற்கு முன்னமே நாம் குடும்பத்துடன் குழந்தைகளை எடுத்துக்கொண்டு வேறிடம் செல்வோம்" என்று தீர்மானித்து எல்லோரும் வண்டிகளில் ஏறிக்கொண்டு பிருந்தாவனம் சென்றார்கள். அந்த பிருந்தாவனம் எக்காலத்திலும் செழிப்புற்றுப் பார்ப்பதற்கு அழகாக இருந்தது. அவ்விடத்தில் கோபாலர்கள் பாதி சந்திரன் போன்று வீடுகளை அமைத்துக்கொண்டார்கள்.

वृन्दावनं गोवर्धनं यमुनापुलिनानि च ।
वीक्ष्याऽऽसीदुत्तमा प्रीती राममाधवयोर्नृप ॥
एवं व्रजौकसां प्रीतिं यच्छन्तौ बालचेष्टितैः ।
कलवाक्यैः स्वकालेन वत्सपालौ बभूवतुः ॥

அரசே! ராமனும் கிருஷ்ணனும் பிருந்தாவனத்தையும் கோவர்த்தன மலையையும் யமுனாநதியின் மணற் குன்றுகளையும் பார்த்து மிகுதியான சந்தோஷமடைந்தார்கள். அச்சிறுவர்கள் விநோதமாய் விளையாடியும் மழலைச் சொற்கள் பேசியும் கோகுல வாசிகளைக் களிப்புறச் செய்தார்கள். பிறகு நாளடைவில் அவர்கள் கன்றுகளை மேய்க்கத் தொடங்கினார்கள்.

कदाचिद्यमुनातीरे वत्सांश्चारयतोः स्वकैः ।
वयस्यैः कृष्णवलयोर्जिघांसुर्दैत्य आगमत् ॥
तं वत्सरूपिणं वीक्ष्य वत्सयूथगतं हरिः ।
दर्शयन् वलदेवाय शनैर्मुग्ध इवाऽऽसदत् ॥

ஒரு சமயம் பலராமனும் கிருஷ்ணனும் சிறு குழந்தைகளுடன் யமுனா நதிக்கரையில் கன்றுகளை மேய்த்துக் கொண்டிருந்தார்கள். அப்பொழுது அவர்களைக் கொல்லுவதற்

வத்ஸாசுர வதம். காக ஓர் அசுரன் அவ்விடம் வந்தான். அவன் கன்றுரூபமெடுத்துக் கன்றுகளின் மத்தியில் கலந்து கொண்டு அவைகளுடன் சென்றான். அதைக் கிருஷ்ணன் அறிந்து பலராமனுக்குக் காண்பித்தார். கிருஷ்ணன் ஒன்றுமறியாதவர்போல மெள்ளமெள்ள அவ்வசுரனருகிற் சென்றார்.

गृहीत्वाऽपरपादाभ्यां सहलाङ्गूलमच्युतः ।
भ्रामयित्वा कपित्थाग्रे प्राहिणोद्गतजीवितम् ।
देवाश्चोपरि संतुष्टा वभूवुः पुष्पवर्षिणः ॥

பிறகு அச்சுதர் கன்றுரூபமெடுத்த அசுரனின் பின்கால்களையும் வாலையும் சேர்த்துப் பிடித்து உயரே தூக்கிச் சுழற்றி அருகிலிருந்த விளாமரத்தின் உச்சியில் எறிந்தார். அவ்வசுரன் உயிர் துறந்து கீழே விழுந்தான். அப்பொழுது தேவர்கள் ஆகாசத்திலிருந்துகொண்டு கிருஷ்ணன் மேல் மலர்மாரி சொரிந்தார்கள்.

स्वं स्वं वत्सकुलं सर्वे पाययिष्यन्त एकदा ।
गत्वा जलाशयाभ्याशं पाययित्वा पपुर्जलम् ॥
ते तत्र ददृशुर्बाला महासत्त्वमवस्थितम् ।
तत्रसुर्वज्रनिर्भिन्नं गिरेः शृङ्गमिव च्युतम् ॥
स वै बको नाम महानसुरो बकरूपधृक् ।
आगत्य सहसा कृष्णं तीक्ष्णतुण्डोऽग्रसद्बली ॥

மற்றொரு சமயம் எல்லாக் கோபாலர்களும் தங்கள் தங்கள் கன்றுகளை மேய்த்துக் கொண்டிருக்கையில் அவைகளுக்குத் தண்ணீர் காட்டுவதற்காக ஒரு குளக்கரைக்குச் சென்

பகாசுர வதம். றார்கள். அங்கு கன்றுகளுக்குத் தண்ணீர் காட்டிவிட்டுத் தாங்களும் தண்ணீரைப் பருகினார்கள். அக்குளத்தின் கரையில் அச்சிறுவர்கள் ஒரு பெரிய

பிராணி உட்கார்ந்து கொண்டிருப்பதைப் பார்த்தார்கள். அது இந்திரனுடைய வஜ்ஜிராயுதத்தால் சிதறுண்டு பூமியில் விழுந்திருக்கும் மலைச்சிகரம் போன்று பெரிதாயிருந்தது. அச்சிறுவர்கள் அதைக் கண்டதும் நடுநடுங்கினார்கள். அப்பிராணி பகன் என்ற அசுரன். கொக்கு வடிவத்தை எடுத்துக்கொண்டு கிருஷ்ணனைக் கொல்லுவதற்காக அவ்விடம் உட்கார்ந்திருந்தான். அதிக பலம் வாய்ந்த அவ்வசுரன் கிருஷ்ணனைக் கண்டதும் வேகத்துடன் அவர் மீது பாய்ந்து கூர்மையான மூக்கினால் அவரை விழுங்கினான்.

तं तालुमूलं प्रदहन्तमग्निवद्गोपालसूनुं पितरं जगद्गुरोः ।
चच्छर्द सद्योऽतिरुषाऽक्षतं बकस्तुण्डेन हन्तुं पुनरभ्यपद्यत ॥
तमापतन्तं स निगृह्य तुण्डयोर्दोर्भ्यां बकं कंससखः सतां पतिः ।
पश्यत्सु बालेषु ददार लीलया मुदावहो वीरणवद्दिवौकसाम् ॥

இவ்வுலகங்களை யெல்லாம் சிருஷ்டித்த பிரம்மதேவரும் எந்த புருஷனிடமிருந்து உண்டாயினரோ அந்தப் புருஷனே இப்பொழுது நந்தகோபருக்குப் பிள்ளையாக அவதரித்திருப்பதை அறியாது பகன் அவரை விழுங்கவே, பகவான் அவனுடைய அலகுகளை அக்னிபோல் எரிக்கலானார். அப்பொழுது அதைச் சகிக்க முடியாமல் அவ்வசுரன் அவரை உடனே வெளியில் கக்கினான். பகவான் ஒருவிதக் கோரையுமின்றி இருப்பதைப் பார்த்து பகன் மிகக் கோபங்கொண்டு மறுபடியும் மூக்கினால் அவரைக் குத்திக் கொல்லுவதற்கு அவர்மீது பாய்ந்தான். கம்ஸனின் தோழனான பகன் இவ்வாறு தன்னை எதிர்த்து வரும்பொழுது சாதுக்களை ரக்ஷிக்கும் பகவான் அவனது இரு அலகுகளையும் கைகளால் கெட்டியாகப் பிடித்து கோரைப் புல்லைக் கிழிப்பதுபோன்று லேசாய்க் கிழித்தார்.

तदा बकारिं सुरलोकवासिनः समाकिरन्नन्दनमल्लिकादिभिः ।
समीडिरे चानकशङ्खसंस्तवैस्तद्वीक्ष्य गोपालसुता विसिस्मिरे ॥

அப்பொழுது கோபாலர்களும் தேவர்களும் அதைப் பார்த்துச் சந்தோஷமடைந்தார்கள். தேவர்கள் மல்லிகை முதலிய புஷ்பங்களை கிருஷ்ண பகவான் மீது அர்ச்சித்தார்கள். ஆனகம், சங்கம், பேரி முதலிய வாத்தியங்களை முழக்கிப் போற்றினார்கள்.

---

# பன்னிரண்டாவது அத்தியாயம்.

---

{ द्वादशे तु महासर्पवपुर्धरमघासुरम् ।
वत्सपालगिलं क्रुद्धो गळेऽहन्निति वर्ण्यते ॥ }

[அகாசுரன் மலைப்பாம்பு வடிவமெடுத்தல்-கன்றுகளையும் சிறுவர்களையும் விழுங்கல்-பகவான் அவனைக்கொன்று அவனுக்கு மோக்ஷமளித்தல்.]

कचिद्वनाशाय मनो दधद्व्रजात्प्रातः समुत्थाय वयस्यवत्सपान् ।
प्रबोधयन् शृङ्गरवेण चारुणा विनिर्गतो वत्सपुरःसरो हरिः ॥

சிறுவர்கள் விளையாட்டு.

ஒருநாள் பகவான் கோபாலர்களுடன் வனபோஜனம் செய்ய வேண்டுமென்று ஆசைகொண்டார். அதற்காக அவர் அதி காலையில் எழுந்து காதிற் கினிமையாப்க் கொம்பூதி தூங்கிக்கொண்டிருந்த சிநேகிதர்களை பெழுப்பினர். பின் கிருஷ்ணன் கன்றுகளைப் பற்றிக்கொண்டு காட் டிற்குப் புறப்பட்டார்.

कृष्णवत्सैरसंख्यातैर्यूथीकृत्य स्ववत्सकान् ।
चारयन्तोऽर्भलीलाभिर्विजह्रुस्तत्रतत्र ह ॥

मुष्णन्तोऽन्योन्यशिक्यादीञ्ज्ञातानाराच्च चिक्षिपुः ।
तत्रत्याश्च पुनर्दूराद्धसन्तश्च पुनर्ददुः ॥
केचिद्वेणून्वादयन्तो ध्मान्तः शृङ्गाणि केचन ।
केचिद्भृङ्गैः प्रगायन्तः कूजन्तः कोकिलैः परे ॥

அச்சிறுவர்கள் தங்கள் தங்கள் கன்றுகளை எண்ணிக்கைக்கு அடங்காத கிருஷ்ணனுடைய கன்றுகளுடன் ஒன்று சேர்த்து மேய்த்துக்கொண்டும் ஆங்காங்கு பலவிதமாய் விளையாடிக் கொண்டும் உல்லாசமாய்ச் சென்றார்கள். அவர்கள், ஒருவனு டைய தூக்கை ஒருவன் திருடுவதும், சொந்தக்காரன் கண்டு பிடித்ததும் அவ்விடத்தில் வைத்துவிட்டுப் போவதும், கண்டு பிடிக்காவிட்டால் கொஞ்ச தூரஞ்சென்று வேறிடத்தில் வைப் பதும், அல்லது சொந்தக்காரனைக் கண்டு எளனஞ் செய்து அவனிடம் திருப்பிக் கொடுப்பதுமாப், இவ்வாறு பலவாறு விளையாடினர்கள். சிலர் போகும் வழியில் புல்லாங்குழலை வாசித்

தார்கள். சிலர் கொம்பு வாத்தியங்களை ஊதினார்கள். வேறு சிலர் வண்டுகள் போன்று ரீங்காரஞ் செய்தார்கள். சிலர் குயில் போன்று பாடினார்கள்.

इत्थं सतां ब्रह्मसुखानुभूत्या दास्यं गतानां परदैवतेन ।
मायाश्रितानां नरदारकेण साकं विजह्रुः कृतपुण्यपुञ्जाः ॥

ஆத்ம ஞானத்தை யடைந்த பெரியோர்களுக்கு பிரம்மமாயிருந்து பிரம்மானந்தத்தைக் கொடுப்பவரும், தம்மிடத்தில் பக்தி செய்தவர்களுக்கு மேலான தெய்வமாயிருந்து பலனைக் கொடுப்பவரும், மாயையால் மதி மயங்கினவர்களுக்கு மானிடச் சிறுவன்போல் நடிப்பவருமான பகவான் கோபாலர்களுடன் இவ்வாறு விளையாடினார். அவர்கள் பாக்கியத்தை என்னவென்று வர்ணிப்பது!

अथाघनामाऽभ्यपतन्महासुरस्तेषां सुखक्रीडनवीक्षणाक्षमः ।
नित्यं यदन्तर्निजजीवितेप्सुभिः पीतामृतैरप्यमरैः प्रतीक्ष्यते ॥

இவ்விதம் கிருஷ்ணனும் கோபாலர்களும் உல்லாசமாய் விளையாடிக் கொண்டிருக்கையில் அகன் என்ற கொடிய அசுரன் அவர்களிடம் பொறாமைகொண்டு அவர்கள் அருகில் சென்றான். அமிர்தம் பருகிய தேவர்களும் இவனது இன்னல் தீர்ந்து சுகமாய் வாழ இவனது மரணத்தை விரும்பினார்கள்.

दृष्ट्वाऽर्भकान्कृष्णमुखानघासुरः कंसानुशिष्टः सबकीबकानुजः ।
अयं तु मे सोदरनाशकृत्तयोर्द्वयोर्ममैनं सबलं हनिष्ये ॥
इति व्यवस्याजगरं बृहद्वपुः स योजनायाममहाद्रिपीवरम् ।
धृत्वाऽद्भुतं व्यात्तगुहाननं तदा पथि व्यशेत ग्रसनाशया खलः ॥

இவன் கம்ஸனைச் சார்ந்தவன். பூதனை, பகன் இவ்விருவர்களின் தம்பி. கிருஷ்ணனையும் குழந்தைகளையும் பார்த்து அவன் "இந்தக் கிருஷ்ணனல்லவோ என் சகோதரியையும் சகோதரனையும் கொன்றவன் ஆதலால் இவனைக் கொன்று பழிக்குப்பழி வாங்குகிறேன்" என்று மனதில் தீர்மானித்தான். பிறகு அந்தத் துஷ்டன் ஒரு அற்புதமான மலைப் பாம்பின் வடிவத்தை எடுத்து

அவர்களை விழுங்க வேண்டுமென்று ஆவல்கொண்டு வழியில் படுத்திருந்தான். மலைப் பாம்பின் நீளம் ஒரு யோஜனை. அதன் உடல் ஒரு பெரிய மலைபோன்று பருத்தும், வாய் குகைபோன்று விலாசமாயு மிருந்தன.

दृष्ट्वा तं तादृशं सर्वे मत्वा वृन्दावनश्रियम् ।
व्यात्ताजगरतुण्डेन ह्युत्प्रेक्षन्ते स्म लीलया ॥

இத்தகைய அமைப்பு வாய்ந்த உருவத்தை கோபாலச் சிறுவர்கள் பார்த்து "இது பிருந்தா வனத்தின் அழகை அதிகரிக்கும் காட்சி" என்று நினைத்து, அதனுடைய முன் பாகத்தை வாயைத் திறந்து கொண்டிருக்கும் மலைப் பாம்பின் முகத்திற்கு விளையாட்டாக ஒப்பிட்டார்கள்.

इत्थं मिथोऽतथ्यमतज्ज्ञभाषितं श्रुत्वा विचिन्त्येत्यमृषा मृषायते ।
रक्षो विदित्वाऽखिलभूतहृत्स्थितः स्वानां निरोद्धुं भगवान्मनो दधे ॥
तावत्प्रविष्टास्त्वसुरोदरान्तरं परं न गीर्णाः शिशवः सवत्साः ।
प्रतीक्षमाणेन बकारिवेशनं हतस्वकान्तस्मरणेन रक्षसा ॥

ஆனால் எல்லாப் பிராணிகளுடைய நினைப்பையும் அறிய வல்லவரான கிருஷ்ண பகவான் அவ்வுருவத்தை ஓர் ராக்ஷஸன் என்றே அறிந்தார். தன் சிநேகிதர்கள் பேசிக்கொள்வதை அவர் கேள்வியுற்று அவர்கள் அப் பாம்பின் வாயில் பிரவேசிப்பதைத் தடுப்பதற்கு மனங்கொண்டார். ஆனால் இதற்குள் அச் சிறுவர்கள் கன்றுகளுடன் அவ்வரக்கன் வயிற்றுக்குள் நுழைந்துவிட்டார்கள். ஆயினும், அவன் அவர்களை ஜீரணமாக்கவில்லை. சகோதரர்களின் நாசத்தை நினைத்து வருந்திப் பகனைக் கொன்ற கிருஷ்ணன் எப்பொழுது தன் வாயில் அகப்படப்போகிறான் என்று எதிர்பார்த்து நின்றான்.

तान्वीक्ष्य कृष्णः सकलाभयप्रदो ह्यनन्यनाथान्स्वकरादवच्युतान् ।
दीनांश्च मृत्योर्जठराग्निघासान् घृणार्दितो दिष्टकृतेन विस्मितः ॥
कृत्यं किमत्रास्य खलस्य जीवनं न वा अमीषां च सतां विहिंसनम् ।
द्वयं कथं स्यादिति संविचिन्त्य तज्ज्ञात्वाऽविशत्तुण्डमशेषदृग्घरिः ॥

அப்பொழுது பகவான், தம்முடைய திருவடிகளையே சரணுகதியாகக்கொண்டு வாழ்பவர்களாகிய அச்சிறுவர்களிடத்து

மனமிரங்கி எல்லாம் தெய்வச் செயலென நினைத்து "இத்துஷ்டன் உயிரிழக்கவேண்டும்; ஸாதுக்களாகிய சிறுவர்கள் உயிர் பிழைக்க வேண்டும். இவ்விரண்டும் எவ்விதத்தில் ஒரே காலத்தில் நேரிடும்? இவ்விஷயத்தில் நாம் செய்யவேண்டியது யாது?" என்று தமக்குள் நன்கு ஆலோசித்து ஓர் உபாயத்தைத் தீர்மானித்து அப் பாம்பின் வாயினுள்ளே பிரவேசித்து தமது உடலைப் பெரிதாக்கிக் கொண்டார்.

ततोऽतिकायस्य निरुद्धमार्गिणो ह्युद्गीर्णदृष्टेर्भ्रमतस्त्वितस्ततः ।
पूर्णोऽन्तरङ्गे पवनो निरुद्धो मूर्धन्विनिष्पाट्य विनिर्गतो बहिः ॥
तेनैव सर्वेषु बहिर्गतेषु प्राणेषु वत्सान्सुहृदः परेतान् ।
दृष्ट्या स्वयोत्थाप्य तदन्वितः पुनर्वक्त्रान्मुकुन्दो भगवान्विनिर्ययौ ॥

அப்பொழுது அவனது சரீரம் விரிந்து, இரண்டு நாசித்துவாரங்களும் அடைபட்டுக் கண்கள் வெளியில் பிதுங்கின. சுவாசம் விடுவதற்கு முடியாமல் அவ்வரக்கன் இங்கும் அங்கும் புரண்டான். அவனுடைய உடல் பூரித்து, சுவாசம் அடைபடவே, சுவாசக் காற்றுத் தலையைப் பிளந்துகொண்டு வெளிச் சென்றது. அத்துடன் அவனுடைய எல்லாப் பிராணவாயுக்களும் வெளிக்கிளம்பின. பிறகு பகவான், உயிர் துறந்திருக்கும் சிநேகிதர்களையும் கன்றுகளையும் கருணைகூர்ந்த பார்வையால் கடாக்ஷித்து எழுப்பி, பாம்பின் வாயினின்றும் அவர்களுடன் வெளியே வந்தார்.

पीनाहिभोगोत्थितमद्भुतं महज्ज्योतिः स्वधाम्ना ज्वलयद्दिशो दश ।
प्रतीक्ष्य खेऽवस्थितमीशनिर्गमं विवेश तस्मिन्मिषतां दिवौकसाम् ॥
ततोऽतिहृष्टाः स्वकृतोऽकृतार्हणं पुष्पैः सुरा अप्सरसश्च नर्तनैः ।
गीतैः सुरा वाद्यधराश्च वाद्यकैः स्तवैश्च विप्रा जयनिःस्वनैर्गणाः ॥

இதற்குள் மலைபோன்ற அப்பாம்பின் சரீரத்தினின்றும் ஒரு அற்புதமான ஒளி வெளியே கிளம்பி, தனது காந்தியால் பத்துத் திசைகளையும் பிரகாசப்படுத்திற்று. பிறகு அந்த ஒளி பகவான் வெளிப்படுவதை எதிர்பார்த்தவாறு ஆகாயத்தில் நின்றுகொண்டு பகவான் வெளி வந்ததும் அவரது சரீரத்திற்குள் பிரவேசித்தது.

அகாசுர மோக்ஷம்

இந்த ஆச்சரியத்தை தேவர்கள் கூட்டம் கூட்டமாகக் கலந்து பார்த்து ஆனந்தித்துப் புஷ்பங்களை வாரி வருஷித்தார்கள். அப்ஸரஸ்திரிகள் நடனஞ்செய்தார்கள். எல்லோரும் பகவானைப் பல படியாகப் புகழ்ந்தார்கள்.

**तदद्भुतस्तोत्रसुवाद्यगीतिकाजयादिनैकोत्सवमङ्गलस्वनान् ।**
**श्रुत्वा स्वधाम्नोन्त्यज आगतोऽचिराद्दृष्ट्वा महीशस्य जगाम विस्मयम् ॥**
**नैतद्विचित्रं मनुजार्भमायिनः परावराणां परमस्य वेधसः ।**
**अघोऽपि यत्स्पर्शनधौतपातकः प्रापाऽत्मसाम्यं त्वसतां सुदुर्लभम् ॥**

இந்த ஆச்சரியமான வெற்றி முழக்கத்தைக் கேட்டு, பிரம்மதேவர் தமது இருப்பிடத்தினின்றும் எழுந்து வந்து கிருஷ்ணனுடைய பராக்கிரமத்தைக் கண்டு வியப்படைந்தார். ஒப்பு உயர்வு அற்ற பகவான் கபட மானுட வேடம் தரித்து, துஷ்டனை அகாசுரனுக்கும் தனது ஸாரூப்யத்தைக் கொடுத்தார் என்பதில் ஆச்சரியம் ஒன்றும் இல்லை. அவருடைய தேகத்தைத்தழுவிய பொழுதே அவ்வசுரன் எல்லாப் பாவங்களிலிருந்தும் விடுபட்டுத் துஷ்டர்கட்குக் கிட்டாத பகவத் பதவியை அடைந்தான்.

**सकृद्यदङ्गप्रतिमान्तराहिता मनोमयी भागवतीं ददौ गतिम् ।**
**स एव नित्यात्मसुखानुभूत्यभिव्युदस्तमायोऽन्तर्गतो हि किं पुनः ॥**

அரசே! பகவானின் உருவத்தையோ அல்லது ஆலயங்களிலிருக்கும் அவரது விக்ரஹத்தையோ ஒருமுறை மனதால் தியானஞ் செய்தவர்களே உயர்ந்த கதியை அடைவார்களாயின், அந்தப் பகவானையே வயிற்றில் வைத்திருந்த அகாசுரன் நற்கதியை அடைந்தானென்பதில் என்ன ஆச்சரியமிருக்கிறது.

---

## பதின்மூன்றாவது அத்தியாயம்.

---

{ त्रयोदशेऽहरद्ब्रह्मा वत्सान् पालांश्च मायया ।
तदा तत्सर्वरूपोऽब्दं कृष्णः पूर्ववदाचरत् ॥ }

[பிரம்மதேவர் கன்றுகளையும் சிறுவர்களையும் மாயையால் மறைத்தல்-பகவான் அவர்கள் வடிவமாகி ஒரு வருஷம் முன்போன்று விளையாடுதல்.]

तथाऽघवदनान्मृत्यो रक्षित्वा वत्सपालकान् ।
सरित्पुलिनमानीय भगवानिदमब्रवीत् ॥
अत्र भोक्तव्यमस्माभिर्दिवा रूढं क्षुधाऽर्दिताः ।
वत्साः समीपेऽपः पीत्वा चरन्तु शनकैस्तृणम् ॥

பகவான், கோபாலர்களேயும் கன்றுகளேயும் அகாசுரனுகிய யமனிடமிருந்து விடுவித்து, அவர்களே அழைத்துக்கொண்டு, யமுனுநதியின் மணல் திட்டுக்குச் சென்று, "சிநேகிதர்களே! சூரியன் உச்சியில் வந்துவிட்டான். பசியும் அதிகரித்துவிட்டது. நாம் இவ்விடத்தில் கன்றுகளுக்கு தண்ணீர் காட்டிவிட்டு, உணவை அருந்துவோம். கன்றுகள் அருகில் மேய்ந்து கொண்டிருக்கட்டும்" என்று கூறினர்.

तथेति पाययित्वाऽर्भा वत्सानारुध्य शाद्वले ।
मुक्त्वा शिक्यानि बुभुजुः समं भगवता मुदा ॥

அவ்விதமே அவர்கள் கன்றுகளுக்குத் தண்ணீர் காட்டி, புற்றரையில் மேயவிட்டு பின் தத்தம் தூக்குகளேத் திறந்து தயிரமுதை யெடுத்து உல்லாசமாய்ப் புசிக்கலானுர்கள்.

बिभ्रद्वेणुं जठरपटयोः शृङ्गवेत्रे च कक्षे
वामे पाणौ मसृणकवलं तत्फलान्यङ्गुलीषु ।
तिष्ठन्मध्ये स्वपरिसुहृदो हासयन्नर्मभिः स्वैः
स्वर्गे लोके मिषति बुभुजे यज्ञभुग्बालकेलिः ॥

அப்பொழுது பகவான் சிங்குழலே இடுப்பில் சொருகியிருந்தார். கொம்பும் பிரம்பும் கைக்கடியில் திகழ்ந்தன. இடது கரத்தில் வெண்ணமுது பிரகாசித்தது. மிசைவதற்குரிய ஊறுகாய்கள் விரல்களுக்கிடையில் விளங்கின. யாகங்களில் ஹோமமிடும் அவிசை புஜிக்கும் பகவான், சிறுவர்கள் புடைசூழ, மத்தியில் நின்று பாலர்களின் விளேயாட்டை விளேயாடியும், தம் வின்யாச மொழிகளால் அவர்களேச் சிரிக்கச் செய்தும் அவர்களுடன் சமமாகவிருந்து உணவையருந்தினர். தேவர்கள் இக்காட்சியை ஆகாசத்தில் நின்று பார்த்தனர்.

भारतैवं वत्सपेषु भुञ्जानेष्वच्युतात्मसु ।
वत्सास्त्वन्तर्वने दूरं विविशुस्तृणलोभिताः ॥

तान्दृष्ट्वा भयसन्त्रस्तानूचे कृष्णोऽस्य भीभयम् ।
मित्राण्याशान्मा विरमतेहानेष्ये वत्सकानहम् ॥
इत्युक्त्वाऽद्रिदरीकुञ्जगह्वरेष्वात्मवत्सकान् ।
विचिन्वन्भगवान्कृष्णः सपाणिकवलो ययौ ॥

பாரத சிரேஷ்டரே! இவ்விதம் கோபாலர்கள் கிருஷ்ணனையே பார்த்துக்கொண்டு சாப்பிடுகையில் கன்றுகள் புல்லில் ஆசை கொண்டு வெகு தூரம் சென்றன. சிறிது நேரத்தில், சிறுவர்களும் கன்றுகளைக் காணமல் வருந்தினார்கள். பகவான் அவர்களை அவ்விடமே நிறுத்திவிட்டு, கன்றுகளைத் தேடுவதற்குத் தாமொருவராகவே கவளமும் கையுமாகச் சென்றார்.

अंभोजन्मजनिस्तदन्तरगतो मायार्भकस्येशितु-
र्द्रष्टुं मञ्जु महित्वमन्यदपि तद्वत्सानितो वत्सपान् ।
नीत्वाऽन्यत्र कुरूद्वहान्तरदधात्खेऽवस्थितो यः पुरा
दृष्ट्वाघासुरमोक्षणं प्रभवतः प्राप्तः परं विस्मयम् ॥

குருசிரேஷ்டனே! விஷ்ணுவின் உந்திக்கமலத்தினின்றும் உதித்த பிரும்மதேவர் இதையே நல்ல தருணமெனக் கருதினர். பகவான் அகாசுரனைக்கொன்று சிறுவர்களை விடுவித்ததையும், அகாசுரனுக்கு மோக்ஷமளித்ததையும், அவர் ஆகாசத்திலிருந்தவாறு கண்ணுற்று அதிக வியப்படைந்தார். அதுமுதல் குழந்தை வடிவங்கொண்ட கிருஷ்ணனதுமகிமையை விளக்கவல்ல வேறுபல அற்புதச்செயல்களைப் பார்க்க ஆவல் கொண்டு, எப்பொழுது சமயம் நேரிடுமெனக் காத்திருந்தார். ஆதலால் கிருஷ்ணன் வெளிச்சென்றிருப்பதை அறிந்து, இடைச் சிறுவர்களையும் கன்றுகளையும் மாயையால் வேறிடத்திற்குக் கொண்டுபோய், மறைத்து வைத்தார்.

ततो वत्सानदृष्ट्वैत्य पुलिनेऽपि च वत्सपान् ।
उभावपि वने कृष्णो विचिकाय समन्ततः ॥
काप्यदृष्ट्वान्तर्विपिने वत्सान्पालांश्च विश्ववित् ।
सर्वं विधिकृतं कृष्णः सहसाऽवजगाम ह ॥
ततः कृष्णो मुदं कर्तुं तन्मातॄणां च कस्य च ।
उभयायितमात्मानं चक्रे विश्वकृदीश्वरः ॥

பகவான் கன்றுகளைக் காணாது, மறுபடி மணல் திட்டிற்குத் திரும்பி

ஞர். ஆனால் அவ்விடத்தில் சிறுவர்களையும் காணவில்லை. மீண்டும் கன்றுகளையும், சிறுவர்களையும் தேடிச் சென்றார். ஆனால் அவர்களைக் கண்டாரில்லை. பிறகு ஸர்வஜ்ஞரான பகவான் இவையனைத்தும் பிரம்மதேவரின் சூழ்ச்சியென அறிந்து மலரவனையும் கோபமாதர்களையும் மகிழ்விக்கக் கருதி, தாமே அத்தனை கன்றுகளாகவும், சிறுவர்களாகவும் உருவெடுத்தார்.

यावद्वत्सपवत्सकाल्पकवपुर्यावत्कराङ्घ्र्यादिकं
यावद्यष्टिविषाणवेणुदलशिग्यावद्विभूषांवरम् ।
यावच्छीलगुणाभिधाकृतिवयो यावद्विहाराहिकं
सर्वं विष्णुमयं गिरोऽङ्गवदजः सर्वस्वरूपो बभौ ॥

வடிவத்திலோ, வனப்பிலோ, கால் அளவிலோ, கையளவிலோ சிறிதும் வேற்றுமை தோன்றவில்லை. கொம்பும், சிங்குழலும், கோலும், கட்டுரியும், ஆடையும், அணிகலமும், சிறிதும் மாறுபாடன்றி முன்போலவே விளங்கின. குணமும், தொழிலும், வயதும், வண்ணமும், மழலைச் சொல்லும், விளையாட்டும், வேறுபாடில்லாமல் இயற்கையை ஒத்திருந்தன. அரசே! "உலகத்தின் கண்ணுள்ள எப்பொருளும் விஷ்ணுவின் வடிவம்" என்ற ஆன்றோர் வாக்கை பகவான் மெய்ப்பித்தார் போலும்.

स्वयमात्माऽऽत्मगोवत्सान्प्रतिवायऽऽत्मवत्सपैः ।
क्रीडन्नात्मविहारैश्च सर्वात्मा प्राविशद्व्रजम् ॥
तत्तद्वत्सान् पृथङ्नीत्वा तत्तद्गोष्ठे निवेश्य सः ।
तत्तदात्माऽभवद्राजंस्तत्तत्सद्म प्रविष्टवान् ॥

இவ்விதம் தாமே உருவெடுத்த கன்றுகளைத் தாமே சிறுவர்களாக இருந்து மேய்த்து, அவர்களுடன் தாமே விளையாடிக்கொண்டு வழக்கம்போல கோகுலத்திற்குச் சென்றார். அரசே! அங்கு சென்று பகவான் அவரவர்கள் கன்றுகளை அவரவர்கள் தொழுவிற்குப் பற்றினார். அந்தந்தச் சிறுவர்கள் தத்தம் வீடுகளுக்குப் போவதுபோல் பகவான் அவரவர்கள் வீடுகளுக்குச் சென்றார்.

तन्मातरो वेणुरवत्वरोत्थिता उत्थाप्य दोर्भिः परिरभ्य निर्भरम् ।
स्नेहस्नुतस्तन्यपयःसुधासवं मत्वा परं ब्रह्म सुतानपाययन् ॥

ஒவ்வொரு தாயும் குழந்தை வடிவங்கொண்ட கிருஷ்ணனைத் தன் குழந்தையாகவே பாவித்து முன்போல் எடுத்துப் பாலூட்டினாள். அச் சிறுவர்களும் தங்கள் தங்களுக்குரிய அபூர்வ குணங்களால் வழக்கம்போல் தாய்மார்களை மகிழச் செய்தார்கள். ஆனால் தாய்மார்களுக்குமட்டும் தம் குழந்தைகளிடம் முன்னிலும் அதிகமான அன்பு உண்டாயிற்று.

तावदेत्यात्मभूरात्ममानेन त्रुट्यनेहसा ।
पुरोवदब्दं क्रीडन्तं ददृशे सकलं हरिम् ॥
यावन्तो गोकुले बालाःसवत्साः सर्व एव हि ।
मायाशये शयाना मे नाद्यापि पुनरुत्थिताः ॥
इत एतेऽत्र कुत्रत्या मन्मायामोहितेतरे ।
तावन्त एव तत्राब्दं क्रीडन्तो विष्णुना समम् ॥

இவ்விதம் கிருஷ்ண பகவான் ஒருவருஷம் காட்டிலும் சேரியிலும் விளையாடினார். இவ்வொருவருஷம் பிரம்ம தேவருக்கு ஒரு துருடி எனப்படும். பிரம்மதேவர் இதைப் பார்த்து, "என் மாயையால் மதிமயங்கித் தூங்கும் சிறுவர்களும் கன்றுகளும் இன்னும் தூக்கத்திலிருந்து எழுந்திருக்கவில்லையே. பின் கிருஷ்ணனுடன் இவ்வொரு வருஷமாக விளையாடும் குழந்தைகள் எங்கிருந்துவந்தார்கள்? இவர்கள் என் மாயையில் அகப்படவில்லையா?" என்று தமக்குள் ஆலோசித்துக் கொண்டிருக்கும் பொழுதே,

तावत्सर्वे वत्सपालाः पश्यतोऽजस्य तत्क्षणात् ।
व्यदृश्यन्त घनश्यामाः पीतकौशेयवाससः ॥
चतुर्भुजाः शङ्खचक्रगदाराजीवपाणयः ।
किरीटिनः कुण्डलिनो हारिणो वनमालिनः ॥

அவர் பார்வையில் சிறுவர்களனைவரும் நீலமேகச்சியாமளர்களாகவும், பீதாம்பரம் தரித்தவர்களாகவும் புலப்பட்டார்கள். ஒவ்வொருவரும் நாலு கைகளுடன் விளங்கினார்கள். அவர்கள் சங்கு சக்கிரத்தைக் கையிலேந்தியும், கிரீட குண்டலங்களை அணிந்தும் இருந்தார்கள்.

अणिमाद्यैर्महिमभिरजाद्याभिर्विभूतिभिः ।
चतुर्विंशतिभिस्तत्त्वैः परीता महदादिभिः ॥

कालस्वभावसंस्कारकामकर्मगुणादिभिः ।
स्वमहिध्वस्तमहिभिर्मूर्तिमद्भिरुपासिताः ॥
सत्यज्ञानानन्तानन्दमात्रैकरसमूर्तयः ।
अस्पृष्टभूरिमाहात्म्या अपि ह्युपनिषद्दृशाम् ॥

அணிமா முதலிய அஷ்ட ஐச்வரியங்களும், காலம் கர்மம் சுபாவம் முதலியகுணங்களும், மகத் முதலிய இருபத்துநான்கு தத்வங்களும், பகவானுடைய மகிமையால் ஸ்வாதந்திரியத்தை இழந்து தத்தமக்குரிய உருவத்தை யெடுத்து அவர்களைப் போற்றின. பிறகு அத்திவ்ய புருஷர்கள் ஞானவடிவமாகவும் ஆனந்தவடிவமாகவும் மாறுத மூர்த்திகளாகவும் உபனிஷத்தாகிற ஞானக்கண்களுக்கும் எட்டாத மகிமையுடனும் விளங்கினர்கள்.

एवं सकृद्ददर्शाजः परब्रह्मात्मनोऽखिलान् ।
यस्य भासा सर्वमिदं विभाति सचराचरम् ॥
ततोऽतिकुतुकोद्वृत्य स्तिमितैकादशेन्द्रियः ।
तद्धाम्नाऽभूदजस्तूष्णीं पूर्देव्यन्तीव पुत्रिका ॥

இதுவே எங்கும் நிறைந்த பரமாத்ம ஸ்வரூபம்; இதன் ஒளியாலேதான் இந்தப் பிரபஞ்சமனைத்தும் பிரகாசிக்கின்றது. இந்த ஸ்வரூபத்தை நான்முகனர் ஒருதடவை பார்த்ததும், அவரது கண்கள் மழுங்கின. அவர் ஆச்சரியத்தால் கண்களைத் திருப்பிக்கொண்டு கிராம தேவதையின் அருகில் இருக்கும் பொம்மைபோல் அசைவற்றிருந்தார்.

इतीरेशेऽतर्क्ये निजमहिमनि स्वप्रमितिके
परत्रजातोऽतन्निरसनमुखब्रह्मकमितौ ।
अनीशेऽपि द्रष्टुं किमिदमिति वा मुह्यति सति
चच्छादाजो ज्ञात्वा सपदि परमोऽजायवनिकाम् ॥

ஸரஸ்வதியின் நாயகரா யிருப்பினும், அதை இன்னதென்று அவரால் அறியமுடியவில்லை. ஏனெனில் அது யுக்திக்கு எட்டாதது: ஒப்புயர்வற்றது: மாயாகுணங்களற்றது: நான் மறைகளும் அதை இன்னதென்று சுட்டிக்காட்டுவதற்கு முடியாது,

எதிர்மறையாகவே " இது பிரம்மமல்ல, இது பிரம்மமல்ல " என்று கூறி அதன்பின் மிஞ்சியிருப்பதையே பிரம்மமென உரைக்கின்றன. இத்தகைய ஸ்வரூபத்தை ஒருதடவை பார்த்து "முன் நான்கு கைகளுடன் திவ்ய புருஷர்களைப் பார்த்தேன். இப்பொழுது ஒரே ஒளி மட்டுமே தோன்றுகிறதே? இது எது? எங்கிருந்து வந்தது?" என்று மலரவன் மயங்கும்பொழுது மாயன் பகவான் அவர் முன் மாயையாகிய திரையை விடுத்தார்.

ततोऽर्वाक् प्रतिलब्धाक्षः कः परेतवदुत्थितः ।
कृच्छ्रादुन्मील्य वै दृष्टीराचष्टेदं सहाऽऽत्मना ॥
सपद्येवाभितः पश्यन्दिशोऽपश्यत्पुरः स्थितम् ।
वृन्दावनं जनाजीव्यद्रुमाकीर्णं समाप्रियम् ॥

பிரம்மதேவர் கண்களை மூடிக்கொண்டு அசைவற்றிருந்து, மூர்ச்சை தெளிந்து எழுந்தவர்போன்று வெகு கஷ்டத்துடன் கண்களைத் திறந்து பார்த்தார். அப்பொழுது தமக்கெதிரில் பிருந்தாவனத்தையும், அங்கு மரங்கள் அடர்ந்திருப்பதையும், அவைகளின் நிழலில் ஜனங்கள் சுகமாய் உட்கார்ந்திருப்பதையும் பார்த்தார்.

तत्रोद्वहत्पशुपवंशशिशुत्वनाट्यं ब्रह्माद्वयं परमनन्तमगाधबोधम् ।
वत्सान्सखीनिव पुरा परितो विचिन्वदेकं सपाणिकवलं परमेष्ठ्यचष्ट ॥

பிறகு பிரம்மதேவர், தேசம், காலம் இவைகளால் குன்றாததும், ஞானவடிவமானதும், இரண்டற்றதும், முன் பார்த்ததுமான ஸ்வரூபத்தை, நந்தகோபரின் புதல்வன் என்ற நாடகத்தை நடிக்கும் கிருஷ்ணனைக் கண்டார். முன்போன்று அவரே தம் இடக்கை மலரில் வெண்ணமுதை ஏந்தி, சிநேகிதச் சிறுவர்களையும் கன்றுகளையும் காற்புறமும் தேடிச் செல்வதையும் பார்த்தார்.

दृष्ट्वा त्वरेण निजधोरणतोऽवतीर्य पृथ्व्यां वपुः कनकदण्डमिवाभिपात्य ।
स्पृष्ट्वा चतुर्मुकुटकोटिभिरङ्घ्रियुग्मं नत्वा मुदश्रुसुजलैरकृताभिषेकम् ॥
शनैरथोत्थाय विमृज्य लोचने मुकुन्दमुद्वीक्ष्य विनम्रकन्धरः ।
कृताञ्जलिः प्रश्रयवान्समाहितः सवेपथुर्गद्गदयैलतेलया ॥

அவர், தம் வாகனத்தினின்றும் பரபரப்புடன் கீழே இறங்கி, பூமியில் சுவர்ண தண்டம்போல் விழுந்து, தமது நான்கு முடிகளும் அவர் இணையடியில் பொருந்த வணங்கி, ஆனந்தக் கண்ணீரைப் பெருக்கி, அவரது பாத பத்மங்களை நனைத்தார். பிறகு கண்களைத் துடைத்துக்கொண்டு, எழுந்து நின்று, கூப்பிய கைகளால் பகவானை வணங்கி, தலை குனிந்து நடுநடுக்கத்துடன் தத்தளிட்ட மொழிகளால் வினயத்துடன் அவரைத் துதிக்கலானார்.

---

## பதினான்காவது அத்தியாயம்.

---

{ चतुर्दशेऽद्भुतं दृष्ट्वा पूर्वागन्तुकनिश्चयम् ।
अनीशः कर्तुमस्तौषीत् कृष्णं ब्रह्मा विमोहितः ॥ }

[பிரம்மதேவர் அற்புதங்கள் காணுதல்—உண்மையறியாது மயங்குதல்—பகவானைத் துதித்தல்.]

**नौमीड्य तेऽभ्रवपुषे तडिदंबराय गुञ्जावतंसपरिपिच्छलसन्मुखाय ।**
**वन्यस्रजे कवलवेत्रविषाणवेणुलक्ष्मश्रिये मृदुपदे पशुपाङ्गजाय ॥**
**अस्यापि देववपुषो मदनुग्रहस्य स्वेच्छामयस्य नतुभूतमयस्य कोऽपि ।**
**नेशे महि त्ववसितुं मनसान्तरेण साक्षात्तवैव किमुताऽऽत्मसुखानुभूतेः ॥**

"நீருண்ட மேகம் போன்ற திருமேனியை உடையவரே! மின்னல் போன்ற பீதாம்பரத்தை அணிந்தவரே! குன்றிமணிகளால் செய்யப்பட்ட குண்டலங்களைத் தரித்தவரே! மயில்தோகைகளைக் கொண்டையில் கொண்டவரே! வனமாலை பூண்டவரே! கையில் அன்ன உருண்டையையும், கொம்பு வாத்தியத்தையும், பிரம்பையும், புல்லாங்குழலையும் உடையவரே! ஸ்ரீவத்ஸம் என்ற அழகான மருவை உடையவரே! அழகான பாதாரவிந்தங்கள் பொருந்தியவரே! இப்பொழுது நந்தகோபருக்குப் பிள்ளையாக அவதரித்தவரே! போற்றி! போற்றி! எ தேவா! என்னை அனுக்கிரஹம் செய்வதற்காகவே இஷ்டமான வடிவத்தை எடுக்க வல்லவரான நீர்

இச் சரீரத்தை எடுத்து என்முன் தோன்றினீர். இச்சரீரம் மானிட சரீரம் போன்று பஞ்ச பூதங்களால் அமைந்ததன்று. இந்த சரீரத்தின் மகிமையை பிரம்மதேவராயிருப்பினும் நான் மனதினால் நினைப்பதற்குங்கூட சக்தியற்றவனாயிருக்கிறேன். அப்படியிருக்க, ஸச்சிதானந்த வடிவமாயிருக்கிற உம்மை நான் எப்படிப் பார்க்க முடியும் ?

ज्ञाने प्रयासमुदपास्य नमन्त एव
जीवन्ति सन्मुखरितां भवदीयवार्ताम् ।
स्थाने स्थिताः श्रुतिगतां तनुवाङ्मनोभि
र्ये प्रयाशोऽजित जितोऽप्यसि तैस्त्रिलोक्याम् ॥

கஷ்டமான ஞான மார்க்கத்தைக் கைக்கொள்ளாது, உம்மை நமஸ்காரஞ்செய்து, ஸாதுக்கள் கொண்டாடும் உம்முடைய கதைகளை எப்பொழுதும் கேட்டுக்கொண்டு தங்கள் தங்கள் வர்ணாச்சிரம தர்மங்களை அனுஷ்டித்து, மனதினாலும் வாக்கினாலும் காயத்தினாலும் எவர்கள் உம்மையே பஜிக்கின்றார்களோ, அவர்கள் ஸம்ஸார பந்தத்திலிருந்து விடுபடுகிறார்கள்.

श्रेयःसृतिं भक्तिमुदस्य ते विभो क्लिश्यन्ति ये केवलबोधलब्धये ।
तेषामसौ क्लेशल एव शिष्यते नान्यद्यथा स्थूलतुषावघातिनाम् ॥
पुरेह भूमन्बहवोऽपि योगिनस्त्वदर्पितेहा निजकर्मलब्धया ।
विबुध्य भक्त्यैव कथोपनीतया प्रपेदिरेऽञ्जोऽच्युत ते गतिं पराम् ॥

மோக்ஷத்தைப் பயக்கும் இலகுவான பக்தி மார்க்கத்தை விட்டு எவர்கள் கேவலம் ஞானமார்க்கத்தில் முயல்கிறார்களோ அவர்களுக்குக் கஷ்டம் தான் மீதமாகும்; அவர்கள் ஒருநாளும் மோக்ஷத்தை அடைவதில்லை. உமி குத்திக் கை நோவதுபோல் அவர்கள் துன்பத்தையே அடைகிறார்கள். முன்காலத்தில் பல யோகிகள் உம்மிடத்தில் தங்கள் உடல், பொருள், ஆவிகளை அர்ப்பணஞ்செய்தும் உம்முடைய கதைகளைக் கேட்டும் உம்மிடத்தில் பக்தியைச் செய்தும் மோக்ஷத்தை அடைந்திருக்கிறார்கள்.

गुणात्मनस्तेऽपि गुणान्विमातुं हितावतीर्णस्य क ईशिरेऽस्य ।
कालेन यैर्वा विमिताः सुकल्पैर्भूपांसवः खे मिहिका द्युभासः ॥
तथापि भूमन्महिमाऽगुणस्य ते विबोद्धुमर्हत्यमलान्तरात्मभिः ।

பூமியிலிருக்கும் புழுதியையும் கணக்கிட்டுச் சொல்லலாம். ஆகாயத்தில் தோன்றும் பனித்துளிகளையும் இத்தனை என்று எண்ணிச் சொல்லலாம். ஆனல் உம்முடைய மகிமைவாய்ந்த குணங்களை இவ்வளவு என்று ஒருவராலும் சொல்லமுடியாது. ஆயினும்பிரபுவே! சுத்தமான மனதுடன்கூடியவர்களேநிர்க்குணரான உம்முடைய மகிமைகளை அறிகிறார்கள்.

तत्तेऽनुकंपां सुसमीक्षमाणो भुञ्जान एवाऽऽत्मकृतं विपाकम् ।
हृद्वाग्वपुर्भिर्विदधन्नमस्ते जीवेत यो मुक्तिपदे स दायभाक् ॥

எவர்கள் உம்முடைய கருணையை எதிர்பார்த்து மனோவாக்காயங்களால் எவ்விதத்திலும் எக்காலத்திலும் உம்மையே தியானஞ் செய்து தங்கள் வினைப் பயனை அனுபவிக்கிறார்களோ அவர்கள் உம்முடைய பதவியை அடைகிறார்கள்.

पश्येश मेऽनार्यमनन्त आद्ये परात्मनित्वय्यपि मायिमायिनि ।
मायां वितत्येक्षितुमात्मवैभवं ह्यहं कियानैच्छमिवार्चिरग्नौ ॥

ஈசா! ஆதி புருஷனும், அனந்தனும், பரமாத்மாவுமான உம்மிடத்தில் நான் செய்த அபசாரத்தைப் பாரும். மாயையையும் மயக்கும் உம்மிடத்தில் என்னுடைய மாயையைப் பரப்பி, என்னுடைய வல்லமையை நான் அறிய விரும்பியது, அக்னி குண்டத்திலுருந்துண்டாகும் ஜ்வாலை அவ்வக்னியை எரிக்க முயன்றது போலாகின்றது.

उत्क्षेपणं गर्भगतस्य पादयोः किं कल्पते मातुरधोक्षजागसे ।
जगत्त्रयान्तोदधिसंप्लवोदे नारायणस्योदरनाभिनालात् ।
विनिर्गतोऽजस्त्विति वाङ्न वै मृषा किं त्वीश्वर त्वन्न विनिर्गतोस्मि ॥

தாயின் கர்ப்பத்திலிருக்கும் குழந்தை தாயைக் காலால் உதைந்து தள்ளுவதை அத்தாய் குற்றமாகக் கருதுவாளா? அது

போன்று நான் செய்த அபசாரத்தை நீர் மன்னிக்கவேண்டும். நான் உம்முடைய குழந்தை யல்லவோ? ஈச்வரா! 'பிரளயகாலத்தில் மூவுலகங்களும் அழிந்து ஒரே சமுத்திரமாக இருக்கும் பொழுது அதில் பள்ளிகொண்ட நாராயணனுடைய நாபிக்கமலத்திலிருந்து பிரம்மதேவர் உண்டானர்' என்ற சொல் பொய்யில்லை.

अद्यैव त्वदृतेऽस्य किं मम न ते मायात्वमादर्शित-
मेकोऽसि प्रथमं ततो व्रजसुहृद्वत्साः समस्ता अपि ।
तावन्तोऽसि चतुर्भुजास्तदखिलैः साकं मयोपासिता
स्तावन्त्येव जगंत्यभूस्तदमितं ब्रह्माद्वयं शिष्यते ॥

உம்மைத்தவிர வேறு பொருள் உண்மையில் ஒன்றுமில்லை. இருப்பதாக எவை தோன்றுகின்றனவோ அவை உண்மையல்ல என்பதை இன்றுதான் அறிந்துகொண்டேன். நீர், முதலில் ஒருவராகயிருந்து, பிறகு கோகுலத்திலுள்ள எல்லாச் சிறுவர்களாகவும் கன்றுகளாகவுமானீர். பிறகு ஒவ்வொருவரிடத்தும் புகுந்து நாலு கைகளுடன் விளங்கி உலகம் முழுவதும் கிருஷ்ணனுகவே தோன்றினீர். பிறகு நீர் எங்கும் நிறைந்த பிரம்ம ஸ்வரூபமாகவும் தோன்றினீர்.

सुरेष्वृषिष्वीश तथैव नृष्वपि तिर्यक्षु यादस्वपि तेऽजनस्य ।
जन्मासतां दुर्मदनिग्रहाय प्रभो विधातः सदनुग्रहाय च ॥
को वेत्ति भूमन्भगवन्परात्मन्योगेश्वरोतीर्भवतस्त्रिलोक्याम् ।
क वा कथं वा कति वा कदेति विस्तायरन्क्रीडसि योगमायाम् ॥

பிரபுவே! பிறப்பற்றவராயிருந்தும் தேவர்களில் வாமனராகவும், ரிஷிகளில் நரநாராயணர்களாகவும், மனுஷ்யர்களில் ராமராகவும், மிருகஜாதிகளில் யஞ்ஞவராகமூர்த்தியாகவும், ஜலஜந்துக்களில் மத்ஸ்யமாகவும் கூர்மமாகவும் நீர் அவதரித்து, துஷ்டர்களின் கர்வத்தை யடக்கி ஸாதுக்களை ரக்ஷித்தீர். யோகீச்வரா! எல்லா ஐசுவரியங்களையும் பெற்றவரே! எங்கும் நிறைந்தவரே! உம்முடைய மாயாசக்தியின் விளையாட்டுகள் இவ்வளவுதான் என்றும் அவை எப்பொழுது எவ்விடத்தில் எவ்வளவு நிகழக்கூடியவை என்றும் அறிவதற்கு மூவுலகங்களிலும் ஒருவராலும் முடியாது.

तस्मादिदं जगदशेषमसत्स्वरूपं स्वप्नाभमस्तधिषणं पुरुदुःखदुःखम् ।
त्वय्येव नित्यसुखबोधतनावनन्ते मायात उद्यदपियत्सदिवावभाति ॥

ஆகையால்தான் ஸ்வப்பனத்தில் கண்ட பொருள்போல் பொய்யாகயிருப்பதும், எப்பொழுதும் துக்கத்தை விளைவிப்பதுமான இந்தப் பிரபஞ்சம், ஸச்சிதானந்த ஸ்வரூபியான உம்மிடத்திலிருந்து மாயையால் உண்டாகி உண்மை போல் தோன்றுகிறது.

एकस्त्वमात्मा पुरुषः पुराणः सत्यः स्वयंज्योतिरनन्त आद्यः ।
नित्योऽक्षरोऽजस्रसुखो निरञ्जनः पूर्णोऽद्वयो मुक्त उपाधितोऽमृतः ॥
एवंविधं त्वां सकलात्मनामपि स्वात्मानमात्मात्मतया विचक्षते ।
गुर्वर्कलब्धोपनिषत्सुचक्षुषा ये ते तरन्तीव भवानृतांबुधिम् ॥

நீர் ஒருவரே இவ்வுலகங்களுக்கு ஆத்மாவாயும் நித்யராயும் அழிவற்றவராயும் அளவற்ற சுகமுடையவராயும் மாறுதலற்றவராயும், துக்க லேசமற்றவராயும் இருக்கிறீர். இவ்விதம் மகிமை வாய்ந்த உமது ஸ்வரூபத்தை எவர்கள் உபநிஷத்தாகிற ஞானக்கண்களால் தங்கள் முக்கியாத்மாவாகப் பார்க்கிறார்களோ அவர்கள் ஸம்ஸார ஸாகரத்தினின்றும் கரையேறுகிறார்கள்.

तदस्तु मे नाथ स भूरिभागो भवेऽत्र वाऽन्यत्र तु वा तिरश्चाम् ।
येनाहमेकोऽपि भवज्जनानां भूत्वा निषेवे तव पादपल्लवम् ॥
अहोऽतिधन्या व्रजगोरमण्यः स्तन्यामृतं पीतमतीव ते मुदा ।
यासां विभो वत्सतरात्मजात्मना यत्तृप्तयेऽद्यापि नचालमध्वराः ॥

நாதா ! ஆகையால் இந்த ஜன்மத்திலும், இனிவருங் காலத்திலும், எப்பிறப்பை நான் எடுப்பினும், அப்பொழுதும் நான் பக்தர்களிலொருவனாக இருந்து உம்முடைய திருவடிகளைச் சேவிக்க வேண்டும். இதுதான் நீர் எனக்குச் செய்யவேண்டிய பெரிய அனுக்கிரஹம். நந்தகோகுலத்திலிருக்கும் கோபிகைகள் மிகுந்த பாக்கியத்தைச் செய்தவர்கள். ஏனெனில் நீர் அவர்களிடம் குழந்தைபோலச் சந்தோஷமாய் ஸ்தன்யபானம் செய்தீரல்லவா ? நீர் அவர்களிடம் எவ்விதம் திருப்தியடைந்தீரோ அவ்விதம் யாகங்

களிலும் திருப்திபடைவதில்லை. அவர்களின் பாக்கியமே பாக்கியம்!

अहो भाग्यमहोभाग्यं नन्दगोपव्रजौकसाम् ।
यन्मित्रं परमानन्दं पूर्णं ब्रह्म सनातनम् ॥
तावद्रागादयः स्तेनास्तावत्कारागृहं गृहम् ।
तावन्मोहोऽङ्घ्रिनिगडो यावत्कृष्ण न ते जनाः ॥
अनुजानीहि मां कृष्ण सर्वं त्वं वेत्सि सर्वदृक् ।
त्वमेव जगतां नाथो जगदेतत्तवार्पितम् ॥

கோகுலவாசிகள் என்ன புண்ணியத்தைச்செய்து ஆனந்த ஸ்வரூபியாய் எங்கும் நிறைந்தவராய் என்றைக்கும் அழிவில்லாதவராயிருக்கும் பிரம்மத்தைச் சிநேகிதராக அடைந்தார்களோ! அவர்கள் பாக்கியத்தில் நான் அருமைப்படுகிறேன். கிருஷ்ணா! மானிடன் எதுவரையில் உம்முடைய அனுக்கிரஹத்தை அடையவில்லையோ அதுவரைதான் இல்லறவாழ்க்கை சிறைச்சாலை யாகின்றது; ஆசைகள் புத்தியைத் திருடுகின்றன. அறிவின்மை விலங்கு போன்று கட்டுகின்றது! நீர் எல்லாவற்றையும் அறிகிறீர். நீர் தான் இந்த உலகங்களுக்கு ஈசன். ஆகையால் உம்மிடத்தில் 'நான் எனது' என்ற அகப்புற பற்றுகளனைத்தையும் அர்ப்பணஞ் செய்கிறேன்.

श्रीकृष्ण वृष्णिकुलपुष्करजोषदायिन् क्ष्मानिर्जरद्विजपशूदधिवृद्धिकारिन् ।
उद्धर्मशार्वरहर क्षितिराक्षसध्रुगाकल्पमार्कमर्हन्भगवन् नमस्ते ॥

கிருஷ்ணா! விருஷ்ணி வம்சமாகிற தாமரைத் தடாகத்தைச் சூரியன் போன்று மகிழச்செய்பவரே! தேவர், பிராமணர், பசு ஆகிய கடலைச் சந்திரன் போன்று பொங்கச் செய்பவரே! பாஷண்டமாகிற இருட்டைப் போக்குவதில் சந்திரன் சூரியன் போன்றவரே! ராக்ஷஸர்களை நாசஞ்செய்பவரே! சூரியனுக்கும் மேலான சூரியனே! பகவானே! உம்மை வணங்குகிறேன்."

इत्यभिष्टूय भूमानं त्रिः परिक्रम्य पादयोः ।
नत्वाऽभीष्टं जगद्धाता स्वधामप्रत्यपद्यत ॥

இவ்விதம் பிரம்மதேவர் பகவானைத் தோத்திரம் செய்து மூன்று தடவை அவரை வலம்வந்து நலவணங்கி அவரிடம் விடைபெற்றுக்கொண்டு பிரம்மலோகஞ் சென்றார்.

ततोऽनुज्ञाप्य भगवान्स्वभुवं प्रागिवस्थितान् ।
वत्सान्पुलिनमानिन्ये यथापूर्वसखं स्वकम् ॥
एकस्मिन्नपि यातेऽब्दे प्राणेशं चान्तरात्मनः ।
कृष्णमायाहता राजन्क्षणार्धं मेनिरेऽर्भकाः ॥

பகவான் பிரம்மதேவரை அனுப்பியபின், முன்போலவே இருந்த கன்றுகளை அழைத்துக்கொண்டு சிநேகிதர்களிருக்கும் மணற் திட்டிற்குச் சென்றார். அச்சிறுவர்கள் கிருஷ்ணபகவானின் மகிமையால் ஒரு வருஷத்தையும் அரை க்ஷணம்போல் நினைத்தனர்.

ततो हसन्हृषीकेशोऽभ्यवहृत्य सहार्भकैः ।
दर्शयंश्चर्माजगरं न्यवर्तत वनाद्व्रजम् ॥
अद्यानेन महाव्यालो यशोदानन्दसूनुना ।
हतोऽविता वयं चास्मादिति बाला व्रजे जगुः ॥

பிறகு பகவான் அவர்களுடன் மீதியிருந்த உணவை உண்டு விட்டு, வழக்கம்போல் மாலையில் கன்றுகளைப் பற்றிக்கொண்டு கோகுலஞ் சென்றார். அங்கு சென்று அச்சிறுவர்கள் தங்கள் தாய் மார்களிடம் "இன்று ஒரு மலைப்பாம்பு எங்களை விழுங்கிற்று. அப்பொழுது நந்தகோபன் புதல்வனான கிருஷ்ணன் அப்பாம்பைக் கொன்று எங்களையும் ரக்ஷித்தான்" என்று சொன்னார்கள்.

---

## பதினைந்தாவது அத்தியாயம்.

ततः पञ्चदशे धेनुपालनं धेनुकार्दनम् ।
कालियक्ष्वेडतो गोपरक्षणञ्च निरूप्यते ॥

[ராமகிருஷ்ணர்கள் பசுக்களை மேய்த்தல்—தேனுகாசுர வதம்—காளியன் விஷத்தினின்று சிறுவர்களைப் பிழைப்பித்தல்.]

ततश्च पौगण्डवयःश्रितौ व्रजे बभूवतुस्तौ पशुपालसंमतौ ।
गाश्चारयन्तौ सखिभिः समं पदैर्वृन्दावनं पुण्यमतीव चक्रतुः ॥

இவ்விதம் பலராமரும் கிருஷ்ணரும் கோகுலத்தில் வசித்து வருகையில், அவர்கள் காளைடைவில் ஐந்தாவது வயதை முடித்து,

பௌகண்ட பருவத்தை அடைந்து பசுக்களை மேய்ப்பதில் திறமை யுள்ளவர்களாகி தங்கள் சிநேகிதர்களுடன் பசுக்களை பிருந்தா வனத்தில் மேய்த்து வந்தார்கள். அதனாலேயே பிருந்தாவனம் ஒரு புண்ணிய க்ஷேத்திரமாக இன்றைக்கும் விளங்குகிறது.

**तन्मञ्जुघोषालिमृगद्विजाकुलं महन्मनःप्रख्यपयःसरस्वता ।**
**वातेन जुष्टं शतपत्रगन्धिना निरीक्ष्य रन्तुं भगवान्मनो दधे ॥**

அவ்வனத்தில் வண்டுகள் ரீங்காரஞ் செய்துகொண்டும் மிரு கங்கள் கூட்டங் கூட்டமாய் சஞ்சரித்துக்கொண்டு மிருந்தன. அங் குள்ள நீர் நிரம்பிய தடாகங்கள் ஸாதுக்களின் மனம் போன்று தெளிவாயிருந்தன. அவைகளினின்றும் வீசும் குளிர்ந்த காற்று தாமரை மலர்களின் வாசனையுடன் கூடியிருந்தது. பகவான் அவ் வனத்தின் அழகைப் பார்த்து அவ்விடத்தில் சிறிது விளையாட ஆவல்கொண்டு தமையனை பலராமனிடம் பின்வருமாறு கூற லானர்.

**अहो अमी देववरामरार्चितं पादाम्बुजं ते सुमनःफलार्हणम् ।**
**नमन्त्युपादाय शिखाभिरात्मनस्तमोपहत्यै तरुजन्म यत्कृतम् ॥**

" அண்ணா! இம்மரங்களை பார்த்தீரா! பூங்கொத்துக்களும் இலைத்தளிர்களும் காய்கனிகளும் நிரம்பிய கிளைகளைப் பாரும். பாரத்தின் மிகுதியால் அவை வளைந்து பூமியைத் தொடுகின்றன. அதைப் பார்க்கும்பொழுது அம்மரங்கள் உம்முடைய பாதங்களைத் தழுவி பூஜிக்கின்றன வென்றே நினைக்கிறேன். இவ்விதம் உம் மைப் பூஜித்துத் தமக்கு இத்தாவர ஜன்மத்தைக் கொடுத்த பாவங் களை அகற்றிக் கொள்ள அவை விரும்புகின்றன போலும்.

**एतेऽलिनस्तव यशोऽखिललोकतीर्थं गायन्त आदिपुरुषानुपदं भजन्ते ।**
**प्रायो हामी मुनिगणा भवदीयमुख्या गूढं वनेऽपि न जहत्यनघात्मदैवम् ॥**

இவ்வண்டுகளைப் பார்த்தீரா! இவை எல்லாவுலகங்களையும் புனிதமாக்கும் உமது புகழைப் பாடுகின்றன. முன் ஜன்மத்தில் இவை உமது முக்கிய பக்தர்களான முனிவர்களா யிருந்திருக்க

வேண்டும். நீர் ரகசியமாக வனத்தில் சஞ்சரித்த போதிலும் இவை உம்மை விடாமல் சேவிக்கின்றன.

धन्येयमद्य धरणी तृणवीरुधस्त्वत्पादस्पृशो द्रुमलताः करजाभिमृष्टाः ।
नद्योऽद्रयः खगमृगाः सदयावलोकैर्गोप्योऽन्तरेण भुजयोरपि यत्स्पृहा श्रीः

நீர் அவதரித்ததால் இந்த பூமி மிகுந்த பாக்கியத்தைப்பெற்றது. இதிலிருக்கும் புற்பூண்டுகள் உமது திருவடிகளின் சேர்க்கையை யடைந்தன. நீர் உமது திருக்கரங்களால் இங்கிருக்கும் செடிகொடிகளின் தளிர்களைக் கொய்ய, அவை என்ன புண்ணியம் செய்தனவோ ! இங்கிருக்கும் நதிகளும், மலைகளும், பறவைகளும், மிருகங்களும் மிகுந்த பாக்கியத்தைப் பெற்றிருக்கின்றன வென்பது நிச்சயம். கோபிகைகளோவெனில் அவர்களின் பாக்கியத்திற்கு ஈடும் உளதோ ? லக்ஷ்மீதேவியும் ஆசையுடன் தழுவும் உமது மார்பையன்றோ அவர்கள் அடைந்திருக்கிறார்கள்."

एवं वृन्दावनं श्रीमत्कृष्णः प्रीतमनाः पशून् ।
रेमे संचारयन्नद्रेः सरिद्रोधस्सु सानुगः ॥

இத்தகைய பிருந்தாவனத்தின் அழகைப் பார்த்து பகவான் ஆனந்த பரிதராய் பலராமருடன் அருகிலிருந்த ஆறுகளிலும், வாவிகளிலும், தடாகங்களிலும் விளையாடிக்கொண்டும், பசுக்களை மேய்த்துங்கொண்டும் பகல் பொழுதை உல்லாசமாய்க் கழித்தார்.

श्रीदामा नाम गोपालो रामकेशवयोः सखा ।
सुवलस्तोककृष्णाद्या गोपाः प्रेम्णेदमब्रुवन् ॥
रामराम महाबाहो कृष्ण दुष्टनिबर्हण ।
इतोऽविदूरे सुमहद्वनं तालालिसंकुलम् ॥

பலராமனுக்கும் கிருஷ்ணனுக்கும் ஸ்ரீதாமன் என்றும் சுபலன் என்றும் தோக கிருஷ்ணன் என்றும் அந்தரங்க நண்பர்கள் இருந்தார்கள். அவர்கள் ஒருசமயம் "ராமா, மஹா பலம் வாய்ந்தவனே ! கிருஷ்ணா, துஷ்டர்களை அடக்குபவனே ! இதிலிருந்து வெகு சமீபத்தில் ஒரு பனந்தோப்பிருக்கிறது.

फलानि तत्र भूरीणि पतन्ति पतितानि च ।
सन्ति किन्त्ववरुद्धानि धेनुकेन दुरात्मना ॥
प्रयच्छ तानि नः कृष्ण गन्धलोभितचेतसाम् ।
वाञ्छाऽस्ति महती राम गम्यतां यदि रोचते ॥

அங்கு பெரிய பனம்பழங்கள் விழுந்துகொண்டிருக்கின்றன. தேனுகன் என்ற ஒரு துஷ்ட அஸுரன் அவைகளை ஒருவரும் எடுக்காதபடி தடுத்துவருகிறான். அவைகளின் வாஸனை எங்கள் மனதைக் கவர்ந்து மிகுதியான ஆசையை மூட்டுகிறது. கிருஷ்ணா! எங்களுக்கு அப்பழங்களைக் கொடுப்பாய். ராமா! உனக்கு இஷ்டமிருந்தால் அவ்விடம் செல்வோம்" என்றார்கள்.

एवं सुहृद्वचः श्रुत्वा सुहृत्प्रियचिकीर्षया ।
प्रहस्य जग्मतुर्गोपैर्वृतौ तालवनं प्रभू ॥
बलः प्रविश्य बाहुभ्यां तालान् संपरिकंपयन् ।
फलानि पातयामास मतङ्गज इवौजसा ॥

ராமனும், கிருஷ்ணனும் சிநேகிதர்கள் கூறிய வார்த்தையைக் கேட்டு சிறிது புன்னகை செய்து சிநேகிதர்களின் விருப்பத்தைப் பூர்த்தி செய்ய எண்ணங்கொண்டு கோபாலர்களை அழைத்துக் கொண்டு அப்பனந்தோப்பிற்குள் புகுந்தார்கள். பலராமர் அங்கு சென்றதும் யானைபோன்று தன் இருகைகளாலும் அம்மரங்களை வலுவாக அசைத்து, அப்பழங்களை உதிர்த்தார்.

फलानां पततां शब्दं निशम्यासुररासभः ।
अभ्यधावत्क्षितितलं सनगं परिकंपयन् ।
चरणावपरौ राजन्बलाय प्राक्षिपद्रुषा ॥
स तं गृहीत्वा प्रपदोर्भ्रामयित्वैकपाणिना ।
चिक्षेप तृणराजाग्रे भ्रामणत्यक्तजीवितम् ॥

கழுதை வடிவங்கொண்ட அசுரன் பழங்கள் விழும் சப்தத்தைக் கேட்டு பூமி மலை அதிரும்படி வேகமாக அவ்விடஞ் சென்று தன் பின் கால்களால் கோபத்துடன் பலராமரை உதைக்கலானான். ஆனால் பலராமர் ஒருகையால் அவனது இரு கால்களையும்

பிடித்து உயரே தூக்கி ஒருதரம் சுழற்றினர். அவ்விதம் சுழற்றவே அவ்வசுரன் உயிர் துறந்தான். பிறகு பலராமர் அவனைப் பனைமரத்தின் உச்சியில் எறிந்தார்.

ततः कृष्णं च रामं च ज्ञातयो धेनुकस्य ये ।
क्रोष्टारोऽभ्यद्रवन्सर्वे संरब्धा हतबान्धवाः ॥
तांस्तानापततः कृष्णो रामश्च नृप लीलया ।
गृहीतपश्चाच्चरणान्प्राहिणोत्तृणराजसु ॥

அரசே! பிறகு தேனுகனின் உறவினர்கள் பலராமரையும் கிருஷ்ணனையும் கோபத்தால் எதிர்த்தார்கள். ஆனால் ராமரும், கிருஷ்ணனும் அவர்களின் பின் கால்களைப்பிடித்து பனைமரத்தில் வீசி எல்லோரையும் விளையாட்டாகவே கொன்றார்கள்.

---

# பதினாறாவது அத்தியாயம்.

---

{ षोडशे कालियस्योक्तो निग्रहो यमुनाह्रदे ।
तत्पत्नीभिः स्तुतेनाथ कृष्णेनानुग्रहः कृतः ॥ }

[ காளிய நிக்கிரஹம்-நாக கன்னியர் துதி-பகவான் அவர்களை அனுக்கிரஹித்தல்.]

कालिन्द्यां कालियस्याऽसीद्ध्रदः कश्चिद्विषाग्निना ।
श्रप्यमाणपया यस्मिन्पतन्त्युपरिगाः खगाः ॥
विप्रुष्मता विषोदोर्मिमारुतेनाभिमर्शिताः ।
म्रियन्ते तीरगा यस्य प्राणिनः स्थिरजङ्गमाः ॥

முன்னொரு காலத்தில் காளியனென்ற ஓர் கொடிய ஸர்ப்ப ராஜன் யமுனாநதியின் மடுவில் வசித்தான். அவன் தன் வாயினின்றும் காலகூட விஷத்தை ஜலத்தில் கக்கிக்கொண்டிருந்தான். அதனால் அம்மடு எப்பொழுதும் கொதித்துக்கொண்டு விஷக்காற்றுடன் கூடியிருந்தது. அம்மடுவிலிருந்து பரவும் விஷக்காற்றுப் படின் வானிற் பறக்கும் பறவைகள் செத்துவிழும்; கரையிலுள்ள வல்விலங்குகள் மாயும்; நெடுமரம் கரியும். ஆனால் ஒரு நெடிய கதம்ப மரமே அக்கரையில் வாடாது நின்றது.

तं चण्डवेगविषवीर्यमवेक्ष्य तेन दुष्टां नदीं च खलसंयमनावतारः ।
कृष्णः कदंबमधिरुह्य ततोऽतितुङ्गमास्फोट्य गाढरशनो न्यपतद्विषोदे ॥
सर्पह्रदः पुरुषसारनिपातवेगसङ्क्षोभितोरगविषोच्छ्वसिताम्बुराशिः ।
पर्यक् प्लुतो विषकषायविभीषणोर्मिर्धावन्धनुःशतमनन्तबलस्य किं तत् ॥

நீரோரைத் திர்க்கவந்த பகவான் கடும் விஷம் பொருந்திய காளிந்தியையும், விஷப்புனல் விளைத்த பாம்பையும் கண்ணுற்று அக்கடம்பின் மிசை ஏறி, கச்சையை இறுக்கியும், புஜங்களைத் தட்டியும் அம்மடுவின் நடுவில் பாய்ந்தார். அப்பொழுது ஸர்ப்பங்கள் நிலைகுலைந்து விஷத்தைக் கக்கின. அலைகள் உயரே கிளம்பி நூறு விற்கடைதூரம் நாற்புறங்களிலும் பரவலாயின.

तस्य ह्रदे विहरतो भुजदण्डघूर्णवार्घोषमङ्ग वरवारणविक्रमस्य ।
आश्रुत्य तत्स्वसदनाभिभवं निरीक्ष्य चक्षुःश्रवाः समसरत्तदमृष्यमाणः ॥

மதயானைபோன்று பகவான் தம் கைகளை வீசிக்கொண்டு அம் மடுவில் நீந்தி விளையாடுவதைக் காளியன் கேள்வியுற்று, தன்னை அவமதித்ததாகக் கருதி அதை சகியாது, கோபத்துடன் தன் இருப்பிடத்து நின்றும் வெளிக் கிளம்பினன்.

तं प्रेक्षणीयसुकुमारघनावदातं श्रीवत्सपीतवसनं स्मितसुन्दरास्यम् ।
क्रीडन्तमप्रतिभयं कमलोदराङ्घ्रिं संदश्य मर्मसु रुषा भुजया चच्छाद ॥

அழகு பொருந்தியதும் மிருதுவானதும் நீருண்ட மேகம் போன்று தளதளப்பானதுமான திருமேனியை யுடையவரும் ஸ்ரீவத்ஸம் என்ற மருவை மார்பில் திகழப்பெற்றவரும் சுந்தர வதனமுடையவருமான பகவான், நிர்ப்பயமாய் அம்மடுவில் விளையாடுவதை காளியன் கண்ணுற்று சீற்றத்தால் அவரது மர்மங்களைக் கடித்து, அவரது உடலையும் வளைத்தான்.

तं नागभोगपरिवीतमदृष्टचेष्टमालोक्य तत्प्रियसखाः पशुपा भृशार्ताः ।
कृष्णेऽर्पितात्मसुहृदर्थकलत्रकामा दुःखानुशोकभयमूढधियो निपेतुः ॥

காளியன் சுற்றிக்கொண்டதும், பகவான் அசைவற்று நின்றார். அவரது நண்பர்கள் அந்நிலைமையைக்கண்டு மிக்க வருந்தினார்கள்.

கிருஷ்ணனுக்காகத் தங்கள் உடல் பொருள் ஆவியை இழக்கச் சித்தமா யிருப்பவர்களாகையால் அவர்கள் துக்கக்கடலில் மூழ்கி, மெய்குலைந்து, மதிகலங்கிப் பிரஞ்ஞை யற்று விழுந்தார்கள்.

गावो वृषा वत्सतर्यः क्रन्दमानाः सुदुःखिताः ।
कृष्णे न्यस्तेक्षणा भीता रुदन्त्य इव तस्थिरे ॥
अथ व्रजे महोत्पातास्त्रिविधा ह्यतिदारुणाः ।
उत्पेतुर्भुवि दिव्यात्मन्यासन्नभयशंसिनः ॥

பசுக்களும் காளைகளும் கன்றுகளும் கண்ணீரைப் பெருக்கி 'ஹோ' வென்று கதறிக் கிருஷ்ணனைப் பார்த்தபடியே நின்றன. அச்சமயம் நாசத்தை விளைவிக்கும் உத்பாதங்கள் வானத்திலும் பூமியிலும் உடலிலும் உண்டாயின.

तानालक्ष्य भयोद्विग्ना गोपा नन्दपुरोगमाः ।
विना रामेण गाः कृष्णं ज्ञात्वा चारयितुं गतम् ॥
तेऽन्वेषमाणा दयितं कृष्णं सूचितया पदैः ।
भगवल्लक्षणैर्जग्मुः पदव्यायमुनातटम् ॥

நந்தகோபர் முதலிய கோகுலவாசிகள் அவைகளைக் கண்டு மனங் கலங்கினர்கள். பலராமரின்றிக் கிருஷ்ணர் ஒருவரே பசுக்களை மேய்ப்பதற்குச் சென்றிருப்பதை யறிந்து, அவரைத் தேடிச் சென்றார்கள். தம்முயிருக்குயிரான கிருஷ்ணனுடைய தெய்வத்தன்மை வாய்ந்த அடிச்சுவடுகளைக் கண்ணுற்று, அவ் வழிச் சென்று, யமுனைக்கரையை அடைந்தார்கள்.

अन्तर्ह्रदे भुजगभोगपरीतमारात्कृष्णं निरीहमुपलभ्य जलाशयान्ते ।
गोपांश्च मूढधिषणान्परितः पशूंश्च सङ्क्रन्दतः परमकश्मलमापुरार्ताः ॥
गोप्योऽनुरक्तमनसो भगवत्यनन्ते तत्सौहृदस्मितविलोकगिरः स्मरन्त्यः ।
ग्रस्तेऽहिना प्रियतमे भृशदुःखतप्ताः शून्यं प्रियव्यतिहृतं ददृशुस्त्रिलोकम् ॥

மடுவினிடையில் அரவம் கிருஷ்ணனை வளைத்திருப்பதையும் அதனல் அவர் அசைவற்றிருப்பதையும், நதிக்கரையில் சிறுவர்கள் பிரஞ்ஞையற்றுக் கிடப்பதையும், பசுக்கள் கதறுவதையும் கண்டார்கள். கோபஸ்திரிகளும் உள்ளஞ்சோர்ந்து, பகவானுடைய அழகையும், குணத்தையும் நினைத்து நினைத்து, "இப்

புவனமனைத்தும் மகிழச்செய்பவர் இன்று மறைந்துவிட்டார். அந்தோ!" என்று வருந்தினர்கள்.

कृष्णप्राणान्निविशतो नन्दादीन्वीक्ष्य तं ह्रदम् ।
प्रत्यषेधत्स भगवान्रामः कृष्णानुभाववित् ॥

கிருஷ்ணனையே உயிராகக்கொண்ட நந்தர் முதலிய கோபாலர்கள் அம்மடுவில் குதிக்கச் சென்றனர். ஆனால் கிருஷ்ணரின் மகிமையை அறிந்த பலராமர் அவர்களைத் தடுத்தார்.

इत्थं स्वगोकुलमनन्यगतिं निरीक्ष्य सस्त्रीकुमारमतिदुःखितमात्महेतोः ।
आज्ञाय मर्त्यपदवीमनुवर्तमानः स्थित्वा मुहूर्तमुदतिष्ठदुरङ्गबन्धात् ॥

இவ்விதம் தம்மையே நாதனாகக்கொண்ட கோகுலவாசிகள் மனைவி மக்களுடன் தமக்காக வருந்துவதைப் பார்த்து பகவான் காளியனது கட்டினின்றும் சாதாரண மானிடன்போல் தம்மை உதறிக்கொண்டு உயரே கிளம்பினர்.

तत्प्रथ्यमानवपुषा व्यथितात्मभोग-
स्त्यक्त्वोन्नमय्य कुपितः स्वफणान्भुजङ्गः ।
तस्थौ श्वसन् श्वसनरन्ध्रविषांबरीष-
स्तब्धेक्षणोल्मुकमुखो हरिमीक्षमाणः ॥

அவரது உடல் பருத்தது. அதனால் காளியனது உடல் விரியவே, அவன் அவரை விட்டுவிட்டு கோபத்தால் சீறிப் படங்களை உயர்த்திக்கொண்டு அவரெதிரில் நின்றான். நாசியினின்று விஷஜ்வாலைகளையும், முகங்களினின்று தீப்பொறிகளையும் கக்கினான். கண்கள் பழுக்கக் காய்ச்சின சட்டி போன்று சிவந்தன.

तं जिह्वया द्विशिखया परिलेलिहानं द्वे सृक्किणी ह्यतिकरालविषाग्निदृष्टिम् ।
क्रीडन्नमुं परिससार यथा खगेन्द्रो बभ्राम सोऽप्यवसरं प्रसमीक्षमाणः ॥

அவன் தன் இரு நாக்குகளால் கடைவாய்களை நக்கிக்கொண்டு கண்களினின்றும் தீப்பொறிகளை வீசுவதுபோல் சீறினன். கருடன் பாம்புடன் விளையாடுவதுபோல் பகவான் அவனுடன் சுற்றிச்சுற்றி

விளையாடினார். காளியனும் பகவானைக் கடிப்பதற்குத் தருணத்தை எதிர்பார்த்துக்கொண்டு சுற்றினான்.

एवं परिभ्रमहतौजसमुन्नतांसमानम्य तत्पृथुशिरस्स्वधिरूढ आद्यः ।
तन्मूर्धरत्ननिकरस्पर्शातिताम्रपादांबुजोऽखिलकलादिगुरुर्ननर्त ॥
तच्चित्रताण्डवविरुग्णफणातपत्रं रक्तं मुखैरुरु वमन्नृप भग्नगात्रः ।
स्मृत्वा चराचरगुरुं पुरुषं पुराणं नारायणं तमरणं मनसा जगाम ॥

இவ்விதம் சுற்றி வரும்பொழுது காளியனது பலம் குன்றவே நடனம் முதலிய அறுபத்து நான்கு கலைகளையும் முதன்முதல் வெளியிட்ட பகவான், அவனது அகன்ற படத்தை வளைத்து அதன் மீதேறி அதன் மணித் திரள்களின் ஒளியால் தம் சேவடி சிவக்க அரவத்தின் உச்சியில் நின்று அழகாகத் தாண்டவமாடினார். அதனால் அவன் உடல் சிதறுண்டது. வாயினின்று ரத்தம் பெருகிற்று. இந்நிலையில் அவன் தன்மீது நடனமாடுகின்றவரைச் சராசரங்களுக்கு ஈசனான நாராயணனென்றுணர்ந்து மனதால் அவரைச் சரணமடைந்தான்.

कृष्णस्य गर्भजगतोऽतिभरावसन्नं पार्ष्णिप्रहारपरिरुग्णफणातपत्रम् ।
दृष्ट्वाऽहिमाद्यमुपसेदुरमुष्य पत्न्य आर्ताः श्लथद्वसनभूषणकेशबन्धाः ॥
तास्तं सुविग्नमनसोऽथ पुरस्कृतार्भाः कायं निधाय भुवि भूतपतिं प्रणेमुः
साध्व्यः कृताञ्जलिपुटाः शमलस्य भर्तुर्मोक्षेप्सवः शरणदं शरणं प्रपन्नाः ॥

தடங்கடல் புவியெலாம் தம் வயிற்றில் தாங்கி நின்ற பகவான் தம் முழுவலியுடன் அஹிராஜனைக் காலால் மிதிக்கவே அவனது குடைபோன்ற படங்கள் நொறுங்கின. வாய் குருதி கக்கிற்று. நாக கன்னியர்கள் அவன் நிலையைக்கண்டு வருந்தி துயில்கள் அவிழ ஆபரணங்கள் குலைய தலைவிரிகோலமாகக் குழந்தைகளை முன்னிட்டுக்கொண்டு ஆதிபுருஷனை கிருஷ்ணனைச் சாஷ்டாங்கமாக வணங்கி கைகூப்பி, மாங்கலியம் அளிக்குமாறு கருணாநிதியான பகவானை வேண்டினார்கள்.

न्याय्यो हि दण्डः कृतकिल्बिषेऽस्मिंस्तवावतारः खलनिग्रहाय ।
रिपोः सुतानामपि तुल्यदृष्टेर्धत्से दमं फलमेवानुशंसन् ॥

"துஷ்டர்களை அடக்கி அறத்தைக்காக்க அவதரித்த மணிவண்ணா! குற்றஞ்செய்த எங்கள் பர்த்தாவைத் தண்டித்தது நியா

யமே. சத்துருவாயினும் சரி, தன் வயிற்றுக் குழந்தையாயினும் சரி; இருவர்களையும் நீர் சமமாகவே பார்க்கிறீர். அறநெறி பிறழாது நீர் தண்டனை விதிக்கிறீர். அதனால் அவர் பாபத்தைப் போக்குகிறீர்.

तपः सुतप्तं किमनेन पूर्वं निरस्तमानेन च मानदेन ।
धर्मोऽथवा सर्वजनानुकंपया यतो भवांस्तुष्यति सर्वजीवः ॥
कस्यानुभावोऽस्य न देव विद्महे तवाङ्घ्रिरेणुस्पर्शाधिकारः ।
यद्वाञ्छया श्रीर्ललनाऽचरत्तपो विहाय कामान्सुचिरं धृतव्रता ॥

எம் பர்த்தா முற்பிறப்பில் கர்வத்தை யொழித்து எத்தவ மியற்றினரோ! எல்லா ஜீவராசிகளிடத்திலும் அவர் எத்தகைய அன்பு வைத்தனரோ! அதனாலன்றோ எல்லா ஜீவர்களின் வடிவ மான நீர் அவர்மீது கருணைகூர்ந்தீர். திருமணக்கும் மணிமார்ப! லக்ஷ்மீதேவி காமங்களை ஒழித்து வெகுகாலம் தவம் புரிந்து அடையப்பெற்ற உமது சேவடிகள் தம் படங்களில் அழுந்த இவர் எங்ஙனம் உரியவர் என்பதை நாங்கள் அறியோம்.

न नाकपृष्ठं नच सार्वभौमं न पारमेष्ठ्यं न रसाधिपत्यम् ।
न योगसिद्धीरपुनर्भवं वा वाञ्छन्ति यत्पादरजः प्रपन्नाः ॥

ஈசா! உமது பாததூளியைப் பெற்ற ஆன்றோர் சுவர்க்கத் தையும் விரும்பார்; சக்கிரவர்த்திபத மிருப்பதையும் வேண்டார். நான்முகனின் பதவிபெற்றத்தையோ, அணிமாதி சித்திகளையோ, கைவல்யத்தையோ ஆசைகொள்ளார்.

नमस्तुभ्यं भगवते पुरुषाय महात्मने ।
भूतावासाय भूताय पराय परमात्मने ॥
नमोऽनन्ताय सूक्ष्माय कूटस्थाय विपश्चिते ।
नानावादानुरोधाय वाच्यवाचकशक्तये ॥

மனதாலும் எண்ணுதற்கெலாத ஐச்வர்யாதி குணங்க ளுடன் கூடின பகவானே! உம்மை வணங்குகிறேன். சரீரங்களில் அந்தர்யாமியாக இருக்கும் புருஷரும் நீரே! ஆயினும் நீர் தேச கால வஸ்துக்களாலும் குன்றாத மஹாத்மா! எங்கும் நிறைந்த ஆகாசாதிகளுக்கும் முன்னரே யிருப்பதால் அவைகளுக்கும் இருப் பிடம் நீரே! எல்லாவற்றிற்கும் காரணப் பொருளும், காரணத்திற் கும் அப்பாலிருப்பவருமான பரமாத்மாவும் நீரே! அகங்காரத்தால்

வளையப்படாததால் எல்கையற்றவர். கண்ணுக்குப் புலப்படாத தால் அணுவானவர். மாறுதலற்றவர். எல்லாவற்றையும் அறிகின் றவர். நீர், ஒன்றென்றும், பலவென்றும், பண்டிதனென்றும், மூட னென்றும் பற்பலவாதங்களை மாயையால் உண்டுபண்ணுகிறீர். சப்தத்திற்கும் அர்த்தத்திற்கும் இணைபிரியா சக்தியை கொடுக்கிறீர்.

अपराधः सकृद्भर्त्रा सोढव्यः स्वप्रजाकृतः ।
क्षन्तुमर्हसि शान्तात्मन् मूढस्य त्वामजानतः ॥
अनुगृह्णीष्व भगवन्प्राणांस्त्यजति पन्नगः ।
स्त्रीणां नः साधु शोच्यानां पतिःप्राणः प्रदीयताम् ॥

சாந்த ஸ்வரூபியே! உமது மகிமை யறியாது எம் கணவர் இழைத்த வெம்பிழைகளைப் பொறுத்தருளும். அவர் உமது குழந்தையன்றோ. ஈசா! அவர் இப்பொழுது பிராணனை இழக்கும் தருவாயிலிருக்கிறார். வருந்தும் பெண்களுக்கு, மாங்கல்யமாகிற உயிரைக்கொடும்.

इत्थं स नागपत्नीभिर्भगवान्समभिष्टुतः ।
मूर्च्छितं भग्नशिरसं विससर्जाङ्घ्रिकुट्टनैः ॥
प्रतिलब्धेन्द्रियप्राणः कालियः शनकैर्हरिम् ।
कृच्छ्रात्समुच्छ्वसन्दीनः कृष्णं प्राह कृताञ्जलिः ॥

நாககன்னியரின் வேண்டுகோளுக்கிரங்கி, பகவான் அரவின் மீது ஆடுவதை நிறுத்தினர். படம் நொறுங்கிப் பிரஞ்ஞையற் றிருந்த காளியன் மெதுவாக மூர்ச்சை தெளிந்து, கஷ்டத்துடன் ஒருவாறு எழுந்து, பெருமூச்செறிந்து, கைகூப்பித் தாழ்ந்த குர லால் பகவானை நோக்கி பின்வருமாறு வேண்டினன்.

वयं च तत्र भगवन्सर्पा जात्युरुमन्यवः ।
कथं त्यजामस्त्वन्मायां दुस्त्यजां मोहिताः स्वयम् ॥
भवान् हि कारणं तत्र सर्वज्ञो जगदीश्वरः ।
अनुग्रहं निग्रहं वा मन्यसे तद्विधेहि नः ॥

நாதா! நாங்கள் ஜாதியில்கொடியவர்கள். தமோகுணம் நிறைந்திருப் பதால் எரிசினத்தை எளிதில் அடைவோம். இது எங்கள் இயற்கை. அதை எங்ஙனம் விலக்க வல்லவர்களாவோம். நீரே ஈசன்; ஸர்வஞ்ஞர்

நீரே; நீரே உலகத்தைப் படைத்தீர். ஆதலால் நீர் என்னை வாழ்த்தவோ, தண்டிக்கவோ உமது கருத்தின்படி செய்வீராக.

दिव्यांवरस्त्रङ्मणिभिः परार्ध्यैरपि भूषणैः ।
दिव्यगन्धानुलेपैश्च महत्योत्पलमालया ॥
पूजयित्वा जगन्नाथं प्रसाद्य गरुडध्वजम् ।
ततः प्रीतोऽभ्यनुज्ञातः परिक्रम्याभिवन्द्य तम् ॥
सकलत्रसुहृत्पुत्रो द्वीपमब्धेर्जगाम ह ।
तदैव साऽमृतजला यमुना निर्विषाऽभवत् ॥

காளியன் இவ்வாறு பிரார்த்தித்து மாசிலா ஆடைகளையும் தாமரை மாலைகளையும் சுடர் மணிப்பூண்களையும் அகில் மான்மதம் முதலியவாசனைகளையும்பகவானது பாதங்களில் இட்டு வணங்கினன். அரவங்களுக்கு இறைவனான காளியன் பகவானை வலம்வந்து வணங்கி அனுமதிபெற்று, மனைவி மக்களோடும், உற்றார் உறவினரோடும், கடலடுத்த ரமணகம் என்றதொரு தீவு சென்று அங்கு உறைந்தான். அன்று முதல் உயர் காளிந்தியும் விஷப்புனல்மாற அமிர்தத்தை யொத்த நீருடன் விளங்கிற்று.

---

## பதினேழாவது அத்தியாயம்.

---

{ नागं समदशे नागालयं तं निरयापयत् ।
वन्धूनस्वदुःखतः श्रान्तान्सुप्तांस्तत्र दवाद्पात् ॥ }

[காளியன் ரமணகத்தீவு செல்லுதல்-பகவான் தனக்காக வருந்திச் சோர்வடைந்து உறங்கிய உறவினர்களைக் காட்டுத் தீயினின்று காத்தல்.]

उपहार्यैः सर्पजनैर्मासि मासीह यो बलिः ।
वानस्पत्यो महाबाहो नागानां प्राङ्निरूपितः ॥
स्वं स्वं भागं प्रयच्छन्ति नागाः पर्वणि पर्वणि ।
गोपीथायाऽऽत्मनः सर्वे सुपर्णाय महात्मने ॥

முன்னொரு சமயம் கருடன் ஸர்ப்பங்களை மிகுதியாகக் கொன்று வருங்கால் அவைகள் ஒன்றுகூடி மாதத்திற்கு ஒருமுறை மரத்தடியில் கருடனுக்கு உணவளிப்பதாக ஒப்புக்கொண்டு அவ் விதமே தங்களை ரக்ஷித்துக் கொள்ளுவதற்காக முறைப்படி தத்தம் வழிபாட்டை வழங்கி வந்தன.

विषवीर्यमदाविष्टः काद्रवेयस्तु कालियः ।
कदर्थीकृत्य गरुडं स्वयं तं बुभुजे बलिम् ॥
तच्छ्रुत्वा कुपितो राजन्भगवान्भगवत्प्रियः ।
विजिघांसुर्महावेगः कालियं समुपाद्रवत् ॥

கத்ருவின் மைந்தன் காளியன் விஷவீரியத்தில் செருக்குண்டு கருடனை அவமதித்துத் தன் வழிபாட்டை வழங்காமல் பிறரிட்டதையும் மறித்துத் தின்றான். அரசே! கருடன் இதை அறிந்து ஊழிக்காற்றெனச் சீறிக் காளியனைக்கொல்ல துரத்திச் சென்றான்.

सुपर्णपक्षाभिहतः कालियोऽतीव विह्वलः ।
ह्रदं विवेश कालिन्द्यास्तदगम्यं दुरासदम् ॥

அச்சமயம் பக்ஷிராஜனும் ஸர்ப்பராஜனும் கடும்போர் புரிந்தார்கள. மிக்க பலம் வாய்ந்த கலுழன் பொன்னிறமான இடது சிறகால் காளியனைத் தாக்கவே, அவன் நெஞ்சகலங்கி, கருடனால் நுழைவதற்கேலாத யமுனையின் மடுவிற் புகுந்தான்.

कृष्णं ह्रदाद्विनिष्क्रान्तं दिव्यस्रग्गन्धवाससम् ।
प्रमोदनिभृतात्मानो गोपाः प्रीत्याऽभिरेभिरे ॥

திவ்வியமான மாலைகளும், ஆடைகளும் அணிந்துகொண்டும், வாசனைகள் பூசிக்கொண்டும், மடுவிலிருந்து வெளியேறின கிருஷ்ணனைக் கோபாலர்களும் கோபிகைகளும் எதிர்சென்றழைத்துத் தழுவி சந்தோஷமடைந்தார்கள். சூரியனும் அஸ்தமன மலையை அடைந்தான்,

तां रात्रिं तत्र राजेन्द्र क्षुत्तृड्भ्यां श्रमकर्शिताः ।
ऊषुर्व्रजौकसो गावः कालिन्द्या उपकूलतः ॥
तदा शुचिवनोद्भूतो दावाग्निः सर्वतो व्रजम् ।
सुप्तं निशीथ आवृत्य प्रदग्धुमुपचक्रमे ॥
तमग्निमपिबत्तीव्रमनन्तोऽनन्तशक्तिधृक् ।

கோகுலவாசிகள் பசி தாகத்தாலும் வழி நடந்ததாலும் களைப்புற்று யமுனைக்கரையில் பசுக்களுடன் அன்றிரவைக் கழிக்கலானார்கள். இவ்விதம் அவர்கள் மெய்மறந்து தூங்குகையில், காட்டுத்தீ திடீரென்று கிளம்பி அவர்களை நாற்புறமும் வளைந்து வாட்டத் தொடங்கிற்று. அனந்தரும், அளவிலாச் சக்தியுடையவருமான பகவான் அக்கொடிய தீயை உட்கொண்டு அவர்களை ரக்ஷித்தார்.

## பதினெட்டாவது அத்தியாயம்.

{ अष्टादशे ततो ग्रीष्मे वसन्तगुणलक्षिते ।
अघातयद्बलेनालं प्रलम्बं लीलयाहरिः ॥ }

[கிரீஷ்மருது வசந்தருதுவின் குணங்களுடன் இருத்தல்—பகவான் பலராமரைக்கொண்டு பிரலம்பனை வதைத்தல்.]

व्रजे विक्रीडतोरेवं गोपालच्छद्ममायया ।
ग्रीष्मो नामर्तुरभवन्नातिप्रेयाञ्छरीरिणाम् ॥
स च वृन्दावनगुणैर्वसन्त इव लक्षितः ।
यत्राऽऽस्ते भगवान्साक्षाद्रामेण सह केशवः ॥

இவ்விதம் ராமனும் கிருஷ்ணனும் கோபால வேஷத்துடன் பல லீலைகளைச் செய்துகொண்டு கோகுலத்தில் வசித்து வருங்கால், பிராணிகளுக்கு அதிக சௌக்கியத்தைச் செய்யாத வேனிற்காலம் தொடங்கலாயிற்று. பிருந்தாவனத்தின் நீர்வள நிலவள அமைப்புகளாலும் பகவான் அங்கு வாசஞ்செய்ததாலும், வேனிற் காலமும் வசந்த காலம் போன்று சுகமாயிருந்தது.

अगाधतोयह्रदिनीतटोर्मिभिर्द्रवत्पुरीष्याः पुलिनैः समन्ततः ।
न यत्र चण्डांशुकरा विषोल्बणा भुवो रसं शाद्वलितं च गृह्णते ॥

அளவிடமுடியாத ஆழமுடைய தாமரைத் தடாகங்களினின்று அலைகள் கரைவரை ஓடிச்சென்று நாற்புறங்களிலும் சேற்றையும் மணலையும் வாரிக்கொட்டின. கதிரவனின் விஷஜ்வாலை போன்ற வெப்பம் அப்பூமியின் ரஸத்தையோ பசுமையையோ சிறிதும் கெடுக்கவில்லை.

वनं कुसुमितं श्रीमन्नदच्चित्रमृगद्विजम् ।
गायन्मयूरभ्रमरं कूजत्कोकिलसारसम् ॥

அவ்வனத்தில் சோலைகள் நன்றாய்ப் பூத்துக்காய்த்து அழகாக விளங்கின. பல வர்ணமுடைய மிருகங்களும் பல ஓசையுடைய பக்ஷிகளும் எப்பொழுதும் சப்திக்கவும், வண்டுகள் ஓர் புறத்தில் இனிமையாய் ரீங்காரஞ்செய்யவும், மயில்கள் களிப்புற்றாடவும், குயில்கள் இனிமையாய்க் கூவவும், ஸாரஸங்கள் சந்தோஷமாய் நீந்தவுமிருந்த அவ்வனம், பார்ப்பதற்கு மிகவும் ரமணீயமாயிருந்தது.

पशूंश्चारयतोः गोपैस्तद्वने रामकृष्णयोः।
गोपरूपी प्रलंबोऽगादसुरस्तज्जिहीर्षया ॥
तं विद्वानपि दाशार्हो भगवान्सर्वदर्शनः ।
अन्वमोदत तत्सख्यं वधं तस्य विचिन्तयन् ॥

ராமரும், கிருஷ்ணனும், சிநேகிதர்களுடன் பசுக்களை மேய்த்துக்கொண்டு பிருந்தாவனத்திலிருக்கும்பொழுது பிரலம்பன் என்ற அசுரன் பலராமனையும் கிருஷ்ணனையும் கொல்லுவதற்கு விருப்பங்கொண்டு ஒரு கோபாலன் வடிவமெடுத்து அக்கூட்டத்திற்குள் புகுந்தான். ஸர்வஞ்ஞான கிருஷ்ணபகவான் அவ்வசுரனின் வரவை அறிந்து அவனுடன் சிநேகம் செய்து அவனைக்கொல்லுவதுதான் உசிதம் என்று தனக்குள் தீர்மானித்து அவனையும் தம்முடன் சேர்த்துக்கொண்டார்.

तत्र चक्रुः परिवृढौ गोपा रामजनार्दनौ ।
कृष्णसंघट्टिनः केचिदासन्रामस्य चापरे ॥
आचेरुर्विविधाः क्रीडा वाह्यवाहकलक्षणाः ।
यत्राऽऽरोहन्ति जेतारो वहन्ति च पराजिताः ॥

கோபாலர்கள் கிருஷ்ணனையும் ராமனையும் தலைமையாக வைத்து இருகக்ஷியாகப் பிரிந்து பலவாறு விளையாடினார்கள். அவைகளில் ஒருவனை யொருவன் தூக்கிச்செல்லும் விளையாட்டு ஒன்று. அதில் தோல்வி அடைந்தவர்கள் ஜயித்தவர்களைக் குறிப்பிட்ட எல்கைவரை தோளில் தூக்கிச் செல்லவேண்டும் என்று தீர்மானம் செய்துகொண்டார்கள்.

रामसंघट्टिनो यर्हि श्रीदामवृषभादयः ।
क्रीडायां जयिनस्तांस्तानूहुः कृष्णादयो नृप ॥
उवाह कृष्णो भगवाञ्छ्रीदामानं पराजितः ।
वृषभं भद्रसेनस्तु प्रलम्बो रोहिणीसुतम् ॥

ராமர் கக்ஷியைச் சார்ந்த ஸ்ரீதாமன் விருஷபன் முதலி போர் ஜயித்தார்கள். கிருஷ்ண பகவான் தோல்வியடைந்து ஸ்ரீதாமன் என்ற கோபாலனைச் சுமந்தார். பத்ரசேனன் என்பவன் விருஷபன் என்பவனையும், பிரலம்பன் என்ற அசுரன் ரோஹிணி புதல்வனை பலராமரையும் சுமந்தார்கள்.

अविषह्यं मन्यमानः कृष्णं दानवपुङ्गवः ।
वहन्द्रुततरं प्रागादवरोहणतः परम् ॥

அவ்வசுரன் கிருஷ்ணனைச் சுமப்பது கஷ்டமென்று நினைத்து அவரது கக்ஷியில் சேர்ந்த பலராமரைச் சுமக்கமாட்டாமல் சுமந்து கொண்டு வேகமாகக் குறித்த எல்லையையும் தாண்டிச் சென்றான்.

अथागतस्मृतिरभयो रिपुं बलो विहायसार्थमिव हरन्तमात्मनः ।
रुषाऽहनच्छिरसि दृढेन मुष्टिना सुराधिपो गिरिमिव वज्ररंहसा ॥
स आहत सपदि विशीर्णमस्तको मुखाद्वमन्रुधिरमपस्मृतोऽसुरः ।
महारवं व्यसुरपतत्समीरयन् गिरिर्यथा मघवत आयुधाहतः ॥

ராமர் தன்னைத் தூக்கிச் செல்லும் அசுரனின் எண்ணம் இன்னது என்று அறிந்துகொண்டார். "ஏதோ புதையல் கிடைத்ததுபோல் என்னைத் தூக்கிக்கொண்டு ஆகாய மார்க்கமாய் வெகு வேகத்துடன் இவ்வசுரன் செல்கிறான். இவனைக் கொல்லவேண்டும்" என்று நினைத்து, பயமற்ற பலராமர் அவனிடம் கோபங்கொண்டு தன் கையி னால் அவ்வசுரனின் தலையில் இடிபோன்று குத்தினர். அவ்வசுரன் இவ்விதம் அடிபட்டதும், தலை சிதறுண்டு வாயிலிருந்து ரத்தத்தைப் பெருக்கி, பிரஞ்ஞையற்றுக் கீழே விழுந்தான். அப்பொழுது இந்திர னுடைய வஜ்ராயுதத்தால் அடியுண்ட மலைச்சிகரம் கீழே விழுவது போன்று, அவன் உடல் பெருஞ் சப்தத்துடன் கீழே விழுந்தது. பலசாலியான பலராமரால் பிரலம்பாசுரன் மாண்டதைப் பார்த்து கோபாலர்கள் ஆச்சரியமடைந்து அவரைப்பலவாறு புகழ்ந்தார்கள்.

---

# பத்தொன்பதாவது அத்தியாயம்



{ ऊनविंशे निविष्टन्तु गोपगोकुलमच्युतः ।
मुञ्जारण्यमरण्याग्नेररक्षत्तन्निपानतः ॥ }

[கோபாலர்களும் பசுக்களும் முஞ்சை வனம் புகுதல்—காட்டுத் தீ—பகவான் அதையுட்கொண்டு கோகுலத்தை ரக்ஷித்தல்.]

क्रीडासक्तेषु गोपेषु तद्गावो दूरचारिणीः ।
स्वैरं चरन्त्यो विविशुस्तृणलोभेन गह्वरम् ॥
तेऽपश्यन्तः पशून्गोपाः कृष्णरामादयस्तदा ।
जातानुतापा न विदुर्विचिन्वन्तो गवां गतिम् ॥
मुञ्जाटव्यां भ्रष्टमार्गं क्रन्दमानं स्वगोधनम् ।
संप्राप्य तृषिताः श्रान्तास्ततस्ते संन्यवर्तयन् ॥ ५ ॥

ஒரு சமயம் கோபாலர்கள் பிருந்தாவனஞ் சென்று அங்கு ஓரிடத்தில் பசுக்களை மேயவிட்டு உத்ஸாகமாய் விளையாடினார்கள் அச்சமயம் பசுக்கள் தூரத்திலிருந்த பசும்புல்லில் ஆசைகொண்டு தங்களிஷ்டப்படி காட்டிற்குள் வெகுதூரஞ் சென்றன. கோபாலர் கள் பசுக்களைக் காணுமல் எங்கும் தேடிச்சென்று கடைசியில் முஞ்சை என்ற ஒரு காட்டை அடைந்தார்கள். அவ்விடத்திலும் பசுக்களைக் காணவில்லை. ஆனால் அவைகள் 'ஹோ' என்று கதறு வதை மட்டும் கேட்டார்கள். தாகத்தால் களைப்புற்று அக்காட்டி லிருந்து வெளியேறும் வழி அறியாது அன்றிரவை அவ்விடத்தி லேயே கழிக்கலானார்கள்.

ता आहूता भगवता मेघगंभीरया गिरा ।
स्वनाम्नां निनदं श्रुत्वा प्रतिनेदुः प्रहर्षिताः ॥ ६ ॥

கிருஷ்ணபகவான் ஒருமரத்தின் மீதேறி இடிமுழக்கம் போன்ற குரலுடன் பசுக்களின் பெயரைச்சொல்லி அழைக்கலானார். பசுக்கள் அச்சப்தத்தைக்கேட்டுச் சந்தோஷ மடைந்து ஹுங்காரம் செய்தன.

ततः समन्ताद्वनधूमकेतुर्यदृच्छयाऽभूत्क्षयकृद्वनौकसाम् ।
समीरितः सारथिनोल्बणोल्मुकैर्विलेलिहानः स्थिरजङ्गमान्महान् ॥ ७ ॥
तमापतन्तं परितो दवाग्निं गोपाश्च गावः प्रसमीक्ष्य भीताः ।
ऊचुश्च कृष्णं सबलं प्रपन्ना यथा हरिं मृत्युभयार्दिता जनाः ॥ ८ ॥

அப்பொழுது முஞ்சை வனத்தில் காட்டுத்தீ திடீரென்று கிளம்பி கோபாலர்களையும் பசுக்களையும் நாற்புரத்திலும் வளைந்தது. பிறகு பெருங்காற்றுடன் சேர்ந்து கொடிய தீப்பொறிகளை வாறி யிறைத்து அங்குள்ள அசையும் பொருள் அசையாப்பொருள் அனைத்தையும் வாட்டலாயிற்று. கோபாலர்களும் பசுக்களும் அதைக்கண்டு பயந்து யமனிடம் பயந்தவர் ஹரியைச் சரணமடைவதுபோல் ராம கிருஷ்ணர்களைச் சரணமடைந்தார்கள்.

श्रीशुक उवाच—वचो निशम्य कृपणं बन्धूनां भगवान्हरिः । निमीलयत मा भैष्ट लोचनानीत्यभाषत ॥ ११ ॥ तथेति मीलिताक्षेषु भगवानग्निमुल्बणम् । पीत्वा मुखेन तान्कृच्छ्राद्योगाधीशो व्यमोचयत् ॥ गाः सन्निवर्त्य सायाह्ने सहरामो जनार्दनः । वेणुं विरणयन्गोष्ठमगाद्गोपैरभिष्टुतः ॥

கிருஷ்ணபகவான் தம் சிநேகிதர்களின் துக்கமொழிகளைக்கேட்டு "சிநேகிதர்காள்! நீங்கள் பயப்படாதீர்கள். கண்களைச் சிறிதுநேரம் மூடிக்கொள்ளுங்கள்" என்றார். அவர்கள் அவ்வாறு மூடிக்கொண்டபின் யோகசித்திபெற்ற பகவான் அக்காட்டுத்தியை விழுங்கி அவர்களை ரக்ஷித்தார். பிறகு மாலையில் கிருஷ்ணபகவான் பலராமருடன் பசுக்களை அழைத்துக்கொண்டு கோபாலர்கள் துதிக்க வேணுகானத்துடன் கோகுலம் சென்றார்.

# இருபதாவது அத்தியாயம்.



{ विंशे प्रावृड्शरच्छोभावर्णनेन वनोचिताः ।
प्रावृट्क्रीडा निरूप्यन्ते गोपरामयुजो हरेः ॥ }

[வருஷருது வர்ணனை—சரத்ருது வர்ணனை—பகவானது லீலைகள்.]

ततः प्रावर्तत प्रावृट् सर्वसत्त्वसमुद्भवा ।
विद्योतमानपरिधिर्विस्फूर्जितनभस्तला ॥
सान्द्रनीलांबुदैर्व्योम सविद्युत्स्तनयित्नुभिः ।
अस्पष्टज्योतिराच्छन्नं ब्रह्मेव सगुणं बभौ ॥

எல்லாப் புற்பூண்டுகளும் செழித்து வளருவதற்கும் எல்லாப் பிராணிகளும் சுகமாய் வாழ்வதற்கும் காரணமான மழைகாலம் கோகுலத்தில் தொடங்கிற்று. அப்பொழுது சூரியனைச்சுற்றியும், சந்திரனைச் சுற்றியும், பரிவேஷங்கள் காணப்பட்டன. ஆகாசத்தில் நீல நிறமுள்ள மேகங்கள் கூட்டங் கூட்டமாய்த் தோன்றி இடிமுழக்கத்துடனும் மின்னல் கொடிகளுடனும் விளங்கின. மேகங்களால் மறைக்கப்பட்ட ஆகாசம் முக்குணங்களால் மறைக்கப்பட்ட ஜீவசைதன்யம் போன்று நன்கு பிரகாசிக்கவில்லை.

तपःकृशा देवमीढा आसीद्वर्षीयसी मही । यथैव काम्यतपसस्तनुः संप्राप्य तत्फलम् ॥ ७ ॥ निशामुखेषु खद्योतास्तमसा भान्ति न ग्रहाः । यथा पापेन पाखण्डा न हि वेदाः कलौ युगे ॥ ८ ॥ श्रुत्वा पर्जन्यनिनदं मण्डूका व्यसृजन्गिरः । तूष्णीं शयानाः प्राग्यद्वद्ब्राह्मणा नियमात्यये ॥ ९ ॥

பலனைக்கருதித் தவம் செய்து அதனால் இளைத்துப்போன தேகம், விரும்பிய பலனை அடைந்த பிறகு எவ்விதம் புஷ்டியாகுமோ அதுபோன்று வேனலால் காய்ந்தபூமி மழையால் செழித்து விளங்கிற்று. கலியுகத்தில் வேதங்கள் க்ஷீணித்து வேத விரோதமான பாஷண்ட மார்க்கம் விருத்தியடைவதுபோன்று மழைகாலத்தில் நவக்கிரஹங்களும் நக்ஷத்திரங்களும் இரவில் பிரகாசிக்கவில்லை. மினுமினுப்பூச்சிகளே பிரகாசித்தன. பிராமணர்கள் நித்திய கர்மங்களை முடித்தபின் ஆசிரியரின் குரலைக்கேட்டு வேதத்தை ஓதுவதுபோல், முன்னர் ஒடுங்கியிருந்த தவளைகள் மேகத்தின் இடிமுழக்கத்தைக்கேட்டு நித்திரையிலிருந்து எழுந்து சப்தித்தன.

आसन्नुत्पथवाहिन्यः क्षुद्रनद्योऽनुशुष्यतीः । पुंसो यथाऽस्वतन्त्रस्य देहद्रविणसंपदः ॥ सरिद्भिः संगतः सिन्धुश्चुक्षुभे श्वसनोर्मिमान् । अपक्वयोगिनश्चित्तं कामाक्तं गुणयुग्यथा ॥

மனதை யடக்காது வழிதவறி இஷ்டப்படி நடக்கும் மனிதனுடைய செல்வம் பலவாறு வெளிச்செல்வதுபோல் எப்பொழுதும் சிறந்து ஓடும் ஆறுகளும் மழைபெய்தவுடன் கரைபுரண்டோடின.

யோகப் பயிற்சியில் திறமையில்லாதவனுடைய மனம் காமாதி வாசனைகளால் தூண்டப்பட்டு விஷயசுகங்களில் பற்றுதலடைந்து நிம்மதியற்றிருப்பது போன்று சமுத்திரமும் நதிகளின் பெருக்கை யடைந்து காற்றினலலைக்கப்பட்டுபெரும் அலைகளுடன் தத்தளித்தது.

வயல்களிலும் தோட்டங்களிலும் பயிர்கள் செழிப்பாய் உண்டாகி உழுது பயிர் செய்பவர்களுக்கு அதிமான சந்தோஷத்தைக்கொடுத்தன. நீரிலும் நிலத்திலும் வாழும் பிராணிகளனைத்தும் மழை பெய்ததும் அழகாக விளங்கின.

मार्गा बभूवुः सन्दिग्धास्तृणैश्छन्ना ह्यसंस्कृताः । धनुर्वियति माहेन्द्रं निर्गुणं च गुणिन्यभात् । व्यक्ते गुणव्यतिकरेऽगुणवान्पुरुषो यथा ॥ न रराजोडुपश्छन्नः स्वज्योत्स्नाराजितैर्घनैः । मेघागमोत्सवा हृष्टाः प्रत्यनन्दन् शिखण्डिनः । सरस्स्वशान्तरोधस्सु न्यूपुरङ्गापि सारसाः ॥

தரையிலுள்ள பாதைகள் தடமழிந்து புல்முளைத்து மறைந்து போயின. குணமற்ற பரமாத்மா முக்குணங்களின் வடிவமான பிரபஞ்சத்தில் பிரவேசித்தார்போன்று தோன்றுவது போல் நாணில்லாத இந்திரவில்லும் இடிமுழக்கத்துடன் கூடின ஆகாசத்தில் அடிக்கடி தோன்றிற்று. ஆகாசத்தில் சந்திரன் மேகங்களால் மறைக்கப்பட்டு அவைகளை மாத்திரம் சிறிது பிரகாசப்படுத்தினன். மேகக்கூட்டங்களைப்பார்த்து மயில்கள் உத்ஸாகமடைந்து உத்ஸவம்போன்று கூத்தாடின. நீர் நிரம்பியகுளங்களின் கரைகளில் சக்கிரவாகப்பக்ஷிகள் சந்தோஷமாய் வசிக்கலாயின.

एवं वनं तद्वर्षिष्ठं पक्वखर्जूरजंबुमत् । गोगोपालैर्वृतो रन्तुं सबलः प्राविशद्धरिः ॥ कचिद्वनस्पतिक्रोडे गुहायां चाभिवर्षति । निर्विश्य भगवान् रेमे कन्दमूलफलाशनः ॥ दध्योदनं समानीतं शिलायां सलिलान्तिके । संभोजनीयैर्बुभुजे गोपैः सङ्कर्षणान्वितः ॥

இவ்விதம் நன்ருய் மழைபெய்ததால் பிருந்தாவனம் முழுவதும் பூத்துக் காய்த்துப் பார்ப்பதற்கு அழகாக இருந்தது. அவ்வனத்தில் பேரீச்சை மரங்களும் நவ்வல்மரங்களும் நன்ருய்ப் பழுத்து இருந்ததை கிருஷ்ணபகவானும் பலராமரும் பார்த்துக் கோபாலர்களை அழைத்துக்கொண்டு வனத்திற்குள்சென்ருர்கள். ஒரு சமயம் மழை அதிகமாகப் பெய்ததால் அவர்கள் மரங்களின் பொந்துகளிலும் மலைக்குகைகளிலும் சென்று காய்கனிகளைத் தின்று தாங்கள் கொண்டுவந்திருந்த தயிரன்னத்தை நதிக்கரையிலுள்ள பாறைகளின்மேல் வைத்துச்சாப்பிட்டார்கள்.

**एवं निवसतोस्तस्मिन्रामकेशवयोर्व्रजे । शरत्समभवद्व्यभ्रा स्वच्छाम्ब्वपरुषानिला ॥ ३२ ॥ शरदा नीरजोत्पत्त्या नीराणि प्रकृतिं ययुः । भ्रष्टानामिव चेतांसि पुनर्योगनिषेवया ॥ ३३ ॥ व्योम्नोऽब्दं भूतशाबल्यं भुवः पङ्कमपां मलम् । शरज्जहाराश्रमिणां कृष्णे भक्तिर्यथाऽशुभम् ॥ ३४ ॥**

இவ்விதம் இராமரும் கிருஷ்ணரும் கோகுலத்தில் வசித்து வருகையில் சரத்காலம் தொடங்கலாயிற்று. ஆகாயத்திலிருந்து மேகங்கள் மறைந்தன. ஜலம் தெளிவடைந்தது. காற்றும் அதிக குளிரில்லாமல் வீசிற்று. கிருஷ்ணனிடத்தில் செய்த பக்தியானது நால்வகை ஆச்ரமத்தார்களுடைய கஷ்டங்களையும் அழிப்பது போல் சரத்காலமும் உலகத்தின் நால்வகை தோஷங்களையும் போக்கிற்று. கிருஷ்ணனிடம் திடமான பக்தியை அடைந்த பிறகு பிரம்மசாரி குருகுலத்தை விடுவது போன்று சரத்காலம் வந்தவுடன் ஆகாயத்தினின்றும் மேகங்கள் மறைந்தன. இல்லற வாழ்க்கையில் ஈடுபட்ட கிருஹஸ்தன் கிருஷ்ணனிடம் உயர்தர பக்தியைச் செய்து மனைவி மக்களுடன் கூடிவாழ்வதை விரும்பாததுபோன்று மழைகாலத்தில் கூட்டங் கூட்டமாக வாழ்ந்த பிராணிகளும் சரத்காலம் வந்ததைக் கண்டு அவ்விதம் நெருக்கமாய் வாழ்வதை விரும்பவில்லை. சடைதரித்து, நீராடாது, அழுக்கடைந்த தேகத்துடனிருக்கும் வானப்பிரஸ்தன் கிருஷ்ண பக்தியைப்பெற்று தன் தேகத்தின் அழுக்கைக் களைவது போன்று மழைகாலத்தில் சேறடைந்திருந்த பூமி சரத்காலம் நெருங்கியதும் சேற்றைப் போக்கிற்று. கர்மாதி வாசனைகளாற் குழம்பிய மனத்தையுடைய சந்நியாசி

கிருஷ்ணனிடம் மனதைச்செலுத்தி நிம்மதி அடைவதுபோன்று மழைகாலத்தில் சேற்றுடன் கலந்த நீர் சரத்காலம் வந்தவுடன் நிர்மலமாயிற்று.

गिरयो मुमुचुस्तोयं क्वचिन्न मुमुचुः शिवम् । यथा ज्ञानामृतं काले ज्ञानिनो ददते न वा ॥ ३५ ॥ नैवाविदन्क्षीयमाणं जलं गाधजलेचराः । यथाऽऽयुरन्वहं क्षय्यं नरा मूढाः कुटुंबिनः ॥ ३६ ॥ गाधवारिचरास्तापमविन्दञ्छरदर्कजम् । यथा दरिद्रः कृपणः कुटुंब्यविजितेन्द्रियः ॥ ३७ ॥

ஞானிகள் இடம் காலம் அறிந்து தகுந்த சிஷ்யனுக்கு ஞானோபதேசம் செய்தும், தகாதசிஷ்யனுக்கு உபதேசம் செய்யாததும் போல் மலைகள் தெளிவான நீரைச் சில விடங்களில் பெருக்கியும் சில இடங்களில் பெருக்காமலும் இருந்தன. குடும்பத்தில் பற்றுதல் வைத்து குடும்ப சம்ரக்ஷணைக்காக வாழ்நாளைச் செலவு செய்த மனிதன் தன் ஆயுள் ஒவ்வொருநாளும் குறைந்து போவதை யறியாததுபோல், ஆழமில்லாத குட்டங்களில் வஸிக்கும் ஜலஜந்துக்கள் நாளடைவில் கொஞ்சங்கொஞ்சமாக ஜலம் குறைந்து வருவதை யறியவில்லை. ஆகையால் அவைகள் இந்திரியங்களை அடக்காத தரித்திரன் குடும்பசம்ரக்ஷணையில் கஷ்டத்தை யடைவது போன்று சரத்காலத்து சூரியனுல் எரிக்கப்பட்டு வருந்தின.

शनैःशनैर्जहुः पङ्कं स्थलान्यामं च वीरुधः । यथाहंममतां धीराः शरीरादिष्वनात्मसु ॥३८॥ निश्चलांवुरभूत्तूष्णीं समुद्रः शरदागमे । आत्मन्युपरते सम्यङ्मुनिर्व्युपरतागमः ॥ ३९ ॥ केदारेभ्यस्त्वपोऽगृह्णन्कर्षका दृढसेतुभिः । यथा प्राणैः स्रवज्ज्ञानं तन्निरोधेन योगिनः ॥ ४० ॥

ஞானிகள் ஜடமான சரீராதிகளினின்று நான் எனது என்ற அகப் புறப்பற்றுகளை விடுவது போல் பூமி சேற்றையும் செடி கொடிகள் ஈரத்தையும் விட்டன. மனது ஒடுங்கிய முனி வேதம்ஓதுவதைவிட்டு மௌனமாயிருப்பது போல் சமுத்திரம் அலைகளடங்கி அமைதியாயிருந்தது. யோகிகள் யோகஸித்தி பெறுவதற்காக இந்திரியங்களை வெளிச்செல்லாது உள்ளே அடக்குவதுபோல் கிருஷிகர்கள் வரம்புகளை உயர்த்தி வயல்களில் தண்ணீரை நிரப்பினர்கள்.

शरदर्कांशुजांस्तापान्भूतानामुडुपोऽहरत् । देहाभिमानजं बोधो मुकुन्दो व्रजयोषिताम् ॥ ४१ ॥ खमशोभत निर्मेघं शरद्विमलतारकम् । सत्त्वयुक्तं यथा चित्तं शब्दब्रह्मार्थदर्शनम् ॥ ४२ ॥ अखण्डमण्डलो व्योम्नि रराजो-डुगणैः शशी । यथा यदुपतिः कृष्णो वृष्णिचक्रावृतो भुवि ॥ ४३ ॥

ஆத்மஞானம் தேகாபிமானத்தால் உண்டாகும் துன்பத்தை நீக்குவது போலும், கிருஷ்ணபகவான் கோபஸ்திரீகள் மன்மத தாபத்தைப் போக்குவது போலும், சரத்காலத்து சூரிய வெப்பத்தைச் சந்திரன் போக்கினன். இப்புவியில் யதுச்ரேஷ்டரான கிருஷ்ணபகவான் யாதவர்களால் சூழப்பட்டு எவ்விதம் பிரகாசித்தாரோ அவ்விதம் ஆகாசத்தில் நக்ஷத்திரக்கூட்டங்களால் சூழப்பட்டு சந்திரன் பூரணமண்டலத்துடன் நிர்மலமாய்ப் பிரகாசித்தான்.

पुरग्रामेष्वाग्रयणैरैन्द्रियैश्च महोत्सवैः ।
बभौ भूः पक्वसस्याढ्या कलाभ्यां नितरां हरेः ॥

மகாவிஷ்ணுவின் கலைகளான கிருஷ்ணனும் பலராமரும் பூமியில் வசித்து வருங்கால் பூமி செழிப்புற்று விளங்கிற்று. கிராமங்களிலும் பட்டணங்களிலும் பிராமணர்கள் புது அரிசியைக் கொண்டு ஆக்ரேயணம் முதலான இஷ்டிகளைச் செய்தும் இந்திரனுக்கு உத்ஸவங்கள் நடத்தியும் சந்தோஷமாய் வாழ்ந்தார்கள்.

# இருபத்தொன்றாவது அத்தியாயம்.



{ एकविंशे शरद्रम्यवृन्दावनगते हरौ ।
तद्वेणुस्वनमाकर्ण्य गोपीभिर्गीतमीर्यते ॥ }

[சரத்காலத்தில் பகவான் பிருந்தாவனம் செல்லுதல்—வேய்ங்குழல் இசைத்தல்—கோபிகைகள் அதை வர்ணித்தல்.]

श्रीशुक उवाच—इत्थं शरत्स्वच्छजलं पद्माकरसुगन्धिना ।
न्यविशद्वायुना वातं सगोगोपालकोऽच्युतः ॥ १ ॥

சரத்காலத்தில் ஒரு சமயம் கிருஷ்ணபகவான் கோபாலர்

களையும் பசுக்களையும் அழைத்துக்கொண்டு நீர் நிரம்பியதும் தாமரையின் நறுமணம் அளாவியதுமான பிருந்தாவனத்திற்குச் சென்றார்.

बर्हापीडं नटवरवपुः कर्णयोः कर्णिकारं
बिभ्रद्वासः कनककपिशं वैजयन्तीं च मालाम् ।
रन्ध्रान्वेणोरधरसुधया पूरयन् गोपवृन्दैः
वृन्दारण्यं स्वपदरमणं प्राविशद्गीतकीर्तिः ॥ ५ ॥

அப்பொழுது அவர், தலையில் மயில் தோகையையும் காதுகளில் கர்ணிகாரபுஷ்பங்களையும் இடுப்பில் சுவர்ணநிறமான பட்டையும் கழுத்தில் பலநிறங்களுடன் கூடிய முத்துமாலைகளையும் அணிந்து, நாடகக் கொட்டகையில் ராஜவேஷம் தரித்த நடன்போல விளங்கினர். அவர் அடிக்கடி புல்லாங்குழலை ஊதிக்கொண்டிருந்தார். அப்பொழுது மற்றுமுள்ளவர்கள் அவருடைய மேலான புகழைக் கானஞ்செய்தார்கள்.

इति वेणुरवं राजन्सर्वभूतमनोहरम् ।
श्रुत्वा व्रजस्त्रियः सर्वा वर्णयन्त्योऽभिरेमिरे ॥ ६ ॥

மன்னவனே! பகவானுடைய இத்தகைய வேணுகானம் எல்லோருடைய மனதையும் மகிழச்செய்தது. அதைக்கேட்ட கோபஸ்திரிகள் அனைவரும் பகவானைப் பலவாறு புகழ்ந்து ஒருவரோடு ஒருவர் பேசலானார்கள்.

अक्षण्वतां फलमिदं न परं विदामः सख्यः पशूननुविवेशयतोर्वयस्यैः ।
वक्त्रं व्रजेशसुतयोरनुवेणुजुष्टं यैर्वा निपीतमनुरक्तकटाक्षमोक्षम् ॥ ७ ॥

"தோழிகாள்! நந்தகோபரின் புதல்வர்களான கிருஷ்ணரும் பலராமனும் வேணுகானம் செய்யும்பொழுது அவர்களுடைய அழகான முகத்தைப்பார்த்தவர்களே கண்களைப்பெற்றதால் உண்டான மேலான பயனை அடைந்தவர்கள். கோபால நண்பர்களுடன் பசுக்களை மேய்த்துக்கொண்டு கிருஷ்ணன் கோகுலத்திற்குத் திரும்பி வரும்பொழுது அவருடைய கடைக்கண் பார்வையின் அழகைப் பார்த்த கண்களே கண்களாகும்.

गोप्यः किमाचरदयं कुशलं स्म वेणुर्दामोदराधरसुधामपि गोपिकानाम् ।
भुङ्क्ते स्वयं यदवशिष्टरसं ह्रदिन्यो हृष्यत्त्वचोऽश्रु मुमुचुस्तरवो यथाऽऽर्याः॥

கோபிகைகளே! இப்புல்லாங்குழல் என்ன பாக்கியத்தைச் செய்ததோ. இதுவரை நாம் மட்டுமே அந்த தாமோதரனுடைய அதராமிருதத்தை அநுபவித்தோம். இப்பொழுது இந்தப் புல்லாங்குழலும் அந்தப் பாக்கியத்தைப் பெற்று தான் ஒன்றாகவே இருந்து அவை அனைத்தையும் அநுபவித்து மிஞ்சியிருப்பதை பூமியில் விடுகிறது. அதனால்தான் பூமியும் சந்தோஷமடைந்து மயிர்க்கூச்சல் அடைவது போல் ஆங்காங்கு தடாகங்களில் மலர்ந்த தாமரைப் புஷ்பங்களை வெளியிடுகிறது போலும். மரங்களும் தங்கள் வம்சத்தில் உண்டான வேணுவின் பாக்கியத்தைப் பார்த்து ஆனந்தக் கண்ணீரைப் பெருக்குவது போன்று புஷ்பங்களிலிருந்து தேனை வடிக்கின்றனபோலும்.

वृन्दावनं सखि भुवो वितनोति कीर्तिं यद्देवकीसुतपदांबुजलब्धलक्ष्मि ।
गोविन्दवेणुमनु मत्तमयूरनृत्यं प्रेक्ष्याद्रिसान्वपरतान्यसमस्तसत्त्वम् ॥

சகிகளே! இந்த பிருந்தாவனமோவெனில் கிருஷ்ணபகவானுடைய அடிவைப்புகளால் மிகுந்த பாக்கியத்தைப்பெற்று, அதனால் சுவர்க்காதி உலகங்களைக் காட்டிலும் இந்த பூமிக்கே அதிகமான கீர்த்தியைக் கொடுக்கின்றது. மயில்கள் ஆங்காங்கு பகவானுடைய வேணுகானத்தைக் கேட்டு மேககர்ச்சனை என்று நினைத்து வேட்கை கொண்டு அதை அநுசரித்தாற்போன்று தோகையை விரித்து ஆடுகின்றன. அவை ஆடுவதைப்பார்த்து மலையின் தாழ்வாரங்களிலுள்ள பிராணிகள் அனைத்தும் அசைவற்று இருக்கின்றன.

कृष्णं निरीक्ष्य वनितोत्सवरूपशीलं श्रुत्वा च तत्क्वणितवेणुविचित्रगीतम्
देव्यो विमानगतयः स्मरनुन्नसारा भ्रश्यत्प्रसूनकबरा मुमुहुर्विनीव्यः ॥

ஆகாச மார்க்கமாய் விமானங்களில் சஞ்சரிக்கும் தேவஸ்திரிகள் கிருஷ்ணனுடைய அழகைப் பார்த்து மனம் தளர்ந்தும் அவருடைய இனிய வேணுகானத்தைக் கேட்டு ஆச்சரியமடைந்தும் மன்மத விகாரத்தால் தைரியமிழந்து கூந்தல்கள் அவிழ்ந்து வஸ்திரம் நழுவினதும் தெரியாமல் மதிமயங்குகிறார்கள்.

गावश्च कृष्णमुखनिर्गतवेणुगीत-
पीयूषमुत्तभितकर्णपुटैः पिबन्त्यः ।
शावाः स्नुतस्तनपयःकवलाः स्म तस्थुः
गोविन्दमात्मनि दृशाऽश्रुकलाः स्पृशन्त्यः ॥

பிருந்தாவனத்திலிருந்த பசுக்கள் கிருஷ்ணனுடைய வேணு கானத்தைக் கேட்பதில் ஆவல்கொண்டு காதுகளை உயரே தூக்கி அசைவற்று நின்றன. பாலைக் குடித்துக்கொண்டிருக்கும் கன்றுகள் பால் குடியாமலும் புல்லைத் தின்றுகொண்டிருந்த கன்றுகள் அப்பொழுதெடுத்த கவளத்தை வாயில் வைத்துக்கொண்டும் அசைவற்று நின்று ஆனந்தக் கண்ணீரைப் பெருக்கி இனிய வேணு கானத்தைக் கேட்கின்றன.

नद्यस्तदा तदुपधार्य मुकुन्दगीतं आवर्तलक्षितमनोभवभग्नवेगाः ।
आलिङ्गनस्थगितमूर्मिभुजैर्मुरारेर्गृह्णन्ति पादयुगलं कमलोपहाराः ॥

ஆறுகளும் முகுந்தனுடைய வேணுகானத்தைக் கேட்டு அப்பால் ஓடுவதற்கு மனமில்லாது தங்கள் வேகத்தைக் குறைத்து அவ்விடத்திலேயே சுற்றிச் சுற்றிச் சுழிகளுடன் நிற்பனபோலும் காணப்படுகின்றன. பெரிய அலைகளுடன் அவைகள் உயரே கிளம்புவதைப் பார்க்குமளவில் அவை பகவானை ஆலிங்கனம் செய்ய விரும்புவதுபோல் காணப்படுகின்றன. கரைபுரண்டு ஓடுவதைப் பார்க்கும்பொழுது அவை பகவானுடைய பாதாரவிந்தங்களில் தாமரைப் புஷ்பங்களை அர்ச்சிப்பனபோல் தோன்றுகின்றன.

दृष्ट्वाऽऽतपे व्रजपशून्सह रामगोपैः संचारयन्तमनु वेणुमुदीरयन्तम् ।
प्रेमप्रवृद्ध उदितः कुसुमावलीभिः सख्युर्व्यधात्स्ववपुषाम्बुद आतपत्रम् ॥

சகிகளே! மேகக்கூட்டம் தன் நண்பரான கிருஷ்ணன் பலராமருடனும் கோபாலர்களுடனும் வெயிலில் பசுக்களை மேய்த்துக்கொண்டு வேணுகானம் செய்வதைப் பார்த்து, அவரிடம் கொண்ட அன்பால் அவர்படும் கஷ்டத்தைச் சகியாது, அவருக்கு நேராகச் சென்று குடைபோன்று சூரிய வெப்பத்தை மறைத்து பூமாரி பெய்வதுபோல் மழைத்துளிகளைப் பெய்தது.

हन्तायमद्रिरबला हरिदासवर्यो यद्रामकृष्णचरणस्पर्शप्रमोदः ।
मानं तनोति सह गोगणयोस्तयोर्यत्पानीयसूयवसकन्दरकन्दमूलैः ॥

பெண்களே! இந்த கோவர்த்தனகிரி பகவத் பக்தர்களால் பூஜிக்கத்தக்கது என்பதற்கும் ஐயமுண்டோ. ஏனெனில் பலராமனும் கிருஷ்ண பகவானும் எப்பொழுதும் சஞ்சரிக்கும் பாக்கியத்தையன்றோ அது பெற்றிருக்கிறது. தவிர அவர்களுக்கு பருகுவதற்கு நீரும், தங்குவதற்கு குகைகளும், உண்பதற்குக் காய் கனிகளும் எப்பொழுதும் கொடுத்து அவர்களை பூஜை செய்யும் பாக்கியத்தை யன்றோ இந்த மலை அடையப்பெற்றது.

गा गोपकैरनुवनं नयतोरुदारवेणुस्वनैः कलपदैस्तनुभृत्सु सख्यः ।
अस्पन्दनं गतिमतां पुलकस्तरूणां निर्योगपाशकृतलक्षणयोर्विचित्रम् ॥

பசுக்களையும் கோபாலர்களையும் தினமும் காட்டிற்கு அழைத்துச் செல்லும் கிருஷ்ண பகவானுடைய இனிய வேணுகானத்தைக் கேட்டு அசையும் பிராணிகள் அசையா நின்றன; ஜடமான மரங்கள் மயிர்ச் சிலிர்ப்பை அடைவதுபோல் புஷ்பங்களை வருஷித்துத் தேனைப் பெருக்கின. சுருக்கமாய்ச் சொல்லுமளவில் அசையும் பொருள்கள் அசைவற்றும் அசையாப்பொருள்கள் உணர்ச்சியுடனும்காணப்பட்டன.

एवंविधा भगवतो या वृन्दावनचारिणः ।
वर्णयन्त्यो मिथो गोप्यः क्रीडास्तन्मयतां ययुः ॥

இவ்விதம் கோபிகைகள் பிருந்தாவனத்தில் சஞ்சரிக்கும் கிருஷ்ண பகவானுடைய வேணுகானத்தையும் அவருடைய லீலைகளையும் ஒருவருக்கொருவர் வர்ணித்துக்கொண்டு அவரிடத்திலேயே மனதைச் செலுத்தி தங்களை மறந்தார்கள்



# இருபத்திரண்டாவது அத்தியாயம்.

---

{ द्वाविंशे गोपकन्यानां वस्त्राहरणलीलया ।
वरं दत्वा गतः कृष्णो यज्ञशालामितीर्यते ॥ }

[கோபியர்களின் காதல்—காத்தியாயனி விருதம்—பகவான் வஸ்திரங்களை அபகரித்து வரமளித்தல்.]

**हेमन्ते प्रथमे मासि नन्दव्रजकुमारिकाः । चेरुर्हविष्यं भुञ्जानाः कात्यायन्यर्चनव्रतम् ॥ आप्लुत्यांभसि कालिन्द्या जलान्ते चोदितेरुणे । कृत्वा प्रतिकृतिं देवीमानर्चुर्नृप सैकतीम् ॥ गन्धैर्माल्यैः सुरभिभिः बलिभिर्धूपदीपकैः । उच्चावचैश्चोपहारैः प्रवाल फलतण्डुलैः ॥**

ஹேமந்த ருது தொடங்கியதும் ஆயர்கன்னியர்கள் ஹவிசை புஜித்துத் துர்க்காதேவியை நியமப்படி ஆராதித்தார்கள். அவர்கள் வைகறையில் யமுனைக்குச்சென்று புனலாடி நல்முத்துப்போன்ற மணல்களால் கௌரியின் திருவுருவமைத்துத் தொழுதார்கள். மலர்சூட்டி நாண்மலர் தூவி நறுமணம் கமழும் தீப்புகை எடுத்தனர். காய் கனியும் இனிய அமுதும் தளிர்களும் படைத்தனர்.

**कात्यायनि महामाये महायोगिन्यधीश्वरि ।
नन्दगोपसुतं देवि पतिं मे कुरु ते नमः ॥
इति मन्त्रं जपन्त्यस्ताः पूजां चक्रुः कुमारिकाः ॥**

**एवं मासं व्रतं चेरुः कुमार्यः कृष्णचेतसः ।**

'மகா மாயே! காத்தியாயனி! தேவி! நந்தர்கோன் மகன் கண்ணன் எங்கள் கணவனாகுக' என்ற மந்திரத்தை ஜபித்து அவ்விளங் கன்னியர்கள் கிருஷ்ணனிடம் ஆசைகொண்டு ஒருமாதம் கௌரியை பூஜித்து நோற்றார்கள்.

**नद्यां कदाचिदागत्य तीरे निक्षिप्य पूर्ववत् । वासांसि कृष्णं गायन्त्यो विजहुः सलिले मुदा ॥ भगवांस्तदभिप्रेत्य कृष्णो योगेश्वरेश्वरः ।**

**वयस्यैरावृतस्तत्र गतस्तत्कर्मसिद्धये ॥ तासां वासांस्युपादाय नीप मारुह्य सत्वरः । हसद्भिः प्रहसन्बालैः परिहासमुवाच ह ॥**

ஒருசமயம் அவர்கள் யமுனைக்குச் சென்று, வழக்கம்போல் வஸ்திரங்களைக் களைந்து கரையில் வைத்துவிட்டு கிருஷ்ணனையே பலவாறு பாடிக்கொண்டு உல்லாசமாய் ஜலக்கிரீடை செய்தார்கள். யோகீச்வரரான பகவான் அப்பெண்களின்உள்ளத்தை அறிந்துஅவர் கள் விரதத்தை சபலமாக்கும் பொருட்டு, தம் சிநேகிதர்களுடன் சென்று அவ்வஸ்திரங்களை எடுத்துக்கொண்டு அருகிலிருந்த கதம்ப விருக்ஷத்தின்மிசை ஏறி பெண்களைப் பலவாறுபரிஹாசம் செய்தார்.

**अत्रागत्याबलाः कामं स्वंस्वं वासः प्रगृह्यताम् ।**
**सत्यं ब्रवाणि नो नर्म यद्यूयं व्रतकर्शिताः ॥**
**न मयोदितपूर्वं वा अनृतं तदिमे विदुः ।**
**एकैकशः प्रतीच्छध्वं सहैवोत सुमध्यमाः ॥**

"பெண்களே! என்னருகில் வந்து ஆடைகளைப் பெற்றுக்கொள்ளுங் கள். நோன்புநோற்று மிகவும் மெலிந்திருக்கிறீர்கள். உங்களிடம் விளையாட்டாக ஒன்றும் உரையாடவில்லை. இதற்குமுன் நான் எப் பொழுதாவது பொய் உரைத்ததுண்டா? இதோ இருக்கும் சிநே கிதர்கள் அதை நன்கு அறிவார்கள். ஆகையால் சுந்தரிகளே! நீங் கள் தனித்தனியாகவோ அல்லது ஒன்று சேர்ந்தோ என்னருகில் வந்து உங்கள் வஸ்திரங்களைப் பெற்றுக்கொள்ளுங்கள்" என்றார்.

**एवं ब्रुवति गोविन्दे नर्मणाऽऽक्षिप्तचेतसः ।**
**व्रीडिताः प्रेक्ष्य चान्योन्यं जातहासा न निर्ययुः ॥**
**आकण्ठमग्नाः शीतोदे वेपमानास्तमब्रुवन् ॥**

பகவான் இவ்வாறு பரிஹாசம் செய்வதைப் பார்த்து அக் கோதையர்கள் உருகுகாதலும் நாணமும் மீதூர ஒருவர் முகத்தை ஒருவர் நோக்கினவாறு ஜலத்தினின்று வெளிவராமல் கழுத்துவரை மறைத்துக்கொண்டு,

माऽनयं भोः कृथास्त्वां तु नन्दगोपसुतं प्रियम् । जानीमोऽङ्ग व्रजश्लाघ्यं देहि वासांसि वेपिताः ॥ श्यामसुन्दर ते दास्यः करवाम तवोदितम् । देहि वासांसि धर्मज्ञ नोचेद्राज्ञे ब्रुवामहे ॥

" முகில்வண்ணா ! நீ இந்த அநியாயத்தைச் செய்யாதே. நந்தரின் அருமைப்பிள்ளை என்பது எங்களுக்குத் தெரியும். ஆயர் கொழுந்தே! நாங்கள் உன் வேழியர்கள். நீ இட்ட கட்டளையைச் சிரமேல் தாங்கி அதன்படி நடக்கச் சித்தமாயிருக்கிறோம். எங்கள் ஆடைகளைக் கொடு. இல்லாவிடில் நாங்கள் நந்தகோபரிடம் தெரிவிப்போம்" என்று முறையிட்டார்கள்.

भवत्यो यदि मे दास्यो मयोक्तं वा करिष्यथ । अत्राऽऽगत्य स्ववासांसि प्रतीच्छन्तु शुचिस्मिताः ॥ ततो जलाशयात् सर्वा दारिकाः शीतवेपिताः । पाणिभ्यां योनिमाच्छाद्य प्रोत्तेरुः शीतकर्शिताः ॥

அவர்கள் கூறியதைக் கேள்வியுற்று பகவான் " சுந்தரிகளே ! நீங்கள் என் வேழியர்கள் என்பது உண்மையாகில் நான் கூறியபடி செய்து என் அருகில் வந்து உங்கள் ஆடைகளைப் பெற்றுக்கொள்ளுங்கள்" என்றார். பிறகு அக்கன்னியர்கள் பனி நீரில் படிந்து புனலாடியதால் தேகம் நடுக்கமுற்று, தங்கள் யோனியை அழகிய கரங்களால் மறைத்துக்கொண்டு பாவைபோல் கரையில் வந்து தங்கள் ஆடைகளை வேண்டினார்கள்.

भगवानाहता वीक्ष्य शुद्धभावप्रसादितः ।
स्कन्धे निधाय वासांसि प्रीतः प्रोवाच सस्मितम् ॥

பகவான் அவர்களின் அன்பைக் கண்டு அவர்களிடம் சந்தோஷமடைந்து வஸ்திரங்களை ஒரு கொப்பில் வைத்துவிட்டுச் சிறிது புன்னகையுடன் சொல்லலானார்.

यूयं विवस्त्रा यदपो धृतव्रता व्यगाहतैतत्तदु देवहेलनम् ।
बध्वाञ्जलिं मूर्ध्न्यपनुत्तयेंहसः कृत्वा नमोऽधो वसनं प्रगृह्यताम् ॥

" சுந்தரிகளே ! நீங்கள் கௌரியின் விரதத்தை நோற்கும்பொழுது துயிலொழிந்து நீரில் விளையாடினீர்கள். அத

னல் தேவர்களை அவமதித்தீர்கள். அப்பாபத்தை விலக்கத் தலையில் அஞ்சலி செய்து என்னை வணங்கி ஆடையைப் பெற்றுக்கொள்ளுங்கள்." பகவான் இவ்வாறு கூறவே,

एकेन पाणिना नेमुरेकेनाच्छाद्य चाङ्गनाः ।
ता वीक्ष्योवाच भगवान् भूयो धर्म्यमिदं वचः ॥

அக்கன்னியர்கள், தர்மத்தையே அவர் உரைப்பதாக எமாந்து, ஒரு கையால் தங்களை மறைத்துக்கொண்டு மற்றொரு கையால் அவரை வணங்கினர்கள். அவ்விதம் செய்ததைப் பார்த்து பகவான், தர்மத்தை உரைப்பது போல் மறுபடியும் மறை பொருளாக உரைத்தார்.

एकेन पाणिना यो वै प्रणमेद्देवमच्युतम् । तस्य दण्डः करच्छेद इति धर्मविदो विदुः ॥ तस्मादुभाभ्यां पाणिभ्यां प्रणमेत् स्वामिनं नरः । तथा च यूयं कुरुत तन्मे प्रियतरं भवेत् ॥

"ஒரு கையால் தெய்வத்தைத் தொழின் அதை அரிதல் வேண்டும். அதுவே தகுந்த தண்டனை என தர்மநூல்கள் கூறுகின்றன. ஆதலால் இரு கைகளையும் கூப்பி ஈச்வரனை வணங்குதல் வேண்டும். அவ்விதமே செய்யுங்கள். அதுவே என் கருத்திற்கிசைந்தது."

इत्यच्युतेनाभिहितं व्रजाबला मत्वा विवस्त्राप्लवनं व्रतच्युतिम् ।
तत्पूर्तिकामास्तदशेषकर्मणां साक्षात्कृतं नेमुरवद्यमृग्यतः ॥

அச்சுதன் இவ்வாறு உரைக்கவே, அவ்விளம் பெண்கள் அவரது மொழிகளை உண்மையென நம்பி, ஆடையின்றி நீராடியதை நினைத்து, விரதத்தினின்றும் நழுவினதாக எண்ணி வருந்தினர்கள். பிறகு அறம் பொருள் இன்பங்களை ஈட்டுவதில் ஆவல் கொண்ட அப்பெண்மணிகள், எல்லாத் தர்மங்களின் பலனை அளிப்பவரும் பாபங்களை ஒழிப்பவருமான கிருஷ்ணனை இருகைகளாலும் தொழுது, தங்கள் மனோரதத்தை அளிக்குமாறு வேண்டினர்கள்.

तास्तथाऽवनता दृष्ट्वा भगवान्देवकीसुतः ।
वासांसि ताभ्यः प्रायच्छत्करुणस्तेन तोषितः ॥

தேவகி புத்திரரான கிருஷ்ணன் தம்மை வணங்கி நின்ற பெண்களிடம் கருணைகூர்ந்து அவர்களது ஆடைகளைக் கொடுத்தார்.

दृढं प्रलब्धास्त्रपया च हापिताः प्रस्तोभिताः क्रीडनवच्च कारिताः ।
वस्त्राणि चैवापहृतान्यथाप्यमुं ता नाभ्यसूयन्प्रियसङ्गनिर्वृताः ॥

"நாம் நன்கு ஏமாந்தோம். லஜ்ஜையை யிழந்தோம். நம் வஸ்திரங்களையும் எடுத்து நம்மை பொம்மை போன்று ஆட்டிவைத்து பரிகாசமும் செய்தார்" என்று ஒருவருக்கொருவர் சொல்லிக் கொண்டார்கள். ஆயினும் அவருடைய அங்கசங்கத்தில் ஆசைகொண்டிருந்ததால் அவர்மீது சிறிதும் கோபத்தை யடையவில்லை.

परिधाय स्ववासांसि प्रेष्ठसङ्गमसज्जिताः । गृहीतचित्ता नो चेलुस्तस्मिँल्लज्जायितेक्षणाः ॥ तासां विज्ञाय भगवान्स्वपादस्पर्शकाम्यया ।
धृतव्रतानां संकल्पमाह दामोदरोऽबलाः ॥

பின் அவர்கள் தத்தம் வஸ்திரங்களை உடுத்திக்கொண்டு தன் பிரிய நாயகனின் சேர்க்கையில் ஆசைகொண்டு அவரிடம் நாடினமனமுடையவர்களாய் அவ்விடம் விட்டு ஒரு அடி வைப்பதற்கும் விரும்பாமல் லஜ்ஜையுடன் அவரைப் பார்த்து நின்றார்கள். தன்னுடைய திருவடிகளின் சேர்க்கையை அடைவதற்காக கௌரி விரதத்தை நியமத்துடன் அனுஷ்டித்த கன்னிகைகளின் உள்ளத்தை நன்கு அறிந்துகொண்ட பகவான் அவர்களிடம் கூறலானார்.

संकल्पो विदितः साध्व्यो भवतीनां मदर्चनम् ।
मयानुमोदितः सोऽसौ सत्यो भवितुमर्हति ॥
यातावला व्रजं सिद्धा मयेमा रंस्यथ क्षपाः ।
यदुद्दिश्य व्रतमिदं चेरुरार्यार्चनं सतीः ॥

"இளம் பெண்களே! உத்தமிகளே! நீங்கள் எதற்காக என்னை ஆராதித்தீர்கள் என்பதை நான் அறிந்துகொண்டேன். அதை நான் அமோதிக்கிறேன். உங்கள் எண்ணம் உண்மையில்

நிறைவேறப் போகின்றது. ஆகையால் மாசற்ற பெண்களே! நீங்கள், காரியசித்தி பெற்றவர்களாகக் கோகுலஞ் செல்லுங்கள். இனி வரப்போகும் சரத்கால இரவுகளில் நீங்கள் என்னுடன் களிப்பீர்கள்."

इत्यादिष्टा भगवता लब्धकामाः कुमारिकाः ।
ध्यायन्त्यस्तत्पदांभोजं कृच्छ्रान्निर्विविशुर्व्रजम् ॥
अथ गोपैः परिवृतो भगवान् देवकीसुतः ।
वृन्दावनाद्गतो दूरं चारयन्गाः सहाग्रजः ॥

இவ்விதம் பகவான் கட்டளையிட்டதும் கன்னிகைகள் தங்கள் மனோரதம் நிறைவேறப் பெற்றவர்களாய் பகவானுடைய பாதங்களையே தியானம் செய்துகொண்டும் அவர் பிரிவினையை ஒருவாறு சகித்துக்கொண்டும் கோகுலஞ் சென்றார்கள். பிறகு தேவகி புதல்வனான பகவான், கோபாலர்களால் சூழப்பட்டு ராமருடன் பசுக்களை மேய்த்துக்கொண்டு பிருந்தாவனத்திற்குள் வெகுதூரஞ் சென்றார்.

# இருபத்துமூன்றாவது அத்தியாயம்.

---

{ त्रयोविंशे ततो गोपैरन्नयाच्ञापदेशतः ।
तत्पत्न्यनुग्रहात्कृष्णो दीक्षितानन्वतापयत् ॥ }

[வேள்வி மங்கையர் அன்னமளித்தல்-பகவான் வரமளித்தல்—வேதியர்களின் அனுதாபம்.]

तस्या उपवने कामं चारयन्तः पशून्नृप ।
कृष्णरामावुपागम्य क्षुधार्ता इदमब्रुवन् ॥
रामराम महावीर्य कृष्ण दुष्टनिबर्हण ।
एषा वै बाधते क्षुन्नस्तच्छान्तिं कर्तुमर्हथः ॥

கோபாலர்கள் பிருந்தாவனத்தினின்று வெகுதூரஞ்சென்று யமுனைக்கரையடைந்து அங்கு உட்கார்ந்தார்கள். அவர்கள் பசியால் வருந்தி "ராமா! கிருஷ்ணா! கொடிய பசி எங்களைக்கூர்ந்து வாட்டுகிறது. அதை நீங்கள் ஆற்றவேண்டும்" என்று குழைந்து போற்றினார்கள்.

**इति विज्ञापितो गोपैर्भगवान्देवकीसुतः । भक्ताया विप्रभार्यायाः प्रसीदन्निदमब्रवीत् ॥ प्रयात देवयजनं ब्राह्मणा ब्रह्मवादिनः । सत्रमाङ्गिरसं नाम ह्यासते स्वर्गकाम्यया ॥ तत्र गत्वौदनं गोपा याचतास्मद्विसर्जिताः । कीर्तयन्तो भगवत आर्यस्य मम चाभिधाम् ॥**

கோபாலர்கள் இவ்வாறு வேண்டியதும் பகவான் தம் அந்தரங்க பக்தர்களான யக்ஞ பத்னிகளை ஆசிர்வதிக்க எண்ணி "நண்பர்காள்! பிரும்ம நிஷ்டர்களான பிராமணர்கள் சுவர்க்கத்தில் ஆசைகொண்டு ஆங்கிரஸம் என்னும் வேள்வியை வளர்த்து வருகிறார்கள். அங்கு சென்று நாம் அனுப்பியதாகக் கூறி என் பெயரையும் தமையனார் பெயரையும் வழங்கி உணவளிக்கும்படி கேளுங்கள்" என்றார்.

**इत्यादिष्टा भगवता गत्वाऽयाचन्त ते तथा । कृताञ्जलिपुटा विप्रान् दण्डवत्पतिता भुवि ॥ हे भूमिदेवाः शृणुत कृष्णस्याऽऽदेशकारिणः । प्राप्ताञ्जानीत भद्रं वो गोपान्नो रामचोदितान् ॥**

அச்சிறுவர்கள் விரைவில் அவ்விடம் சென்று பூமியில் தண்டம்போல் விழுந்து அந்தணர்களை வணங்கி கைகூப்பி, "பூதேவர்காள்! கிருஷ்ணனின் கட்டளையைக் கேளுங்கள். ராமன் எங்களை நும்மிடம் அனுப்பினான்.

**गाश्चारयन्तावविदूर ओदनं रामाच्युतौ वो लषतो बुभुक्षितौ ।**
**तयोर्द्विजा ओदनमर्थिनोर्यदि श्रद्धा च वो यच्छत धर्मवित्तमाः ॥**

கிருஷ்ண பகவானும் பலராமனும் பசுக்களை மேய்த்துப் பசியால் வருந்தி வெகு சமீபத்தில் வந்திருக்கிறார்கள். தர்மத்தை யுணர்ந்தவர்களே! உங்களிடம் அன்னமிருந்து சிரத்தையுமிருக்குமாகில் அன்னமளியுங்கள்" என்று யாசித்தார்கள்.

**इति ते भगवद्याच्ञां शृण्वन्तोऽपि न शुश्रुवुः । देशः कालः पृथग्द्रव्यं मन्त्रतन्त्रर्त्विगग्नयः । देवता यजमानश्च क्रतुर्धर्मश्च यन्मयः ॥ तं ब्रह्म परमं साक्षाद्भगवन्तमधोक्षजम् । मनुष्यदृष्ट्या दुष्प्रज्ञा मर्त्यात्मानो न मेनिरे ॥ न ते तदोमिति प्रोचुर्न नेति च परन्तप ।**

இவ்வாறு பகவான் யாசித்ததை கோபாலர்கள் மூலம் வேதியர்கள் கேள்வியுற்றும் கேளாதவர்போன்று மௌனமாயிருந்தனர்.

தேசம்காலம்திரவியம் மந்திரம் தேவதையஜமானன் முதலியவேள்வியின் அங்கங்களை பகவானின் வடிவமென வேதங்கள் வழுத்துவதை அறிந்திருந்தும், அவரையே வேள்விக்கு முதல் இறைவனாக நான் மறைகளும் போற்றுவதைத் தெரிந்திருந்தும் மரிக்கும் தேகாதிகளை நித்ய ஆத்மாவாக எண்ணி அதனால் அறிவிழந்த அவர்கள் கிருஷ்ண பரமாத்மாவைக் கேவலம் 'நந்தர்கோன் மகன்' என்று நினைத்து 'ஆம்' என்றோ 'இல்லை' என்றோ உரையாது மௌனமாயிருந்தனர்.

गत्वाऽथ पत्नीशालायां दृष्ट्वाऽऽसीनाः स्वलङ्कृताः । नत्वा द्विजसतीः गोपाः प्रश्रिता इदमब्रुवन् ॥ इतोविदूरे चरता कृष्णेनप्रेषिता वयम् ॥ गाश्चारयन्स गोपालैः सरामो दूरमागतः । बुभुक्षितस्य तस्यान्नं सानुगस्य प्रदीयताम् ॥

பிறகு அச்சிறுவர்கள் கிருஷ்ணனிடம் நடந்ததைச் சொல்லி அவரது கட்டளையின்படி மங்கையர் சாலை சென்று அவர்களை வணங்கி, 'கிருஷ்ணன் கோபாலர்களுடன் சமீபத்தில் வந்திருக்கிறான். பசியால் சாப்பிட ஆவல்கொண்டு அவன் எங்களை அனுப்பினான். உணவையளியுங்கள்' என்று வணக்கத்துடன் அவர்களிடம் யாசித்தார்கள்.

श्रुत्वाऽच्युतमुपायातं नित्यं तद्दर्शनोत्सुकाः । तत्कथाक्षिप्तमनसो बभूवुर्जातसंभ्रमाः ॥ चतुर्विधं बहुगुणमन्नमादाय भाजनैः । अभिसस्रुः प्रियं सर्वाः समुद्रमिव निम्नगाः ॥

அம்மாதர்களோ கிருஷ்ணனுடைய கதைகளைப் பல தடவை கேட்டிருந்ததால் அவரிடம் நாடின மனமுடையவர்களாய் அவரைப் பார்ப்பதில் மிகுதியும் ஆவல் கொண்டிருந்தார்கள். கிருஷ்ணன் அருகாமையில் வந்திருப்பதைக் கேட்டதும் அவர்கள் அறுசுவை உணவைப் பெருந்தாழிகளில் எடுத்துக்கொண்டு, ஆறுகள் தங்கள் பதியான சமுத்திரத்தை நோக்கி விரைந்தோடுவது போல், கிருஷ்ணனிருக்குமிடத்திற்கு விரைவிற் சென்றார்கள்.

यमुनोपवनेऽशोकनवपल्लवमण्डिते ।
विचरन्तं वृतं गोपैः ददृशुः साग्रजं स्त्रियः ॥

அவர்கள் யமுனைக்கரை படைந்து அங்கு அசோக மரங்களால் அழகாக விளங்கும் உத்தியான வனத்தைப்பார்த்தார்கள். அங்கு கிருஷ்ணபகவான், தமையன் பலராமருடன் கோபாலர்களுக்கிடையில் உல்லாசமாய் உலாவுவதைக் கண்டார்கள்.

श्यामं हिरण्यपरिधिं वनमाल्यबर्हधातुप्रवालनटवेषमनुव्रतांसे ।
विन्यस्तहस्तमितरेण धुनानमब्जं कर्णोत्पलालककपोलमुखाब्जहासम् ॥
प्रायः श्रुतप्रियतमोदयकर्णपूरैर्यस्मिन्निमग्नमनसस्तमथाक्षिरन्ध्रैः ।
अन्तः प्रवेश्य सुचिरं परिरभ्य तापं प्राज्ञं यथाऽभिमतयो विजहुर्नरेन्द्र ॥

அவ்விடத்தில் நீலமேக சியாமளரான கிருஷ்ண பகவான், சுவர்ணம் போன்ற பீதாம்பரம் தரித்தும், வனமாலை அணிந்தும், மயில் பீலி இளந்தளிர் இவை சூட்டியும், மனோசிலை முதலிய தாதுக்களால் திலகமிட்டும், ஓர் சிறந்த நடன்போன்று விளங்கினர். ஒரு கையை அருகிலுள்ள தோழன்மீது போட்டும், மற்றொரு கையில் ஒரு தாமரையை வைத்துச் சுற்றியும், காதுகளில் கர்ணிகார புஷ்பங்களை அணிந்துமிருந்தார். மன்னவனே! கண்ணாடி போன்ற அழகான அச்செல்வனது கன்னத்தையும் புன்சிரிப்புடன் விளங்கும் அவரது முகமண்டலத்தையும் அம்மாதர்கள் கண்களிப்பக்கண்டு அவரைத் தங்கள் ஹிருதயத்தில் ஆலிங்கனம் செய்து வெகுகாலமாகத் தங்களை வாட்டிக்கொண்டிருந்த தாபத்தை அகற்றிக்கொண்டார்கள்.

तास्तथा त्यक्तसर्वाशाः प्राप्ता आत्मदिदृक्षया ।
विज्ञायाखिलदृग्द्रष्टा प्राह प्रहसिताननः ॥

அவர்கள் ஆசைகளை எல்லாம் ஒழித்துவிட்டு தன்னையே பார்க்க வந்திருப்பதை சர்வஞ்ஞரான பகவான் அறிந்து சிறிது புன்னகைசெய்து கூறலானர்.

स्वागतं वो महाभागा आस्यतां करवाम किम् ।
यन्नो दिदृक्षया प्राप्ता उपपन्नमिदं हि वः ॥
तद्यात देवयजनं पतयो वो द्विजातयः ।
स्वसत्रं पारयिष्यन्ति युष्माभिर्गृहमेधिनः ॥

"புண்யவதிகளே! உங்கள் வரவு நல்வரவு ஆகுக. வீற்றிருங்கள். நீவிர் என்னைப் பார்க்கவேண்டுமென்று வந்திருப்பீர்களாகில் அது உங்களுக்கு ஏற்றதேயாகும். நான் யாது செய்யவேண்டும்? உரைப்பீர். ஆயினும் மடநல்லார்களே! நீங்கள் விரைவில் யாக சாலையை அடையுங்கள். உங்கள் கணவர்கள் தங்கள் வேள்வியை பூர்த்திசெய்ய உங்கள் வரவை எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறார்கள்."

मैवं विभोऽर्हति भवान्गदितुं नृशंसं सत्यं कुरुष्व निगमं तव पादमूलम् ।
प्राप्ता वयं तुलसिदाम पदावसृष्टं केशैर्निवोढुमतिलङ्घ्य समस्तबन्धून् ॥
गृह्णन्ति नो न पतयः पितरौ सुता वा नभ्रातृबन्धुसुहृदः कुत एव चान्ये
तस्माद्भवत्प्रपदयोः पतितात्मनां नो नान्या भवेद्गतिररिन्दम तद्विधेहि ॥

இடிபோன்று கடுமையாய்த் தாக்கும் பகவானின் மொழிகளைக்கேட்டு அவ்வேள்வி மங்கையர்கள் "பிரபுவே! நீர் இவ்விதம் கடுமையான வார்த்தைகளைப் பொழிவது தகுதியன்று. 'பக்தர்களை ஒரு பொழுதும் கைவிடேன்' என்ற உமது வாக்கை நிறைவேற்றும். துளசிமாலை அணிந்தவரே! நீர் காலால் இட்ட வேலையைத் தலையாலே தாங்குவதற்கு நாங்கள் உற்றார் உறவினர்களையும் தள்ளிவிட்டு வந்திருக்கிறோம். இனி நாங்கள் அவர்களை அடைக்கலம் அடைவோமாகில் அவர்கள் எங்களை ஏற்றுக்கொள்ளார். இதில் ஐயமில்லை. அவ்விதமிருக்க மற்றவர்களைப் பற்றிச் சொல்லவும் வேண்டுமா? ஆதலால் உம்மையே நாடிவந்த எங்களுக்கு உமது சீரடித்தாமரையின்றி வேறு கதியில்லையாதலால் எங்களை ஏற்றுக்கொள்ளும்" என்று கூறலும்,

पतयो नाभ्यसूयेरन्पितृभ्रातृसुतादयः ।
लोकाश्च वो मयोपेता देवा अप्यनुमन्वते ।

பகவான், "பக்த சிரோமணிகளே! உங்கள் கணவர்கள் உங்களிடம் சீற்றங்கொள்ளார். தந்தை தாய் முதலியோரும் ஒருவகைக் குறையும் கூறார். இதோ காணப்படும் தேவர்களும் இதை ஆமோதிக்கிறார்கள். இவ்வுலகமும் என்னுடன் சேர்ந்து ஆமோதிக்கும்.

इत्युक्ता मुनिपत्न्यस्ता यज्ञवाटं पुनर्गताः ।
ते चानसूयवः स्वाभिः स्त्रीभिः सत्रमपारयन् ॥

भगवानपि गोविन्दस्तेनैवान्नेन गोपकान् ।
चतुर्विधेनाशयित्वा स्वयंच बुभुजे प्रभुः ॥

பிறகு அக்கோதையர்கள் பகவானின் கட்டளையை அனுசரித்து யாகசாலைக்குத் திரும்பினார்கள். அவர்களது கணவர்கள் அவர்களைக் குறைகூறாதுமறுபடியும் சேர்த்துக்கொண்டு யாகத்தை முடித்தார்கள். பகவான் நாலுவகை அன்னங்களையும் கோபாலர்களுக்கு கொடுத்து, தானும் அவர்களுடன் புஜித்தார்.

अथानुस्मृत्य विप्रास्ते अन्वतप्यन्कृतागसः ।
यद्विश्वेश्वरयोर्याच्ञामहन्म नृविडंबयोः ॥
नूनं भगवतो माया योगिनामपि मोहिनी ।
यद्वयं गुरवो नृणां स्वार्थे मुह्यामहे द्विजाः ॥

பிறகு பிராமணர்கள் தாம் செய்ததை நினைத்து, "பகவானிடத்தில் குற்றத்தைச் செய்தோமே. மாயையால் மனித சரீரத்தை எடுத்த ஜகதீச்வரர்கள் என்று அறியாது அவர்கள் வேண்டியதை மறுத்தோமே" என்று பின்வருமாறு வருந்தினர். "பகவானுடைய மாயை யோகிகளையும் மயக்கும் தன்மை வாய்ந்தது என்பது நிச்சயம். ஏனெனில் நாம் பிராமண ஜாதியில் பிறந்து உயர்தர வித்தையை அடைந்திருந்தும், புருஷார்த்தத்தைத் தேடிக்கொள்வதில் மதி மயங்கி நின்றோம்.

# இருபத்து நான்காவது அத்தியாயம்.

---

चतुर्विंशे महेन्द्रस्य मखं व्यावर्त्य हेतुभिः ।
कृष्णः प्रवर्तयामास गोवर्धनमखोत्सवम् ॥

[பகவான் இந்திர யாகத்தை காரணங்களைக் கூறித் தடுத்தல்-கோவர்த்தன கிரிக்கு யாகம் செய்தல்.]

भगवानपि तत्रैव बलदेवेन संयुतः ।
अपश्यन्निवसन् गोपानिन्द्रयागकृतोद्यमान् ॥
तदभिज्ञोऽपि भगवान्सर्वात्मा सर्वदर्शनः ।
प्रश्रयावनतोऽपृच्छद्वृद्धान् नन्दपुरोगमान् ॥

கிருஷ்ணபகவான் பலராமருடன் கோகுலத்தில் ஸந்தோஷமாய் வசித்து வரும்பொழுது கோபாலர்கள் வழக்கம்போல், இந்திரனுக்குரிய யாகத்தைச் செய்வதற்குச் சாமான்கள் தயார் செய்தார்கள். பகவான், அதை அறிந்தும் அறியாதவர்போன்று நந்தர் முதலிய பெரியோர்களை வினயத்துடன் வினவலானார்.

कथ्यतां मे पितः कोऽयं संभ्रमो व उपागतः ।
किं फलं कस्य चोद्देशः केन वा साध्यते मखः ॥

"தந்தையே! எதற்காக இச்சாமான்களை தயார் செய்கிறீர்கள்? என்ன பயனை அடைய விரும்புகிறீர்கள். யார் உதவி கொண்டு இந்த யாகத்தைச் செய்யப் போகிறீர்கள்.

ज्ञात्वाऽज्ञात्वा च कर्माणि जनोऽयमनुतिष्ठति ।
विदुषः कर्मसिद्धिः स्यात्तथा नाविदुषो भवेत् ॥

ஒருவன் ஒரு கர்மத்தை இன்னது என்று தெரிந்தும் தெரியாமலும் செய்யலாம். அவ்விரண்டில் கர்மத்தின் தத்துவத்தை அறிந்து செய்தவன் அக்கருமத்தின் பயனை அடைகிறான். அறியாதவன் அதன் பயனை அறிந்தவன் போன்று அடைவதில்லை.

तत्र तावत्क्रियायोगो भवतां किं विचारितः ।
अथवा लौकिकस्तन्मे पृच्छतः साधु भण्यताम् ॥

இப்பொழுது நீங்கள் செய்ய யத்தனிக்கும் யாகம் சாஸ்திரங்களில் கூறப்பட்டுள்ளதா? அல்லது முன்னோர்களால் செய்யப்பட்டு வழக்கத்திலிருந்து வருகிறதா? அதை அறியவிரும்புகிறேன்."

पर्जन्यो भगवानिन्द्रो मेघास्तस्याऽऽत्ममूर्तयः ।
तेऽभिवर्षन्ति भूतानां प्रीणनं जीवनं पयः ॥
तं तात वयमन्ये च वार्मुचां पतिमीश्वरम् ।
द्रव्यैस्तद्रेतसा सिद्धैर्यजन्ते क्रतुभिर्नराः ॥

இதைக்கேட்டு நந்தர் "தேவேந்திரன் மேகங்கள் வடிவமாக இருந்து மழை பெய்து, புற்பூண்டுகளைச் செழிப்புற வளர்த்து உலகத்திற்கு பிழைப்பையும் சந்தோஷத்தையும் கொடுக்கிறான். ஆகையால் குழந்தாய் அவன் கொடுத்த தான்யங்களைக்கொண்டே மேகங்களுக்கு ஈசனான அவ்விந்திரனுக்கு யாகத்தைச்செய்கிறோம்.

तच्छेषेणोपजीवन्ति त्रिवर्गफलहेतवे ।
पुंसां पुरुषकाराणां पर्जन्यः फलभावनः ॥
य एवं विसृजेद्धर्मं पारंपर्यागतं नरः ।
कामाल्लोभाद्भयात् द्वेषात्स वै नाप्नोति शोभनम् ॥

பிறகு மீதமுள்ள பொருளாலேயே ஜீவனம் செய்து தர்மங்களை நடத்தியும் வருகிறோம். முயற்சிக்கும் மனிதர்களுக்கு அந்த இந்திரனே கர்மபலனைக் கொடுக்கிறான். குலமுறையாக நடத்தி வந்த தர்மத்தை காமத்தாலோ லோபத்தாலோ பயத்தாலோ பகையாலோ செய்யாதவன் க்ஷேமத்தை அடையமாட்டான்" என்று கூறினர்.

वचो निशम्य नन्दस्य तथाऽन्येषां व्रजौकसाम् ।
इन्द्राय मन्युं जनयन् पितरं प्राह केशवः ॥

நந்தர் முதலிய கோபாலர்கள் இவ்வாறு கூறியதைக் கேசவன் கேள்வியுற்று, தேவேந்திரனுக்குக் கோபமூட்டுவதில் ஆசை கொண்டு தந்தையிடம் பின்வருமாறு சொல்லலானார்.

कर्मणा जायते जन्तुः कर्मणैव विलीयते ।
सुखं दुःखं भयं क्षेमं कर्मणैवाभिपद्यते ॥

**கர்ம வாதம்**

"ஒவ்வொரு பிராணியும் தான் செய்த வினையின் பயனால் பிறப்பையும் இறப்பையும் அடைகிறது. தான் செய்த நல்வினைக்கோ தீவினைக்கோ தக்கவாறு சுகத்தையோ துக்கத்தையோ மேன்மையையோ பயத்தையோ அடைகிறது. எவ்வினையேனும் ஒன்றிழைக்கின் அவ்வினையே பயனளிக்கும். ஆதலால் தந்தையே! செய்வினையல்லாது தெய்வம் என் செய்யும்?

अस्ति चेदीश्वरः कश्चित्फलरूप्यन्यकर्मणाम् ।
कर्तारं भजते सोऽपि न ह्यकर्तुः प्रभुर्हि सः ॥
किमिन्द्रेणेह भूतानां स्वस्वकर्मानुवर्तिनाम् ।
अनीशेनान्यथा कर्तुं स्वभावविहितं नृणाम् ॥

பண்டுசெய்த வினையல்லாது பரவும் தெய்வம் ஒன்று இருக்குமாகில் அத்தெய்வம் பயனை உதவுவதற்கு வல்லதோ? வலிமை பெற்றிருப்பினும் அத்தெய்வம் வினைப் பயனை யளிப்பதற்கு கர்த்தாவை எதிர்பார்த்து நிற்கிறது. கர்மத்தைச் செய்யாதவனுக்கு அப்பலனைக் கொடுப்பதற்கு சக்தியற்றிருக்கிறது. ஆதலால் தங்கள் தங்கள் வினையைச் செய்கிறவர்களுக்கு இந்திரனைப் பூஜிப்பதால் ஒரு பயன் உண்டாவதையும் நான் கண்டிலேன். அந்த இந்திரனே இயற்கையை மாற்றுவதற்குச் சக்தியற்றவனா யிருக்கிறான்.

கர்ம பாரதந்திர ஈச்வர வாதம்.

स्वभावतन्त्रो हि जनः स्वभावमनुवर्तते । स्वभावस्थमिदं सर्वं सदेवासुरमानुषम् ॥ देहानुच्चावचाञ्जन्तुः प्राप्योत्सृजति कर्मणा । तस्मात् संपूजयेत्कर्म स्वभावस्थः स्वकर्मकृत् ।

ஈச்வரன் கர்மபலனைக் கொடுக்காவிடினும் அந்தர்யாமியா யிருந்துகொண்டு, இயற்கையாயமைந்த கருமத்தைச் செய்யும்படி தூண்டுகிறான் என்பதும் ஒப்பத் தக்கதன்று. ஏனெனில் கர்மங்கள் பழக்கத்தாலேயே ஏற்படுகின்றன. பழக்கத்திற்கு உட்பட்ட மனிதன் பழக்கத்தையே பின்பற்றுகிறான். தேவர், அசுரர், மானிடர், எல்லோரும் ஸ்வபாவத்திற்கு உட்பட்டிருக்கிறார்கள். ஆகையால் மனிதன் ஸ்வபாவத்தினாலேயே கர்மத்தைச் செய்கிறான். கர்மத்தினாலேயே எல்லாப் பிராணிகளும் உயர்வு தாழ்வான பிறப்புகளை அடைகின்றன, கர்மத்தினாலேயே அந்த சரீரங்களை விடுகின்றன. ஆகையால் ஒவ்வொரு மனிதனும் அவனவன் ஸ்வபாவத்திலிருந்து அவனவனுக்குரிய கர்மத்தைச் செய்து வருவதால் அந்தக் கர்மத்தையே பூஜித்தல் தகும்.

ஸ்வபாவ வாதம்.

अञ्जसा येन वर्तेत तदेवास्य हि दैवतम् ॥ आजीव्यैकतरं भावं यस्त्वन्यमुपजीवति । न तस्माद्विन्दते क्षेमं जारं नार्यसती यथा ॥ कृषिवाणिज्यगोरक्षा कुसीदं तुर्यमुच्यते । वार्ता चतुर्विधा तत्र वयं गोवृत्तयोऽनिशम् ॥

ஒருவன் எதன் மூலம் சுகமாக வாழ்கிறானோ அதுவே அவனுக்கு மேலான தெய்வம். உயிர் வாழ்வதற்குக் காரணமாயிருக்

கும் தெய்வத்தைப் பூஜியாது மற்றொரு தெய்வத்தைக் கொண்டாடுபவன், தன்னைப் போஷிக்கும் புருஷனை விட்டு சோர புருஷனை நாடிய விபசாரிபோல், ஒரு நாளும் க்ஷேமத்தை அடையமாட்டான்.

வார்த்தாகர்த்ரீ தேவதா வாதம்

வைசியர்களுக்கு கிருஷி, வியாபாரம், பசுபாலனம், பணம் கொடுத்தல் வாங்கல் முதலிய நான்கு தொழில்கள் ஏற்பட்டிருக்கின்றன. அவைகளில் நாம் எப்பொழுதும் பசுபாலனத்தைச் செய்து ஜீவித்து வருகிறோம்.

**सत्वं रजस्तम इति स्थित्युत्पत्यन्तहेतवः । रजसोत्पद्यते विश्वमन्योन्यं विविधं जगत् ॥ रजसा चोदिता मेघा वर्षन्त्यंबूनि सर्वतः । प्रजास्तैरेव सिद्ध्यन्ति महेन्द्रः किं करिष्यति ॥**

ஏனெனில் மழைக்குக் காரணம் குணங்களே; தேவேந்திரனல்ல. ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற முக்குணங்களும் ஸ்திதி, ஸ்ருஷ்டி, ஸம்ஹாரம் இவைகளுக்குக் காரணமாயிருக்கின்றன. ரஜோகுணத்தால் உலகங்கள் உண்டாகின்றன. அவ்விதமே மேகங்களும் ரஜோகுணத்தால் உண்டாகி நாலா பக்கங்களிலும் மழையைப் பொழிகின்றன. அவைகளால் ஜனங்கள் நன்மையை அடைகின்றனர். இவ்விஷயத்தில் இந்திரன் செய்வது யாது?

குணவாதம்.

**न नः पुरो जनपदा न ग्रामा न गृहा वयम् । वनौकसस्तात नित्यं वनशैलनिवासिनः ॥ तस्माद्गवां ब्राह्मणानामद्रेश्चारभ्यतां मखः । य इन्द्रयागसंभारास्तैरयं साध्यतां मखः ॥ एतन्मम मतं तात क्रियतां यदिरोचते । अयं गोब्राह्मणाद्रीणां मह्यं च दयितो मखः ॥**

நாம் எப்பொழுதும் காடு மலைகளில் வசித்து வருகிறோம். பசுக்கள்தான் நமக்குச் செல்வம். நாம் பட்டணங்களிலோ கிராமங்களிலோ வசிப்பதில்லை. நமக்கு வீடும் கிடையாது. ஆகையால் இந்திரனின் யாகத்திற்காக நாம் தயாரித்த சாமான்களைக் கொண்டு நமக்கு ஜீவனத்தைக் கொடுக்கின்ற தேவதைகளான பசுக்களுக்கும் பிராமணர்களுக்கும் கோவர்த்தன மலைக்கும் யாகத்தைச் செய்வோம். இதுதான் இனிது. இதுதான் எனது உண்மையான அபிப்பிராயம். நீங்கள் இதற்கிசைந்தால் பசுக்களுக்கும், பிராமணர்களுக்கும், மலைக்கும் யாகத்தைச் செய்யுங்கள்."

कालात्मना भगवता शक्रदर्पं जिघांसता । प्रोक्तं निशम्य नन्दाद्याः साध्वगृह्णन्त तद्वचः ॥ तथा च व्यदधुः सर्वं यथाऽऽह मधुसूदनः । वाचयित्वा स्वस्त्ययनं तद्द्रव्येण गिरिद्विजान् ॥ उपहृत्य बलीन्सर्वाना दृता यवसं गवाम् । गोधनानि पुरस्कृत्य गिरिं चक्रुः प्रदक्षिणम् ॥

கால ரூபியான பகவான் இந்திரனின் கர்வத்தை அடக்க இவ்வாறு கூறியதை நந்தர்கோன் முதலியவர்கள் கேட்டு மனமுவந்து அவர் உரைத்தவாறே எல்லாவற்றையும் செய்தனர்.

அவர்கள் கோவர்த்தன மலைக்கு அர்ச்சனை புரிந்து பலி யிட்டு, பசுக்களுக்குப் புற்கொடுத்து, அவைகளை முன்னிட்டுக் கொண்டு மலையை வலம் வந்தார்கள்.

कृष्णस्त्वन्यतमं रूपं गोपविश्रंभणं गतः । शैलोऽस्मीति ब्रुवन्भूरि बलिमादद्बृहद्वपुः ॥ तस्मै नमो व्रजजनैः सह चक्रेऽऽत्मनाऽऽत्मने । अहो पश्यत शैलोऽसौ रूपी नोऽनुग्रहं व्यधात् ॥ इत्यद्रिगोद्विजमखं वासुदेवप्रणोदिताः । यथा विधाय ते गोपाः सहकृष्णा व्रजं ययुः ॥

கோபாலர்களுக்கு நம்பிக்கை உண்டாவதற்காக பகவான் ஒரு பெரிய வடிவத்தை எடுத்துக்கொண்டு 'நானே கோவர்த்தன மலை' என்று சிலவுரை வழங்கி அம்மலைக்கிட்ட பலியனைத்தும் புஜித்தார். அதைப்பார்த்து எல்லோரும் ஆச்சரியமடைந்தார்கள். "இம்மலை தேவரூப மெடுத்துக்கொண்டு எல்லோரையும் ஆசிர்வதிக்கிறது. பார்த்தீர்களா!" என்று பகவான் எல்லோரிடமும் சொல்லி தாமே உருவெடுத்த அம்மலையை அவர்களுடன் வணங்கினர். இவ்விதம் பகவான் கூறியபடி கோவர்த்தன மலைக்கு யாகத்தைச்செய்து பிராமணர்களையும் பசுக்களையும் ஆராதித்து விட்டு, கோபாலர்கள் கிருஷ்ணனை அழைத்துக்கொண்டு கோகுலம் சென்றார்கள்.

# இருபத்தைந்தாவது அத்தியாயம்.

{ पञ्चविंशे रुषा शक्रे व्रजनाशाय वर्षति ।
उद्धृत्य गिरिमासारादरक्षद्गोकुलं प्रभुः ॥ }

[இந்திரன் சினங்கொண்டு கல்மாரி பொழிந்து கோகுலத்தைத் துன்புறுத்தல்–பகவான் மலையைக் குடையாகத் தாங்கி கோகுலத்தைக்காத்தல்.]

इन्द्रस्तदाऽऽत्मनः पूजां विज्ञाय विहतां नृप । गोपेभ्यः कृष्णनाथेभ्यो नन्दादिभ्यश्चुकोप सः ॥ गणं सांवर्तकं नाम मेघानां चान्तकारिणाम् । इन्द्रः प्राचोदयत्क्रुद्धो वाक्यं चाहेशमान्युत ॥ अहो श्रीमदमाहात्म्यं गोपानां काननौकसाम् । कृष्णं मर्त्यमुपाश्रित्य ये चक्रुर्देवहेळनम् ॥

அரசே! நந்தர் முதலிய கோபாலர்கள் கிருஷ்ணனைப் பின்பற்றி தனக்குரிய யாகத்தை நிறுத்தியதை அறிந்து, தேவேந்திரன் அவர்களிடம் மிகுந்த கோபங்கொண்டான். பிறகு அவன், உலகத்தை யடக்கியாளும் ஈச்வரனுக தன்னை நினைத்து, நாசஞ் செய்யும் சக்தி வாய்ந்த ஸாம்வர்த்தகம் என்ற மேகக் கூட்டங்களை விளித்துக் கோபத்துடன், "காட்டில் திரியும் கோபாலப் பதர்களின் பணச் செருக்கைப் பார்த்தீர்களா? ஆயர்கோன் தன்மகன் மொழி கேட்டான்; மலையை வழுத்தினன்; விசும்பு காக்கும் தேவேந்திரனை இகழ்ந்தான்; இஃது நகைக்கத்தக்கதே.

वाचालं बालिशं स्तब्धमज्ञं पण्डितमानिनम् ।
कृष्णं मर्त्यमुपाश्रित्य गोपा मे चक्रुरप्रियम् ॥

இந்த கோபாலர்கள், வாய் பிதற்றுபவனும், சிறுவனும், மூடனும், வித்வான் என்ற கர்வங்கொண்டவனும், இன்றைக்கோ நாளைக்கோ மரிப்பவனுமான கிருஷ்ணனின் வார்த்தைகளைக்கேட்டு என்னை அவமதிக்கத் துணிந்தார்கள்.

यथाऽदृढैः कर्ममयैः क्रतुभिः नामनौनिभैः ।
विद्यामान्वीक्षिकीं हित्वा तितीर्षन्ति भवार्णवम् ॥
एषां श्रियाऽवलिप्तानां कृष्णेनाऽऽध्मायितात्मनाम् ।
धुनुत श्रीमदस्तंभं पशून्नयत संक्षयम् ॥

இம் மூடச்செய்கை பிரயோஜனமில்லாத சிறு விளையாட்டுத் தோணிகளைக்கொண்டு ஒருவன் ஒரு பெரிய சமுத்திரத்தைத் தாண்ட யத்தனிப்பதை ஒக்கும். கோபாலர்கள் தங்கள் ஐச்வரியத்தில் செருக்கடைந்திருக்கிறார்கள். கிருஷ்ணனையே நாதனுகக்கொண்டு நெஞ்சத்தில் சிறிதும் கலக்கமின்றி இருக்கிறார்கள். அவர்களின் பணச் செருக்கைத்தொலைத்து ஆவினங்களையுங்கொன்று விடுங்கள்" என்று கட்டளையிட்டான்.

इत्थं मघवताऽऽज्ञप्ता मेघा निर्मुक्तबन्धनाः । नन्दगोकुलमासारैः पीडयामासुरोजसा ॥ विद्योतमाना विद्युद्भिः स्तनन्तः स्तनयित्नुभिः । तीव्रैर्मरुद्गणैर्नुन्ना ववृपुर्जलशर्कराः ॥ स्थूणास्थूला वर्षधारा मुञ्चत्स्व भ्रेष्वभीक्ष्णशः । जलौघैः प्लाव्यमाना भूर्नादृश्यत नतोन्नतम् ॥

மேகக்கூட்டங்களை இவ்விதம் கட்டளையிட்டு தேவேந்திரன் அவைகளைக் கட்டுகளினின்றும் விடுவித்தான். அவைகள் கோகுலஞ் சென்று வான்வளைத்து யுகத்தின் இறுதியோவென உலகம் ஐயுறுமாறு ஆரவாரஞ்செய்து கல்மாரி பொழிந்து கோகுலத்தைத் துன்புறுத்தின. இடியையும் நடுங்கச்செய்யும் பேரிடி முழக்கத் துடனும், மின்னலையும் துடிக்கச்செய்யும் மின்னல்கொடிகளுடனும் கூடின மேகங்கள், மெய்குலைந்திடும்படி பெருங்காற்றுடன்கூடி கல்மாரி பொழிந்து கோகுலத்தை நடுங்கச்செய்தன. மேகங்கள் தூண்போன்றும் பாறை போன்றும் மழை பெய்யும் பொழுது நந்த கோகுலம் தண்ணீரில் மூழ்கி மேடுபள்ளம் தெரியாமல் இருந்தது.

अत्यासारातिवातेन पशवो जातवेपनाः । गोपा गोप्यश्च शीतार्ता गोविन्दं शरणं ययुः ॥ शिरः सुतांश्च कायेन प्रच्छाद्याऽऽसारपीडिताः । वेपमाना भगवतः पादमूलमुपाययुः ॥ कृष्णकृष्ण महाभाग त्वन्नाथं गोकुलं प्रभो । त्रातुमर्हसि देवान्नः कुपिताद्भक्तवत्सल ॥

அச்சமயம் கோகுலத்திலிருந்த கோபாலர்களும் கோபிகை களும், பசுக்களும் கன்றுகளும், குளிர்காற்றால் நடுநடுங்கி, நனி கலங்கி குழந்தைகளை அணைத்துக்கொண்டு கிருஷ்ணனின் சேவடி தாழ்ந்து "கார்வண்ணா! தேவர்கள் கோபமடைந்து இவ் வாறு செய்கிறார்கள். நீ எங்களைக் காக்க வேண்டும். நீ தான் எங்கள் நாதன்" என்று போற்றினார்கள்.

शिलावर्षनिपातेन हन्यमानमचेतनम् ।
निरीक्ष्य भगवान्मेने कुपितेन्द्रकृतं हरिः ॥
तत्र प्रतिविधिं सम्यगात्मयोगेन साधये ।
लोकेशमानिनां मौढ्याद्धरिष्ये श्रीमदं तमः ॥

கல்மாரியால் துன்புற்ற கோகுலத்தைப் பார்த்து பகவான் "தேவேந்திரன் கோபங்கொண்டு கோகுலத்தை அழிக்க இவ்

வாறு செய்திருக்கிறான். தேவர்களுக்கு ஈசன் என்ற கர்வத்தை அறிவின்மையால் அடைந்திருக்கிறான். நான் இப்பொழுது என் யோக மகிமையால் இம் மழையைத்தடுத்து அவன் செல்வச் செருக்கையும் அறிவின்மையையும் போக்குகிறேன்.

तस्मात् मच्छरणं गोष्ठं मन्नाथं मत्परिग्रहम् ।
गोपाये स्वात्मयोगेन सोऽयं मे व्रत आहितः ॥
इत्युक्त्वैकेन हस्तेन कृत्वा गोवर्धनाचलम् ।
दधार लीलया कृष्णश्छत्राकमिव बालकः ॥

ஆதலால் என்னையே நாதனாகக்கொண்டு என்னைச் சரணமடைந்து என்னையே பின்பற்றின கோகுலத்தை என் யோகத் திறமையால் ரக்ஷிக்கிறேன். இதுதான் நான் கொண்ட விரதம்" என்று அவர்களிடம் கூறிவிட்டு, கோவர்த்தன மலையைப் பிடுங்கி, குழந்தைகள்நாய்க்குடையை விளையாட்டாகப் பிடிப்பது போல், உயரே தாங்கி நின்றார்.

अथाह भगवान्गोपान्हेऽम्ब तात व्रजौकसः । यथोपजोषं विशत गिरिगर्तं सगोधनाः ॥ न त्रास इह वः कार्यो मद्धस्ताद्रिनिपातने । तथा निर्विविशुर्गर्तं कृष्णाश्वासितमानसाः । यथाऽवकाशं सधनाः सव्रजाः सोपजीविनः ॥

அப்பொழுது ஈரேழு உலகங்களையும் காக்கவந்த பகவான் "கோபாலர்களே! தாய்மார்களே! தந்தையே! மற்றமுள்ள பெரியோர்களே! நீங்கள் யாவரும் இங்கு வாருங்கள். மற்றும் ஆவினமெல்லாம் அழைத்து வாருங்கள். வந்து சுகமாயிருங்கள். என் கையினின்று மலை கீழே விழுந்து விடுமோ வென்று அஞ்சவேண்டாம்" என்று கூறவே, கோபாலர்கள் மனதைத் தைரியப்படுத்திக் கொண்டு குழந்தைகளையும் பணப்பெட்டிகளையும் எடுத்துக்கொண்டு அம்மலையின்கீழ் சென்று, ஒருவர்மேல் ஒருவர் படாமல் சுகமாய்த் தங்கினார்கள்.

क्षुत्तृड्व्यथां सुखापेक्षां हित्वा तैर्व्रजवासिभिः ।
वीक्ष्यमाणो दधावद्रिं सप्ताहं नाचलत्पदात् ॥

பகவான் தன்னிடத்தை விட்டு அசையாமல் ஏழேழுபகல் நின்று மலையைக் குடையாகத் தாங்கியதை கோகுல வாசிகள் பசி

தாகம் மற்றுமுள்ள சுகங்கள் இவைகளைக் கவனியாது, பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

कृष्णयोगानुभावं तं निशाम्येन्द्रोऽतिविस्मितः ।
निस्तंभो भ्रष्टसंकल्पः स्वान्मेघान्संन्यवारयत् ॥
खं व्यभ्रमुदितादित्यं वातवर्षं च दारुणम् ।
निशाम्योपरतं गोपान्गोवर्धनधरोऽब्रवीत् ॥

இந்நிலைமையில் விண்காக்கும் வேந்தன், மலை யேந்திய திருமாலின் கோலத்தைப் பார்த்து அவரது பிரபாவத்தைக் கண்டு வியப்புற்று மரம்போல் அசைவற்று நின்றான். அவன், தன் கர்வத்தை யொழித்து தன் கொள்கையை மாற்றி, மழை பொழியும் புயல்களைத் தானாகவே மீட்டினான். சிறிது நேரத்திற்கெல்லாம் ஆகாயத்தினின்றும் மேகங்கள் மறைந்தன. சூரியன் நன்றாய்ப் பிரகாசிக்கலானான். கொடூரமான மழையும் காற்றும் அடங்கின. கோவர்த்தன மலையைத் தாங்கி நின்ற பகவான் இவைகளைப்பார்த்து,

निर्यात त्यजत त्रासं गोपाः सस्त्रीधनार्भकाः । उपारतं वातवर्षं व्युदप्रायाश्च निम्नगाः ॥ ततस्ते निर्ययुर्गोपाः स्वंस्वमादाय गोधनम् । शकटोढोपकरणं स्त्रीबालस्थविराःशनैः ॥ भगवानपि तं शैलं स्वस्थाने पूर्ववत्प्रभुः । पश्यतां सर्वभूतानां स्थापयामास लीलया ॥

"கோபாலர்களே! கொடிய காற்றும் மழையும் ஒருங்கே நின்றுவிட்டன. தண்ணீரும் வடிந்துவிட்டது. மேடுபள்ளங்கள் இப்பொழுது நன்றாய்த் தெரிகின்றன. ஆகையால் நீங்கள் பயமின்றி உங்கள் பெண்டுபிள்ளைகளை அழைத்துக்கொண்டு வீடுகளுக்குச் செல்லுங்கள்" என்றார். அவ்விதமே அவர்கள் கிழவர்களையும் குழந்தைகளையும் ஸ்திரீகளையும் வண்டிகளில் ஏற்றி, பசுக்களை முன்னே நடத்திக்கொண்டு மெள்ள மெள்ள தங்கள் வீடுகளுக்குப் புறப்பட்டார்கள். பிரபுவான பகவான் சிறிதும் சிரமமின்றி மலையை எல்லோரும் பார்த்துக்கொண்டிருக்கும் பொழுதே முன் போன்று அதனிருப்பிடத்தில் வைத்தார்.

तं प्रेमवेगान्निभृता व्रजौकसो यथा समीयुः परिरंभणादिभिः ।
गोप्यश्च सस्नेहमपूजयन्मुदा दध्यक्षताद्भिर्युयुजुः सदाशिषः ॥

கோகுல வாசிகள் அன்பின் மிகுதியால் அவரை ஆலிங்கனஞ் செய்தார்கள். கோபிகைகளும் உள்ளம் களித்து தயிர் அக்ஷதை முதலியவைகளால் பகவானைப் போற்றிப் புகழ்ந்தார்கள்.

दिवि देवगणाः साध्याः सिद्धगन्धर्वचारणाः।
तुष्टुवुर्मुमुचुस्तुष्टाः पुष्पवर्षाणि पार्थिव ॥

தேவர் சித்தர் சாரணர் கந்தர்வர் ஆகாயத்திலிருந்து கொண்டு ஸந்தோஷத்துடன் மலர்களை வருஷித்துத் துதித்தார்கள்.

ततोऽनुरक्तैः पशुपैः परिश्रितो राजन्स गोष्ठं सबलोऽव्रजद्धरिः ।
तथाविधान्यस्य कृतानि गोपिका गायन्त्य ईयुर्मुदिता हृदिस्पृशः ॥

பிறகு அரசே! பகவான் பலராமருடனும் தம்மிடம் அன்பு வைத்த கோபாலர்களுடனும் நந்த கோகுலம் சென்றார். கோபிகைகளும், பிரிய நாயகனை கிருஷ்ணனையே மனதில் நினைத்துக்கொண்டும், அவரது லீலைகளையே கானம் செய்துகொண்டும் தங்கள் வீடுகளுக்குச் சென்றனர்.

---

# இருபத்தாறுவது அத்தியாயம்.

---

{ षड्विंशे विस्मितान् गोपान् कृष्णस्याद्भुतकर्मभिः ।
नन्दो गर्गोक्तिमाश्राव्य तदैश्वर्यमवर्णयत् ॥ }

[கோபாலர்கள் கிருஷ்ணனுடைய அற்புதச் செயல்களைக் கண்டு வியப்புறுதல்-நந்தர் கர்க்கரின் மொழிகளால் கிருஷ்ணனது மகிமையை வர்ணித்தல்.]

श्रीशुक उवाच— एवंविधानि कर्माणि गोपाः कृष्णस्य वीक्ष्य ते । अतद्वीर्यविदः प्रोचुः समभ्येत्य सुविस्मिताः ॥ १ ॥ बालकस्य यदेतानि कर्माण्यत्यद्भुतानि वै । कथमर्हत्यसौ जन्म ग्राम्येष्वात्मजुगुप्सितम् ॥ २ ॥

கோபாலர்கள் கிருஷ்ணனுடைய அற்புதமான செயல்களைப் பார்த்து அவர்மகிமையை அறியாததால் ஆச்சரியமடைந்து நந்தகோபரிடம் சென்று பின்வருமாறு சொல்லலானுர்கள். "குழந்தை கிருஷ்ணன் இதுவரை காண்பித்த அற்புதச் செயல்களைப் பார்த்தீரா? இத்தகைய மாட்சிமை தாங்கியவன் முல்லை நிலத்தில் சாதாரண மானிடன்போல் பிறக்கக் காரணம் என்ன?

यः सप्तहायनो बालः करेणैकेन लीलया । कथं बिभ्रद्गिरिवरं पुष्करं गजराडिव ॥ ३ ॥ तोकेनामीलिताक्षेण पूतनाया महौजसः । पीतः स्तनः सह प्राणैः कालेनेव वयस्तनोः ॥ ४ ॥ हिन्वतोऽधःशयानस्य मास्यस्य चरणावुदक् । अनोऽपतद्विपर्यस्तं रुदतः प्रपदाहतम् ॥ ५ ॥

கஜேந்திரன் தாமரையைத் துதிக்கையால் ஏந்தி நிற்பதுபோல் ஏழுபருவத்து பாலன் ஒரு கையால் நெடுங்குன்றைத் தூக்கி நின்றுனல்லவா! சிறு குழந்தையா யிருக்கும் பொழுது, அதிக பலம் வாய்ந்த பூதனையின் நஞ்சூறும் ஸ்தனங்களை பானஞ்செய்து, காலன் ஆயுளைத் திருடுவதுபோன்று, அவளுடைய பிராணனை உறிஞ்சினுன். மூன்று மாதக் குழந்தையா யிருக்கும்பொழுது வண்டியைக் காலால் உதைத்துத் தள்ளினுன்.

एकहायन आसीनो ह्रियमाणो विहायसा । दैत्येन यस्तृणावर्तमहन्कण्ठग्रहातुरम् ॥ ६ ॥ क्वचिद्धैयंगवस्तैन्ये मात्रा बद्ध उलूखले । गच्छन्नर्जुनयोर्मध्ये बाहुभ्यां तावपातयत् ॥ ७ ॥ वने सञ्चारयन्वत्सान्सरामो बालकैर्वृतः । हन्तुकामं बकं दोर्भ्यां मुखतोऽरिमपाटयत् ॥ ८ ॥

ஒருவயதானதும் ஆகாசத்தில் தூக்கிச்சென்ற திருணவர்த்தனின் கழுத்தை நெறித்துக் கொன்றுன். ஒரு சமயம் வெண்ணெயைத் திருடினபொழுது யசோதை அவனைத் தண்டிப்பதற்காக உரலில் கட்டியதும் அவ்வுரலை இழுத்துக்கொண்டு அருகிலிருந்த மருதமரங்களூடு சென்று அவைகளைக் கீழே வீழ்த்தினுன். காட்டில் கன்றுகளை மேய்க்கும் பொழுது தன்னைக் கொல்லமுயன்ற பகாசுரனைப் பிடித்து அவன் அலகுகளைக் கிழித்துக் கொன்றுன்.

वत्सेषु वत्सरूपेण प्रविशन्तं जिघांसया । हत्वा न्यपातयत्तेन कपित्थानि च लीलया ॥ ९ ॥ प्रलंबं घातयित्वोग्रं बलेन बलशालिना । अमोचयद्व्रजपशून्गोपांश्चारण्यवह्नितः ॥ ११ ॥

கன்று ரூபந்தரித்து கன்றுக் கூட்டத்தில் சென்று தன்னைக் கொல்ல முயற்சித்த அரக்கனை விளா மரத்தின் மீது எறிந்து விளையாட்டாகக் கொன்றான். பிரலம்பன் என்ற அசுரனை பலராமன் மூலமாகக் கொன்றான். கோகுலத்தைக் காட்டுத்தீயினின்றும் ரக்ஷித்தான்.

आशीविषतमाहीन्द्रं दमित्वा विमदं ह्रदात् । प्रसह्योद्वास्य यमुनां चक्रेऽसौ निर्विषोदकाम् ॥१३॥ क सप्तहायनो बालः क महाद्रिविधारणम् । ततो नो जायते शङ्का व्रजनाथ तवाऽऽत्मजे ॥

கொடிய காலகூட விஷத்தை உமிழ்ந்து கொண்டிருந்த காளியனை அடக்கி, விஷப்புனலுடன் கூடின அம்மடுவினின்றும் விஷத்தைப் போக்கினான். ஏழுவயதுக் குழந்தை எங்கே? கோவர்த்தன மலை எங்கே? இதைத் தூக்கித் தாங்குவது எங்ஙனம் முடியும்? இதையெல்லாம் கவனிக்குமளவில் நந்தரே! உம்முடைய குழந்தையைப் பற்றி எங்கள் மனதில் பல சந்தேகங்கள் உதிக்கின்றன."

नन्द उवाच—श्रूयतां मे वचो गोपा व्येतु शङ्का च वोऽर्भके । एनं कुमारमुद्दिश्य गर्गो मे यदुवाच ह ॥ १५ ॥ वर्णास्त्रयः किलास्यासन्गृह्णतोऽनुयुगं तनूः । शुक्लो रक्तस्तथा पीत इदानीं कृष्णतां गतः ॥ प्रागयं वसुदेवस्य कचिज्जातस्तवाऽऽत्मजः । वासुदेव इति श्रीमानभिज्ञाः संप्रचक्षते ॥ बहूनि सन्ति नामानि रूपाणि च सुतस्य ते । गुणकर्मानुरूपाणि तान्यहं वेद नो जनाः ॥ १८ ॥

இவ்வாறு கோபாலர்கள் உரைத்ததைக் கேள்வியுற்று நந்தர் மறுமொழி கூறலானார். "கோபாலர்களே! நான் சொல்லுவதைக் கேளுங்கள், நீங்கள் என் குழந்தை யினிடத்தில் கொண்டிருக்கும் சந்தேகத்தை விடுங்கள். கர்க்காச் சாரியார் முன்னொருக்கால் இக்குழந்தையைப் பற்றிக் கூறியதைச் சொல்லுகிறேன். கேளுங்கள். "உமது குழந்தை ஒவ்வொரு யுகத்திலும் ஒவ்வொரு வர்ணத்துடன் அவதாரம் செய்திருக்கிறான். கிருத யுகத்தில் வெண்மை நிறத்தையும் திரேதா யுகத்தில் சிவப்பு நிறத்தையும்

துவாபர யுகத்தில் மஞ்சள் நிறத்தையும் பெற்று விளங்கினன். இப்பொழுது கலி யுகத்தில் கருப்பு நிறத்தையும் அடைந்திருக்கிறுன். முன்னொரு சமயம் உமது குழந்தை வசுதேவருக்குப் புத்திரனுகப் பிறந்திருந்தான். ஆதலால் அவனைப் பெரியோர்கள் வாசுதேவன் என்று அழைக்கிறுர்கள். உமது குழந்தைக்கு அநேகம் பெயர்களும் ரூபங்களும் உண்டு அவனது குணத்தையும் செயலையும் அனுசரித்து அவை ஏற்பட்டிருக்கின்றன. அவைகளை நான் அறிவேன். மற்றவர்கள் அறியார்கள்.

तस्मान्नन्द कुमारोऽयं नारायणसमो गुणैः ।
श्रिया कीर्त्याऽनुभावेन तत्कर्मसु न विस्मयः ॥
इत्यद्धा मां समादिश्य गर्गे च स्वगृहं गते ।
मन्ये नारायणस्यांशं कृष्णमक्लिष्टकारिणम् ॥

நந்தரே! உமது குழந்தை குணத்திலும் புகழிலும் திறமையிலும் ஸ்ரீமன் நாராயணனை ஒத்தவன். ஆதலால் அவனது செயல்களில் நீர் வியப்படைய வேண்டாம்" என்று என்னிடம் உரைத்து விட்டு கர்க்கர் தன் கிரஹத்திற்குச் சென்றுர். அன்று முதல் நான் அவனை ஸ்ரீமந் நாராயணனின் அவதாரமென்றே நினைத்து வருகிறேன். அவனே எக்காரியத்தையும் எளிதில் செய்து முடிக்கும் திறமையும் ஆற்றலும் உடையவனுக இருக்கிறுன்.

इति नन्दवचः श्रुत्वा गर्गगीतं व्रजौकसः ।
दृष्टश्रुतानुभावास्ते कृष्णस्यामिततेजसः ॥
मुदिता नन्दमानर्चुः कृष्णं च गतविस्मयाः ॥

நந்தர் இவ்வாறு கர்க்கரின் அபிப்பிராயத்தைக் கூறினதும் கோகுலவாசிகள் கிருஷ்ணபகவானின் அளவற்ற மகிமையைக் கேட்டும் பல தடவைகளில் நேரில்ப் பார்த்துமிருந்ததால் தங்கள் சந்தேகத்தை அகற்றி அவர்களைப் பூஜித்தார்கள்,

देवे वर्षति यज्ञविप्लवरुषा वज्राश्मपर्षानिलैः ।
सीदत्पालपशुस्त्रि आत्मशरणं दृष्ट्वाऽनुकंप्युत्स्मयन् ॥
उत्पाट्यैककरेणशैलमबलो लीलोच्छिलीन्ध्रं यथा ।
बिभ्रद्गोष्ठमपान्महेन्द्र मदभित्प्रीत्यान्न इन्द्रो गवाम् ॥

தேவேந்திரன் தன் யாகம் நிறுத்தப்பட்டதை யறிந்து கோபங் கொண்டு வஜ்ராயுதம் போன்ற கல்மழை பெய்து புயற் காற்றுடன் வீசி கோகுலத்தைத் துன்புறுத்திய பொழுது குழந் தைகள் கோபிகைள் பசுக்கள் இவை எல்லாம் அக்கஷ்டத்தைப் பொறுக்க முடியாமல் எவரைச் சரணம் அடைந்தார்களோ, எவர் அவர்களிடம் மனமிரங்கிச் சிறிது புன்னகை செய்து குழந்தைகள் விளையாட்டாக நாய்க்குடை பிடுங்குவதுபோல், பெரிய கோவர்த் தன மலையை ஒரு கையினால் பிடுங்கினரோ, எவர் அப்பெரிய மலையையும் உயரே பிடித்து அதனடியில் கோகுலம் அனைத்தும் தங்கச் செய்து ரக்ஷித்து இந்திரனின் கர்வத்தை அடக்கினரோ, எவரை 'பசுக்களுக்கு இந்திரன்' என்று காமதேனு அபிஷேகம் செய்தனளோ, அந்த கிருஷ்ணபகவான் எம்மைக் காத்தருளட்டும்.

# இருபத்தி எழாவது அத்தியாயம்.



सप्तविंशे तदालक्ष्य कृष्णस्य प्राभवं परम् ।
वर्ण्यते सुरभीन्द्राभ्यामभिषेकमहोत्सवः ॥

[கிருஷ்ணனது மகிமையைப் பார்த்து இந்திரனும் காம தேனுவும் அபிஷேகம் செய்து கோவிந்தன் என்று முடிசூட்டல்]

श्रीशुक उवाच—गोवर्धने धृते शैल आसाराद्रक्षिते व्रजे । गोलो-
कादाव्रजत्कृष्णं सुरभिः शक्र एव च ॥ १ ॥ विविक्त उपसंगम्य व्रीडितः
कृतहेलनः । पस्पर्श पादयोरेनं किरीटेनार्कवर्चसा ॥ २ ॥ दृष्टश्रुतानुभावो-
ऽस्य कृष्णस्यामिततेजसः । नष्टत्रिलोकेशमद इन्द्र आह कृताञ्जलिः ॥ ३ ॥

பகவான் கோவர்த்தன மலையைக் குடையாகப் பிடித்துக் கோகுலத்தை மழைப் பெருக்கினின்றும் ரக்ஷித்ததை இந்திரன் பார்த்து கிருஷ்ணரிடம் மன்னிப்புக் கேட்பதற்காக சுவர்க்க லோகத்தினின்றும் புறப்பட்டான். அச்சமயம் காமதேனுவும் தன் குலத்தைக் காப்பாற்றிய பகவானை தரிசிக்க வந்தாள். தேவேந் திரன், கிருஷ்ணர் தனிமையாயிருக்கும் சமயத்தை அறிந்து கர்வ மொழிந்து வெட்கத்துடன் அவருகிற் சென்று சூரியன்போல்

பிரகாசிக்கும் கிரீடம் அவர் பாதங்களில் பொருந்த வணங்கினன். மூன்று உலகங்கட்கும் ஈசனுன தேவேந்திரன் கிருஷ்ணனுடைய அளவு கடந்த ஆண்மையையும் திறமையையும் இதற்குமுன் கேட்டிருந்த தாலும் இப்பொழுது நேரில் பார்த்த தாலும் கர்வத்தை விட்டுவிட்டு கைகூப்பிக் கொண்டு பின்வருமாறு துதிக்கலானன்.

विशुद्धसत्त्वं तव धाम शान्तं तपोमयं ध्वस्तरजस्तमस्कम् ।
मायामयोऽयं गुणसंप्रवाहो न विद्यते तेऽग्रहणानुबन्धः ॥ ४ ॥
कुतो नु तद्धेतव ईश तत्कृता लोभादयो येऽबुधलिङ्गभावाः ।
तथाऽपि दण्डं भगवान्बिभर्ति धर्मस्य गुप्त्यै खलनिग्रहाय ॥ ५ ॥

"உமது ஸ்வரூபம் சுத்த ஸத்வகுண முள்ளதாயும் ரஜோ குண தமோகுண மற்றதாயும் சாந்தமாயும் தபஸ் வடிவமாயும் ஞானவடிவமாயும் இருக்கிறது. உமக்கு மாயா குணங்களின் காரியமான பிறப்பு இறப்புகள் கிடையாது. ஈசா! அக்ஞானத்தால் ஏற்படும் லோபம் முதலிய குணங்கள் உம்மிடம் எங்ஙனம் சம்பவிக்கும்! ஆயினும் தர்மத்தைப் பரிபாலிப்பதற்காக நீர் குற்றஞ் செய்தவர்களைத் தண்டிக்கிறீர்.

पिता गुरुस्त्वं जगतामधीशो दुरत्ययः काल उपात्तदण्डः ।
हिताय स्वेच्छातनुभिः समीहसे मानं विधुन्वञ्जगदीशमानिनाम् ॥ ६ ॥
संत्वं ममैश्वर्यमदप्लुतस्य कृतागसस्तेऽविदुषः प्रभावम् ।
क्षन्तुं प्रभोऽथार्हसि मूढचेतसो मैवं पुनर्भून्मतिरीश मेऽसती ॥ ८ ॥

நீரே உலகத்திற்கு குரு; நீரே பிதா; நீர் காலரூபியாயிருந்து லோகபாலர்களின் கர்வத்தை அடக்கி அவர்களுக்கு நற்புத்தி புகட்டுகிறீர். நான், பணச் செறுக்கால் உமது மகிமையறியாது சிற்றத்தால் இழைத்த வெம்பிழைகளைப் பொறுத்தருளும். இனி எனக்கு இத்தகைய கொடிய எண்ணம் உதிக்காவண்ணம் அருள்புரிய வேண்டும்.

नमस्तुभ्यं भगवते पुरुषाय महात्मने । वासुदेवाय कृष्णाय सात्वतां पतये नमः ॥ १० ॥ स्वच्छन्दोपात्तदेहाय विशुद्धज्ञानमूर्तये । सर्वस्मै सर्व बीजाय सर्वभूतात्मने नमः ॥११॥ मयेदं भगवन्गोष्ठनाशायासारवायुभिः । चेष्टितं विहते यज्ञे मानिना तीव्रमन्युना ॥ १२ ॥ त्वयेशानुगृहीतोऽस्मि ध्वस्तस्तंभो वृथोद्यमः । ईश्वरं गुरुमात्मानं त्वामहं शरणं गतः ॥ १३ ॥

என் யாகம் தடைபட்டதும், நான் லோகபாலன் என்ற கர்வத்தை அடைந்து கோகுலத்தை அழிக்க முயன்றேன். நீர் என் முயற்சியைத் தடுத்து என் கர்வத்தையும் அடக்கினீர். ஈசா! இதுவே நீர் எனக்குச் செய்த பெரும் உபகாரம். மஹாத்மாவாயும் புருஷோத்தமராயும் வசுதேவரின் குமாரராயும் யதுகுல சிரேஷ்டராயும் ஸ்ரீ கிருஷ்ணராயும் விளங்கும் உமக்கு நமஸ்காரம்."

**श्रीशुक उवाच—एवं संकीर्तितः कृष्णो मघोना भगवानमुम् ।**
**मेघगंभीरया वाचा प्रहसन्निदमब्रवीत् ॥ १४ ॥**

விசும்புகாக்கும் வேந்தன் இவ்வாறு துதித்தவுடன் பகவான் சிறிது புன்னகை செய்து இடிமுழக்கம்போன்ற கம்பீரமானகுரலால்,

**मया तेऽकारि मघवन्मखभङ्गोऽनुगृह्णता ।**
**मदनुस्मृतये नित्यं मत्तस्येन्द्रश्रिया भृशम् ॥ १५ ॥**
**गम्यतां शक्र भद्रं वः क्रियतां मेऽनुशासनम् ।**
**स्थीयतां स्वाधिकारेषु युक्तैर्वः स्तंभवर्जितैः ॥ १७ ॥**

"தேவேந்திரா! நீ விண்ணுலகத்தின் உயர் இன்பங்களைத் துய்த்து உள்ளங்களித்தாய். அக்களிப்பால் மமதையடைந்த உனது நெஞ்சம் தெளிவுற்றிடவே நான் உனது வேள்வியை நிறுத்தினேன். இனி என் அருளைப் பெற்றதால் என்னையே எப்பொழுதும் கருத்திற் கொள்வாய். உனது உலகம் செல். உனக்கு நன்மை உண்டாகும். வானவர்கோன் என்ற கர்வத்தை யொழித்து உனக்குரிய நிலையில் நின்று நான் கூறியதைச் சரிவர நடத்துவாய்" என்று கருணை கூர்ந்து கட்டளை யிட்டார்.

**अथाह सुरभिः कृष्णमभिवन्द्य मनस्विनी ।**
**स्वसन्तानैरुपामन्त्र्य गोपरूपिणमीश्वरम् ॥ १८ ॥**

பிறகு நற்குணம் வாய்ந்த காமதேனு, தன் ஆவினங்களை அழைத்துக் கொண்டு, கோபால வடிவம் தரித்த பகவானை வணங்கி,

**सुरभिरुवाच— कृष्णकृष्ण महायोगिन्विश्वात्मन्विश्वसंभव । भवता लोकनाथेन सनाथा वयमच्युत ॥ १९ ॥ त्वं नः परमकं दैवं त्वं न इन्द्रो जगत्पते । भवाय भव गोविप्रदेवानां ये च साधवः ॥ इन्द्रं नस्त्वाभिषेक्ष्यामो ब्रह्मणा नोदिता वयम् । अवतीर्णोऽसि विश्वात्मन्भूमेर्भारापनुत्तये ॥**

“அகண்டமாய் பரவிநிற்கும் யோகியே! காவற்றொழில் பூண்டு ஈரேழு புவனங்களேயும் காக்கவந்த கோவே! நெடுங்குன் றினை யேந்தி என் குலத்தைக் காத்த தெய்வக் கொழுந்தே! கிருஷ்ணு! அச்சுதா! உம்மால் நாதனுள்ளவர்களானேம். பூமி யின் பெரும் பாரத்தைப் போக்குவதற்கு அவதரித்த வள்ளலே! நீரே எங்கள் ஆவினங்களுக்கு இந்திரன். இதுவே நான்முகக் கடவுளின் கருத்து”

श्रीशुक उवाच—एवं कृष्णमुपामन्त्र्य सुरभिः पयसाऽऽत्मनः। जलैराकाशगङ्गाया ऐरावतकरोद्धृतैः ॥ २२ ॥ इन्द्रः सुरर्षिभिः साकं नोदितो देवमातृभिः। अभ्यषिञ्चत दाशार्हं गोविन्द इति चाभ्यधात् ॥ २३ ॥

என்று பணிந்துரைத்துவிட்டு, அவருக்கு நேராகச் சென்று பாலைச் சொரிந்து அபிஷேகஞ் செய்தாள். அப்பொழுது ஐரா வதம் ஆங்கடைந்து, நீண்ட துதிக்கையில் பொற்குடங்கள் ஏந்தி ஆகாச கங்கையின் நீரைக் கொணர்ந்தது. தேவரிஷிகள், தேவ மாதர்கள் இவர்களின் கருத்துக் கேற்ப தேவேந்திரன் கங்கை யின் வாரியால் பகவானுக்கு அபிஷேகம் செய்து “கோவிந்தன்” என்ற பெயர் சூட்டினன்.

तत्रागतास्तुंबुरुनारदादयो गन्धर्वविद्याधरसिद्धचारणाः।
जगुर्यशो लोकमलापहं हरेः सुराङ्गनाः संननृतुर्मुदाऽन्विताः ॥ २४ ॥
लोकाः परां निर्वृतिमाप्नुवंस्त्रयो गावस्तदा गामनयन्पयोद्रुताम् ॥ २५ ॥

அச்சமயம் அங்கு வந்த தும்புரு, நாரதர், முதலியவர்களும் வித்தியாதரர், கந்தர்வர், சித்தர், சாரணர் முதலியோர்களும் கலி யின் பாவத்தை யொழிக்கும் ஹரியின் புண்ணிய புகழைப் பாடி ஞர்கள். அப்ஸர ஸ்திரீகள் களிப்புற் றுடினர்கள். மூவுலகங்களும் உள்ளங் களித்தன. பசுக்கள் மிகுதியான பாலைக் கொடுத்தன.

नानारसौघाः सरितो वृक्षा आसन् मधुस्रवाः। अकृष्टपच्यौषधयो गिरयोऽबिभ्रदुन्मणीन् ॥ २६ ॥ कृष्णेऽभिषिक्त एतानि सत्त्वानि कुरुनन्दन। निर्वैराण्यभवंस्तात क्रूराण्यपि निसर्गतः ॥ २७ ॥ इति गोगोकुलपतिं गोविन्दमभिषिच्य सः। अनुज्ञातो ययौ शक्रो वृतो देवादिभिर्दिवम् ॥ २८ ॥

குருசிரேஷ்டனே! கிருஷ்ணனுக்கு கோவிந்த பட்டாபி ஷேகம் செய்த மாத்திரத்தில் ஆறுகளில் ஜலம் கரைபுரண்டு

ஒசற்று. மரங்கள் மிகுந்த தேனை வடித்தன. பூமி உழுது பயிர் செய்யப்படாவிடினும் செழிப்புடன் விளங்கிற்று. மலைகள் ரத்தினங்களை வெளியிட்டன. இயற்கையில் ஒன்றை யொன்று பகைக்கும் பிராணிகள் அப்பகைமை யொழித்து நேசமாயிருந்தன. இவ்விதம் தேவேந்திரன் பசுக்களுக்கும் கோகுலத்திற்கும் நாதனுகவிருக்கும் கிருஷ்ணபகவானை அபிஷேகம் செய்துவிட்டு அவரிடம் விடை பெற்று தேவர்களை அழைத்துக் கொண்டு சுவர்க்கலோகம் சென்றான்.

# இருபத்தெட்டாவது அத்தியாயம்.

{ अष्टाविंशे ततो नन्दानयनं वरुणालयात् ।
वैकुण्ठदर्शनञ्चाथ गोपानामनुवर्ण्यते ॥ }

[வருண லோகத்திலிருந்து நந்தகோபரை மீட்டுதல்—கோபாலர்களுக்கு வைகுண்டலோகம் காண்பித்தல்.]

श्रीशुक उवाच—एकादश्यां निराहारः समभ्यर्च्य जनार्दनम् । स्नातुं नन्दस्तु कालिन्द्यां द्वादश्यां जलमाविशत् ॥ १ ॥ तं गृहीत्वाऽनयद्भृत्यो वरुणस्यासुरोऽन्तिकम् । अविज्ञायाऽऽसुरीं वेलां प्रविष्टमुदकं निशि ॥ २ ॥

ஏகாதசி தினத்தில் நந்தகோபர் உபவாசமிருந்து ஜனார்த்தனனைப் பூஜித்து மறுநாள் காலையில் யமுனை நதி சென்று ஸ்நானஞ் செய்தார். அச்சமயம் அசுரவேளையாக விருந்தது. ஆனல் நந்தர் அதைத் தெரிந்து கொள்ளவில்லை. அவர் ஸ்நானஞ்செய்து கொண்டிருக்கும் பொழுது வருணனுடைய சேவகனுன ஓர் அசுரன் அவரைப்பிடித்து வருணன்முன்னிலையில் கொண்டு நிறுத்தினன்.

चुक्रुशुस्तमपश्यन्तः कृष्णरामेति गोपकाः । भगवांस्तदुपश्रुत्य पितरं वरुणाहृतम् । तदन्तिकं गतो राजन् स्वानामभयदो विभुः ॥ ३ ॥ प्राप्तं वीक्ष्य हृषीकेशं लोकपालः सपर्यया । महत्या पूजयित्वाऽऽह तद्दर्शनमहोत्सवः ॥ ४ ॥

வெகு நேரமாகியும் நந்தர் ஜலத்தினின்று வெளி வராததைப்பார்த்து கோபாலர்கள்! ராமா! கிருஷ்ணா! என்று கதறினார்கள். பகவான் அவர்களின் கூக்குரலைக்கேட்டு ஞானதிருஷ்டியால் தந்தை வருண லோகத்திலிருப்பதை அறிந்து கொண்டார். பிறகு பந்துக்களின் பயத்தை நீக்கி அவர்களைப் பலவாறு தைரியப்படுத்திவிட்டு வருண லோகஞ் சென்றார். அரசே! லோகபாலர்களுக்குள் ஒருவரான வருணன், கிருஷ்ண பகவான் வந்திருப்பதைப் பார்த்து உள்ளங் களித்து அவருக்கு உயர்தர பூஜை செய்து உத்ஸவம் போன்று கொண்டாடி,

**वरुण उवाच—अद्य मे निभृतो देहोऽद्यैवार्थोऽधिगतः प्रभो । त्वत्पाद-भाजो भगवन्नवापुः पारमध्वनः ॥५॥ नमस्तुभ्यं भगवते ब्रह्मणे परमात्मने । न यत्र श्रूयते माया लोकसृष्टिविकल्पना ॥६॥ अजानता मामकेन मूढेना-कार्यवेदिना । आनीतोऽयं तव पिता तद्भवान्क्षन्तुमर्हति ॥ ७ ॥**

"பகவானே! நான்பிறந்த பயனை இன்றே பெற்றேன். பிரபுவே! உமது தரிசனத்தால் எல்லா சம்பத்துக்களையும் அடைந் தவனானேன். உம்முடைய பாதாரவிந்தத்தைத் தொழுதவர்கள் பிறவிக்கடலைக் கடந்து விஷ்ணுபதத்தை அடைகிறார்கள். உம்மை வணங்குகிறேன். ஆக்கவும் அழிக்கவும் சக்தி வாய்ந்தவரே! இந்த தூதன் என்னைச்சார்ந்தவன். இவன், இது செய்யத் தகுந்தது, இது செய்யத்தகாதது, என்ற பகுத்தறிவின்றி இதோ நிற்கும் உமது பிதாவை இன்னாரென்று அறியாது இவ்விடம் தூக்கி வந்து விட்டான். அவன் செய்த குற்றத்தை நீர் மன்னிக்க வேண்டும்.

**ममाप्यनुग्रहं कृष्ण कर्तुमर्हस्यशेषदृक् ।**
**गोविन्द नीयतामेष पिता ते पितृवत्सल ॥ ८ ॥**

ஸர்வக்ஞ! கிருஷ்ணா! தந்தையிடம் அன்புள்ள கோவிந்த! நீர் என்னை கடாக்ஷித்துவிட்டு, இதோ இருக்கும் உமது தந்தையை அழைத்துச் செல்லும்" என்று பிரார்த்தித்தான்.

**श्रीशुक उवाच—एवं प्रसादितः कृष्णो भगवानीश्वरेश्वरः । आदाया-गात्स्वपितरं बन्धूनां चावहन्मुदम् ॥ ९ ॥ नन्दस्त्वतीन्द्रियं दृष्ट्वा लोक-पालमहोदयम् । कृष्णे च सन्नतिं तेषां ज्ञातिभ्यो विस्मितोऽब्रवीत् ॥१०॥**

பிரும்மாண்டம் அனைத்துக்கும் ஈச்வரனான கிருஷ்ண பகவான் வருணனால் இவ்விதம் நன்கு உபசரிக்கப்பட்டு நந்தகோபரை அழைத்துக்கொண்டு கோகுலத்திற்குத் திரும்பினார். காணாமற் போன நந்தரைப் பார்த்து பந்துக்கள் சந்தோஷமடைந்தார்கள். நந்தர், சாதாரண மானிடர்களுக்குப் புலப்படாத வருணனையும் அவனது செல்வத்தையும் அவன் கிருஷ்ணனை வணக்கத்துடன் உபசரித்ததையும் கண்டு வியப்புற்று அவைகளை பந்துக்களிடம் கூறினார்.

**ते त्वौत्सुक्यधियो राजन्मत्वा गोपास्तमीश्वरम् । अपि नः स्वगतिं सूक्ष्मामुपाधास्यदधीश्वरः ॥ ११ ॥ इति स्वानां स भगवान्विज्ञायाखिलदृक् स्वयम् । दर्शयामास लोकं स्वं गोपानां तमसः परम् ॥**

பரீக்ஷித்தே! அந்த கோபாலர்கள் கிருஷ்ணனை ஈச்வரன் என்று நிச்சயித்து அவருடைய உத்தமமான பதவியை அடைவதில் ஆவல்கொண்டு அவரிடம் அதிகமான அன்பு செலுத்தினார்கள். ஸர்வக்ஞரான பகவான், அவர்கள் உள்ளத்தை அறிந்து அவர்களிடம் கருணை கூர்ந்து தம்முடைய உயர்ந்த ஸ்வரூபத்தையும் வைகுண்டலோகத்தையும் அவர்களுக்குக் காண்பித்தார்.

## இருபத்தொன்பதாவது அத்தியாயம்.



**{ ऊनत्रिंशे तु रासार्थमुक्तिप्रत्युक्तयो हरेः ।**
**गोपीभी राससंरम्भे तस्य चान्तर्धिकौतुकम् ॥ }**

[ராஸக்கிரீடையின் காரணமாக கிருஷ்ணனுக்கும் கோபிகைகளுக்கும் உத்தரப்பிரத்யுத்தரங்கள்—ராஸக்கிரீடையின் மத்தியில் பகவான் மறைதல்.]

**श्रीशुक उवाच—भगवानपि ता रात्रीः शरदोत्फुल्लमल्लिकाः ।**
**वीक्ष्य रन्तुं मनश्चक्रे योगमायामुपाश्रितः ॥ १ ॥**

சரத்காலத்து ஓரிரவில் பகவான் மலர்ந்த மல்லிகைகளால் அழகாக விளங்கும் பிருந்தாவனத்தைப் பார்த்து, ஹேமந்த ருதுவில் கோப கன்னிகைகளுக்கு வாக்களித்ததைப் பூர்த்தி செய்ய மனங்கொண்டு, மாயையால் விளையாட விரும்பினார்.

तदोडुराजः ककुभः करैर्मुखं प्राच्या विलिम्पन्नरुणेन शंतमैः ।
स चर्षणीनामुदगाच्छुचो मृजन्प्रियः प्रियाया इव दीर्घदर्शनः ॥ २ ॥

வெகுகாலத்திற்குப்பிறகு தூரதேசத்தினின்று திரும்பி வந்த கணவன் பிரியநாயகியின் முகத்தில் குங்குமத்தைப் பூசி அவளது பந்துக்களின் துக்கத்தையும் அகற்றி அவர்கள் எல்லோரையும் மகிழச்செய்வது போன்று, நக்ஷத்திரங்களுக்கு அரசனான சந்திரன் தன்நாயகியான கீழ்திசையை குளிர்ந்த கிரணங்களால் செந்நிறமாகச் செய்து உதயமாகி எல்லாப் பிராணிகளுடைய துக்கத்தையும் போக்கினன்.

दृष्ट्वा कुमुद्वन्तमखण्डमण्डलं रमाननाभं नवकुंकुमारुणम् ।
वनं च तत्कोमलगोभिरञ्जितं जगौ कलं वामदृशां मनोहरम् ॥ ३ ॥

லக்ஷ்மி தேவியின் முகம்போன்று அழகாகவும் குங்குமம் போன்று சிவந்தும் சந்திரன் பிரகாசித்தான். ஆகாசத்தில் பூர்ணமண்டலத்துடன் விளங்கா நின்ற சந்திரனையும் அவனுடைய கிரணங்கள் பரவியதால் அழகு வாய்ந்த பிருந்தாவனத்தையும், கிருஷ்ணபகவான் பார்த்து கோபிகைகளின் மனமிளகும்படி இனிமையாக வேணுகானஞ் செய்தார்.

निशम्य गीतं तदनङ्गवर्धनं व्रजस्त्रियः कृष्णगृहीतमानसाः ।
आजग्मुरन्योन्यमलक्षितोद्यमाः स यत्र कान्तो जवलोलकुण्डलाः ॥ ४ ॥

கோபஸ்திரீகள் அவருடைய இனிய கானத்தைக் கேட்டு மன்மததாபத்தை யடைந்தார்கள். கிருஷ்ணரையே நினைத்து அவரைப் பார்ப்பதில் ஆசைகொண்டு ஒருவரை யொருவர் அறியாதபடி வெகு வேகமாய்ச் சென்றார்கள். அவர்கள் வேகமாய்ச் செல்லும் பொழுது காதில் அணிந்திருந்த குண்டலங்கள் அசைந்தன.

दुहन्त्योऽभिययुः काश्चिद्दोहं हित्वा समुत्सुकाः । पयोऽधिश्रित्य संयावमनुद्वास्यापरा ययुः ।५। परिवेषयन्त्यस्तद्धित्वा पाययन्त्यः शिशून्पयः ।
शुश्रूषन्त्यः पतीन्काश्चिदश्नन्त्योऽपास्य भोजनम् ॥ ६ ॥

அச்சமயம் பாலைக் கரந்துகொண்டிருந்த சிலர் அதை நிறுத்தியும், பாலை அடுப்பில் வைத்த சிலர் அதைக் கீழே இறக்காமலும் கிருஷ்ணனிருக்குமிடம் ஓடினார்கள். தங்கள் தேகத்தை அலங்காரஞ் செய்துகொண்டிருந்தவர்கள் அதை நிறுத்தியும், குழந்

தைகளுக்குப் பாலூட்டிக் கொண்டிருந்தவர்கள் அதை முடிக்காமலும், பர்த்தாவுக்குப் பணிவிடை செய்து கொண்டிருந்தவர்கள் அதைச் செய்யாமலும், சாப்பிட உட்கார்ந்தவர்கள் அப்படியே எழுந்தும் கிருஷ்ணனை நோக்கி வேகமாக ஓடினார்கள்.

ता वार्यमाणाः पतिभिः पितृभिर्भ्रातृबन्धुभिः ।
गोविन्दापहृतात्मानो न न्यवर्तन्त मोहिताः ॥
ता दृष्ट्वान्तिकमायाता भगवान्व्रजयोषितः ।
अवदद्वदतां श्रेष्ठो वाचःपेशैर्विमोहयन् ॥

கோவிந்தனிடத்தில் மோகமடைந்து அவரிடத்தில் தம் மனதைப் பறிகொடுத்திருந்ததால் தாய் தந்தை கணவன் பந்துக்கள் தடுத்ததையும் பொருட்படுத்ாது, கிருஷ்ணன் இருக்குமிடஞ் சென்றார்கள். பேசுவதில் வல்லவரான கிருஷ்ணன் அவர்கள் தம்மருகில் வந்திருப்பதைக் கண்டு அவர்களிடம் இனிமையாகப் பேசி அவர்களை மயங்கச் செய்தார்.

श्रीभगवानुवाच— स्वागतं वो महाभागाः प्रियं किं करवाणि वः ।
व्रजस्यानामयं कच्चिद्ब्रूताऽऽगमनकारणम् ॥ १८ ॥ रजन्येषा घोररूपा घोर
सत्त्वनिषेविता । प्रतियात व्रजं नेह स्थेयं स्त्रीभिः सुमध्यमाः ॥ १९ ॥

“பெரும் பாக்கியசாலிகளே! வாருங்கள். கோகுலத்தில் எல்லோரும் க்ஷேமமா? உங்களுக்கு நான் என்ன பிரியத்தைச் செய்யவேண்டும் நீங்கள் இங்குவரக் காரணமென்ன? கூறுங்கள். மெல்லிடையீர்! இந்த நள்ளிரவில், துஷ்ட மிருகங்கள் சஞ்சரிக்கும் வேளையில் பெண்டிர்களான நீங்கள் இங்கு தனிமையாக இருப்பது தகுதியன்று. ஆகையால் நீங்கள் கோகுலத்திற்குத் திரும்புங்கள்.

मातरः पितरः पुत्रा भ्रातरः पतयश्च वः । विचिन्वन्ति ह्यपश्यन्तो
मा कृढ्वं बन्धुसाध्वसम् ॥ २० ॥ दृष्टं वनं कुसुमितं राकेशकररञ्जितम् ।
यमुनाऽनिललीलैजत्तरुपल्लवशोभितम् ॥ २१ ॥ तद्यात मा चिरं गोष्ठं
शुश्रूषध्वं पतीन्सतीः । क्रन्दन्ति वत्सा बालाश्च तान्पाययत दुह्यत ॥२२॥

உங்களுடைய தாய் தந்தையர்களும் கணவர்களும் உங்களைக் காணமல் எங்கும் தேடுகிறார்கள். அவர்களுக்குத் தாக்

கத்தை விளைவிப்பது சரியன்று. பெண்மணிகளே! இந்தவனம் நன்றாய்ப் பூத்து சந்திரிகையில் அழகாக விளங்குவதைப் பார்த்தீர்களா! யமுனையிலிருந்து வரும் இளங்காற்று இந்த மரங்களிலுள்ள தளிர்களை லேசாய் அசைத்துக்கொண்டு, எவ்வளவு சுகமாய் வீசுகின்றது, பார்த்தீர்களா! பதிவிரதாசிரோமணிகளே! நீங்கள் கோகுலத்திற்குச் சீக்கிரம் செல்லுங்கள்; கணவனுக்குப் பணிவிடை செய்யுங்கள்; குழந்தைகளும் கன்றுகளும் கதறுகின்றன; சிறு குழந்தைகளுக்குப் பால்கொடுத்து கன்றுகளையும் ஊட்ட விடுங்கள்.

अथवा मदभिस्नेहाद्भवत्यो यन्त्रिताशयाः। आगता ह्युपपन्नं वः प्रीयन्ते मयि जन्तवः ॥ २३ ॥ भर्तुः शुश्रूषणं स्त्रीणां परो धर्मो ह्यमायया । तद्बन्धूनां च कल्याण्यः प्रजानां चानुपोषणम् ॥ दुःशीलो दुर्भगो वृद्धो जडो रोग्यधनोऽपि वा । पतिः स्त्रीभिर्न हातव्यो लोकेप्सुभिरपातकी ॥ २५ ॥

ஒருவேளை நீங்கள் என்னிடம் வைத்த ஆசையின் மிகுதியால் என்னை வசமாக்கிக்கொள்ளுவதற்காக இங்கு வந்திருப்பீர்களேயானால், அதிலும் ஒரு குற்றமுமில்லை. ஏனெனில் என்னிடத்தில் எல்லாப் பிராணிகளும் சந்தோஷமடைகின்றன. பர்த்தாவுக்குப் பணிவிடை செய்வதே ஸ்திரீகளுக்கு உயர்ந்த தர்மமாகும். இதில் சந்தேகமில்லை. நற்குணமுடையவர்களே! கணவனுக்கும் அவனைச் சார்ந்த பந்துக்களுக்கும் சுச்ரூஷை செய்வதும், குழந்தைகளை நன்கு போஷிப்பதும் ஸ்திரீகளின் உயர்தர தர்மமாகும். கணவன் கெட்ட குணமுடையவனா யிருப்பினும், அழகில்லாமலிருப்பினும், கிழவனா யிருப்பினும், மூடனா யிருப்பினும், வியாதிஸ்தனா யிருப்பினும், தரித்திரனா யிருப்பினும், மகாபாதகத்தைச் செய்தவனா யிருப்பினும் நற்கதியை விரும்பும் ஸ்திரீகள் அவனை ஒருக்காலும் கைவிடக்கூடாது.

श्रवणाद्दर्शनात् ध्यानान्मयि भावोऽनुकीर्तनात् ।
न तथा सन्निकर्षेण प्रतियात ततो गृहान् ॥ २७ ॥
इति विप्रियमाकर्ण्य गोप्यो गोविन्दभाषितम् ।
विषण्णा भग्नसंकल्पाश्चिन्तामापुर्दुरत्ययाम् ॥ २८ ॥

என்னுடைய குணங்களைக் கேட்பதினாலும் என்னுடைய விக்கிரஹங்களைத் தரிசிப்பதினாலும் என்னைத் தியானம் செய்வதினாலும், என்னுடைய நாமாவை கீர்த்தனம் செய்வதினாலும் எத்தகைய பக்தியுண்டாகின்றதோ, அத்தகைய பக்தி என்னருகிலிருப்பதால் உண்டாகிறதில்லை. ஆதலால் நீங்கள் உங்கள் கிரஹத்திற்குச் செல்லுங்கள்" என்று கூறினார். பகவான் அறைந்த கடுஞ்சொற் கேட்டதும், கோபியர் துயரில் ஆழ்ந்து தங்கள் எண்ணம் கைகூடாதென்று தீராக் கவலை கொண்டார்கள்.

कृत्वा मुखान्यवशुचः श्वसनेन शुष्यद्बिम्बाधराणि चरणेन भुवं लिखन्त्यः ।
अस्रैरुपात्तमषिभिः कुचकुंकुमानि तस्थुर्मृजन्त्य उरुदुःखभराः स्म तूष्णीम् ॥

அவர்கள் தலை குனிந்து நின்று உஷ்ணமாகப் பெருமூச் செறிந்தார்கள். கோவைப்பழம் போன்ற உதடுகள் உலர்ந்தன. மைதீட்டிய கண்களினின்று நீர் சொரிந்து திருமுலைக் கோட்டிற் சிந்தி குங்குமத்தைக் கரைக்கலாயிற்று. கால் நகத்தால் மண்ணைக் கிறியும், கண்களைத் துடைத்துக்கொண்டும், துயரில் துன்புற்றவர்களாய், கீழ் நோக்கியவாறு ஒன்றும் உரையாது மௌனமாயிருந்தார்கள்.

प्रेष्ठं प्रियेतरमिव प्रतिभाषमाणं कृष्णं तदर्थविनिवर्तितसर्वकामाः ।
नेत्रे विमृज्य रुदितोपहते स्म किंचित्संरम्भगद्गदगिरोऽब्रुवतानुरक्ताः ॥३०॥

பிரிய நாயகனான கிருஷ்ணன் அன்பில்லாதவன் போன்று கடுமையான மொழிகளால் தாக்குவதைக் கண்டு அவரது அங்கசங்கத்தை விரும்பி வந்த அம்மாதர்கள் தாம் கொண்ட எண்ணங்கள் வீணாயின வென்று நினைத்து 'நாம் கெட்டோம்' என்று உரக்கக் கதறலானார்கள். ஆயினும் அவரிடம் வைத்த நேசத்தால் அவரை விட்டுப் பிரிய மனமில்லாது, மறுபடியும் கண்களைத் துடைத்துக்கொண்டு பரபரப்புடன் தளர்ந்த வார்த்தைகளை ஒருவாறு சொல்லலானார்கள்.

मैवं विभोऽर्हति भवान्गदितुं नृशंसं संत्यज्य सर्वविषयांस्तव पादमूलम् ।
भक्ता भजस्व दुरवग्रह मात्यजास्मान्देवो यथाऽऽदिपुरुषो भजते मुमुक्षून् ॥

"கிருஷ்ணா! நீர் இவ்விதம் எங்களைக் கொடூரமாகப் பேசுவது தகுதியன்று. நாங்கள் எல்லாப் பற்றுகளையும் விட்டுவிட்டு

உம்முடைய பாதங்களில் சரணம் புகுந்திருக்கிறோம். ஒருவராலும் ஜயிக்கமுடியாதவரே! எங்களை உம்முடைய பக்தர்களாக ஏற்றுக்கொள்ளும். எங்களைக் கைவிடக் கூடாது. ஆதி புருஷனான பகவான் எவ்விதம் தம்மை ஆராதிக்கும் பக்தர்களுக்கு மோக்ஷத்தைக் கொடுக்கின்றாரோ, அதுபோன்று நீர் எங்களைக் காத்தருளவேண்டும்.

यत्पत्यपत्यसुहृदामनुवृत्तिरङ्ग स्त्रीणां स्वधर्म इति धर्मविदा त्वयोक्तम् ।
अस्त्वेवमेतदुपदेशपदे त्वयीशे प्रेष्ठो भवांस्तनुभृतां किल बन्धुरात्मा ॥

பிரியநாயக! 'கணவன், குழந்தைகள், பந்துக்கள், இவர்களை அனுசரித்து வாழ்வதே ஸ்திரீகளின் உயர்தர தர்மமாகும்' என்று தர்மம் அறிந்த நீர் நன்கு உரைத்தீர். அவை யாவும் தர்மத்தை உபதேசிக்கும் உம்மிடமே இருக்கட்டும். நீர் ஒருவரே எங்களுக்குப் பிரியமானவர்; நீர்தான் எங்கள் பந்து; நீரே எங்கள் ஆத்மா.

कुर्वन्ति हि त्वयि रतिं कुशलाः स्व आत्मन्
नित्यप्रिये पतिसुतादिभिरार्तिदैः किम् ।
तन्नः प्रसीद परमेश्वर मा स्म छिन्द्या
आशां भृतां त्वयि चिरादरविन्दनेत्र ॥ ३३ ॥

புருஷார்த்தங்களை யறிந்த பெரியோர்கள் உம்மிடத்தில் எப்பொழுதும் அன்பு செலுத்துகிறார்கள். துக்கத்தைக் கொடுக்கும் கணவன் குழந்தைகள் முதலியவர்களால் யாது பயன்? ஆதலால் பரமேச்வரா! எங்களிடம் கிருபை செய்து எங்கள் மனோரதத்தை நிறைவேற்ற வேண்டும். செந்தாமரைக்கண்ணா! உம்மிடத்தில் வெகுகாலமாக வைத்திருக்கும் ஆசையைக் கெடுக்கலாகாது.

चित्तं सुखेन भवताऽपहृतं गृहेषु यन्निर्विशत्युत करावपि गृह्यकृत्ये ।
पादौ पदं न चलतस्तव पादमूलाद्यामः कथं व्रजमथो करवाम किं वा ॥

மனம் உம்மிடம் சென்றிருக்கையில் வீட்டிற்குப் போனபிறகும் அங்குள்ள வேலைகளில் கைகள் நாடுகின்றனவா? இல்லை. கால்களோ வெனில் உம்மை விட்டு ஒரு அடியேனும் எடுத்துவைக்க சக்தியற்றவைகளா யிருக்கின்றன. இவ்விதம் இருப்பின் நாங்கள்

எவ்வாறு கோகுலஞ் செல்வோம்? அப்படியே போனாலும் என்ன செய்யப் போகிறோம்.

सिञ्चाङ्ग नस्त्वदधरामृतपूरकेण हासावलोककलगीतजहृच्छयाग्निम् ।
नो चेद्वयं विरहजाग्न्युपयुक्तदेहा ध्यानेन याम पदयोः पदवीं सखे ते ॥

பிரியனே! உம்முடைய மந்தஹாஸத்துடன் கூடிய முகமும், கடைக்கண் பார்வையும், இனிமையான வேணுகானமும், எங்கள் மனதைக் கவர்ந்து எங்களை நெருப்புப்போல் வாட்டுகின்றன. அந்த தாபத்தை உம்முடைய அதரா மிருதப் பெருக்கால் அணைக்கக் கடவீர். இல்லையேல் விரஹதாபத்தால் நாங்கள் துன்புற்று தேக மிளைத்து உம்மையே தியானஞ் செய்து வெகு சீக்கிரத்தில் இந்த தேகத்தையும் களைந்து உம்முடைய பாதங்களை யடைவோம்.

यर्ह्यम्बुजाक्ष तव पादतलं रमाया
दत्तक्षणं क्वचिदरण्यजनप्रियस्य ।
अस्प्राक्ष्म तत्प्रभृति नान्यसमक्षमङ्ग
स्थातुं त्वयाऽभिरमिता बत पारयामः ॥ ३९ ॥

தாமரைக் கண்ணா! எவருடைய பாதாரவிந்தங்களை அரணியத்தில் வசிக்கும் தபஸ்விகள் இடை விடாது தியானிக்கிறார்களோ, லக்ஷ்மிதேவியும் சில சமயங்களில் மட்டுமே அவைகளை ஆராதிக்கும் பாக்கியத்தைப் பெறுகிறாளோ, அந்த புருஷோத்தமனுடைய பாதாரவிந்தங்களை ஒருதரம் தழுவி அதன் சுகத்தை அடைந்த பிறகு மற்றவர் எதிரில் நிற்க நாங்கள் எவ்விதம் மனங் கொள்வோம்!

कास्त्र्यङ्ग ते कलपदायतमूर्च्छितेन
संमोहिताऽऽर्यचरितान्न चलेत्त्रिलोक्याम् ।
त्रैलोक्यसौभगमिदं च निरीक्ष्य रूपं
यद्गोद्विजद्रुममृगाः पुलकान्यबिभ्रन् ॥ ४० ॥

"நாதா! உம்முடைய இனிய வேணுகானத்தைக் கேட்டு, உம்மிடம் மனதைப்பறி கொடுக்காதவளும், தரும நெறியினின்று சலிக்காதவளுமான மாது, மூவுலகங்களிலும் உண்டோ? மூவுல

கங்களிலுமுள்ள புருஷர்களும் உமது வனப்பைக்கண்டு மயங்கு கிறார்களன்றோ? அது மாத்திரமா; பசுக்களும் மிருகங்களும் பறவைகளும் விருக்ஷங்களும் உமது அழகைப்பார்த்து, உள்ளங் களித்து, உடல் புளகித்தனவல்லவா?

व्यक्तं भवान्व्रजभयार्तिहरोऽभिजातो
देवो यथाऽऽदिपुरुषः सुरलोकगोप्ता ।
तन्नो निधेहि करपङ्कजमार्तबन्धो
तप्तस्तनेषु च शिरस्सु च किङ्करीणाम् ॥ ४१ ॥

கஷ்டத்தைப் போக்கும் ஹரியே! ஆதி புருஷரான மகாவிஷ்ணு தேவர்களை ரக்ஷிக்க வாமனராக அவதரித்ததுபோல் நீர், கோகுலத் தின் பயத்தையும் துன்பத்தையும் நாசஞ் செய்வதற்காக இப்புவியில் அவதரித்திருக்கிறீர். தாமரைபோன்று மிருதுவான உமது கரங் களை உம்முடைய பணிவிடையில் விருப்பமுள்ள எங்கள் தலையிலும் ஸ்தனங்களிலும் வைத்து எங்கள் தாபத்தைப் போக்க வேண்டும்" என்றார்கள்.

इति विक्लवितं तासां श्रुत्वा योगेश्वरेश्वरः ।
प्रहस्य सदयं गोपीरात्मारामोऽप्यरीरमत् ॥ ४२ ॥

யோகிகளுக்கும் யோகியான கிருஷ்ணன், கோபிகைகள் மெய்மறந்து பரவசமாகி இவ்வாறு பேசுவதைப் பார்த்து அவர்களிடம் கருணை கூர்ந்து புன்னகை செய்து மன்மதனுக்கு வசமாகாதவரா யிருந்தும் மன்மதனுக்கு வசப்பட்டவர் போன்று அவர்களுடன் உல்லாசமாக விளையாடினார்.

ताभिः समेताभिरुदारचेष्टितः प्रियेक्षणोत्फुल्लमुखीभिरच्युतः ।
उदारहासद्विजकुन्ददीधितिर्व्यरोचतैणाङ्क इवोडुभिर्वृतः ॥ ४३ ॥

கோபிகைகள் பிரிய நாயகனான கிருஷ்ணனின் பார்வையால் முகமலர்ச்சி யடைந்தார்கள். பிறகு அவர்கள் பகவானை நாற் புறமும் சூழ்ந்துகொண்டு அவருடன் கம்பீரமாக விளையாடினார்கள். நக்ஷத்திரங்களுக்கு நடுவில் சந்திரன் பிரகாசிப்பது போல் கோப மாதர்களுக் கிடையில் பகவான் அழகாக விளங்கினார்.

नद्याः पुलिनमाविश्य गोपीभिर्हिमवालुकम् ।
रेमे तत्तरलानन्दकुमुदामोदवायुना ॥ ४५ ॥

பிறகு பகவான் அலைவந்துலாவும் யமுனையின் மணற்குன்றை அடைந்து, குளிர்ந்த மணல்களில் கோபிகைகளுடன் பலவாறு கிரீடித்தார். ஆம்பல் புஷ்பத்தின் பரிமளத்துடன் கூடிய காற்று சுகமாய் வீசிக்கொண்டிருந்தது.

**बाहुप्रसारपरिरंभकरालकोरुनीवीस्तनालभननर्मनखाग्रपातैः ।**
**क्ष्वेल्याऽवलोकहसितैर्व्रजसुन्दरीणामुत्तंभयत्रतिपतिं रमयांचकार ॥ ४६ ॥**

பகவான் அவர்களின் கைகளை நீட்டியும், அவர்களை மார்போடு அணைந்தும், தலையை முகர்ந்தும், முன் ரோமத்தை ஒதுக்கியும், துடையைத் தடவியும், முடிச்சை அவிழ்த்தும், ஸ்தனங்களை ஸ்பர்சித்தும், சில சமயம் அவர்களை ஆலிங்கனம் செய்தும், சில சமயம் நகங்களால் மிருதுவாகத் தடவியும், சில சமயம் பரிகாசமாகப் பேசியும், அவர்களுடன் உல்லாசமாக விளையாடினர். பகவான் மலர்ந்த முகத்துடன் அவர்களைப் பார்த்தும் சிரித்தும் அவர்களுடன் விளையாடியும் அந்த சுந்தரிகளின் காதலை வெகுவாக விருத்தி செய்து அவர்களை மகிழச் செய்தார்.

**एवं भगवतः कृष्णाल्लब्धमाना महात्मनः । आत्मानं मेनिरे स्त्रीणां मानिन्योऽभ्यधिकं भुवि ॥ ४७ ॥ तासां तत्सौभगमदं वीक्ष्य मानं च केशवः । प्रशमाय प्रसादाय तत्रैवान्तरधीयत ॥ ४८ ॥**

இவ்விதம் கிருஷ்ண பரமாத்மாவினால் நன்கு கொண்டாடப்பட்ட கோபிகைகள் 'உலகத்திலுள்ள மடந்தையரில் தாங்களே மிகச்சிறந்தவர்கள்' என்று கர்வமடைந்தார்கள். கோபிகைகள் தங்கள் அழகில் கர்வமடைந்து அதனால் மெய் மறந்திருப்பதை பகவான் பார்த்து, அவர்களின் கர்வத்தை அடக்கி அவர்களுக்கு அனுக்கிரஹம் செய்யக் கருதி, அவ்விடத்திலேயே மறைந்துகொண்டார்.

# முப்பதாவது அத்தியாயம்.

**त्रिंशे विरहसन्तप्तगोपीभिः कृष्णमार्गणम् ।**
**उन्मत्तवन्ननियतं भ्रमन्तीभिर्वनेवने ॥**

[விரஹத்தால் வருந்திய கோபிகள் பித்தர்கள் போன்று காடுகளில் திரிந்து கிருஷ்ணனைத் தேடுதல்.]

अन्तर्हिते भगवति सहसैव व्रजाङ्गनाः ।
अतप्यंस्तमचक्षाणाः करिण्य इव यूथपम् ॥ १ ॥

கிருஷ்ணபகவான் திடீரென்று மறைந்தவுடன் கோகுலப் பெண்கள் அவரை அருகில் காணுமல் கொம்பன் யானையை இழந்த பிடிகள்போன்று பரிதபித்தார்கள்.

गतिस्मितप्रेक्षणभाषणादिषु प्रियाः प्रियस्य प्रतिरूढमूर्तयः ।
असावहन्त्वित्यबलास्तदात्मिका न्यवेदिषुः कृष्णविहारविभ्रमाः ॥ ३ ॥

பிரிய நாயகனுன கிருஷ்ணனுடைய நடை, புன்னகை, கடைக்கண் பார்வை, பேச்சு, இவைகளில் மயங்கி அவரிடம் வேரூன்றிய மனதை யுடைய கோபிகைகள் "நான் கிருஷ்ணன்" என்று சொல்லிக்கொண்டு அவரைப் போன்று நடித்து விளையாடலானுர்கள்.

गायन्त्य उच्चैरमुमेव संहता विचिक्युरुन्मत्तकवद्वनाद्वनम् ।
पप्रच्छुराकाशवदन्तरं बहिर्भूतेषु सन्तं पुरुषं वनस्पतीन् ॥ ४ ॥

எல்லோரும் ஒன்று சேர்ந்து, கிருஷ்ணனுடைய லீலையை உயர்ந்த குரலுடன் பாடிக்கொண்டு, பித்தர்கள் போன்று காடு முழுதும் தேடினுர்கள். ஆகாசம்போன்று எல்லாப் பிராணிகளின் உள்ளும் வெளியிலும் இருக்கும் பரம புருஷனைப்பற்றி வழியில் நிற்கும் மரங்களைக் கண்டு வினவினுர்கள்.

दृष्टो वः कच्चिदश्वत्थ प्लक्ष न्यग्रोध नो मनः । नन्दसूनुर्गतो हृत्वा प्रेमहासावलोकनैः ॥ ५ ॥ कच्चित्कुरवकाशोकनागपुन्नागचंपकाः । रामानुजो मानिनीनामितो दर्पहरस्मितः ॥ ६ ॥ कच्चित्तुलसि कल्याणि गोविन्दचरणप्रिये । सह त्वाऽलिकुलैर्बिभ्रद्दृष्टस्तेऽतिप्रियोऽच्युतः ॥ ७ ॥

मालत्यदर्शि वः कच्चिन्मल्लिके जाति यूथिके ।
प्रीतिं वो जनयन्यातः करस्पर्शेन माधवः ॥ ८ ॥

"அசுவத்த விருக்ஷமே! அத்திமரமே! ஆலமரமே! அன்புடனும், அழகுடனும் கூடின பார்வையாலும், புன்னகையாலும் எங்கள் காதலை எழுப்பி மனதைத் திருடிச்சென்ற நந்தகோபரின் புதல்வன் இவ்வழியாய்ச் செல்வதைப் பார்த்தீர்களா? மருதாணியே! அசோகமே! சம்பகமே! ஒருதரம் புன்னகை செய்து கர்வமடைந்தவர்களின் கர்வத்தை அடக்கின கிருஷ்ணன் இவ்வழியாய்ச் சென்ருனு? துளஸீ! உன்னிடம் அதிகப்பிரியமுள்ள அச்சுதன்

வண்டுகள் மொய்க்கும் துளஸிமாலையை அணிந்து இவ்வழியாய்ச் செல்வதைப் பார்த்தாயா? மாலதி! மல்லிகை! எங்கள் மாதவன் உங்களைப் பறித்துக்கொண்டு இவ்வழியாகச் சென்றானா?

**चूतप्रियालपनसासनकोविदारजम्ब्वर्कबिल्वबकुलाम्रकदम्बनीपाः ।**
**येऽन्येपरार्थभवका यमुनोपकूलाः शंसन्तु कृष्णपदवीं रहितात्मनां नः ॥**

மாவே! பலாவே! வில்வமே! பிறர்நன்மைக்காகவே யமுனைக்கரையில் வாசம் செய்யும் மற்றுமுள்ள மரங்களே! கிருஷ்ணனைப் பறிகொடுத்து பித்தர்கள்போல அலைந்து திரியும் எங்களுக்கு, அவனிருக்குமிடத்தை உரைக்க மாட்டீர்களா?

**किं ते कृतं क्षिति तपो बत केशवाङ्घ्रिस्पर्शोत्सवोत्पुलकिताङ्गरुहैर्विभासि ।**
**अप्यङ्घ्रिसम्भव उरुक्रमविक्रमाद्वा आहो वराहवपुषः परिरम्भणेन ॥ १० ॥**

பூதேவி! நீ என்ன தவத்தைச் செய்து இந்தக் கேசவனுடைய பாதாரவிந்தங்களின் சேர்க்கையை அடைந்தனையோ! அதனால் நீ உள்ளங்களித்து, உடல் புளகித்ததுபோல், செடிகளுடன் அழகாய் விளங்குகின்றாய். ஒருவேளை இந்த பாக்கியம் கிருஷ்ணனின் அடிவைப்புகளால் ஏற்பட்டதா? யக்ஞவராக மூர்த்தியாக அவதரித்து உன்னை அணைத்துக் கொண்டமையால் ஏற்பட்டதா?

**अप्येणपत्न्युपगतः प्रिययेह गात्रैस्तन्वन्दृशां सखि सुनिर्वृतिमच्युतो वः ।**
**कान्ताङ्गसङ्गकुचकुंकुमरञ्जितायाः कुन्दस्रजः कुलपतेरिह वाति गन्धः ॥**

மான் பேடுகளே! நீங்கள் எங்கள் தோழிகளன்றோ! குங்குமம், குந்தபுஷ்பம் இவைகளின் வாசனையுடன் காற்று வீசுவதைப் பார்த்தால் எங்கள் பிராண நாயகன் ஆசைக்கினிய நாயகியுடன் இங்கு உலாவியதாகத் தோன்றுகிறது. அவரைக்கண்டு நீங்கள் களித்தீர்களா?

**बाहुं प्रियांस उपधाय गृहीतपद्मो रामानुजस्तुलसिकालिकुलैर्मदान्धैः ।**
**अन्वीयमान इह वस्तरवः प्रणामं किं वाऽभिनन्दति चरन्प्रणयावलोकैः ॥**

விருக்ஷங்களே! கிருஷ்ணன் தன் பிரிய நாயகியை ஒரு கையால் அணைத்துக்கொண்டும் மற்றொருகையில் தாமரையைச் சுற்றிக்கொண்டும் துளசிமாலையில் மொய்த்திருக்கும் வண்டினங்கள் ரீங்காரம் செய்துகொண்டு தன்னைத் தொடர்ந்துவர இவ்வழியாய்ச்

சென்றனரா ? நீங்கள் அவரைக்கண்டு வணங்கினீர்களா ? அவரும் அன்புடன் உங்களைப் பார்த்து உங்கள் உபசாரத்தைச் சந்தோஷமாய் ஏற்றுக்கொண்டனரா ?"

इत्युन्मत्तवचो गोप्यः कृष्णान्वेषणकातराः । लीला भगवतस्तास्ता ह्यनुचक्रुस्तदात्मिकाः ॥ कस्याश्चित्पूतनायन्त्याः कृष्णायन्त्यपिबत्स्तनम् । तोकायित्वा रुदत्यन्या पदाऽहन् शकटायतीम् ॥ १५ ॥ दैत्यायित्वा जहारान्यामेका कृष्णार्भभावनाम् । आहूय दूरगा यद्वत्कृष्णस्तमनुवर्ततीम् । वेणुं क्वणन्तीं क्रीडन्तीमन्याः शंसन्ति साध्विति ॥ १८ ॥ कस्यांचित्स्वभुजं न्यस्य चलन्त्याहापरा ननु । कृष्णोऽहं पश्यत गतिं ललितामिति तन्मनाः ॥

இவ்விதம் கோபிகைகள் பித்தர்கள் போன்று பேசிக்கொண்டு மறுபடியும் கிருஷ்ண பகவானைத் தேடிச் செல்லுகையில் அவருடைய பல லீலைகளை அவரைப் போன்று நடிக்கலானார்கள். ஒருத்தி பூதனையாக நடிக்க, மற்றொருத்தி கிருஷ்ணனாக நடித்து அவளுடைய ஸ்தனத்தை உறிஞ்சினாள். தொட்டிலில் படுத்து கிருஷ்ணன் போன்று கதறும் ஒரு கோபிகை, சகடாசுரனாகத் தோன்றின மற்றொரு கோபிகையைக் காலால் உதைத்தாள்.

ஒருத்தி திருணாவர்த்தன் என்ற அசுரனாக நடித்து குழந்தையாக நடித்தவளை தூக்கிச் சென்றாள். ஒரு கோபிகை தன்னைக் கிருஷ்ணனாக நினைத்து வேணுகானஞ் செய்து பசுவாக நடித்த கோபிகையை அழைத்தாள். அப்பொழுது மற்றவர்கள் அதை ஆமோதித்தார்கள். கிருஷ்ணன் தன் பிரிய நாயகியுடன் உலாவுவதுபோன்று, ஒருத்தி மற்றொருத்தியின் தோளில் கையை வைத்துத் தழுவி உல்லாசமாய்ச் சஞ்சரித்துக்கொண்டு "நான்தான் கிருஷ்ணன். என் அழகிய நடையைப் பாருங்கள்" என்றாள்.

मा भैष्ट वातवर्षाभ्यां तत्त्राणं विहितं मया । इत्युक्त्वैकेन हस्तेन यतन्त्युन्निदधेऽम्बरम् ॥ २० ॥ एवं कृष्णं पृच्छमाना वृन्दावनलतास्तरून् । व्यचक्षत वनोद्देशे पदानि परमात्मनः ॥ पदानि व्यक्तमेतानि नन्दसूनोर्महात्मनः । लक्ष्यन्ते हि ध्वजाम्भोजवज्राङ्कुशयवादिभिः ॥ २५ ॥

பிறகு ஒரு ஸ்திரீ ஒரு துணியை உயரேபிடித்து 'நீங்கள் கல்மழைக்கும் குளிர்காற்றுக்கும் அஞ்சவேண்டாம். நான் காப்பாற்

றுகிறேன். இங்கு வாருங்கள்' என்று கிருஷ்ணன் போல் சொல்லலானுள். இவ்விதம் பிருந்தாவனத்திலுள்ள ஒவ்வொரு செடிகொடி மரங்களையும் ஒன்று விடாது, "கிருஷ்ணனைக் கண்டாயா" என்று விசாரித்துப் போகையில் ஓரிடத்தில் பகவானுடைய அசாதாரணமான அடிவைப்புகளை பூமியில் பார்த்தார்கள். "இவைகள் நந்தகோபரின் புதல்வரான கிருஷ்ணனின் அடி வைப்பாகத்தானிருக்கவேண்டும். ஏனெனில் அந்த மகாத்மாவுக்குத் தான் தாமரை, துவஜம், வஜ்ஜிரம், அங்குசம், யவதானியம் முதலிய ரேகைகள் பாதங்களிலுண்டு. மற்றவர்களுக்குக் கிடையாது" என்று நிச்சயித்து

तैस्तैः पदैस्तत्पदवीमन्विच्छन्त्योऽग्रतोऽबलाः । वध्वाः पदैः सुपृक्तानि
विलोक्याऽऽर्ताः समब्रुवन् ॥ २६ ॥ कस्याः पदानि चैतानि याताया नन्द-
सूनुना । अंसन्यस्तप्रकोष्ठायाः करेणोः कारिणा यथा ॥ २७ ॥ अनयाऽऽ-
राधितो नूनं भगवान्हरिरीश्वरः । यन्नो विहाय गोविन्दः प्रीतो यामनयद्रहः॥

அவ்விளம் பெண்கள் அந்த அடிவைப்புகளைக் கொண்டு கிருஷ்ணனிருக்குமிடத்தைத் தேடிச்சென்றார்கள். அப்பொழுது ஓரிடத்தில் ஒரு பெண்ணின் பாதரேகைகள் அவ்வடி வைப்புகளுடன் கலந்திருப்பதைக் கண்ணுற்று துன்பக்கடலில் ஆழ்ந்து, "சகிகளே! இவை யாருடைய காலடிகள்? ஒரு கொம்பன் யானையின்மேல் மற்றொரு பெண்யானை துதிக்கையைப் போட்டுக்கொண்டு போவது போன்று யாரோ ஒரு பெண் நம்முடைய கிருஷ்ணன் மீது கையைப் போட்டு அணைத்துக்கொண்டு இவ்வழியாய்ச் சென்றிருக்கவேண்டும். இவள் யாரா யிருக்கலாம். பார்த்திர்களா! இவள் மகாவிஷ்ணுவை நன்கு பூஜித்திருக்கவேண்டும் என்பது திண்ணம். ஆதலால் தான் அவர் நம்மை யெல்லாம் தள்ளிவிட்டு அவளிடம் ஆசைகொண்டு அவளுடன் ரகசியமாய்ப் போயிருக்கிறுர்.

धन्या अहो अमी आल्यो गोविन्दाङ्घ्र्यब्जरेणवः । यान्ब्रह्मेशो रमा
देवी दधुर्मूर्ध्न्यघनुत्तये ॥ २९ ॥ तस्या अमूनि नः क्षोभं कुर्वन्त्युच्चैः पदानि

यत् । यैकाऽपहृत्य गोपीनां रहो भुङ्क्तेऽच्युताधरम् ॥ न लक्ष्यन्ते पदान्यत्र तस्या नूनं तृणांकुरैः । खिद्यत्सुजाताङ्घ्रितलामुन्निन्ये प्रेयसीं प्रियः ॥ इमान्यधिकमग्नानि पदानि वहतो वधूम् । गोप्यः पश्यत कृष्णस्य भाराक्रान्तस्य कामिनः । अत्रावरोपिता कान्ता पुष्पहेतोर्महात्मना ॥

சகிகளே! கோவிந்தனுடைய பாதங்கள் பதியப்பெற்ற இத்தூளியின் பாக்கியத்தை என்னென்று சொல்வது! இத்தூளியையன்றே பிரம்மாவும் லக்ஷ்மிதேவியும் தலையால் தாங்கி புனிதராகிறார்கள் நம்மெல்லோருக்குஞ் சொந்தமான அச்சுதனுடைய அதராமிருதத்தை இவள் ஒருத்தியாகவே இருந்து ரகசியமாக அனுபவிப்பதால், இவளுடைய இந்தக்காலடிகள் நம்முடைய துக்கத்தை மேன்மேலும் வளரச்செய்கின்றன. தோழிகளே! இதோ பார்த்தீர்களா; கிருஷ்ணனுடைய காலடிகளே இங்கு நன்றாய்ப் பதிந் திருக்கின்றன. அப்பெண்ணின் அடிகளைக் காணோம். அவளுடைய மிருதுவான பாதங்கள் புற்களிலும், தண்டுகளிலும் நடந்து கோரைப்பட்டிருப்பதைக் கண்டு, அவள் காதலன் அவளைத் தூக்கிச் சுமந்திருக்கிறார் என்று தோன்றுகின்றது. கோபிகைகளே! காமாவேசத்தால் அவளைத் தூக்கிச் செல்லும் பொழுது அவளுடைய கனத்தால் தான், இவ்விடங்களில் அவருடைய காலடிகள் நன்றாய்ப் பதிந் திருக்கின்றன. இவ்விடத்தில் அந்த மகாத்மாவான கிருஷ்ணன் புஷ்பங்களைப் பரிப்பதற்காக தன் காதலியைக்கீழே இறக்கினார்.

अत्र प्रसूनापचयः प्रियार्थे प्रेयसा कृतः । प्रपदाक्रमणे एते पश्यतासकले पदे ॥ ३२ ॥ केशप्रसाधनं त्वत्र कामिन्याः कामिना कृतम् । तानि चूडयता कान्तामुपविष्टमिह ध्रुवम् ॥ ३३ ॥ रेमे तया चाऽऽत्मरत आत्मारामोऽप्यखण्डितः । कामिनां दर्शयन्दैन्यं स्त्रीणां चैव दुरात्मताम् ॥ ३४ ॥

இவ்விடத்தில் அவளது காதலன் அவளுக்காக புஷ்பங்களைப் பறித்து அவள் முடியில் சூட்டி உட்கார்ந்து பலவிதமாக உல்லாசமாய் ரமித்திருக்கின்றார். தன்னுடைய ஆத்மாவினிடத்திலேயே சந்

தோஷ மடைபவரும், தமக்குள்ளேயே விளையாடுபவருமான பக
வான் ஸ்திரியின் சிருங்காரவலையில் சிக்காதவராயினும் காமி
களின் ஏக்கத்தையும்ஸ்திரீகளின் கர்வத்தையும், நடித்துக் காண்
பிப்பவர் போன்று, அவளுடன் உல்லாசமாய் விளையாடினர்.

इत्येवं दर्शयन्त्यस्ताश्चेरुर्गोप्यो विचेतसः । यां गोपीमनयत्कृष्णो वि-
हायान्याः स्त्रियो वने ।३५। सा च मेने तदाऽऽत्मानं वरिष्ठं सर्वयोषिताम् ।
हित्वा गोपीः कामयाना मामसौ भजते प्रियः ॥ ३६ ॥ ततो गत्वा वनो-
द्देशं दृप्ता केशवमब्रवीत् । न पारयेऽहं चलितुं नय मां यत्र ते मनः ॥३७॥

பகவான் மற்றைய கோபிகைகளை விட்டு விட்டு தன்னிடம் ஆசை
கொண்டு, தன்னைமட்டும் அழைத்துச் செல்வதைக்கண்டு அப்பெண்
எல்லா ஸ்திரீகளைக் காட்டிலும் தானே அழகில் சிறந்தவளெனக்
கருதலானள். இவ்விதம் தன் அழகில் செருக்குண்ட அப்பெண்
மணி வனத்தில் சிறிதுதூரம் சென்றதும் "கேசவா இனி என்
ஞல் ஒரு அடியேனும் நடக்கமுடியாது. உமக்கு இஷ்டமான
இடத்திற்கு என்னைத் தூக்கிச்செல்லும்" என்ருள்.

एवमुक्तः प्रियामाह स्कन्ध आरुह्यतामिति । ततश्चान्तर्दधे कृष्णः सा
वधूरन्वतप्यत ॥ ३८ ॥ हा नाथ रमण प्रेष्ठ क्वासि क्वासि महाभुज । दा-
स्यास्ते कृपणाया मे सखे दर्शय सन्निधिम् ॥ ३९ ॥ अन्विच्छन्त्यो भगवतो
मार्गं गोप्योऽविदूरतः । ददृशुः प्रियविश्लेषमोहितां दुःखितां सखीम् ॥४०॥

பகவான் அதைக் கேட்டு "பிரியே! என் தோளில் ஏறிக் கொள்"
என்ருர். அவ்விதம் அப்பெண்மணி ஏறும் தருணத்தில் கிருஷ்ண
பகவான் திடீரென்று மறைந்தார். அவரைக்காணது அவள்
"நாதா! நாயகா! அன்புள்ள தோழனே! நீண்ட கைகளை
உடையவனே! நீ எங்கு சென்று விட்டாய்? தோழனே! உம்
முடைய வேலைக்காரியும் அனதையுமான எனக்கு உம்முடைய
தரிசனத்தை அளியும்" என்று பலவாறுகதறித் தவிக்கலானள்.
இவ்வாறு தன் பிரியநாயகனின் பிரிவால் மதிமயங்கி துன்புற்
றிருக்கும் அப் பெண்மணியை கோபிகைகள் பகவானைத் தேடிச்
செல்லுகையில் வனத்தில் ஓரிடத்தில் தற்செயலாய் கண்டார்கள்.

तया कथितमाकर्ण्य मानप्राप्तिं च माधवात् । अवमानं च दौरात्म्याद्विस्मयं परमं ययुः ॥ ४१ ॥ ततोऽविशन्वनं चन्द्रज्योत्स्ना यावद्विभाव्यते । तमः प्रविष्टमालक्ष्य ततो निववृतुः स्त्रियः ॥ ४२ ॥

பகவான் முதலில் கௌரவப் படுத்தியதையும் பின் தன் கர்வத்தால் அவமான மடைந்ததையும் அவள் கூறக்கேட்டு அக் கோபிகைகள் மிக்க சந்தோஷ மடைந்தார்கள். பிறகு எல்லோரும் வனத்திற்குள் சென்று சந்திரன் ஒளி வீசும்வரை கிருஷ்ண பகவானை எங்கும் தேடினார்கள். சந்திராஸ்தமனமாகி இருள் சூழ்ந்ததைக் கண்டு வனத்தினின்று திரும்பினார்கள்.

पुनः पुलिनमागत्य कालिन्द्याः कृष्णभावनाः ।
समवेता जगुः कृष्णं तदागमनकाङ्क्षिताः ॥ ४४ ॥

மறுபடியும் அவர்கள் கிருஷ்ணனையே நினைத்துக்கொண்டு யமுனையின் மணல் திட்டு சென்று பகவானை எதிர்பார்த்தவண்ணம் ஒன்று சேர்ந்து உயர்ந்த குரலுடன் அவரைத் துதித்தார்கள்.

## முப்பத்தொன்றாவது அத்தியாயம்.

एकत्रिंशे निराशास्ताः पुनःपुलिनमागताः ।
कृष्णमेवानुगायन्त्यः प्रार्थयन्ते तदागमम् ॥

[கோபிகைகள் திரும்ப மணற் குன்றையடைந்து கிருஷ்ணனையே பாடி அவர் வரவைப் பிரார்த்தித்தல்.]

### கோபிகாகீதம்.

जयति तेऽधिकं जन्मना व्रजः श्रयत इन्दिरा शश्वदत्र हि ।
दयित दृश्यतां दिक्षु तावकास्त्वयि धृतासवस्त्वां विचिन्वते ॥ १ ॥

"காந்தா! கிருஷ்ணா! உன் பிறப்பால் கோகுலம் மிகச் சிறந்து விளங்குகிறது. மகா லக்ஷ்மி இங்கேயே எப்பொழுதும்

வாசம் செய்கிறாள். இவ்விதமிருக்க உன்னையே நாதனாகக்கொண்ட நாங்கள் மட்டிலும் உனக்காக பிராணனைத் தரித்துக்கொண்டு உன்னைத் தேடி வருந்துவது தகுதியா? அதை நீ அறியவில்லையா? ஆதலால் கிருஷ்ணா! எங்களுக்கு உனது தரிசனத்தை அளிப்பாய்.

**शरदुदाशये साधु जातसत्सरसिजोदरश्रीमुषा दृशा ।**
**सुरतनाथ तेऽशुल्कदासिका वरद निघ्नतो नेह किं वधः ॥ २ ॥**

வரங்கொடுப்பவனே! உனது கண் சரத்காலத்து தடாகத்தில் நன்கு உண்டானதும் அழகாக மலர்ந்ததுமான தாமரைப்பூவின் நடுவிலுள்ள அழகைத் திருடுகிறது. காமத்தை வளர்ப்போனே! உன் கண்ணழகைக் கண்டு மயங்கி, சம்பளமில்லாமல் உனக்குத் தொண்டு புரியும் எங்களை நீ மறைந்திருந்து கொல்லுகிறாய். பல ஸ்திரீகளைக் கொன்ற பாபம் உன்னை அணுகாதா?

**विषजलाप्ययाद्व्यालराक्षसाद्वर्षमारुताद्वैद्युतानलात् ।**
**वृषमयात्मजाद्विश्वतो भयादृषभ ते वयं रक्षिता मुहुः ॥ ३ ॥**

விஷங்கலந்த ஜலத்தைக் குடித்ததால் நேர்ந்த நாசத்திலிருந்தும், மலைப்பாம்பின் வாயிலிருந்தும், மழை, இடி, காற்று இவைகளிலிருந்தும், விருஷப ரூபத்துடன் வந்த மயாசுரன் பிள்ளையிடமிருந்தும், மற்றும்எல்லா ஆபத்துக்களிலிருந்தும் பலமுறை ரக்ஷித்தாய்.

**न खलु गोपिकानन्दनो भवानखिलदेहिनामन्तरात्मदृक् ।**
**विखनसाऽर्थितो विश्वगुप्तये सख उदेयिवान्सात्वतां कुले ॥ ४ ॥**

தோழனே! நீயசோதையின் புத்திரன் அன்று. எல்லாப் பிராணிகளுக்கும் அந்தராத்மாவாகவும் ஸர்வக்ஞனாகவும் இருப்பவன். உலகத்தை ரக்ஷிப்பதற்காக பிரம்மதேவரின் வேண்டுகோளுக்கிணங்கி பக்தர்களின் குலத்தில் உதித்திருக்கிறாய்.

**विरचिताभयं वृष्णिधुर्य ते चरणमीयुषां संसृतेर्भयात् ।**
**करसरोरुहं कान्त कामदं शिरसि धेहि नः श्रीकरग्रहम् ॥ ५ ॥**

"கிருஷ்ணா! விருஷ்ணி சிரேஷ்டனே! ஸம்ஸாரத்தினின்றும் பயந்து உன்னைச் சரணமடைந்தவர்களுக்கு அபயம் கொடுப்பதும் விரும்பியவற்றை அளிப்பதும், லக்ஷ்மிதேவியின் கையைப் பிடித்ததுமான, உனது தாமரை மலர்போன்ற கையை எங்கள் சிரசில் வைத்தருளவேண்டும்.

व्रजजनार्तिहन्वीर योषितां निजजनस्मयध्वंसनस्मित ।
भज सखे भवत्किङ्करीः स्म नो जलरुहाननं चारु दर्शय ॥ ६ ॥

கிருஷ்ண! கோகுலத்திலுள்ள ஜனங்களின் துன்பத்தை நீக்குகின்றவனே! வீரா! தாஸ ஜனங்களின் கர்வத்தை அழிக்கின்ற புன்னகையுடையவனே! நண்பா! நீ எங்களை அடைந்து, கமலம்போன்று அழகிய உனது முகத்துடன் எங்களுக்குத் தரிசனமளிப்பாய்.

प्रणतदेहिनां पापकर्शनं तृणचरानुगं श्रीनिकेतनम् ।
फणिफणार्पितं ते पदाम्बुजं कृणु कुचेषु नः कृन्धि हृच्छयम् ॥ ७ ॥

கிருஷ்ண! நமஸ்காரம் செய்கின்றவர்களின் பாவங்களைப் போக்குவதும், புல்மேயும் மாடுகளைப் பின்பற்றிச் செல்லுகின்றதும், லக்ஷ்மிக்கு இருப்பிடமானதும், காளியன் படங்களில் வைக்கப்பட்டதுமான, உனது பாதாம்புஜத்தை எங்கள் கொதிக்கும் ஸ்தனங்களில் வைத்து, எங்கள் காமதாபத்தைத் தீர்க்க வேண்டும்.

मधुरया गिरा वल्गुवाक्यया बुधमनोज्ञया पुष्करेक्षण ।
विधिकरीरिमा वीरमुह्यतीरधरसीधुनाऽऽप्याययस्व नः ॥ ८ ॥

கண்ணா! உனது இனிய குரலையும் அழகிய வார்த்தைகளையும் வித்வான்களின் மனதையும் கவரும் கம்பீரமான அர்த்தத்தையும் கேட்டு நாங்கள் மயங்கி நின்றோம். வீரா! அன்றுமுதல் உனது தாஸிகளான எங்களுக்கு உன் அதராமிருதத்தைக் கொடுத்து எங்களைப் பிழைப்பிப்பாய்.

तव कथामृतं तप्तजीवनं कविभिरीडितं कल्मषापहम् ।
श्रवणमङ्गलं श्रीमदाततं भुवि गृणन्ति ते भूरिदा जनाः ॥ ९ ॥

"கிருஷ்ண! உனது கதை புதிய சிறந்த அமிருதமாக உளது. மூன்றுவிதமான தாபங்களால் வருந்தியவர்களையும் பிழைப்பிப்பது. பிரம்மநிஷ்டர்களாலும் ஸ்தோத்திரம் செய்யப்பட்டுளது. பாபங்களைப் போக்கக்கூடியது. கேட்பதினாலேயே மங்களங்களைக் கொடுப்பது; மிகவும் சாந்தமானது; அதை இப்புவியில் சொல்லுகின்றவர்கள் ஜீவதானம் செய்கின்றவர்களாக ஆகிறார்கள்.

प्रहसितं प्रिय प्रेमवीक्षणं विहरणं च ते ध्यानमङ्गलम् ।
रहसि संविदो या हृदिस्पृशः कुहक नो मनः क्षोभयन्ति हि ॥ १० ॥

நண்ப! வஞ்சகனே! உனது சிரிப்பும், அன்பார்ந்த பார்வையும், தியான நிலையிலும் மங்களத்தைத் தரும் உனது திவ்விய லீலைகளும், ரஹஸ்யத்தில் கூறிய மொழிகளும், எங்கள் மனதில் பதிந்து இப்பொழுது அதைக் கலக்குகின்றன.

**चलसि यद्व्रजाच्चारयन्पशून्नलिनसुन्दरं नाथ ते पदम् ।**
**शिलतृणांकुरैः सीदतीति नः कलिलतां मनः कान्त गच्छति ॥ ११ ॥**

நாதா! நீ பசுக்களை மேய்க்க கோகுலத்திலிருந்து வெளிச் செல்லும்பொழுது தாமரை மலர்போன்று மிருதுவான உனது பாதம் காட்டிலுள்ள கூர்மையான புற்களாலும் கற்களாலும் வருந்துமே என்று எண்ணி எங்கள் மனம் கலங்குகிறது.

**दिनपरिक्षये नीलकुन्तलैर्वनरुहाननं बिभ्रदावृतम् ।**
**घनरजस्वलं दर्शयन्मुहुर्मनसि नः स्मरं वीर यच्छसि ॥ १२ ॥**

வீர! மாலையில் வரும்பொழுது, கறுத்துச் சுருண்ட மயிர்களையும், அடர்த்தியாய்ப் படிந்த புழுதியையும், உனது முகத்தில் பார்த்து, மகரந்தப்பொடிகள் படிந்து வண்டுகள் மொய்க்கும் தாமரைபோலென அதை நினைத்தோம். கிருஷ்ண! அவ்வழகிய முகத்தை எங்களுக்கு அடிக்கடி காண்பிவித்து எங்கள் மனதில் காம தாபத்தை வளர்த்தாய்.

**प्रणतकामदं पद्मजार्चितं धरणिमण्डनं ध्येयमापदि ।**
**चरणपङ्कजं शन्तमं च ते रमण नः स्तनेष्वर्पयाधिहन् ॥ १३ ॥**

"நாதா! ரமண! உனது பாதாரவிந்தம் வணங்கினவர்களின் அபீஷ்டங்களை அளிக்கின்றது. பிரம்மதேவரும் அதை இடைவிடாது பூஜிக்கின்றார். அது பூமிக்கே மிகுந்த அழகைக் கொடுக்கின்றது. தியானம் செய்தக்ஷணமே எல்லா ஆபத்துக்களையும் பனிபோல் போக்குகின்றது. தழுவுங்காலத்தில் சுகத்தைக் கொடுக்கின்றது. அவ்வித மகிமைவாய்ந்த உனது பாதாரவிந்தத்தை எங்கள் மார்பிடையில் வைத்து தாபத்தைப் போக்கவேண்டும்.

**सुरतवर्धनं शोकनाशनं स्वरितवेणुना सुष्ठु चुंबितम् ।**
**इतररागविस्मारणं नृणां वितर वीर नस्तेऽधरामृतम् ॥ १४ ॥**

உனது முத்தம் சிருங்கார சுகத்தை மென்மேலும் வளரச்செய்து சோகத்தை வேருடன் களைகிறது. மேலும் அது புல்லாங்குழலை

ஊதி அதன் நாதமாகிய அமுதத்தின் நறுமணத்துடன் கூடியிருக்கிறது. ஆதலால் உன்னுடைய அதராமிருதத்தை ஒரு தடவை பானஞ் செய்தவர்கள் சக்கிரவர்த்தி பட்டத்தையும் அது போன்ற சுகங்களையும் விரும்பார்கள். கிருஷ்ணா! அத்தகையமுத்தத்தை எங்களுக்கு ஒருதரமேனும் அளிப்பாய்.

अटति यद्भवानह्नि काननं त्रुटिर्युगायते त्वामपश्यताम् ।
कुटिलकुन्तलं श्रीमुखं च ते जड उदीक्षतां पक्ष्मकृद्दृशाम् ॥ १५ ॥

"கிருஷ்ணா! நீ பகலில் பிருந்தாவனத்தில் சஞ்சரிக்கும் பொழுது உன்னைப் பார்க்காதவர்களுக்கு ஒவ்வொரு க்ஷணமும் ஒரு யுகம்போலாகிறது. நீ மாலையில் வீட்டிற்குத் திரும்பும்பொழுது சுருண்ட மயிர்களால் அழகாக விளங்கும் உனது முகத்தை இமை கொட்டாமல் பார்த்து நின்ற ஸ்திரீகள் இமைகளை சிருஷ்டித்த பிரம்மாவை மூடனென்று நினைத்தார்கள்.

पतिसुतान्वयभ्रातृबान्धवानतिविलङ्घ्य तेऽन्त्यच्युतागताः ।
गतिविदस्तवोद्गीतमोहिताः कितव योषितः कस्त्यजेन्निशि ॥ १६ ॥

அச்சுதா! நாங்கள் உனது வேணுகானத்தைக் கேட்டு மோஹமடைந்து உற்றார் உறவினரையும் மீறி உனது வழியறிந்து உனது பக்கம் வந்திருக்கிறோம். வஞ்சகா! உன்னைத் தவிர எவன் தான் இரவில் தன்னைத் தேடிவந்த ஸ்திரீகளைத் தள்ளுவான்.

रहसि संविदं हृच्छयोदयं प्रहसिताननं प्रेमवीक्षणम् ।
बृहदुरःश्रियो वीक्ष्य धाम ते मुहुरतिस्पृहा मुह्यते मनः ॥ १७ ॥

கிருஷ்ணா! நீ ஏகாந்தத்தில் செய்த சங்கேதங்களையும், காமத்தை வளர்க்கின்ற உனது அன்பார்ந்த பார்வையையும், புன்னகை பொருந்திய முகத்தையும், மஹா லக்ஷ்மிக்கு இருப்பிடமான உனது விரிந்த மார்பையும், பார்த்து நாங்கள் உன்னிடம் ஆசைகொண்டிருக்கிறோம். அதனால் எங்கள் மனம் மயங்குகிறது

व्रजवनौकसां व्यक्तिरङ्ग ते वृजिनहन्त्र्यलं विश्वमङ्गलम् ।
त्यज मनाक्च नस्त्वत्स्पृहात्मनां स्वजनहृद्रुजां यन्निषूदनम् ॥ १८ ॥

உனது அவதாரம் உலகத்திற்கே மங்களங்களைக் கொடுக்கின்றது. கோகுலத்திலும் காடுகளிலும் வசிக்கும் ஜனங்களின் துக்கங்களையும் பாபங்களையும் போக்குகிறது. நாங்கள்

உன்னிடம் ஆசைகொண்டு வருந்துகிறோம். ஆதலால் உன்னைச் சேர்ந்தவர்களின் மனோ வியாதியைப் போக்கும் ரகஸ்யமான மருந்தை எங்களுக்குச் சிறிதேனும் கொடுத்து எங்கள் துக்கத்தை போக்குவாய்.

**यत्ते सुजातचरणांबुरुहं स्तनेषु भीताः शनैः प्रिय दधीमहि कर्कशेषु ।**
**तेनाटवीमटसि तद्व्यथते न किंस्वित्कूर्पादिभिर्भ्रमति धीर्भवदायुषां नः ॥**

கிருஷ்ணா! தாமரை யிதழ் போன்று மிருதுவான உன்னுடைய பாதத்தைக் கல்லைப்போன்று கடினமான எங்கள் ஸ்தனங்களில் வைப்பதற்குப் பயந்து, அதை மெதுவாக அவைகளில் வைத்துத் தாங்கினோம். இப்பொழுது அதே பாதத்தால் நீ காட்டில் சஞ்சரிக்கும் பொழுது கூர்மையான சுக்காம் பாறைகள் உனது பாதத்தைக் குத்திக்கோறுமே என்று எங்கள் மனம் சுழல்கிறது. நீயன்றோ எங்கள் உயிர்" என்று பாடினார்கள்.

# முப்பத்திரண்டாவது அத்தியாயம்.



**द्वात्रिंशे विरहालापविक्लिन्नहृदयो हरिः ।**
**तत्राविर्भूय गोपीस्ताः सान्त्वयामास मानयन् ॥**

[கோபஸ்த்ரீகளின் துக்க மொழிகளைக்கேட்டு பகவான் கருணை கூர்ந்து அவர்கள் முன் தோன்றி அவர்களைத் தேற்றுதல்.]

**श्रीशुक उवाच—इति गोप्यः प्रगायन्त्यः प्रलपन्त्यश्च चित्रधा । रुरुदुः सुस्वरं राजन्कृष्णदर्शनलालसाः ॥ १ ॥ तासामाविरभूच्छौरिः स्मयमान-मुखांबुजः । पीतांबरधरः स्रग्वी साक्षान्मन्मथमन्मथः ॥ तं विलोक्यागतं प्रेष्ठं प्रीत्युत्फुल्लदृशोऽबलाः । उत्तस्थुर्युगपत्सर्वास्तन्वः प्राणमिवाऽऽगतम् ॥**

பரீக்ஷித்ராசனே! கிருஷ்ணனுடைய பிரிவைச் சகியாது இவ்வாறு இனியகுரலுடன் கானஞ் செய்துகொண்டும், பலவாறு புலம்பிக்கொண்டும் திரிந்த கோபிகைகள், அவரைப் பார்ப்பதில் ஆவ

ஹற்று மறுபடியும் அழுதார்கள். அப்பொழுது சூரரின் பேரனுன கிருஷ்ணபகவான் அவர்கள் படுந்துன்பத்தைப் பார்த்து மன்மதனும் கண்டு மயங்கும்படியான வடிவத்தை யெடுத்து பீதாம்பரம் வனமாலை முதலியவைகளை அணிந்துகொண்டு சிரித்தமுகத்துடன் வர்கள் முன் தோன்றினுர். காணுமல் சென்ற தங்கள் பிரியநாயகன் மறுபடியும் வரக்கண்டு கோபிகைகள் சந்தோஷத்தால் கண்களை நன்ருய்த் திறந்து, மூர்ச்சையாய் விழுந்து கிடப்பவர்கள் பிரக்ஞை யடைந்து எழுந்திருப்பது போன்று, ஒரே குதியாய் எழுந்தார்கள்.

काचित्कराम्बुजं शौरेर्जगृहेऽञ्जलिना मुदा। काचिद्दधार तद्बाहुमंसे चन्दनभूषितम् ॥ ४ ॥ काचिदञ्जलिनाऽगृह्णात्तन्वी ताम्बूलचर्वितम्। एका तदङ्घ्रिकमलं संतप्ता स्तनयोरधात् ॥ ५ ॥ एका भ्रुकुटिमाबध्य प्रेमसंरम्भविह्वला। घ्नन्तीवैक्षत्कटाक्षेपैः संदष्टदशनच्छदा ॥ ६ ॥

ஒருவள் கிருஷ்ணனுடைய கைகளைத் தன் கைகளால் பிடித்தாள். வேறொருவள் அவருடைய கைகளில் சந்தனத்தைப் பூசி அவைகளைத் தன் தோளில் வைத்துக்கொண்டாள். ஒரு பெண்மணி தன் இரு கைகளாலும் கிருஷ்ணனுடைய தாம்பூல உச்சிஷ்டத்தை வங்கினுள். ஒருவள் அவருடைய புஷ்பம் போன்ற திருவடிகளை ஆவலுடன் தன் நெஞ்சில் வைத்துக்கொண்டாள். ஒரு பெண்மணி பிரணய கோபத்தால் தன்னை மறந்து புருவங்களை நெறித்துக்கொண்டும் பற்களைக் கடித்துக்கொண்டும் குறுக்குப் பார்வையால் அடிப்பவள்போன்று கிருஷ்ணனைப் பார்க்கலானுள்.

ताभिर्विधूतशोकाभिर्भगवानच्युतो वृतः। व्यरोचताधिकं तात पुरुषः शक्तिभिर्यथा ॥ १० ॥ ताः समादाय कालिन्द्या निर्विश्य पुलिनं विभुः। विकसत्कुन्दमन्दारसुरभ्यनिलषट्पदम् ॥ ११ ॥ शरच्चन्द्रांशुसंदोहध्वस्तदोषातमःशिवम्। कृष्णाया हस्ततरलाचितकोमलवालुकम् ॥ १२ ॥

துக்கக் கடலினின்றும் கரையேறின கோபிகைகளின் மத்தியில் பகவான், ஞானம், பலம், வீரியம், ஐசுவரியம் முதலிய சக்திகளுடன் கூடின உபாஸகன் போன்று நன்கு விளங்கினுர். பிறகு பகவான், அவர்கள் எல்லோரையும் யமுனநதிக்கு யழைத்துச் சென்று ஓர் மணற்குன்றில் உட்கார்ந்தார். அச்சமயம் மலர்ந்த குந்தம், மந்தாரம் முதலிய புஷ்பங்களினின்று பூந்தேனைப் பருகும்

வண்டுகளின் ரீங்கார சப்தமும், புஷ்பங்களின் நறுமண மளாவிய காற்றும், நிர்மலமான ஒளியுடன் பிரகாசிக்கும் சரத்காலத்துச் சந்திரனும், அம்மணற் குன்றின் அழகை நன்கு விளக்கின.

**तद्दर्शनाह्लादविधूतहृद्रुजो मनोरथान्तं श्रुतयो यथा ययुः ।**
**स्वैरुत्तरीयैः कुचकुंकुमाङ्कितैरचीक्लृपन्नासनमात्मबन्धवे ॥ १३ ॥**
**सभाजयित्वा तमनङ्गदीपनं सहासलीलेक्षणविभ्रमभ्रुवा ।**
**संस्पर्शनेनाङ्ककृताङ्घ्रिहस्तयोः संस्तुत्य ईषत्कुपिता बभाषिरे ॥ १५ ॥**

கோபிகைகள் அவரை ஆசையுடன் பார்த்து வெகுகாலமாகத் தங்களைத் துன்புறுத்திக் கொண்டிருந்த தாபத்தை அகற்றிக் கொண்டார்கள். அவர்கள் தங்கள் மனோரதங்களை நிறைவேற்றுவதில், ஆவலுற்று, ஸ்தனங்களில் பூசியிருந்த குங்குமத்தின் வாசனையுடன் கூடிய முன் தலைப்பை கீழேவிரித்து, தங்கள் பிராண நாயகனான கிருஷ்ணருடன் அதில் உட்கார்ந்தார்கள். மன்மத விகாரத்தை வளர்க்கும் கிருஷ்ணனைக் கோபிகைகள், புன்சிரிப்பு, அழகான பார்வை, புருவத்தை நெறித்தல் முதலிய சிருங்கார லீலைகளைச் செய்து உபசரித்து, அவருடைய கால்களையும் கைகளையும் மடியில் வைத்து நன்றாகப் பிடித்து, அவரைச் சந்தோஷப் படுத்திக் கொண்டு, பின் சிறிது பிரணய கோபத்தை யடைந்தவர்கள் போன்று அவரிடம் கேட்கலானார்கள்.

**भजतोऽनुभजन्त्येक एक एतद्विपर्ययम् ।**
**नोभयांश्च भजन्त्येक एतन्नो ब्रूहि साधु भोः ॥ १६ ॥**

"நாதா! சிலர் தன்னை பஜித்தவர்களை அனுசரித்து அவர்களைத் திரும்ப பஜிக்கிறார்கள். சிலர் தன்னைப் பஜியாதவர்களையும் பஜிக்கிறார்கள். சிலர் தன்னை பஜியாதவர்கள் பஜித்தவர்கள் இருவர்களையும் பஜிக்கிறதில்லை. இம்மூவர்களுடைய ஏற்றத் தாழ்வுகளை எங்களுக்குச் சொல்லவேண்டும்."

**श्रीभगवानुवाच—मिथो भजन्ति ये सख्यः स्वार्थैकान्तोद्यमाहि ते ।**
**न तत्र सौहृदं धर्मः स्वार्थार्थं तद्धि नान्यथा ॥ १७ ॥ भजन्त्यभजतो ये**
**वै करुणाः पितरो यथा । धर्मो निरपवादोऽत्र सौहृदं च सुमध्यमाः**

॥ १८ ॥ भजतोऽपि न वै केचिद्भजन्त्यभजतः कुतः । आत्मारामाह्याप्तकामा अकृतज्ञा गुरुद्रुहः ॥ १० ॥

கோபிகைகள் இவ்வாறு வினவவே பகவான் "சகிகளே! ஒருவரை யொருவர் சுயநலம் கருதிச் சிநேகம் செய்யலாம். அதில் அன்புமில்லை. தர்மமுமில்லை. ஆனால் சுயநலமே பிரதானமாக விளங்குகிறது. சிறுத்த இடையோர்களே! ஆனால் மாதா பிதாக்கள் குழந்தைகளை அன்புடன் பாராட்டுவது போன்று எவர்கள் பிறருக்கு உபகாரம் செய்கிறார்களோ அவர்களிடத்தில் மாசற்ற தர்மமும் உயர்ந்த அன்பும் விளங்குகின்றன. சிலர் உபகாரஞ் செய்தவர்களையே உபேக்ஷிக்கின்றனர். அவர்கள் உபகாரஞ் செய்யாதவர்களை உபேக்ஷிப்பார்கள் என்பதைச் சொல்லவும் வேண்டுமா? அத்தகைய மனிதர்கள் நான்கு வகையாவர். தன்னிடத்திலேயே ரமிப்பவர்கள், அபேக்ஷையின்றி எல்லாவற்றையும் அடைந்தவர்கள், செய்நன்றி யறியாத மூடர்கள், செய்நன்றி மறந்தவர்கள், என்று நான்கு வகை ஆவர்" என்று கூறிமுடித்தார்.

नाहं तु सख्यो भजतोऽपि जन्तून्भजाम्यमीषामनुवृत्तिवृत्तये ।
यथाऽधनो लब्धधने विनष्टे तच्चिन्तयाऽन्यन्निभृतो न वेद ॥ २० ॥
एवं मदर्थोज्झितलोकवेदस्वानां हि वो मय्यनुवृत्तयेऽबलाः ।
मया परोक्षं भजता तिरोहितं माऽसूयितुं माऽर्हथ तत्प्रियं प्रियाः ॥ २१ ॥

பகவான் தன்னை செய்நன்றி மறந்தவராக ஒப்புக்கொண்டதாகவே கோபிகைகள் நினைத்து, கண்ணைக்காட்டிப் பேசிக்கொண்டார்கள். பகவான் அதை யறிந்து மறுபடியும் கூறலானார். "சகிகளே! நான் பஜித்தவர்களை பஜியாமல் இருப்பது செய்நன்றி மறந்ததினாலன்று. பின்னையோவெனில் உங்களுக்கு என்னிடம் ஆசை மேன்மேலும் வளரவேண்டும் என்றே. அதனாலே தான் நீங்கள் என்னை பஜித்தும் அதற்குத் தக்கவாறு நான் உங்களைப் பஜிக்கவில்லை. பிறவி தரித்திரன் திடீரென்று சம்பத்தை யடைந்து அதை ஒரு க்ஷணத்தில் இழக்கும்படி நேர்ந்ததும் அவன் அப்பணத்தையே நினைத்து எல்லாவற்றையும் மறப்பது போன்று உங்களுக்கு என்னிடம் மேலான அன்பு ஏற்படுவதற்

காகவே நான் இவ்வாறு மறைந்தேன். உங்களுடைய அன்பார்ந்த மொழிகளைக் கேட்டேன். என்மீது கோபங்கொள்வது தகுதியன்று.

न पारयेऽहं निरवद्यसंयुजां स्वसाधुकृत्यं विबुधायुषाऽपि वः ।
या माऽभजन्दुर्जरगेहशृङ्खलाः संवृश्च्य तद्वः प्रतियातु साधुना ॥ २२ ॥

எளிதில் அறுக்கமுடியாத ஸம்ஸாரமாகிய விலங்குகளை அறுத்துத் தள்ளிவிட்டு மாசற்ற நேசத்தால் என்னை உபசரித்தீர்கள். நான் அதற்குக் கைமாறாக என் ஆயுளனைத்தும் உழைத்தாலும் தகும்" என்றார்.

## முப்பத்துமூன்றாவது அத்தியாயம்.



{ त्रयस्त्रिंशे ततो गोपीमण्डलीमध्यगो हरिः ।
प्रियास्ता रमयामास ह्रदिनीवनकेलिभिः ॥ }

[கிருஷ்ணன் பலரூபங்களெடுத்து கோபிகைகளின் நடுவில் நின்று நர்த்தனம் செய்தல்–வனக்கிரீடை ஜலக்கிரீடை இவைகளால் அவர்களை ஆனந்தமடையச் செய்தல்.]

श्रीशुक उवाच—इत्थं भगवतो गोप्यः श्रुत्वा वाचः सुपेशलाः । जहु-
र्विरहजं तापं तदङ्गोपचिताशिषः ॥ १ ॥ तत्राऽऽरभत गोविन्दो रासक्रीडा-
मनुव्रतैः । स्त्रीरत्नैरन्वितः प्रीतैरन्योन्याबद्धबाहुभिः ॥ रासोत्सवः संप्रवृत्तो
गोपीमण्डलमण्डितः । योगेश्वरेण कृष्णेन तासां मध्ये द्वयोर्द्वयोः ।
प्रविष्टेन गृहीतानां कण्ठे स्वनिकटं स्त्रियः ॥ ३ ॥

பகவானுடைய தேகத்தைத் தழுவும் பாக்கியத்தைப் பெற்ற கோபிகைகள் அவருடைய இனிய மொழிகளைக் கேட்டு அவரது பிரிவாலுண்டான தாபத்தைப் போக்கிக் கொண்டார்கள். பிறகு கோபிகைகளின் இந்திரனான பகவான், தன்னை அன்புடன் பின்பற்றியிருக்கும் ஸ்திரீ ரத்தினங்கள் கைகோர்த்து நிற்க, அவர்களுடன் ராஸக்கிரீடை என்ற நர்த்தனத்தை நடிக்கத் தொடங்கி

ஞர். அச்சமயம் கோபிகைகள் எல்லோரும் ஒரே வட்டமாய் நின்ருர்கள். பகவான் யோக மகிமையால் பலரூபந்தரித்து இரண்டு இரண்டு கோபிகைகளுக் கிடையில் தோன்றி, ஒவ்வொருவர் கழுத்தையும் அணைத்து நின்ருர்.

यं मन्येरन्नभस्तावद्विमानशतसंकुलम् । दिवौकसां सदाराणामौत्सुक्यापहृतात्मनाम् ॥ ४ ॥ ततो दुन्दुभयो नेदुर्निपेतुः पुष्पवृष्टयः । जगुर्गन्धर्वपतयः सस्त्रीकास्तद्यशोऽमलम् ॥ ५ ॥ वलयानां नूपुराणां किङ्किणीनां च योषिताम् । सप्रियाणामभूच्छब्दस्तुमुलो रासमण्डले ॥ ६ ॥

ஆயினும் அப்பெண்மணிகள் ஒவ்வொருவரும், கிருஷ்ணன் தன்னருகில் நின்று தன் கழுத்தை மட்டும் கட்டி நிற்பதாகவே நினைத்தனர். இவ்விதம் கோலாகலமாய் நிகழும் ராஸக்கிரீடை என்ற உத்ஸவத்தைக் கண்டு களிக்க ஆவலுற்று, தேவர்கள் தங்கள் தங்கள் ஸ்திரீகளுடன் ஆயிரக் கணக்கான விமானங்களில் ஏறிக் கொண்டு ஆகாய மார்க்கமாய் அவ்விடம் வந்து, துந்துபி வாத்தியத்தை முழக்கி, பூமாரி பொழிந்தார்கள். கந்தர்வர்கள் தங்கள் ஸ்திரீகளுடன் பகவானுடைய திவ்விய புகழை கானஞ் செய்தார்கள். கோபிகைகள், பிரியரான பகவானுடன் நர்த்தனஞ் செய்யும் பொழுது கைகளி லணிந்த வளைகளுடன் காலில் பூட்டியிருந்த பாதசரங்களும் சலங்கைகளும் இனிமையாக சப்தித்தன.

तत्रातिशुशुभे ताभिर्भगवान्देवकीसुतः ।
मध्ये मणीनां हैमानां महामरकतो यथा ॥ ७ ॥

அவ்விடத்தில் தேவகி புதல்வனுன பகவான் தன் பிரிய சகிகளின் மத்தியில், சுவர்ணமணிகளுக்கு இடையில் கோர்க்கப்பட்ட மரகதப் பச்சை போன்று, அழகாக விளங்கினர்.

उच्चैर्जगुर्नृत्यमाना रक्तकण्ठ्यो रतिप्रियाः । कृष्णाभिमर्शमुदिता यद्गीतेनेदमावृतम् ॥ ९ ॥ काचित्समं मुकुन्देन स्वरजातीरमिश्रिताः । उन्निन्ये पूजिता तेन प्रीयता साधुसाध्विति । तदेव ध्रुवमुन्निन्ये तस्यै मानं च बह्वदात् ॥ १० ॥ काचित् रासपरिश्रान्ता पार्श्वस्थस्य गदाभृतः । जग्राह बाहुना स्कन्धं श्लथद्वलयमल्लिका ॥ ११ ॥

கோபிகைகள் கிருஷ்ணனுடைய அங்க சங்கத்தால் களிப் படைந்து அவரைப் பலவாறு புகழ்ந்து பாடினார்கள். ஒருவள், பகவான் பாடுவது போன்று ஸ்வரங்களை ஒன்றோடொன்று கலக்காமல் சுத்தமாய்ப் பாடினாள். அதனால் பகவான் அவளிடம் திருப்தி யடைந்து ஆமோதித்து அவளைப் பலவாறு புகழ்ந்தார். பிறகு அவள் அதையே உயர்ந்த ஸ்வரத்தில் பாடி கிருஷ்ணனிடம் வெகுமதி பெற்றாள். ஒரு சுந்திரவதி ராஸக்கிரீடையில் சிரமமடைந்து தன் அருகிலிருந்த பகவானுடைய தோளைக் கட்டிக் கொண்டாள்.

तत्रैकांसगतं बाहुं कृष्णस्योत्पलसौरभम् । चन्दनालिप्तमाघ्राय हृष्टरोमा चुचुम्ब ह ॥ १२ ॥ कस्याश्चिन्नाट्यविक्षिप्तकुण्डलत्विषमण्डितम् । गण्डं गण्डे संदधत्या अदात्ताम्बूलचर्वितम् ॥१३॥ नृत्यन्ती गायती काचित् कूजन्नूपुरमेखला । पार्श्वस्थाच्युतहस्ताब्जं श्रान्ताऽधात्स्तनयोः शिवम् ॥

வேறொருத்தி, தன் தோளின் மேலுள்ளதும், தாமரை போன்று நறுமணம் வீசுவதும், சந்தனம்பூசியதுமான பகவானுடைய கையை முகர்ந்து மயிர்க் கூச்சலடைந்து அதை முத்தமிட்டாள். ஒரு பெண்மணி நர்த்தனம் செய்துவருகையில், தன் காதிலணிந்திருந்த குண்டலங்களின் ஒளியால் அழகாக விளங்கும் தன் கன்னத்தை, கிருஷ்ணனுடைய கன்னத்துடன் சேர்த்து அன்புடன் முத்தமிட்டாள். அப்பொழுது பகவான் தன் தாம்பூலத்தை அவள் வாயில் கொடுத்தார். மற்றொருவள், காலி லணிந்திருந்த பாதசரங்களும், இடுப்பில்ப் பூட்டிய ஒட்டியாணமும், சப்திக்கும்படி ஆடியும் பாடியும் சோர்வுற்று, பிரியநாயகனின் அருகிற் சென்று அவரது கராவிந்தத்தைப் பிடித்து, தன் கொங்கை பாரங்களில் வைத்துக் கொண்டு சுகிக்கலானாள்.

गोप्यो लब्ध्वाऽच्युतं कान्तं श्रिय एकान्तवल्लभम् ।
गृहीतकण्ठ्यस्तद्दोर्भ्यां गायन्त्यस्तं विजह्रिरे ॥ १५ ॥

கோபிகைகள் லக்ஷ்மீபதியான அச்சுதனைத் தங்கள் பிரிய நாயகனாக அடைந்து, அவர் தமது கைகளால் தங்கள் கழுத்தை அணைக்கப்பெற்று, அவரைப் புகழ்ந்து பாடி அவருடன் சந்தோஷமாய் விளையாடினார்கள்.

एवं परिष्वङ्गकराभिमर्शस्निग्धेक्षणोद्दामविलासहासैः ।
रेमे रमेशो व्रजसुन्दरीभिर्यथाऽर्भकः स्वप्रतिबिंबविभ्रमः ॥

குழந்தை தன் பிரதிபிம்பத்துடன் விளையாடுவது போல் பகவானும் அவர்களை நன்கு கட்டி யணைத்து, கையால் தடவி, அன்புடன் பார்த்து, வின்யாசமாய்ப் பேசி, அச்சுந்தரிகளுடன் இவ்வாறு விளையாடலானார்.

तदङ्गसङ्गप्रमुदाकुलेन्द्रियाः केशान्दुकूलं कुचपट्टिकां वा ।
नाञ्जः प्रतिव्योढुमलं व्रजस्त्रियो विस्रस्तमालाभरणाः कुरूद्वह ॥ १८ ॥

குருவம்சத்தை நிலைநாட்டிய அரசே! கோபிகைகள் கிருஷ்ண னுடைய அங்கசங்கத்தால் எல்லா இந்திரியங்களும் சலிக்க, சந் தோஷமடைந்தார்கள். அவர்களிற் சிலர், அந்நிலமையில் தலைமுடி அவிழ்ந்ததையும் மேலாடை விலகியதையும் அறியவில்லை. ஆபரணங்கள் மாறியிருந்ததையும் புஷ்பமாலைகள் விழுந்ததையும் அறியவில்லை. அறிந்தவர்களும் சீக்கிரத்தில் முன்போல் அவை களைச் சரிசெய்துகொள்ளச் சக்தியற்றவர்களா யிருந்தனர்.

कृष्णविक्रीडितं वीक्ष्य मुमुहुः खेचरस्त्रियः । कामार्दिताः शशाङ्कश्च
सगणो विस्मितोऽभवत् ॥१९॥ कृत्वा तावन्तमात्मानं यावतीर्गोपयोषितः ।
रेमे स भगवांस्ताभिरात्मारामोऽपि लीलया ॥ २० ॥

கிருஷ்ணன் இவ்வாறு கோபிகைகளுடன் அழகாக விளை யாடுவதைப் பார்த்து தேவஸ்திரீகளும் காமத்தால் வருந்தினர் கள். சந்திரனும் மற்றுமுள்ள கிரஹங்களும் நக்ஷத்திரங்க ளும் அதைப் பார்த்து மயங்கி நின்றன. தன்னிடமே ரமிக் கும் பகவான் ஒவ்வொரு கோபிகைக்கும் ஒவ்வொரு கிருஷ்ணனாகத் தோன்றி, மானிடரின் இயற்கையை நடித்துக் கொண்டு அவர்களுடன் உல்லாசமாய் விளையாடினார்.

ताभिर्युतः श्रममपोहितुमङ्गसङ्गघृष्टस्रजः सकुचकुंकुमरञ्जितायाः ।
गन्धर्वपालिभिरनुद्रुत आविशद्वाः श्रान्तो गजीभिरिभराडिव भिन्नसेतुः ॥

பகவான் ராஸக்கிரீடையில் உண்டான களைப்பை அகற் றிக்கொள்ள கோபிகைகளை அழைத்துக்கொண்டு யமுனையில் இறங்கி, காட்டினத்து மதயானை தன்னைச் சேர்ந்த பல பிடி

யானைகளுடன் நீரில் கரை குத்தி விளையாடுவது போல், ஜலக்கிரீடை செய்யலானர்.

**सोंऽभस्यलं युवतिभिः परिषिच्यमानः प्रेम्णेक्षितः प्रहसतीभिरितस्ततोऽङ्ग ।**
**वैमानिकैः कुसुमवर्षिभिरीड्यमानो रेमे स्वयं स्वरतिरत्र गजेन्द्रलीलः ॥**

ஆத்மா ராமரான கிருஷ்ணன் அநேகம் பெண் மணிகளுக்கு மத்தியில் தண்ணீரில் நின்று, மதங்கொண்ட கஜேந்திரம் போன்று புனலாடினர். அப்பொழுது அந்த ஸ்திரீ ரத்தினங்கள் அவரை நாற்புறமும் சூழ்ந்து கொண்டு அவரை இங்கும் அங்கும் இழுத்து அவர்மீது தண்ணீரை வாறி யிரைத்தார்கள். தேவர்கள், இந்த அற்புதத்தை விமானங்களி லிருந்தபடியே பார்த்துக் களிப்புற்று அவர்மீது பூமாரி பொழிந்து அவரைத் துதித்தார்கள்.

**ततश्च कृष्णोपवने जलस्थलप्रसूनगन्धानिलजुष्टदिक्तटे ।**
**चचार भृङ्गप्रमदागणावृतो यथा मदच्युद्द्विरदः करेणुभिः ॥ २५ ॥**

இவ்விதம் நீராடின பிறகு கிருஷ்ணன், அருகிலுள்ள ஓர் உத்தியான வனத்திற்குள் அம்மாதர்களை அழைத்துச் சென்றார். அந்த உத்தியான வனம் எங்கும் பூத்துக் காய்த்து அழகாக விளங்கிற்று. நீரிலும் நிலத்திலு முள்ள புஷ்பங்களின் வாசனை யுடன் சேர்ந்து, காற்று சுகமாய் வீசலாயிற்று. மதங்கொண்ட ஆண் யானை பல பெண்யானைகளுக் கிடையில் சஞ்சரிப்பது போன்று கிருஷ்ண பகவான் அப்பெண்களுக்கு மத்தியில் கம்பீரமாக உலாவினர்.

**एवं शशाङ्कांशुविराजिता निशाः स सत्यकामोऽनुरताबलागणः ।**
**सिषेव आत्मन्यवरुद्धसौरतः सर्वाः शरत्काव्यकथारसाश्रयाः ॥ २६ ॥**

இவ்விதம் தனக்குள்ளேயே எல்லா விருப்பங்களையும் அனுபவித்து அவைகளின் முடிவைக் கண்ட பகவான், தன்னைப் பிரிய நாயகனாக பாவித்துக் களிக்கும் ஸ்திரீகளுடன், நிர்மலமான சந்திரிகை வீசும் இரவில், கதைகளில் கவிகள் வர்ணிக்கும் லீலைகளனைத்தையும் விளையாடினர். ஆயினும் அவர் காமவிகாரம் சிறிதும் அடையாது இந்திரியத்தைத் தனக்குள் அடக்கிக்கொண்டார்.

**राजोवाच— संस्थापनाय धर्मस्य प्रशमायेतरस्य च । अवतीर्णो हि भगवानंशेन जगदीश्वरः ॥ स कथं धर्मसेतूनां वक्ता कर्ताऽभिरक्षिता ।**

प्रतीपमाचरद्ब्रह्मन्परदाराभिमर्शनम् ॥ २८ ॥ आप्तकामो यदुपतिः कृतवान्वै जुगुप्सितम् । किमभिप्राय एतन्नः संशयं छिन्धि सुव्रत ॥ २९ ॥

சுகமுனிவர் இவ்விதம் ராஸக்கிரீடையை வர்ணித்து முடிந்ததும், பரீக்ஷித்தரசன், கிருஷ்ண பகவானுடைய செயல்களில் சந்தேகமடைந்து, "பிரம்ம நிஷ்டரே! பகவான் அதர்மத்தைக் கண்டித்து, தர்மத்தை நிலைநாட்டி, உலகத்தைக் காத்தருளுவதற்கன்றே பூர்ணகலைகளுடன் கிருஷ்ணராக அவதரித்தார். அவ்விதமிருக்க தாம் வெளியிட்ட தர்மத்தின் வரம்புகளைச் சரிவர உரைத்து, அவை நாசமடையாது அவைகளை நன்கு நிலைநிறுத்தி, அவ்விதமே தாமும் தர்மத்தை நடத்திக் காண்பிப்பதை விட்டு, அவைகளுக்கு எதிரிடையாக, பிறர் மனைவிகளைத் தீண்டி, அதர்மத்தை எங்ஙனம் செய்யத் துணிந்தார். தர்மத்தையே விரதமாகக் கொண்ட சுகமுனிவரே! எல்லா விருப்பங்களின் கரையைக் கண்ட கிருஷ்ணன் எதற்காக இந்த இழிவான காரியத்தைச் செய்தார்? இதன் உண்மை யாது? இதில் என் சந்தேகத்தை அகற்ற வேண்டும்" என்றார்.

श्रीशुक उवाच-धर्मव्यतिक्रमो दृष्ट ईश्वराणां च साहसम् । तेजीयसां न दोषाय वह्नेः सर्वभुजो यथा ॥ ३० ॥ नैतत्समाचरेत् जातु मनसापि ह्यनीश्वरः । विनश्यत्याचरन्मौढ्याद्यथाऽरुद्रोऽब्धिजं विषम् ॥ ३१ ॥

ஸ்ரீ சுகர் கூறுகிறார் "லோகபாலர்களான பெரியோர்களிடம் தர்மத்தின் மாறுபாடும், ஸாஹஸ கிருத்யங்களும், சில சமயங்களில் காணப்படினும், அக்னிபோன்று எல்லாவற்றையும் எரிக்கும் சக்திவாய்ந்த மஹான்களிடம், அவை குற்றமாகா. ஆனால் சாதாரண மானிடன் அம்மஹான்களைப் போன்று தன்னை நினைத்து மனதினாலாவது அவர்களைப் பின்பற்றக்கூடாது. ஒருவேளை புத்தியின்மையால் அவ்வாறு செய்வானேயாகில் அவன் விரைவில் நாசத்தை அடைவான் என்பது திண்ணம். ருத்திரர் காலகூட விஷத்தைப் பருகியதைப் பார்த்து, மற்றவன் அதை உட்கொள்ளத் துணியலாமா?

ईश्वराणां वचः सत्यं तथैवाऽऽचरितं क्वचित् । तेषां यत्स्ववचोयुक्तं बुद्धिमांस्तत्समाचरेत् ॥ ३२ ॥ कुशलाचरितेनैषामिह स्वार्थो न विद्यते ।

**विपर्ययेण वाऽनर्थो निरहङ्कारिणां प्रभो ॥ ३३ ॥ किमुताखिलसत्त्वानां तिर्यङ्मर्त्यदिवौकसाम् । ईशितुश्चेशितव्यानां कुशलाकुशलान्वयः ॥ ३४ ॥**

பெரியோர்களின் வார்த்தைகள் எப்பொழுதும் தர்மத்தை அனுசரித்தே யிருக்கும். ஆனால் அவர்களின் செயல்கள் சில சமயங்களில்மட்டும் தர்மத்தை ஒத்திருக்கும். ஆதலால் புத்திமான், அவர்கள் கூறுவதை ஒத்திருக்கும் அவர்களது செயல்களை மட்டுமே பின்பற்றுவான். அம்மஹான்களுக்கோ தர்மத்தைச் செய்வதில் யாதொரு பயனுமில்லை. அதர்மத்தைச் செய்வதில் யாதொரு தீமையுமில்லை. ஏனெனில் அவர்கள் ஆசையை ஒழித்தவர்கள். இவ்விதமிருப்பின், பசு பக்ஷிமுதல் மனிதர் தேவர் வரை யாவற்றையும் அடக்கியாளும் ஈசனுக்கு; புண்ணிய பாபங்களும் சரீரபந்தமும் கிடையா வென்று சொல்லவும் வேண்டுமோ ?

**गोपीनां तत्पतीनां च सर्वेषामेव देहिनाम् । योऽन्तश्चरति सोऽध्यक्षः क्रीडनेनेह देहभाक् ॥ ३६ ॥ अनुग्रहाय भूतानां मानुषं देहमास्थितः । भजते तादृशीः क्रीडा याः श्रुत्वा तत्परो भवेत् ॥ ३७ ॥ नासूयन्खलु कृष्णाय मोहितास्तस्य मायया । मन्यमानाः स्वपार्श्वस्थान्स्वान्स्वान्दारान्व्रजौकसः ॥३८॥**

கோபிகைகளுக்கும் கணவர்களுக்கும் யாவருக்கும் அந்தர்யாமியாய் விளங்கும் பகவான், கோபிகைகளுடன் விளையாடுவதற்கே இந்த சரீரத்தை எடுத்தார். சிருங்கார ரஸத்தில் பற்றுள்ளவர்களின் மனதையும் தம்மிடம் ஈடுபடும்படி செய்வதற்காகவே பகவான், மனுஷ்யாவதாரம் செய்து இம்மாதிரி லீலைகளைச் செய்தார். கோகுலவாசிகள் அனைவரும் கிருஷ்ண மாயையால் மயங்கி தங்கள் தங்கள் மனைவிகள் தம் தம் அருகில் இருப்பதாகவே யெண்ணினார்கள்."

**ब्रह्मरात्र उपावृत्ते वासुदेवानुमोदिताः ।**
**अनिच्छन्त्यो ययुर्गोप्यः स्वगृहान्भगवत्प्रियाः ॥ ३९ ॥**

பகவானுடைய அந்தரங்க சகிகள், இவ்விதம் அன்றிரவில் விளையாடிவிட்டு, விடியற்காலத்தில் பிராம்மம் என்ற வேளையில், பகவானைப் பிரிய மனமில்லாதவர்களாயிருந்தும் அவரது கட்டளையை ஏற்றுக்கொண்டு, தங்கள் தங்கள் வீடுகளுக்குச்சென்றார்கள்.

# முப்பத்து நான்காவது அத்தியாயம்.



{ चतुस्त्रिंशेऽहिनाग्रस्तं नन्दं हरिरमूमुचत् ।
विद्याधरश्चाङ्गिरसशापाच्छङ्खचूडं तथाऽवधीत् ॥ }

[பகவான் ஸர்ப்பத்தினின்று நந்தரையும் அங்கிரஸ்ஸின் சாபத்திலிருந்து வித்யாதரனையும் விடுவித்தல்-சங்கசூடன் வதம்.]

श्रीशुक उवाच— एकदा देवयात्रायां गोपाला जातकौतुकाः । अनोभिरनडुद्युक्तैः प्रययुस्तेऽम्बिकावनम् ॥१॥ तत्र स्नात्वा सरस्वत्यां देवं पशुपतिं विभुम् । आनर्चुरर्हणैर्भक्त्या देवीं च नृपतेऽम्बिकाम् ॥ गावो हिरण्यं वासांसि मधु मध्वन्नमादृताः । ब्राह्मणेभ्यो ददुः सर्वे देवो नः प्रीयतामिति॥

அரசே! ஒரு சமயம் சிவராத்திரி தினத்தில் கோபாலர்கள் எருது பூட்டிய வண்டிகளில் ஏறிக்கொண்டு அம்பிகா வனஞ்சென்றார்கள். அங்கு சரஸ்வதி நதியில் நீராடி, பூஜாத் திரவியங்களைச் சேகரித்து, பக்தியுடன் எல்லாம் வல்ல பசுபதியையும், அம்பிகா தேவியையும், பூஜை செய்தார்கள். பிறகு அவர்கள், பொன் வஸ்திரம் முதலியவைகளை பிராம்மணருக்குத் தானம் செய்தார்கள்.

ऊषुः सरस्वतीतीरे जलं प्राश्य धृतव्रताः । रजनीं तां महाभागास्सुनन्दानन्दकादयः ॥ ४ ॥ कश्चिन्महानहिस्तस्मिन्विपिनेऽतिबुभुक्षितः । यदृच्छयाऽऽगतो नन्दं शयानमुरगोऽग्रसीत् ॥ ५ ॥ स चुक्रोशाहिना ग्रस्तः कृष्ण कृष्ण महानयम् । सर्पो मां ग्रसते तात प्रपन्नं परिमोचय ॥ ६ ॥

மஹா பாக்கியசாலிகளான சுநந்தர் நந்தர் முதலியோர் தண்ணீரை மட்டும் பருகி, சிவராத்திரி விரதத்தை நியமமாய் அனுஷ்டித்து, அன்றிரவை யமுனைக் கரையில் கழிக்கலானார்கள். அச்சமயம் ஒரு பெரிய மலைப்பாம்பு, பசியால் வருந்தி, தற்செயலாய் அவ்விடம் வந்து, அங்கு படுத்திருந்த நந்தரைக் கவ்விற்று. உடன் நந்தர் "கிருஷ்ணா! என்னை ஒரு ஸர்ப்பம் கவ்விக்கொண்டது. உன்னைச் சரணமடைகிறேன். என்னை ரக்ஷிக்கவேண்டும்." என்று கதறினார்.

**तस्य चाक्रन्दितं श्रुत्वा गोपालाः सहसोत्थिताः । ग्रस्तं च दृष्ट्वा विभ्रान्ताः सर्पं विव्यधुरुल्मुकैः ॥७॥ अलातैर्दह्यमानोऽपि नामुञ्चत्तमुरङ्गमः । तमस्पृशत्पदाऽभ्येत्य भगवान्सात्वतां पतिः ॥ ८ ॥ स वै भगवतः श्रीमत् पादस्पर्शहताशुभः । भेजे सर्पवपुर्हित्वा रूपं विद्याधरार्चितम् ॥ ९ ॥**

கோபாலர்கள், நந்தரின் அழுகைக்குரலைக் கேட்டு தூக்கத்தினின்று எழுந்து, கொள்ளிக் கட்டைகளை எடுத்து அப்பாம்பை அடித்தனர். கொள்ளிக் கட்டைகளால் எவ்வளவு அடித்தும், அம்மலைப்பாம்பு நந்தரை விடவில்லை. யாதவ சிரேஷ்டரான பகவான், அவ்விடம் சென்று அப்பாம்பை மிதித்தார். பகவானுடைய மகிமை

ஸுதர்சனனின் மோக்ஷம்.

வாய்ந்த காலால் மிதிபட்டதும், பாபமனைத்தும் அறவே யொழிந்த அப்பாம்பு, அரவ உடலைக் களைந்து, வித்தியாதரர்களுள் மிகச் சிறந்ததொரு உருவத்தை யெடுத்து அவர்முன் தோன்றிற்று.

**तमपृच्छत् हृषीकेशः प्रणतं समुपस्थितम् । दीप्यमानेन वपुषा पुरुषं हेममालिनम् ॥ १० ॥ को भवान्परया लक्ष्म्या रोचतेऽद्भुतदर्शनः । कथं जुगुप्सितामेतां गतिं वा प्रापितोऽवशः ॥ ११ ॥**

உருக்கின தங்கம்போன்று விளங்கும் அந்த வித்தியாதரனைப் பார்த்து, கிருஷ்ணர், "எல்லோரையும் வியக்கத்தக்க அழகுடன் விளங்கும் நீ யார்? இந்த இழிவான பாம்பின் ஜன்மத்தை அடைந்த காரணம் யாது." என்றார்.

**सर्प उवाच—अहं विद्याधरः कश्चित्सुदर्शन इति श्रुतः । श्रिया स्वरूपसंपत्त्या विमानेनाचरन्दिशः ॥ १२ ॥ ऋषीन्विरूपानङ्गिरसः प्राहसं रूपदर्पितः । तैरिमां प्रापितो योनिं प्रलब्धैः स्वेन पाप्मना ॥ १३ ॥**

பகவான் இவ்வாறு கூறிமுடிந்ததும், வித்தியாதரன் அவருக்கு மறுமொழி கூறலானான். "நான் வித்தியாதரன். என் பெயர் ஸுதர்சனன். நான் செல்வத்திலும் அழகிலும் பதவியிலும் பிரசித்தி யடைந்திருந்தேன். எல்லாத் திக்குகளிலும் சஞ்சரித்து வரும்பொழுது, அழகிற் குறைந்த அங்கிரஸ் முனிவர்களைப் பார்த்து, என் அழகிற் செருக்குற்று அவர்களை இகழ்ந்தேன். அவர்களை அவமதித்த பாபத்தின் பயனாக இப்பிறப்பை அடைந்தேன்.

अहं वै लोकगुरुणा पदा स्पृष्टो हताशुभः ।
प्रपन्नोऽस्मि महायोगिन् महापुरुष सत्पते ।
अनुजानीहि मां देव सर्वलोकेश्वरेश्वर ॥ १६ ॥

உம்முடைய பாதத்தைத் தழுவிய அளவில் என்னுடைய பாபம் நீங்கி அச்சாபத்தினின்றும் விடுபட்டேன். யோகீச்வரரே! புருஷோத்தமரே! ஸாதுக்களை ரக்ஷிப்பவரே! கிருஷ்ணா! லோக பாலர்களை யெல்லாம் அடக்கியாளுபவரே! எனக்கு விடை தந்தருளும்.

ब्रह्मदण्डाद्विमुक्तोऽहं सद्यस्तेऽच्युतदर्शनात् । यन्नाम गृह्णन्नखिलान् श्रोतॄनात्मानमेव च । सद्यः पुनाति किं भूयस्तस्य स्पृष्टः पदा हि ते ॥ इत्यनुज्ञाप्य दाशार्हं परिक्रम्याभिवन्द्य च । सुदर्शनो दिवं यातः कृच्छ्रान्नन्दश्च मोचितः ॥ १८ ॥

உம்மைப் பார்த்ததால் இன்று பிராம்மண சாபத்தினின்றும் விடுபட்டேன். உம்முடைய நாமாவை உச்சரிப்பவனும், உம்முடைய குணங்களைக் கேட்பவனும், பரிசுத்த ஞகிறுன், என்றால் உம்முடைய காலடிகளின் ஸம்பந்தத்தை அடைந்தவன் பாபத்தினின்றும் விடுபடுகிறுன் என்பதைச் சொல்லவும் வேண்டுமா." என்று உரைத்துவிட்டு, அவரை வலம் வந்து வணங்கி சுவர்க்கம் சென்றுன். நந்தரும் அன்று நேர்ந்த கஷ்டத்தினின்றும் தப்பினர். கோகுல வாசிகள் கிருஷ்ணன் மகிமையைப் பார்த்து வியப்படைந்தார்கள்.

निशाम्य कृष्णस्य तदात्मवैभवं व्रजौकसो विस्मितचेतसस्ततः ।
समाप्य तस्मिन्नियमं पुनर्व्रजं नृपाऽऽययुस्तत्कथयन्त आदृताः ॥ १९ ॥

கோகுல வாசிகள் கிருஷ்ணனது வைபவத்தைக் கண்டு வியப்புற்று சிரத்தையுடன் விரதத்தை முடித்துவிட்டு அன்று நடந்த ஸம்பவத்தை வர்ணித்துக்கொண்டு கோகுலம் திரும்பினர்கள்.

कदाचिदथ गोविन्दो रामश्चाद्भुतविक्रमः । विजह्रतुर्वने रात्र्यां मध्यगौ व्रजयोषिताम् ॥ २० ॥ उपगीयमानौ ललितं स्त्रीजनैर्बद्धसौहृदैः । स्वलंकृतानुलिप्ताङ्गौ स्रग्विणौ विरजोऽम्बरौ ॥२१॥ निशामुखं मानयन्तावुदितो-

द्रुपतारकम् । मल्लिकागन्धमत्तालिजुष्टं कुमुदवायुना ॥ २२ ॥ जगतुः सर्व-
भूतानां मनःश्रवणमङ्गलम् । एवं विक्रीडतोः स्वैरं गायतोः संप्रमत्तवत् ।
शङ्खचूड इति ख्यातो धनदानुचरोऽभ्यगात् ॥

ஓரிரவில் கிருஷ்ணரும் பலசாலியான ராமரும் பிருந்தா வனத்தில் தம் பிரிய கோபிகைளுடன் உல்லாசமாய் பாடி விளையாடினார்கள். அவ்விருவர்களும் சந்தனம் பூசி நல்ல மாலைகளை அணிந்து, மல்லிகையில் வண்டுகள் மொய்க்கும் வனத்தில் குமுத புஷ்பத்தின் நறுமணத்துடன் காற்று வீசுகையில், எல்லாப் பிராணிகளின் மனமிளகும்படி இனிமையாய் வேணு கானம் செய்தார்கள். கோபமாதர்கள் அவர்களுடைய கானத்தைக் கேட்டு மெய்மறந்து சுகித்தார்கள். இவ்விதம் அவர்கள் சுயேச்சையாய் விளையாடிக் கொண்டும், தம்மை யறியாது பாடிக் கொண்டிருக்குமளவில் சங்கசூடன், என்று பிரஸித்தி பெற்ற குபேரனின் வேலைக்காரன் அவ்விடம் வந்தான்.

சங்கசூட வதம்.

तयोर्निरीक्षतो राजंस्तन्नाथं प्रमदाजनम् । क्रोशन्तं कालयामास
दिश्युदीच्यामशङ्कितः ॥२६॥ क्रोशन्तं कृष्णरामेति विलोक्य स्वपरिग्रहम् ।
यथा गा दस्युना ग्रस्ता भ्रातरावन्वधावताम् ॥ २७ ॥ मा भैष्टेत्यभया-
रावौ शालहस्तौ तरस्विनौ । आसेदतुस्तं तरसा त्वरितं गुह्यकाधमम् ॥

சங்கசூடன், ராமகிருஷ்ணர்கள் இருவரும் பார்த்துக் கொண்டிருக்கும்பொழுது, அவர்களையே துணையாகக்கொண்ட கோபிகைகளை வடதிசையில் துரத்தலானான். அவர்கள் எவ்வளவு கதறியும் அந்த யக்ஷன் அதைச்சிறிதும் கவனிக்கவில்லை. புலிவாயில் அகப்பட்ட பசுப்போன்று 'ராமா, கிருஷ்ணா' என்று கதறும் தம் பிரியநாயகிகளை, அவ்விருவர்களும் விரைவில் தொடர்ந்து சென்று, அந்த யக்ஷனையும் பிடிக்க முயன்றார்கள்.

स वीक्ष्य तावनुप्राप्तौ कालमृत्यू इवोद्विजन् । विसृज्य स्त्रीजनं मूढः
प्राद्रवज्जीवितेच्छया ॥ २९ ॥ तमन्वधावद्गोविन्दो यत्रयत्र स धावति ।
जिहीर्षुस्तच्छिरोरत्नं तस्थौ रक्षन्स्त्रियो बलः ॥ ३० ॥ अविदूर इवाभ्येत्य
शिरस्तस्य दुरात्मनः । जहार मुष्टिनैवाङ्ग सहचूडामणिं विभुः ॥ ३१ ॥

யமன் போன்று வரும் அவர்களைக் கண்டு அவன், நடுநடுங்கி ஸ்திரீகளை விட்டுவிட்டு, தன்னைத்தப்பித்துக் கொள்ள ஓடலானான். அவன் எங்கெங்கு ஓடினானோ அவ்விடமெல்லாம் கோவிந்தனான பகவான் அவனைப் பின்தொடர்ந்து சென்றார். அவன் தலையில் அணிந்திருந்த ரத்தினத்தை அபகரிப்பதற்கு பகவான் விரும்பினார். அப்பொழுது பலராமர் அந்த ஸ்திரீகளுக்கு காவலாக அவ்விடத்தில் நின்றார். சிறிதுதூரம் சென்றதும் பகவான் அந்த துஷ்டனின் தலைமுடியைப் பிடித்துக்கொண்டு, தன் கையால் அவன் தலையில் இடித்து, சூடாமணியுடன் அவனது தலையை வாங்கினார்.

शङ्खचूडं निहत्यैवं मणिमादाय भास्वरम् ।
अग्रजायाददत्प्रीत्या पश्यन्तीनां च योषिताम् ॥ ३२ ॥

இவ்விதம் சங்கசூடனைக் கொன்று அவன் தலையிலிருந்த மணியை எடுத்துக்கொண்டு கோபிகைகள் இருக்குமிடம் சென்று, அவர்கள் முன்னிலையில் தமயனான பலராமருக்கு அம்மணியைச் சந்தோஷமாய்க்கொடுத்தார்.

## முப்பத்தைந்தாவது அத்தியாயம்.



{ पञ्चत्रिंशे वनं याते कृष्णे गोकुलयोषितः ।
युगमश्लोकानुगीतेन निन्युर्दुःखेन वासरान् ॥ }

[கிருஷ்ணன் பிருந்தாவனம் சென்றிருக்கும் பொழுது கோபிகைகள் யுகள கீதையால் அவரைப் பாடி பகல்நேரத்தைக் கழித்தல்]

गोप्यः कृष्णे वनं याते तमनुद्रुतचेतसः ।
कृष्णलीलाः प्रगायन्त्यो निन्युर्दुःखेन वासरान् ॥ १ ॥

கோபிகைகள் பகவானுடன் இராக்காலத்தைச் சந்தோஷமாகக் கழித்துவிட்டு, பகற்பொழுதில் அவர் பிருந்தாவனம் சென்றிருக்கையில், அவர் பிரிவை சகிக்காது அவரையே நினைத்துக்கொண்டும், அவருடைய விளையாட்டுகளை கானம் செய்துகொண்

டும், ஒருவாறு அப் பகற்பொழுதை கஷ்டத்துடன் கழித்து வந்தார்கள். அப்பொழுது அவர்கள், அவருடைய அழகையும், அவர் பிரிவால் ஏற்படும் துக்கத்தையும், ஒருவருக்கொருவர் வர்ணிக்கலானார்கள்.

वामबाहुकृतवामकपोलो वल्गितभ्रुरधरार्पितवेणुम् ।
कोमलांगुलिभिराश्रितमार्गं गोप्य ईरयति यत्र मुकुन्दः ॥ २ ॥
व्योमयानवनिताः सह सिद्धैर्विस्मितास्तदुपधार्य सलज्जाः ।
काममार्गणसमर्पितचित्ताः कश्मलं ययुरपस्मृतनीव्यः ॥ ३ ॥

"கோபிகைகளே! நம்முடைய கிருஷ்ணன் வேணுகானம் செய்யும்பொழுது அவன் அழகைப் பார்த்தீர்களா? இடது கன்னத்தை இடது தோளில் வைத்தும், புருவத்தை அழகாக நெறித்தும், புல்லாங்குழலை உதட்டில் சேர்த்தும், மிருதுவான விரல்களால் வேணுவின் துவாரங்களை அடைத்தும் திறந்தும், முகுந்தன் வேணுகானம் செய்யும் பொழுது, விமானங்களில் ஏறிக்கொண்டு ஆகாசமார்க்கமாய் சஞ்சரிக்கும் சித்த ஸ்திரீகள், அவனுடைய வேணுகானத்தைக்கேட்டு ஆச்சரியமடைந்தார்கள். அவர்கள், கணவர்களுடனிருந்தும் காமவிகாரமடைந்து அதனால் லஜ்ஜையுற்று வஸ்திரம் விலகியதும் தெரியாமல் பகவானிடம் மோகமடைந்தார்கள்.

हन्त चित्रमबलाः शृणुतेदं हारहास उरसि स्थिरविद्युत् ।
नन्दसूनुरयमार्तजनानां नर्मदो यर्हि कूजितवेणुः ॥ ४ ॥
वृन्दशो व्रजवृषा मृगगावो वेणुवाद्यहृतचेतस आरात् ।
दन्तदष्टकवला धृतकर्णा निद्रिता लिखितचित्रमिवाऽऽसन् ॥ ५ ॥

"பெண்களே! இதைக் கேளுங்கள். புன்னகை செய்யும் பொழுது, தந்தங்களின் காந்தியால் மார்பில் அணிந்திருக்கும் மாலையை பிரகாசப்படுத்துகின்றவனும், சலிக்கா மின்னற்கொடி போன்று விளங்கும் லக்ஷ்மீதேவியை மார்பில் தரித்தவனும், தன்னைச் சரணமடைந்தவர்களின் துன்பத்தைப் போக்கி அவர்களை மகிழச் செய்பவனும், நந்தகோபரின் புதல்வனுமான கிருஷ்ணன், வேணுகானம் செய்யும்பொழுது, கோகுலத்திலுள்ள காளை

களும் மான்களும் பசுக்களும் வேணுகானத்தால் இழுக்கப்பட்டு, நாலா பக்கங்களிலிருந்தும் கூட்டங் கூட்டமாக அவனருகிற் சென்று, காதுகளை உயர்த்தி, புல்லும் வாயுமாக தூங்குவது போன்றும், சித்திரத்தில் எழுதியவை போன்றும், அசைவற்றிருந்தன.

बर्हिणस्तवकधातुपलाशैर्बद्धमल्लपरिबर्हविडंबः ।
कर्हिचित्सबल आलि स गोपैर्गाः समाह्वयति यत्र मुकुन्दः ॥ ६ ॥
तर्हि भग्नगतयः सरितो वै तत्पदांबुजरजोऽनिलनीतम् ।
स्पृहयतीर्वयमिवाबहुपुण्याः प्रेमवेपितभुजाः स्तिमितापः ॥ ७ ॥

மயில்த்தோகை, பூங்கொத்து, மனோசிலை முதலிய தாதுக்கள், இவைகளை அணிந்துகொண்டு, மல்லர்கள்போன்று கச்சை கட்டி விளங்கும் கிருஷ்ணன், பலராமனுடன் வேணுகானம்செய்து பசுக்களை கூப்பிடும் பொழுது அந்த சப்தத்தைக் கேட்டு நதிகள், அவனுடைய பாதாரவிந்த தூளியை அடைவதில் ஆவல்கொண்டு தங்கள் வேகத்தை நிறுத்தி ஓடிவந்து அலைகளாக உயரக்கிளம்பியும் புண்ணியம் செய்யாததில் நம்மை ஒத்து இருந்ததால் அவனைத்தொடுவதற்குச் சக்தியற்று தெவங்கி நின்றன.

दर्शनीयतिलको वनमालादिव्यगन्धतुलसीमधुमत्तैः ।
अलिकुलैरलघुगीतमभीष्टमाद्रियन्यर्हि सन्धितवेणुः ॥ १० ॥
सरसि सारसहंसविहङ्गाश्चारुगीतहृतचेतस एत्य ।
हरिमुपासत ते यतचित्ता हन्त मीलितदृशो धृतमौनाः ॥ ११ ॥

கஸ்தூரீ திலகமிட்டு, வனமாலை தரித்த கிருஷ்ணன், வண்டினங்கள் மதுவுண்டு ரீங்காரஞ் செய்ய, அதற்கிசைந்தவாறு இனிமையாய் வேணுகானஞ் செய்யலானான். அப்பொழுது தாமரைத் தடாகத்திலிருக்கும் ஸாரஸங்களும் ஹம்ஸங்களும் இன்னும் மற்றுமுள்ள பறவைகளும், கிருஷ்ணனுடைய இனிய வேணுகானத்தைக்கேட்டு, மனதைப் பறிகொடுத்தாற் போன்று கண்களை மூடிக் கொண்டும் மனதை அடக்கி உபாசிப்பது போன்று அவனைச் சூழ்ந்துகொண்டிருந்தன. என்ன ஆச்சரியம்! இவ்வளவு அழகு வாய்ந்த கிருஷ்ணனுடைய பிரிவை நாம் எங்ஙனம் ஸஹிப்போம்?

सहबलः स्रगवतंसविलासः सानुषु क्षितिभृतो व्रजदेव्यः ।
हर्षयन्यर्हि वेणुरवेण जातहर्ष उपरंभति विश्वम् ॥ १२ ॥

महदतिक्रमणशङ्कितचेता मन्दमन्दमनुगर्जति मेघः ।
सुहृदमभ्यवर्षत्सुमनोभिश्छायया च विदधत्प्रतपत्रम् ॥ १३ ॥

கிருஷ்ணன் பலராமனுடன் மலைத் தாழ்வாரங்களில் உலாவிக்கொண்டு வேணுகானஞ் செய்தபொழுது, மேகமும், பெரியோர்களுக்கு அபசாரம் செய்வதினின்றும் நடு நடுங்கி, மெதுவாக கர்ச்சனை செய்து, குடைபோன்று சூரிய வெப்பத்தைத் தடுத்து பூமாரி பொழிந்தது போல் அவர்கள் மீது மழைத்துளிகளைப் பொழிந்தது.

निजपदाब्जदलैर्ध्वजवज्रनीरजांकुशविचित्रललामैः ।
व्रजभुवः शमयन्खुरतोदं वर्ष्मधुर्यगतिरीडितवेणुः ॥ १६ ॥
व्रजति तेन वयं सविलासवीक्षणार्पितमनोभववेगाः ।
कुजगतिं गमिता न विदामः कश्मलेन कवरं वसनं वा ॥ १७ ॥

ஒரு சமயம் அவர்கள் யசோதையிடம் சென்று "யசோதே! கிருஷ்ணன், த்வஜம் வஜ்ரம் முதலிய ரேகைகளால் அழகான காலடிகளை பூமியில் வைத்து, பசுக்களின் குளம்புகளால் நேர்ந்த கஷ்டத்தை அகற்றிக்கொண்டு, கஜேந்திரன் போன்று கம்பீரமாக நடந்து வேணுகானம் செய்யும்பொழுது, அவனுடைய அழகையும் புன் சிரிப்பையும் பார்த்து நாங்கள் காம விகாரமடைந்து மரம்போன்று அசைவற்று நின்றோம். வஸ்திரமும் கூந்தலும் அவிழ்ந்ததையும் நாங்கள் அறியவில்லை.

कुन्ददामकृतकौतुकवेषो गोपगोधनवृतो यमुनायाम् ।
नन्दसूनुरनघे तव वत्सो नर्मदः प्रणयिनां विजहार ॥ २० ॥
मन्दवायुरुपवात्यनुकूलं मानयन्मलयजस्पर्शेन ।
वन्दिनस्तमुपदेवगणा ये वाद्यगीतबलिभिः परिवव्रुः ॥ २१ ॥

பதிவிரதா சிரோமணியே! யசோதே! உன்னுடைய குழந்தை நந்தகுமாரன், குந்த புஷ்பத்தை மாலையாக அணிந்து அற்புத வேஷந்தரித்து கன்றுகளையும் பசுக்களையும் கோபாலர்களையும் அழைத்துக்கொண்டு யமுனைக்கரை சென்று, அவர்களுடன் உல்லாசமாய்ப் பேசி விளையாடினன். அப்பொழுது தென்றல் காற்று, மலய பருவதத்தினின்று நறுமணத்துடனும் குளிர்ச்சியுடனும் மெள்ள மெள்ள வீசி அவனை உபசரித்தது. கந்தர்வர்

முதலிய தேவகணங்கள், வாத்தியம் கானம் புஷ்பம் முதலியவை களால் அவனை வந்திகள் போன்று உபசரித்தார்கள்." என்றூர்கள்.

वत्सलो व्रजगवां यदगध्रो वन्द्यमानचरणः पथि वृद्धैः ।
कृत्स्नगोधनमुपोह्य दिनान्ते गीतवेणुरनुगेडितकीर्तिः ॥ २२ ॥
उत्सवं श्रमरुचाऽपि दृशीनामुन्नयन्खुररजश्छुरितस्रक् ।
दित्सयैति सुहृदाशिष एष देवकीजठरभूरुडुराजः ॥ २३ ॥

"கோகுலத்திலுள்ள பசுக்களிடத்தில் மனமிரங்கி மலையைக்குடையாகப் பிடித்த கிருஷ்ணன், மாலையில் பசுக்கள் அனைத்தையும் திரட்டிக்கொண்டும், வேணுகானம் செய்துகொண்டும், சிநேகிதர்கள் தன் புகழைப் பாட, கோகுலத்திற்குத் திரும்பும் பொழுது, வழியில், பிரம்மாதி தேவர்களும் அவனுடைய பாதங்களை வணங்குகிறூர்கள். அவன் கோகுலத்திற்கு அருகில் வரும்பொழுது நாம், அவனைப் பார்த்து அவன் வருகையை ஒரு உத்ஸவம் போல் கொண்டாடுகிறோம். வழிநடந்த களைப்பும், புழுதிபடிந்த மாலையும் அழகைக் கொடுத்து, நம்முடைய கண்களுக்கு சந்தோஷத்தை விளைவிக்கின்றது. தேவகியின் உதரத்தினின்று தோன்றிய சந்திரன் நம்முடைய கஷ்டங்களைப் போக்கி நமக்கு மகிழ்ச்சியைக் கொடுப்பதற்காக இதோ வருகிறூன்." என்று அவர்கள் சொல்லிக்கொள்வார்கள்.

## முப்பத்தாறுவது அத்தியாயம்.



षट्त्रिंशे तु हतेऽरिष्टे नारदोक्त्या बलाच्युतौ ।
वसुदेवसुतौ ज्ञात्वा कंसोऽक्रूरं समादिशत् ॥

[அரிஷ்டாசுரன் வதம்: கம்ஸன் நாரதர் மூலம் ராமகிருஷ்ணர்களை வசுதேவர் புதல்வரென அறிந்து அக்ரூரரை அனுப்புதல்.]

श्रीशुक उवाच—अथ तर्ह्यागतो गोष्ठमरिष्टो वृषभासुरः । महीं महाककुत्कायः कंपयन्खुरविक्षताम् ॥ १ ॥ रंभमाणः खरतरं पदा च विलिखन् महीम् । उद्यम्य पुच्छं वप्राणि विषाणाग्रेण चोद्धरन् ॥ २ ॥

ஒரு சமயம் அரிஷ்டன் என்ற அசுரன் ஒரு பெரிய காளைவேஷம் தரித்து கோகுலத்திற்குச் சென்றான். அவன் உடல் மலைபோன்றும் அவன் சிமிழ் சிகரம்போன்றும், பருத்திருந்தன. அவன் நடந்து வருகையில் அவனது அடிவைப்பால் பூமி நடுங்கிற்று. அவன் செய்த பெருங்குரலைக் கேட்டு ஜனங்கள் பயந்தார்கள். அவ்வசுரன், கால் குளம்புகளால் பூமியைக் கீறியும், கொம்புகளின் நுனியால் மண்ணைக் குத்தியும், பாறைகளைப் பெயர்த்தும், வாலை உயரே தூக்கி மேகங்களைச் சிதறியும், கோகுலத்தை நோக்கி ஓடிவந்தான்.

यस्य निर्ह्रादितेनाङ्ग निष्ठुरेण गवां नृणाम् ॥
पतन्त्यकालतो गर्भाः स्रवन्ति स्म भयेन वै ।
तं तीक्ष्णशृङ्गमुद्वीक्ष्य गोप्यो गोपाश्च तत्रसुः ।
पशवो दुद्रुवुर्भीता राजन्सन्त्यज्य गोकुलम् ॥

அவனது இடிமுழக்கம்போன்ற சப்தத்தைக் கேட்டு கோபிகைகளும் பசுக்களும் மனம் கலங்கினார்கள். கர்ப்பிணிகள் அகாலத்தில் பிரசவித்தும், கர்ப்பம் கலைந்தும் வருந்தினார்கள். கோகுலத்திலுள்ள ஆணும் பெண்ணும் பசுக்களும், அவனுடைய கூர்மையான கொம்புகளைப் பார்த்து பயந்து,

कृष्णकृष्णेति ते सर्वे गोविन्दं शरणं ययुः । भगवानपि तद्वीक्ष्य गोकुलं भयविद्रुतम् ॥ मा भैष्टेति गिराऽऽश्वास्य वृषासुरमुपाह्वयत् ।

அவர்களெல்லோரும் 'கிருஷ்ணா! கிருஷ்ணா' என்று கதறிக்கொண்டு, கோவிந்தனைச் சரணமடைந்தார்கள். பகவான் அவர்களின் துன்புற்ற நிலைமையைப் பார்த்து 'பயப்படாதீர்கள் என்று அவர்களிடம் தைரிய மொழிகளைக் கூறி, விருஷபாசுரனை போருக் கழைத்தார்.

सोऽप्येवं कोपितोऽरिष्टः खुरेणावनिमुल्लिखन् ।
उद्यत्पुच्छभ्रमन्मेघः क्रुद्धः कृष्णमुपाद्रवत् ॥

உடனே அவ்வசுரன், கோபத்தாற் சீறிக்கொண்டும், தன் குளம்புகளால் பூமியைப் பிளந்துகொண்டும், வாலை உயரே தூக்கிச் சுழற்றி மேகக் கூட்டங்களைக் கலைத்துக் கொண்டும், வீராவேசத்துடன் கிருஷ்ணனை எதிர்த்தான்.

तमापतन्तं स निगृह्य शृङ्गयोः पदा समाक्रम्य निपात्य भूतले ।
निष्पीडयामास यथाऽऽर्द्रमंबरं कृत्वा विषाणेन जघान सोऽपतत् ॥ १३ ॥

அவ்வசுரன் தன்னருகில் வந்ததும் பகவான், அவனுடைய இரு கொம்புகளையும் பிடித்து அவனது வேகத்தை அடக்கி, காலால் அவனைமிதித்து பூமியில் வீழ்த்தி, ஈரத்துணியைப் பிழிவதுபோன்று அவனுடைய உடலைக் கசக்கினர். பிறகு பகவான், அவனது இரு கொம்புகளையும் பிடுங்கி அவைகளால் அவனை அடித்துக் கீழே சாய்த்தார்.

असृग्वमन्मूत्रशकृत्समुत्सृजन् क्षिपंश्च पादाननवस्थितेक्षणः ।
जगाम कृच्छ्रं निर्ऋतेरथ क्षयं पुष्पैः किरन्तो हरिमीडिरे सुराः ॥ १४ ॥

அப்பொழுது அவ்வசுரன், வாயினின்று ரத்தத்தைக் கக்கிக்கொண்டும், மலமூத்திரங்களைக் கழித்துக்கொண்டும், கால்களை உதரிக்கொண்டும், கண்கள் சுழல, வெகு கஷ்டத்துடன் யமலோகஞ் சென்முன். அச்சமயம் தேவர்கள் பகவான் மீது பூமாரி பொழிந்து அவரைப் பலவாறு துதித்தார்கள்.

एवं ककुद्मिनं हत्वा स्तूयमानः स्वजातिभिः । विवेश गोष्ठं सबलो गोपीनां नयनोत्सवः ॥ १५ ॥ अरिष्टे निहते दैत्ये कृष्णेनाद्भुतकर्मणा । कंसायाथाऽऽह भगवान्नारदो देवदर्शनः ॥ १६ ॥ यशोदायाः सुतां कन्यां देवक्याः कृष्णमेव च । रामं च रोहिणीपुत्रं वसुदेवेन बिभ्यता ॥ १७ ॥ न्यस्तौ स्वमित्रे नन्दे वै याभ्यां ते पुरुषा हताः ।

பகவான் இவ்வாறு விருஷபாசுரனைக் கொன்றுவிட்டு, உற்றார் உறவினர்கள் தம்மை நன்கு கொண்டாட, கோபிகைகளின் சந்தோஷத்தை

அரிஷ்டன் வதம்.

வளரச் செய்து கொண்டு பலராமருடன் கோகுலத்திற்குள் பிரவேசித்தார். தேவர்களும் கண்டு வியப்புறும்படி தம் பராக்கிரமத்தை வெளியிட்டுக்கொண்டு பகவான் அரிஷ்டனைக் கொன்றவுடன், தேவரிஷியான நாரதர், கம்ஸனிடம் சென்று "கம்ஸா! நீ எந்தப் பெண் குழந்தையைக் கொல்ல முயன்றயோ அவள் யசோதையின் பெண்ணென்று அறிந்துகொள். அவ்வாறே, கிருஷ்ணனை தேவகியின் புதல்வன் என்றும், பலராமனை ரோஹிணியின் புதல்வனென்றும்,

அறிந்துகொள். உன்னிடமிருந்து பயந்ததால் வசுதேவர் இவர்களைத் தன் நண்பர் நந்தரிடம் அடைக்கலம் வைத்தார். உன்னைச்சார்ந்த அசுரர்களை இவ்விரு குழந்தைகளே கொன்றார்கள்" என்றார்.

**निशम्य तद्भोजपतिः कोपात्प्रचलितेन्द्रियः ॥ १८ ॥ निशातमसिमादत्त वसुदेवजिघांसया । निवारितो नारदेन तत्सुतौ मृत्युमात्मनः ॥ ज्ञात्वा लोहमयैः पाशैर्बबन्ध सह भार्यया । प्रतियाते तु देवर्षौ कंस आभाष्य केशिनम् ॥ प्रेषयामास हन्येतां भवता रामकेशवौ । ततो मुष्टिकचाणूर शलतोशलकादिकान् ॥ अमात्यान्हस्तिपांश्चैव समाहूयाऽऽह भोजराट् ।**

கம்ஸன் இதைக் கேட்டதும் கோபத்தால் ஐம்புலன்கள் துடிக்க, கூரிய கத்தியை எடுத்து வசுதேவரைக் கொல்ல முயன்றான். நாரதர் அதைத் தடுத்து விட்டு, சுவர்க்க லோகஞ் சென்றார். கம்ஸன் வசுதேவரையும் தேவகியையும் விலங்கி லிட்டு கேசி என்ற அசுரனை அழைத்து ராமனையும் கிருஷ்ணனையும் கொன்றுவரும் படி அனுப்பினான். பிறகு முஷ்டிகன், சாணூரன், சலன், தோசலகன், முதலிய மந்திரிகளையும் யானைப்பாகர்களையும் அழைத்து,

**भो भो निशम्यतामेतद्वीरचाणूरमुष्टिकौ ॥ नन्दव्रजे किलाऽऽसाते सुतावानकदुन्दुभेः । रामकृष्णौ ततो मह्यं मृत्युः किल निदर्शितः ॥ २३ ॥ भवद्भ्यामिह संप्राप्तौ हन्येतां मल्ललीलया । मञ्चाः क्रियन्तां विविधा मल्लरङ्गपरिश्रिताः । पौरा जानपदाः सर्वे पश्यन्तु स्वैरसंयुगम् ॥ २४ ॥**

"வீரப்புலிகளே! சாணூரா! முஷ்டிகா! ஆனகதுந்துபி யென்ற வசுதேவருடைய இரு குழந்தைகளும் நந்த கோகுலத்தில் வசித்து வருகிறார்கள். அவர்களிட மிருந்துதான் எனக்கு மரணம் ஏற்பட்டிருக்கிறது. ஆதலால் அவர்கள் இங்கு வந்தவுடன் அவர்களை விளையாட்டாகவே மல்ல யுத்தத்திற்கு அழைத்துக் கொல்லுங்கள். மல்லயுத்தத் திற்காக ஒருமண்டபத்தை தயார் செய்து, அதில் நமது நாட்டார் நகரத்தார் அனைவரும் உட்கார்ந்து வேடிக்கை பார்ப்பதற்கு வேண்டிய ஆஸனங்களையும் ஜடிதியில் தயார் செய்யுங்கள்.

**महामात्रनिबोधेदं वचो मम महामते । गजः कुवलयापीडः प्रभिन्नकरटामुखः ॥ २५ ॥ संस्थाप्यो द्वारि रङ्गस्य करारोपितमुद्गरः । तेन तौ तत्र हन्तव्यौ सुतावानकदुन्दुभेः ॥ २६ ॥**

புத்தியிற் சிறந்த மகாமாத்ரனே ! நான் சொல்லுவதைக் கவனமாய்க் கேள். மதத்தைப் பெருக்கிக்கொண்டிருக்கும் குவலயாபீடம் என்ற யானையை ரங்கமண்டபத்தின் வாயிலில் நிறுத்தி, அதன் துதிக்கையில் ஓர் இரும்புலக்கையைக் கொடு. வசுதேவரின் புதல்வர்கள் அவ்விடம் வந்ததும், அவ்வுலக்கையால் அவர்களைக் கொல்லும்படி செய்.

शृणुध्वमेतद्वचनं मयोदितं निशम्य सर्वं हृदि धारयन्तु तत् ।
येनाहमेतेष्वसुहृत्त्वमादितश्चरामि बन्धुष्वपि तस्य कारणम् ॥ २९ ॥

மந்திரிகளே ; பிறந்தது முதல் நான் எனது பந்துக்களைப் பகைத்து வருவதின் காரணத்தைக் கூறுகிறேன். அதைக் கவனமாகக் கேட்டு உங்கள் மனதில் வைத்துக்கொள்ளுங்கள்.

माता मम महाभागा कदाचित्कमलेक्षणा ।
विचचार गृहोद्याने मन्दमारुतवीजिते ॥

முன்னொரு சமயம் அழகிற் சிறந்த என் தாய் தென்றல் காற்று சுகமாய் வீசிக்கொண்டிருக்கையில் உத்தியான வனத்தில் தனிமையாக உலாவினாள்.

चरन्ती तत्र मे माता चिन्तयामास सुव्रता । भर्तारं कामसंतप्ता ऋतुस्नाता स्वलंकृता ॥ ३३ ॥ तत्रैव कश्चिद्गन्धर्वो द्रमिलो नाम नामतः । चरन्नन्तर्हितः काले दृष्ट्वा तामेकचारिणीम् ॥ ३४ ॥ विज्ञाय चिन्तितं तस्याः सर्वसत्त्वाशयार्थवित् । उग्रसेनवपुर्बिभ्रत्सस्मितालापवीक्षितम् ॥३५॥

ருதுஸ்நானஞ்செய்து நல்ல ஆடை ஆபரணங்களை அணிந்துகொண்டு என் தாய் காமவிகாரமடைந்து தன் பர்த்தாவை மனதால் நினைக்கலானாள். திரமிளன் என்ற கந்தர்வன் அவ்வுத்தியான வனத்தில் ஒருவரும் அறியாது தற்செயலாய் சஞ்சரித்துக்கொண்டிருந்தான். காமத்தால் என் தாய் வருந்துவதை யறிந்து அக்கந்தர்வன், என் தந்தை உக்கிரசேனனின் வடிவத்தை எடுத்துக்கொண்டு அழகிய புன்முறுவலுடன் அவளைப் பார்த்தான்.

तामाससाद कामार्तः कामयानां पतिव्रताम् ।
अजानमाना साऽभ्येत्य रेमे तेन समं वने ॥ ३६ ॥

அவன் காமத்தால் வருந்தி அவள் அருகிற் சென்று, அவளுடன் அவ்வனத்தில் உலாவினான். பதிவிரதையான என் தாய் அவனை கந்தர்வன் என்று அறியாது அவனுடன் இன்புற்றாள்.

सा तं विदित्वा रमणेतरं सती नितान्तखेदाविललोचनाशया ।
उवाच कस्त्वं कितवाऽऽर्यगर्हितं दुरात्मना येन कृतं त्वयेदृशम् ॥ ३७॥
इति ब्रुवन्तीं परिसान्त्वयञ्छनैः स दीर्घबाहुर्द्रमिलोऽभ्यभाषत ।
वयं हि गन्धर्वकुलोद्भवाः प्रिये गीर्वाणतुल्यामरवल्लभानुगाः ॥ ३८ ॥

அந்த உத்தமி, அவன் தன் பிரியநாயகனல்ல வென்பதை அறிந்து துன்பக்கடலில் ஆழ்ந்து கண்ணீரைப் பெருக்கிக்கொண்டு, "அற்ப! நீ யார்? பெரியோர்கள் இகழும் இக்கெட்ட காரியத்தை நீ எங்ஙனம் செய்யத் துணிந்தாய்" என்றாள். இவ்விதம் கோபிக்கும் என் தாயை நோக்கி அக்கந்தர்வன், "அழகிய பெண்ணே! நான் ஒரு கந்தர்வன். என் பெயர் திரமிளன். தேவர்களுக்கு ஒப்பானவன்.

भवादृशीनां मनुजाङ्गनानां जानीहि भद्रे सुलभा वयं न च ।
जराविनाशाद्यखिलाधिभागिनां नृणां सुराणां महदन्तरं शुभे ॥ ३९ ॥

உன்போன்ற மானிடர்களுக்கு என்னுடைய சேர்க்கை எளிதில் கிடையாது. உத்தமி! தேவர்களுக்கும் மனிதர்களுக்கும் உள்ள வித்தியாசத்தைக் கவனித்துப் பார். சுந்தரி! மனிதர்களுக்கு மூப்பு, பிணி, சாவு, இவையுண்டு. ஆனால் தேவர்களுக்கு அவை கிடையாது.

अनुलोमः सरोजाक्षि मनुष्यासु दिवौकसाम् ॥ नराणां देवकान्तासु प्रतिलोमो हि सङ्गमः । जानीहि मामनागस्कृत्तेन पङ्कजगन्धिनि ॥ ४४ ॥ तस्मात्ते जायतां पुत्रो मद्वीर्यं न वृथा भवेत् । श्रीमान्धीमान्महोत्साहो न मे वाग्जायते मृषा ॥ ४५ ॥

மானிடப் பெண்களிடத்தில் தேவர்களின் சம்பந்தம் ஒப்பத்தக்கது; மானிடர்களுக்கு தேவஸ்திரிகளின் சம்பந்தம் விலக்கப்பட்டது, என்பதை நீ அறிந்துகொள். ஆதலால் நம்மிருவர்களின் சம்பந்தம் குற்றமற்றதே. என் வீரியம் வீணாகாது. ஆதலால் என் போன்ற ஒரு புத்திரனை நீ அடைவாய். அவன், ஐச்வர்யத்திலும், புத்தியிலும், முயற்சியிலும் மேன்மையாக விளங்குவான்" என்று பலவாறு பணிந்து பேசலானான்.

इत्येवं वादिनं क्रुद्धा माता मम यशस्विनी । प्राह संत्यज्य संतप्ता पातिव्रत्यं सुदुर्लभम् ॥ ४६ ॥ निस्सेतोर्भिन्नवृत्तस्य पापस्योन्मार्गवर्तिनः ।

क्रूरस्ते तनयो भूयात्साहसी निर्दयोऽघृणः ॥ ४७ ॥ नानुग्राह्यो देवतानां द्विजानां च तपस्विनाम् ।

மானமிழந்து இவ்வாறு பேசும் கந்தர்வனைப் பார்த்து என் தாய் "வரைதவறி நடந்து பாபச்செயலைச் செய்து இஷ்டம் போல் திரியும் துராத்மாவான நீ, வெகு கஷ்டத்துடன் இது வரை நான் காத்துவந்த என் கற்பைக் கெடுத்து, என்னையும் தன் பத்திற்கு ஆளாக்கினாய். ஆதலால் உன்னுடைய புதல்வனும் நற்குண நற்செய்கைகளற்று, கொடியவனாயும், ஸாஹஸச் செய்கையைச் செய்பவனாயு மிருந்துகொண்டு, தேவர்களையும், பிராமணர்களையும், தபசிகளையும், துன்புறுத்தி அவர்களின் சாபத்திற்காளாவான்" என்றாள்.

इत्थं वदन्त्यां तस्यां स क्रुद्धायां शापशङ्कितः ॥४८॥ तावकानां भवेच्छत्रुरित्युक्त्वाऽन्तरधीयत । गते तस्मिन्गृहोद्यानान्माता मम तपस्विनी ॥ केनाप्यज्ञातवृत्तान्ता गृहानेवाभ्यपद्यत । ततः सा गर्भमालभ्य कालेनैव सुषाव माम् ॥ इति मे नारदः प्राह कदाचिद्भगवानृषिः । ततः प्रभृत्यहं द्वेष्मि तानेतान्बन्धुदुर्जनान् ॥ यूयं तत्र प्रमाणं हि द्विषन्त्येतेऽपि मां सदा ।

இவ்வாறு அவள் சொன்னதும் கந்தர்வன், அவள் பாதிவ்ரத்தியத்திற்குப் பயந்து, அவள் தன்னைச் சபிப்பதற்குமுன் "உன்பிள்ளை உன்னைச் சேர்ந்தவர்களையும் பகைப்பான்." என்று சொல்லிக் கொண்டே, அவ்விடத்தினின்று மறைந்தான். பிறகு என் தாய் நாளடைவில் கர்ப்பந் தரித்து என்னைப் பெற்றாள். அன்றுமுதல் நான் என் பந்துக்களைப் பகைத்து வருகிறேன். அவர்களும் என்னைப் பகைக்கிறார்கள். இது உங்களனைவருக்கும் தெரிந்த விஷயமே. நாரதர் எனக்கு இந்த விருத்தாந்தத்தை உரைத்தார்.

उग्रसेनं च दुर्बुद्धिं देवकं च दुराशयम् ॥ ५२ ॥ वसुदेवं च कितवमन्यांश्च तदुपाश्रयान् । हत्वा न जायते दोषो मम गन्धर्वजन्मनः ॥ ५३ ॥ तेनादेक्ष्यामि परुषं हन्येतामिति तावहम् । आरभ्यतां धनुर्यागश्चतुर्दश्यां यथाविधि । विशसन्तु पशून्मेध्यान्भूतराजाय मीढुषे ॥ ५८ ॥

"ஆதலால் மந்திரிகளே! கெடுமதியுடைய உக்ரஸேனனையும், பேராசையுள்ள தேவகனையும், கபடனான வசுதேவனையும், அவனைச்

சேர்ந்தவர்களையும் கொல்லுவதில் எனக்கு ஒரு தோஷமுமில்லை. அதனாலேதான், ராமனையும் கிருஷ்ணனையும் கொல்லுவதில் உங்களைக் கடுமையாய்க் கட்டளை யிடுகிறேன். ஆகையால் இனி வரும் சதுர்த்தசி தினத்தில் தனுர் யாகத்தை நடத்தி, பூதபதியாகிய பரமசிவனுக்கு, பசுக்களைப் பலிகொடுங்கள்" என்று கட்டளை யிட்டான்.

**इत्याज्ञाप्यार्थतन्त्रज्ञ आहूय यदुपुङ्गवम् । गृहीत्वा पाणिना पाणिं ततोऽक्रूरमुवाच ह ॥ ५९ ॥ भो भो दानपते मह्यं क्रियतां मैत्रमादृतः । नान्यस्त्वत्तो हिततमो विद्यते भोजवृष्णिषु ॥ ६० ॥ गच्छ नन्दव्रजं तत्र सुतावानकदुन्दुभेः । आसाते ताविहानेन रथेनाऽऽनय मा चिरम् ॥ ६२ ॥**

பிறகு தேசம் காலம் இவைகளை யறிந்த கம்ஸன், யது சிரேஷ்டரான அக்ரூரரை அழைத்து, அவர் கையைத் தன்கையால் அன்புடன் பிடித்து, "பெரியவரே! நீர் எனக்கு ஒரு உதவி செய்யவேண்டும். உம்மைப் போன்று என் நன்மையைக் கருதுபவர் யார் உளர்? ஆதலால் நீர் விரைவில் நந்த கோகுலஞ் சென்று அங்கு வசித்துக்கொண்டிருக்கும் ஆனகதுந்துபியின் குமாரர்களான ராமனையும் கிருஷ்ணனையும் ரதத்தில் ஏற்றி இங்கு அழைத்துவர வேண்டும்.

**निसृष्टः किल मे मृत्युर्देवैर्वैकुण्ठसंश्रयैः । तावानय समं गोपैर्नन्दाद्यैः साभ्युपायनैः ॥ ६३ ॥ घातयिष्य इहानीतौ कालकल्पेन हस्तिना । यदि मुक्तौ ततो मल्लैर्घातये वैद्युतोपमैः ॥ ६४ ॥ तयोर्निहतयोस्तप्तान्वसुदेवपुरोगमान् । तद्बन्धून्निहनिष्यामि वृष्णिभोजदशार्हकान् ॥ ६५ ॥**

அவர்களைக்கொண்டே விஷ்ணுவைச்சார்ந்த தேவர்கள் என்னைக் கொல்லக் கருதியிருக்கிறார்கள். ஆதலால் அவர்களை அழைத்து வரும்பொழுது மற்றுமுள்ள கோபாலர்களையும், நந்தர் முதலியவர்களையும், காணிக்கைகளுடன் இங்கு வரும்படி எனக்காக நீர் அழைக்க வேண்டும். யமன் போன்றிருக்கும் குவலயாபீடம் என்ற யானையால் அவ்விரு குழந்தைகளையும் கொல்லுவேன். ஒருவேளை அவர்கள் தப்பினால் இடிபோன்ற முஷ்டிகளால் யுத்தஞ் செய்யும் மல்லர்களைக்கொண்டு அவர்களை வதைப்பேன்.

उग्रसेनं च पितरं स्थविरं राज्यकामुकम् । तद्भ्रातरं देवकं च ये चान्ये विद्विषो मम ॥ ६६ ॥ ततश्चैषा मही मित्र भवित्री नष्टकण्टका । जरासन्धो मम गुरुर्द्विविदो दयितः सखा ॥ ६७ ॥ शंवरो नरको वाणो मय्येव कृतसौहृदाः । तैरहं सुरपक्षीयान्हत्वा भोक्ष्ये महीं नृपान् ॥ ६८ ॥

அவர்கள் மடிந்ததும், வசுதேவர் முதலியவர்களேயும், உக்கிரஸேனனேயும், தேவகனேயும் இன்னும் மற்றுமுள்ள என் சத்ருக்களேயும் கொல்லுவேன். பிறகு இப்பூமி, விரோதியற்று என் ஆளுகைக்குள் ஒருங்கே நிற்கும். ஜராஸந்தன் என் மாமன். துவிதன் என் நண்பன். சம்பரன், நரகன், பாணன், முதலியவர்கள் எப்பொழுதும் என் நன்மையை நாடினவர்கள். அவர்களின் உதவிகொண்டு நான் என் பகைவர்களேக் கொன்று இப் பூமியை ஏகசக்ராதிபதியாக ஆளப் போகிறேன்.

एतज्ज्ञात्वाऽऽनय क्षिप्रं रामकृष्णाविहार्भकौ ।
धनुर्मखनिरीक्षार्थं द्रष्टुं यदुपुरश्रियम् ॥ ६९ ॥

இவை யெல்லாம் நீர் ஆலோசித்து கோகுலஞ் சென்று, தனுர் யாகத்தைப் பார்ப்பதற்காகவும், மதுராபுரியின் அழகைப் பார்ப்பதற்காகவும், நான் அழைத்ததாக நந்தரிடம் கூறி, அவ்விரு குழந்தைகளேயும் சீக்கிரத்தில் இவ்விடம் அழைத்து வாரும்" என்றான்.

# முப்பத்தேழாவது அத்தியாயம்.



सप्तत्रिंशे हते केशिन्यच्युतो भाविकर्मभिः ।
नारदेन स्तुतः क्रीडन् व्योमासुरमथाऽवधीत् ॥

[கேசியின் வதம்—நாரதர், பகவான் நடந்தப்போதம் செய்கைகளேக்கூறி அவரைத் துதித்தல்—வியோமாசுரன் வதம்.]

केशी तु कंसप्रहितः खुरैर्महीं महाहयो निर्जरयन्मनोजवः ।
सटावधूताभ्रविमानसंकुलं कुर्वन्नभो हेषितभीषिताखिलः ॥ १ ॥

கேசி என்ற அசுரன் கம்ஸனால் அனுப்பப்பட்டு அவனுக்கு நன்மை செய்யக் கருதி பெரிய குதிரை வடிவத்துடன் மனோ வேகமாகக் கோகுலஞ் சென்று அதை நடுங்கச் செய்தான். அவன் குளம்புகளால் பூமி பொடியாயிற்று. அவன், தன் பிடரி மயிர்களை உதரும் பொழுது ஆகாயத்தில் சஞ்சரிக்கும் விமானங்கள் சிதறுண்டன. அவன் கனைத்ததைக் கேட்டு எல்லோரும் பயந்தனர்.

கேசியின் வதம்.

तं त्रासयन्तं भगवान्स्वगोकुलं तद्धेषितैर्वालविघूर्णिताम्बुदम् ।
आत्मानमाजौ मृगयन्तमग्रणीरुपाह्वयत्स व्यनदन्मृगेन्द्रवत् ॥ २ ॥
जघान पद्भ्यामरविन्दलोचनं दुरासदश्चण्डजवो दुरत्ययः ॥ ३ ॥

கடுமையாகக் கனைத்தும் வாலைச் சுழற்றி மேகத்தை சிதற அடித்துக்கொண்டும் அக்கொடியவசுரன் கோகுலத்தை நிலைகுலைந்திடச் செய்துகொண்டு வேகமாக ஓடிவரும்பொழுது, பகவான் தன்னுடன் யுத்தம் செய்வதற்காக அவனை யழைத்தார். அவ்வசுரன் சிங்கம்போன்று பெரும் கர்ஜனைசெய்து கால்களால் பகவானை உதைத்தான். அப்பொழுது அவனுடைய வேகம் ஒருவராலும் தடுக்க முடியாததா யிருந்தது.

तद्वञ्चयित्वा तमधोक्षजो रुषा प्रगृह्य दोर्भ्यां परिविध्य पादयोः ।
सावज्ञमुत्सृज्य धनुःशतान्तरे यथोरगं तार्क्ष्यसुतो व्यवस्थितः ॥ ४ ॥
स लब्धसंज्ञः पुनरुत्थितो रुषा व्यादाय केशी तरसाऽऽपतद्धरिम् ।
सोऽप्यस्य वक्त्रे भुजमुत्तरं स्मयन्प्रवेशयामास यथोरगं बिले ॥ ५ ॥

அதோக்ஷஜரான பகவான் அவ்வுதை தன்மேல் தாக்காதபடி விலகிக்கொண்டு கோபத்துடன் அவனது இரு கால்களையும் கட்டியாகப்பிடித்து உயரே தூக்கிக் கருடன் சர்ப்பத்தை வீசுவதுபோன்று நூறு விற்கடை தூரம் எறிந்தார். அதனால் அவ்வசுரன் பிரக்ஞையற்றுக் கீழே விழுந்தான். பிறகு அவன், மூர்ச்சை தெளிந்தெழுந்து வாயைத் திறந்துகொண்டு கோபத்துடன் மறுபடியும் பகவானைத் தாக்கலானான். பகவான் புன்னகை செய்துகொண்டு புற்றுக்குள் ஸர்ப்பம் நுழைவது போன்று தமது நீண்ட இடது கையை அவன் வாயினுள் நுழைத்தார்.

दन्ता निपेतुर्भगवद्भुजस्पृशस्ते केशिनस्तप्तमयस्पृशो यथा ।
बाहुश्च तद्देहगतो महात्मनो यथाऽऽमयः संववृधे उपेक्षितः ॥ ६ ॥
समेधमानेन स कृष्णबाहुना निरुद्धवायुश्चरणांश्च विक्षिपन् ।
प्रस्विन्नगात्रः परिवृत्तलोचनः पपात लेण्डं विसृजन्क्षितौ व्यसुः ॥ ७ ॥

பகவானின் புஜத்தை அவ்வசுரன் கடித்தவுடன் அவன் பற்கள் பழுக்கக் காய்ச்சின இரும்பைக் கடித்தாற்போல் சிதறிக் கீழே விழுந்தன. அலக்ஷியஞ் செய்யப்பட்ட நோய் தேகத்தில் வளருவது போன்று, அசுரனது வாயில் நுழைக்கப்பட்ட கையும், வெகு சீக்கிரத்தில் பருக்க லாயிற்று. இவ்விதம் நிமிஷத்திற்கு நிமிஷம் பருத்து வளரும் கிருஷ்ணனுடைய கையினுல் அசுரனுடைய தொண்டை அடைபட்டு சுவாசமும் முட்டிற்று. உடல் வியர்த்துக் கண்கள் சுழன்றன. இந்நிலையில் அவன், கால்களை உதரிக்கொண்டும், மலமூத்திரங்களைக் கழித்துக்கொண்டும், உயிர் நீங்கி பூமியில் விழுந்தான்.

तद्देहतः कर्कटिकाफलोपमाद्व्यसोरपाकृष्य भुजं महाभुजः ।
अविस्मितोऽयत्नहतारिरुत्स्मयैः प्रसूनवर्षैर्दिविषद्भिरीडितः ॥ ८ ॥

வெள்ளிரிப் பழம் போல் சிதறுண்டு கிடக்கும் அவ்வசுரனின் வாயினின்றும் பகவான் தமது கையை உருவிக் கொண்டு சிறிதும் கர்வமின்றி நின்றார். தேவர்கள் பூமாரி பெய்து அவரைத் துதித்தார்கள்.

देवर्षिरुपसंगम्य भगवत्प्रवणो नृप । कृष्णमक्लिष्टकर्माणं रहस्येतद-
भाषत ॥ ९ ॥ कृष्णकृष्णाप्रमेयात्मन्योगेश जगदीश्वर । वासुदेवाखिला-
वास सात्वतां प्रवर प्रभो ॥ १० ॥ त्वमात्मा सर्वभूतानामेको ज्योतिरिवै-
धसाम् । गूढो गुहाशयः साक्षी महापुरुष ईश्वरः॥ दिष्ट्या ते निहतो दैत्यो
लीलयाऽयं हयाकृतिः । यस्य हेषितसन्त्रस्तास्त्यजन्त्यनिमिषा दिवम् ॥१४॥

பரீக்ஷித்தரசனே! தேவரிஷியான நாரதர் கிருஷ்ண பரமாத்மாவினருகில் சென்று அவரை வணங்கி, ரகசியமாக அவரிடம் சொல்லலானார். "கிருஷ்ணா! யோகீச்வரா! அளவற்ற பலமுடையவரே! ஜகதீச்வரா! வாசுதேவா! சாத்வதர்களுக்கு முதல்வனே! பிரபுவே! எல்லாப் பிராணிகளையும் உஜ்ஜீவிப்பவரே! எல்லாப் பிராணிகளுக்கும் நீர் ஒருவரே ஆத்மாவாக

விளங்குகிறீர். கட்டைக்குள் அக்னியிருப்பதுபோன்று நீர் எல்லாப் பிராணிகளின் ஹிருதயத்தில் மறைந்திருந்தும் எல்லாவற்றிற்கும் ஸாக்ஷியாக இருக்கிறீர். நீர்தான் ஆதி புருஷர். நீர் குதிரை வடிவமெடுத்த கேசி என்ற அசுரனை எளிதில் கொன்றது எங்கள் பாக்கியமே; அவனுடைய கர்ஜனையைக்கேட்டு தேவர்களும் நடுங்கி சொர்க்க லோகத்தினின்றும் ஓடி ஒளித்துக் கொண்டார்கள்.

चाणूरं मुष्टिकं चैव मल्लानन्यांश्च हस्तिनम् । कंसं च निहतं द्रक्ष्ये परश्वोऽहनि ते विभो ॥ १५ ॥ तस्यानु शङ्खयवनमुराणां नरकस्य च । पारिजातापहरणमिन्द्रस्य च पराजयम् ॥ १६ ॥ उद्वाहं वीरकन्यानां वीर्यशुल्कादिलक्षणम् । नृगस्य मोक्षणं पापाद्द्वारकायां जगत्पते ॥ १७ ॥

இதுபோன்று நீர், சாணூரன், முஷ்டிகன் என்ற மல்லர்களையும் மற்றுமுள்ள யானைப்பாகர்களையும், கம்ஸனையும், இன்னு மிரண்டு தினத்தில் கொல்லுவதை நான் பார்க்கப்போகிறேன். பிறகு சங்கன், யவனன், முரன், நரகன், முதலிய அசுரர்களைக் கொல்லுவதையும், பாரிஜாத புஷ்பத்தை அபகரிப்பதையும், இந்திரனை யுத்தத்தில் ஜயிப்பதையும், நான் பார்க்கப்போகிறேன். நீர், பலத்தையே பரிசாகக்கொண்ட பல வீரகன்னிகைகளை விவாஹம் செய்வதையும், நிருகனை சாபத்தினின்று விடுவிப்பதையும் பார்க்கப்போகிறேன்.

यानि चान्यानि वीर्याणि द्वारकामावसन्भवान् ।
कर्ता द्रक्ष्याम्यहं तानि गेयानि कविभिर्भुवि ॥ २० ॥
अथ ते कालरूपस्य क्षपयिष्णोरमुष्य वै ।
अक्षौहिणीनां निधनं द्रक्ष्याम्यर्जुनसारथेः ॥ २१ ॥

பிறகு நீர் துவாரகாபட்டணத்தில் வசித்துக்கொண்டு, என்ன அற்புதமான காரியங்களைச் செய்யப் போகிறீரோ, அவைகளையும் நான் பார்க்கப்போகிறேன். கவிகள் உம்முடைய புண்ணிய புகழைப் பூமியுள்ளவரை கானம் செய்வதையும் நான் கேட்கப் போகிறேன். பிறகு நீர், அர்ஜுனனுக்கு ஸாரதியாகவிருந்து பாரத யுத்தத்தில் பல அக்ஷௌஹிணி ஸைன்யங்களைக் கொல்வதையும் நான் பார்க்கப்போகிறேன். உம்மை வணங்குகிறேன்."

श्रीशुक उवाच—एवं यदुपतिं कृष्णं भागवतप्रवरो मुनिः । प्रणिपत्याभ्यनुज्ञातो ययौ तद्दर्शनोत्सवः ॥ २४ ॥ भगवानपि गोविन्दो हत्वा केशिन-

माहवे । पशूनपालयत्पालैः प्रीतैर्व्रजसुखावहः ॥ २५ ॥ एकदा ते पशून् पालाश्चारयन्तोऽद्रिसानुषु । चक्रुर्निलायनक्रीडाश्चोरपालापदेशतः ॥ २६ ॥

பிறகு பாகவதோத்தமரான நாரதமுனிவர் யது சிரேஷ்டரான கிருஷ்ணரை வலம் வந்து, அவரை நமஸ்கரித்து அவரிடம் விடை பெற்றுக்கொண்டு, அவரது தரிசனத்தால் உள்ளம் களித்தவாறு தன்னிருப்பிடம் சென்றார். பகவான் கேசி என்ற அசுரனை யுத்தத்தில் கொன்று, கோகுலவாசிகளைச் சந்தோஷப்படுத்தி, தன் பிரிய நண்பர்களுடன் பசுக்களை வழக்கம்போல் மேய்த்து வந்தார். ஒரு சமயம் அவர்கள் மலையின் தாழ்வரைகளில் பசுக்களை மேய்த்துக்கொண்டு திருடன் காவற்காரன் என்று விளையாடினர்.

तत्राऽऽसन्कतिचिच्चोराः पालाश्च कतिचिन्नृप । मेषायिताश्च तत्रैके विजह्रुरकुतोभयाः ॥ २७ ॥ मयपुत्रो महामायो व्योमो गोपालवेषधृत् । मेषायितानपोवाह प्रायश्चोरायितो बहून् ॥ २८ ॥ गिरिदर्यां विनिक्षिप्य नीतं नीतं महासुरः । शिलया पिदधे द्वारं चतुःपञ्चावशेषिताः ॥ २९ ॥

அவர்கள் திருடர்கள், காவற்காரர்கள், ஆடுகள் என்று தங்களைப் பிரித்துக்கொண்டு விளையாடினார்கள். அச்சமயம் மகா மாயாவியும் மயனின் புதல்வனுமான வியோமன் என்ற அசுரன் ஒரு கோபால வடிவத்தை எடுத்து, திருடர்களில் ஒருவனாக அவர்களுடன் சேர்ந்து, ஆட்டின் ரூபந்தரித்த பல கோபாலர்களைத் திருடிச் சென்றான். அக்கொடிய அசுரன் தான் திருடிச்சென்ற கோபாலர்களை ஒருமலையின் குகையில் வைத்து அதன் வாயிலை ஒரு பெரிய தகட்டுக்கல்லால் அடைத்துவிட்டு முன்போல் விளையாடினான். கடைசியில் நாலைந்து கோபாலர்களே எஞ்சினார்கள்.

तस्य तत्कर्म विज्ञाय कृष्णः शरणदः सताम् । गोपान्नयन्तं जग्राह वृकं हरिरिवौजसा ॥ ३० ॥ स निजं रूपमास्थाय गिरीन्द्रसदृशं बली । इच्छन्विमोक्तुमात्मानं नाशक्नोत् ग्रहणातुरः ॥३१॥ तन्निगृह्याच्युतो दोर्भ्यां पातयित्वा महीतले । पश्यतां दिवि देवानां पशुमारममारयत् ॥ ३२ ॥

பகவான் அவனது செயலை அறிந்து சிங்கம் செந்நாயைப் பிடிப்பது போல் அவனைப் பிடித்துக்கொண்டார். அவ்வசுரன் பெரிய மலைக்கொப்பான உண்மை வடிவத்தை எடுத்து கிருஷ்ணனிடமிருந்து

தப்பமுயன்றானுயினும் முடியவில்லை. பகவான் தமது கைகளால் அவனைப் பிடித்துப் பூமியில் வீழ்த்தி அவன் சுவாஸத்தை யடைத்து ஆகாசத்திலிருந்தவாறு தேவர்கள் பார்க்க அவனைக் கொன்றார்.

गुहापिधानं निर्भिद्य गोपान्निःसार्य कृच्छ्रतः ।
स्तूयमानः सुरैर्गोपैः प्रविवेश स्वगोकुलम् ॥ ३३ ॥

அவர் அதன் வாயிலில் மூடியிருந்த பாறுங்கல்லை உடைத்துத் தள்ளி கோபாலர்களை அவ்வாபத்தினின்றும் விடுவித்தார். அதன்பின் பகவான், தேவர்களும், கோபாலர்களும் தன்னைப் புகழ்ந்துபாட பசுக்களை அழைத்துக்கொண்டு கோகுலத்திற்குச் சென்றார்.

# முப்பத்தெட்டாவது அத்தியாயம்.



{ अष्टात्रिंशे यथा ध्यायन्नक्रूरो गोकुलं गतः ।
तथैव रामकृष्णाभ्यां गृहं नीत्वा सुसत्कृतः ॥ }

[அக்நூர் நினைந்துச் சென்ற விதமே கோகுலத்தில் ராம கிருஷ்ணர்கள் அவரை உபசரித்தல்.]

श्रीशुक उवाच— अक्रूरोऽपि च तां रात्रिं मधुपुर्यां महामतिः ।
उषित्वा रथमास्थाय प्रययौ नन्दगोकुलम् ॥ १ ॥ गच्छन्पथि महाभागो
भगवत्यम्बुजेक्षणे । भक्तिं परामुपगत एवमेतदचिन्तयत् ॥ २ ॥

புத்தியிற் சிறந்த அக்ரூரர் மதுராபுரியில் அன்றிரவைக் கழித்து மறுநாள் காலையில் ரதத்தில் ஏறி நந்த கோகுலத்திற்குப் புறப்பட்டார். போகும் வழியில் பாகவதோத்தமரான அக்ரூரர் தாமரைக்கண்ணனை பகவானை மனதில் நினைத்துக்கொண்டு பரவசமாகி பின் வருமாறு தனக்குள் ஆலோசிக்கலானார்.

किं मया चरितं भद्रं किं तप्तं परमं तपः । किंवाऽथाप्यर्हते दत्तं
यद्द्रक्ष्याम्यद्य केशवम् ॥ ३ ॥ ममैतद् दुर्लभं मन्य उत्तमश्लोकदर्शनम् ।

**विषयात्मनो यथा ब्रह्मकीर्तनं शूद्रजन्मनः ॥ मैवं ममाधमस्यापि स्यादेवाच्युतदर्शनम् । ह्रियमाणः कालनद्या क्वचित्तरति कश्चन ॥ ५ ॥**

"கேசவனை தரிசிக்கும் பாக்கியத்தை இன்று பெறுவதற்கு முன் ஜன்மத்தில் என்ன நல்வினைகளைச் செய்தேன்? அல்லது இந்த ஜன்மத்தில் என்ன தவத்தைச் செய்தேன்? அல்லது எந்த மகான்களுக்கு என்ன உயர்ந்த தானங்களைக் கொடுத்தேன்? எவருடைய புகழை வேதங்கள் வர்ணிக்கின்றனவோ அந்த புருஷோத்தமனுடைய தரிசனம் எனக்குக் கிடைப்பது அரிது என்றே நினைக்கிறேன். காலமாகிற நதியில் கர்மவசத்தால் செல்லும் அதமனான எனக்கும் அச்சுதருடைய தரிசனம் கிடைக்குமேயாயின் அதுவும் நதியில் ஸ்வாதீனமின்றி மிதந்து செல்லும் புற்பூண்டுகள் சில சமயங்களில் தற்செயலாய் கரையில் எங்கேயாவது ஒதுங்குவதை ஒக்கும்.

**ममाद्यामङ्गलं नष्टं फलवांश्चैव मे भवः ।**
**यन्नमस्ये भगवतो योगिध्येयाङ्घ्रिपङ्कजम् ॥ ६ ॥**

இன்றே என் பாபங்களனைத்தும் நசித்துவிடும். என்னுடைய பிறப்பும் பயனுள்ளதாகும். ஏனெனில், யோகிகளும் எவருடைய திருவடியைத் தியான நிலைமையில் மனதால் தரிசிக்கிறார்களோ அந்தபகவானையே நான் நேரில் வணங்கப் போகிறேன்.

**कंसो वताऽद्याकृत मेऽत्यनुग्रहं द्रक्ष्येऽङ्घ्रिपद्मं प्रहितोऽमुना हरेः ।**
**कृतावतारस्य दुरत्ययं तमः पूर्वेऽतरन्यन्नखमण्डलत्विषा ॥ ७ ॥**

கம்ஸன் எனக்குப் பெரிய நன்மையைச் செய்தான். அவனாலல்லவோ நான் பகவானுடைய திருவடிகளை இன்று கண்டு களிக்கப்போகிறேன். முன்னோர்கள், நககாந்தியுடன் விளங்கும் இந்த அவதார புருஷனுடைய, திருவடிகளைச் சேவித்து, தாண்டுதற்கரிய ஸம்ஸாரக் கடலைக் கடந்து சென்றார்கள்.

**यदर्चितं ब्रह्मभवादिभिः सुरैः श्रिया च देव्या मुनिभिः ससात्वतैः ।**
**गोचारणायानुचरैश्चरद्वने यद्गोपिकानां कुचकुङ्कुमाङ्कितम् ॥ ८ ॥**

இத்திருவடிகளை, பிரம்மாதிதேவர்கள், லக்ஷ்மீதேவி, முனிவர்கள் மற்றுமுள்ள பக்தர்கள், இடைவிடாது பூஜித்து, தங்கள் மனோபீஷ்டத்தைப் பெறுகிறார்கள். இத்திருவடிகளே பசுக்களை மேய்ப்

பதின் பொருட்டு வனத்தில் சஞ்சரிக்கின்றன. கோபிகைகளின் ஸ்தனத்தில் பூசிய குங்குமத்துடன் சேர்ந்து அழகாக விளங்குவனவும் இத்திருவடிகளே.

**द्रक्ष्यामि नूनं सुकपोलनासिकं सितावलोकारुणकञ्जलोचनम् ।**
**मुखं मुकुन्दस्य गुडालकावृतं प्रदक्षिणं मे प्रचरन्ति वै मृगाः ॥ ९ ॥**

முகுந்தனுடைய அழகிய கன்னங்களையும், உயர்ந்த நாஸிகையையும், புன்முறுவலுடன் கூடின பார்வையையும், சிவந்த விழிகளுடன் கூடின நேத்திரங்களையும், சுருண்ட மயிருடன் கூடிய நெற்றியையும், இன்று நான் நிச்சயமாய்ப் பார்ப்பேன். இந்த மிருகங்கள் என்னை வலம்வந்து சுபசூசகம் செய்கின்றனபோலும்.

**अप्यद्य विष्णोर्मनुजत्वमीयुषो भारावताराय भुवो निजेच्छया ।**
**लावण्यधाम्नो भवितोपलम्भनं मह्यं न न स्यात्फलमञ्जसा दृशः ॥ १० ॥**

பூபாரத்தை அபகரிப்பதற்காக, தன்னிஷ்டப்படி மாயாமானிடரூபத்தை எடுத்த மகாவிஷ்ணு, அழகே உருவெடுத்தாற்போன்று விளங்குகிறார். அவருடைய தரிசனம் எனக்கு இன்று கிடைக்குமானைபால் நானும் கண்களைப் பெற்ற பயனை அடைந்தவனாவேன்.

**यस्याखिलामीवहभिः सुमङ्गलैर्वाचो विमिश्रा गुणकर्मजन्मभिः ।**
**प्राणन्ति शुम्भन्ति पुनन्ति वै जगद्यास्तद्विरक्ताः शवशोभना मताः ॥ १२ ॥**

பகவானுடைய குணங்களையும், லீலைகளையும், அவதாரங்களையும் வர்ணிக்கின்ற சொற்கள் பாபங்களை ஒழித்து மங்களங்களை அளிக்கின்றன. அவருடைய ஸ்துதிகள் உலகத்தை உஜ்ஜீவித்து, சோபையுள்ளதாகச்செய்து அதை பரிசுத்தமாக்குகின்றன; 'அந்த பகவானுடைய குணங்களை வர்ணிக்காத சொற்கள், சொற்சுவை, பொருட்சுவை அமைந்திருப்பினும், சவத்திற் கிட்ட அணிகலம் போன்று சோபையற்றனவாகும்' என்று பெரியோர்கள் கூறுகிறார்கள்.

**स चावतीर्णः किल सात्वतान्वये स्वसेतुपालामरवर्यशर्मकृत् ।**
**यशो वितन्वन्व्रज आस्त ईश्वरो गायन्ति देवा यदशेषमङ्गलम् ॥ १३ ॥**

தங்கட்டளையை நடத்திவரும் லோகபாலர்களின் நன்மையைக் கருதி, அந்த பகவான் இப்பொழுது சாத்வதர்களின் வம்சத்திலவதரித்து தமது கீர்த்தியை எங்கும் பரவச்செய்துகொண்டு கோகுலத்தில் வசித்து வருகிறார். அவர் மகிமையைத் தேவர்களும் பாடுகிறார்கள்.

तं त्वद्य नूनं महतां गतिं गुरुं त्रैलोक्यकान्तं दृशिमन्महोत्सवम् ।
रूपं दधानं श्रिय ईप्सितास्पदं द्रक्ष्ये ममासन्नुषसः सुदर्शनाः ॥ १५ ॥

மஹான்கள் அடைய விரும்புகின்ற விஷ்ணுபதமென்ற ஸ்தானமாக இருப்பவரும், மோக்ஷமார்க்கத்தை உபதேசிப்பதில் குருபோன்றவரும், இம்மூன்று உலகங்களிலும் அழகு வாய்ந்தவரும், கண்களை யடைந்தவர்களுக்கு ஆனந்தத்தை யளிப்பவரும், லக்ஷ்மீதேவியுங்கண்டு ஆசைப்படும்படி திவ்விய உருவங் கொண்டவருமான கிருஷ்ணனை, இன்று நான் பார்க்கப்போகிறேன். இன்று காலை சுபமாய் விடிந்தது.

अथावरूढः सपदीशयो रथात्प्रधानपुंसोश्चरणं स्वलब्धये ।
अप्यङ्घ्रिमूले पतितस्य मे विभुः शिरस्यधास्यन्निजहस्तपङ्कजम् ।
दत्ताभयं कालभुजङ्गरंहसा प्रोद्वेजितानां शरणैषिणां नृणाम् ॥ १६ ॥

நான் அவ்விரு ஈசுவரர்களையும் கண்டதும், அக்ஷணமே ரதத்தினின்று மிறங்கி புருஷோத்தமர்களுடைய பாதங்களை நமஸ்கரிப்பேன். எங்கும் நிறைந்த பகவான் இவ்விதம் தன் பாதங்களில் விழுந்து வணங்கும் என் தலையில், அவருடைய கரகமலத்தை வைத்து, எனக்கு அபயமளிப்பார். காலனுகிற சர்ப்பத்தினின்று பயந்து தன்னைச் சரணமடைந்த ஞானிகளுக்கு மோக்ஷத்தை அளிப்பதும் இக்கரமே.

समर्हणं यत्र निधाय कौशिकस्तथा बलिश्चाप जगत्त्रयेन्द्रताम् ।
यद्वा विहारे व्रजयोषितां श्रमं स्पर्शेन सौगन्धिकगन्ध्यपानुदत् ॥ १७ ॥

முன்னொருசமயம் இப்பகவானுடைய திருக்கரத்தில் வணக்கத்துடன் பூஜையைச்செய்து, தேவேந்திரன் மூன்று லோகத்தையுமடைந்தான். அதுபோன்று மகாபலி சக்கிரவர்த்தியும், இவருடைய கரகமலத்தில் தீர்த்தமிட்டு பாதாளலோகத்திற்கு அதிபதியானுன். சுகத்தை விரும்பிய கோபிகைகளும், ஸௌகந்திபுஷ்பத்தின் பரிமளத்துடன் கூடின இக்கையை தங்கள்மேல் வைத்துக்கொண்டு, ராஸக்கிரீடையில் நேர்ந்த சிரமத்தைப் போக்கிக்கொண்டார்கள்.

न मय्युपैष्यत्यरिबुद्धिमच्युतः कंसस्य दूतः प्रहितोऽपि विश्वदृक् ।
योऽन्तर्बहिश्चेतस एतदीहितं क्षेत्रज्ञ ईक्षत्यमलेन चक्षुषा ॥ १८ ॥

அச்சுதர் சர்வக்ஞராதலால், நான் கம்ஸனிடமிருந்து தூது வந்திருப்பினும் என்னைச் சத்துருவாகக் கருதமாட்டார். அவர், எல்லாப்பிராணிகளிடத்தும் அந்தர்யாமியாக இருந்து மாசற்ற கண்ணால் அவர்களின் அந்தரங்க எண்ணத்தையும், வெளிப்படையான செயல்களையும், உண்மையில் அறிவார்.

अप्यङ्घ्रिमूलेऽवहितं कृताञ्जलिं मामीक्षिता सस्मितमार्द्रया दृशा ।
सपद्यपध्वस्तसमस्तकिल्बिषो वोढा मुदं वीतविशङ्क ऊर्जिताम् ॥ १९ ॥

நான் இவ்வாறு அவரது பாதாரவிந்தங்களில் தண்டம் போல் விழுந்து கைகூப்பி வணக்கத்துடன் வணங்கும்பொழுது, மந்தஹாஸத்துடனும் கருணைகூர்ந்த பார்வையுடனும் அவர் என்னை ஏற்றுக்கொள்வார். அப்பொழுதே என் பாபமனைத்தும் நசித்துவிடும். அப்பொழுதே நான் என் மனதிலுண்டான ஸந்தேகங்களைத் தொலைத்துவிட்டுப் பேரானந்தத்தை அடைவேன்.

सुहृत्तमं ज्ञातिमनन्यदैवतं दोर्भ्यां बृहद्भ्यां परिरप्स्यतेऽथ माम् ।
आत्मा हि तीर्थीक्रियते तदैव मे बन्धश्च कर्मात्मक उच्छ्वसित्यतः ॥ २० ॥
तदा वयं जन्मभृतो महीयसा नैवादृता यो धिगमुष्य जन्म तत् ॥ २१ ॥

அவரது நன்மையை நாடினவனும், உறவினனும், அவரையே தெய்வமாகக் கொண்டாடுபவனுமான என்னை, பகவான் பருத்த நீண்ட கைகளால் கட்டியணைத்துக்கொள்வார். அந்தக்ஷணமே என் தேகம் பரிசுத்தமாகும். அக்ஷணமே கர்மத்தால் உண்டான பந்தங்களும் என்னிடமிருந்து விலகிவிடும். அப்பொழுதுதான் நான் ஜன்மஸாபல்யத்தை யடைவேன். எவனை பகவான் அன்புடன் ஏற்றுக்கொள்ளவில்லையோ அவன் ஜன்மம் வீணேயாகும்.

न तस्य कश्चिद्दयितः सुहृत्तमो न चाप्रियो द्वेष्य उपेक्ष्य एव वा ।
तथाऽपि भक्तान्भजते यथा तथा सुरद्रुमो यद्वदुपाश्रितोऽर्थदः ॥ २२ ॥
किंचाग्रजो माऽवनतं यदूत्तमः स्मयन्परिष्वज्य गृहीतमञ्जलौ ।
गृहं प्रवेश्याप्तसमस्तसत्कृतं संप्रक्ष्यते कंसकृतं स्वबन्धुषु ॥ २३ ॥

பகவானுக்கோ "இவன் நண்பன், இவன் வேண்டியவன், இவன் விரோதி, இவன் ஸமன்" என்ற வித்தியாசம் கிடையாது. ஆயினும் கல்பக விருக்ஷம், தன்னை அடைந்தவர்களின் மனோரதத்தை அவர்களின் கோரிக்கைப்படி அளிப்பதுபோல்;

இந்த பகவானும் பக்தர்களின் அபீஷ்டத்தை அவரவர்களுக்குத் தக்கவாறு அளிக்கின்றார். யதுகுலோத்தமரும் தமையனுருமான பலராமர், தலைகுனிந்து வணங்கி நிற்கும் என்னை புன்சிரிப்புடன் ஆலிங்கனஞ்செய்து என்னுடைய கூப்பிய கைகளைப் பிடித்துக் கொண்டு கிருஹத்திற்குள் அழைத்துச் சென்று விதிப்படி நன்கு உபசரித்து, தன் பந்துக்களின் க்ஷேமத்தையும் கம்ஸனின் கொடுமைகளையும் விசாரிப்பார்."

इति संचिन्तयन् कृष्णं श्वफल्कतनयोऽध्वनि ।
रथेन गोकुलं प्राप्तः सूर्यश्चास्तगिरिं नृप ॥ २४ ॥

சொபல்கரின் புதல்வரான அக்ரூரர் கிருஷ்ணனைப்பற்றி இவ்விதம் சிந்தித்துக்கொண்டு கோகுலத்திற் கருகிற் சென்றதும் சூரியனும் அஸ்தமிக்கும் தருவாயிலிருந்தான்.

पदानि तस्याखिललोकपालकिरीटजुष्टामलपादरेणोः ।
ददर्श गोष्ठे क्षितिकौतुकानि विलक्षितान्यब्जयवांकुशाद्यैः ॥ २५ ॥

எந்த திருவடிகளின் தூளியை எல்லா லோகபாலர்களும் தங்கள் கிரீடங்களில் தரிக்கின்றார்களோ, எந்த அடிவைப்புகள் பூமிக்கு அழகைக் கொடுக்கின்றனவோ, எவைகளில் தாமரை, யவம், அங்குசம் முதலிய அசாதாரணமான ரேகைகள் அழகாக விளங்குகின்றனவோ, அவ்வடிவைப்புகளைத் தொழுவின் சமீபத்தில் பார்த்தார்.

तद्दर्शनाह्लादविवृद्धसंभ्रमः प्रेम्णोर्ध्वरोमाऽश्रुकलाकुलेक्षणः ।
रथादवस्कन्द्य स तेष्वचेष्टत प्रभोरमून्यङ्घ्रिरजांस्यहो इति ॥ २६ ॥

அவ்வடிச்சுவடுகளைப் பார்த்த மாத்திரத்தில் ஆனந்தபரவசராகி ரோமாஞ்சமுற்று ஆனந்தக்கண்ணீரைப் பெருக்கிக் கொண்டு, அக்ரூரர், மிகுந்த பரபரப்புடன் ரதத்தினின்றும் ஒரே குதியாகப் பூமியில் குதித்து "பகவானுடைய பாததூளிகள் அல்லவோ இவைகள்! எனது பாக்கியமே பாக்கியம்!" என்று சொல்லிக்கொண்டு அந்த ரேகைகள் படிந்த புழுதியில் புரண்டார்.

चिरमावेष्ट्य चोत्थाय रथमारुह्य वेगतः । क्व तिष्ठति गवेशानः कृष्णो राम इति ब्रुवन् ॥ गोष्ठमध्य इति श्रुत्वा तरुस्थैर्गोपदारकैः । कृष्णसन्दर्शनाकाङ्क्षी प्रकाशे सवितुस्सति ॥

வெகுநேரம் இவ்விதம் புரண்ட பிறகு, அவர் ரதத்தில் ஏறிக் கொண்டு "பலராமரும், கிருஷ்ணரும் எங்கு இருக்கிறார்கள்?" என்று மரத்தின்மேலிருந்த கோபாலர்களைக் கேட்கலானார். மாட்டுத்தொழுவில் அவர்கள் இருப்பதாகக் கேள்வியுற்று சூரியன் பிரகாசித்துக் கொண்டிருக்கும்பொழுதே அவர்களைப் பார்க்க வேண்டுமென்று ஆவல்கொண்டு தொழுவுக்குச் சென்றார்.

**ददर्श कृष्णं रामं च व्रजे गोदोहनं गतौ । पीतनीलांबरधरौ शरदंबुरुहेक्षणौ ॥ २८ ॥ किशोरौ श्यामलश्वेतौ श्रीनिकेतौ बृहद्भुजौ । सुमुखौ सुन्दरवरौ बालद्विरदविक्रमौ ॥ ध्वजवज्राङ्कुशाम्भोजैश्चिह्नितैरङ्घ्रिभिर्व्रजम्* । उदाररुचिरक्रीडौ स्रग्विणौ वनमालिनौ । पुण्यगन्धानुलिप्ताङ्गौ स्नातौ विरजवाससौ ॥ ३१ ॥ दिशो वितिमिरा राजन् कुर्वाणौ प्रभया स्वया । यथा मारकतः शैलो रौप्यश्च कनकाचितौ ॥ ३३ ॥**

அங்கே மஞ்சள்பட்டும் நீலப்பட்டும் அணிந்தவர்களும், சரத் காலத்துத் தாமரைபோல் அழகான நேத்திரங்களை உடையவர்களும், நீல நிறத்துடனும் வெண்ணிறத்துடனும் இருப்பவர்களும், யானைக்குட்டிகள்போன்று கம்பீரமாக நடப்பவர்களும், அழகிய முகத்துடன் கூடியவர்களும், வனமாலை முதலிய புஷ்பங்களைத் தரித்தவர்களும், நறுமணம் வீசும் சந்தனத்தைப் பூசிக்கொண்டிருப்பவர்களும், தங்கள் தேககாந்தியால் திக்குகளைப் பிரகாசப் படுத்திக்கொண்டு ஆங்காங்கு சுவர்ணத்துடன் கூடிய மரகதமலை போன்றும் வெள்ளிமலைபோன்றும் விளங்குகின்றவர்களுமான ராமரையும் கிருஷ்ணனையும், அக்ரூரர் பார்த்தார்.

**रथात्तूर्णमवप्लुत्य सोऽक्रूरः स्नेहविह्वलः । पपात चरणोपान्ते दण्डवद्रामकृष्णयोः ॥ ३४ ॥ भगवद्दर्शनाह्लादबाष्पपर्याकुलेक्षणः । पुलकाचिताङ्ग औत्कण्ठ्यात्स्वाख्याने नाशकन्नृप ॥ ३५ ॥**

பிறகு பாகவதோத்தமரான அக்ரூரர் வெகு வேகமாக ரதத்தினின்று கீழே குதித்து அவர்களிடமிருந்த பக்தியால் பரவசமாகி அவர்களின் திருவடிகளில் தண்டம் போன்று விழுந்தார். மேன்மை தங்கிய ராமரையும் கிருஷ்ணரையும் பார்த்தவுடன் அக்ரூரர் ஆனந்த நீரைப் பெருக்கி தேகமெங்கும் ரோமாஞ்சமடைந்து பரவசமாக இருந்ததால் தன் பெயரைச்சொல்லவும் சக்தியற்று மௌனமாயிருந்தார்.

भगवांस्तमभिप्रेत्य रथाङ्गाङ्कितपाणिना । परिरेभेऽभ्युपाकृष्य प्रीतः प्रणतवत्सलः । सङ्कर्षणश्च प्रणतमुपगुह्य महामनाः । गृहीत्वा पाणिना पाणी अनयत्सानुजो गृहम् ॥ ३७ ॥ पृष्ट्वाऽथ स्वागतं तस्मै निवेद्य च वरासनम् । प्रक्षाल्य विधिवत्पादौ मधुपर्कार्हणमाहरत् ॥ ३८ ॥

பக்தப்பிரியரான கிருஷ்ணபகவான், அக்ரூரரின் உள்ளத்தை அறிந்து சக்ராயுதம் ஏந்தியகைகளால் அன்புடன் அவரை இழுத்து ஆலிங்கனஞ் செய்துகொண்டார். பிறகு அவ்விருவர்களும் அவர் கைகளைப் பிடித்துக்கொண்டு வீட்டிற்குச்சென்றூர்கள். பிறகு பலராமர் அவருக்கு நல்வரவு கூறி, உயர்ந்த ஆஸனத்தில் அமர்த்தி, விதிப்படி அவருடைய பாதங்களை அலம்பி, மதுபர்க்கம் முதலிய பூஜைகளைச் செய்தார்.

निवेद्य गां चातिथये संवाह्य श्रान्तमादृतः । अन्नं बहुगुणं मेध्यं श्रद्धयोपाहरद्विभुः ॥ ३९ ॥ तस्मै भुक्तवते प्रीत्या रामः परमधर्मवित् । मुखवासैर्गन्धमाल्यैः परां प्रीतिं व्यधात्पुनः ॥ ४० ॥ पप्रच्छ सत्कृतं नन्दः कथं स्थ निरनुग्रहे । कंसे जीवति दाशार्ह सौनपाला इवावयः ॥ ४१ ॥

பிறகு தர்மத்தையறிந்த பலராமர் களைப்படைந்த அதிதிக்கு பசுவை ஸமர்ப்பித்து அன்புடன் அவருக்கு அறுசுவை உணவு அளித்து சந்தனம், வெற்றிலை, புஷ்பம் முதலியவைகளைக் கொடுத்து மறுபடியும் அவரை உபசரித்தார். இவ்விதம் பகவானல் நன்கு உபசரிக்கப்பட்ட அக்ரூரரைப் பார்த்து நந்தகோபர், "தாசார்ஹர்களுள் சிரேஷ்டனே! ஆட்டைக் கொல்பவனிடத்திலேயே அடைக்கலமாக வைக்கப்படும் ஆடுகள்போன்று, தயையின்றி, கொடூரமான செய்கையைச்செய்யும் கம்ஸனது, பிரஜைகளான நீங்கள், அவன் உயிருடனிருக்கும்பொழுது, அவன் கீழ் எவ்விதம் சுகமாய் வாழ்ந்து வருகிறீர்கள்?

योऽवधीत्स्वस्वसुस्तोकान्क्रोशन्त्या असुतृप् खलः । किंनु स्वित्तत्प्रजानां वः कुशलं विमृशामहे ॥ ४२ ॥ इत्थं सूनृतया वाचा नन्देन सुसभाजितः । अक्रूरः परिपृष्टेन जहावध्वपरिश्रमम् ॥ ४३ ॥

எந்த துஷ்டன் கண்ணீர்வடிக்கும் தன் சகோதரியின் குழந்தைகளை தயையின்றிக் கொன்றானே அவனது பிரஜைகள் எவ்விதம் க்ஷேமத்தை அடைவார்கள்? அது விஷயத்தில் கேட்க

வேண்டியது என்ன இருக்கிறது ?" என்று இனிய மொழிகளால் அக்ரூரரை உபசரித்து அவரிடம் க்ஷேமசமாசாரத்தை வினவினார். அக்ரூரரும் களிப்படைந்து வழிநடந்த சிரமத்தையும் சம்சார தாபங்களையும் போக்கிக்கொண்டார்.

## முப்பத்தொன்பதாவது அத்தியாயம்.



{ नवत्रिंशे पुरीङ्गच्छत्यच्युते गोपिकोक्तयः ।
अक्रूरेणाथ कालिन्द्यां विष्णुलोकस्य दर्शनम् ॥ }

[கிருஷ்ணன் மதுரை செல்லுங்கால் கோபிகைகளின் துயர மொழிகள். அக்ரூரர் யமுனையில் வைகுண்டலோகம் பார்த்தல்.]

श्रीशुक उवाच—सुखोपविष्टः पर्यङ्के रामकृष्णोरुमानितः । लेभे मनोरथान्सर्वान्पथि यान्स चकार ह ॥ १ ॥ किमलभ्यं भगवति प्रसन्ने श्रीनिकेतने । तथापि तत्परा राजन्नहि वाञ्छन्ति किंचन ॥ २ ॥ सायंतनाशनं कृत्वा भगवान्देवकीसुतः । सुहृत्सु वृत्तं कंसस्य पप्रच्छान्यच्चिकीर्षितम् ॥

பலராமராலும் கிருஷ்ணராலும் நன்கு பூஜிக்கப்பட்டு மஞ்சத்தில் சுகமாக உட்கார்ந்திருக்கையில், அக்ரூரர் கோகுலத்திற்கு வரும்வழியில் என்னென்ன மனோரதங்களை மனதில் நினைத்தனரோ அவையனைத்தும் அடைந்தார். லக்ஷ்மீபதியான பகவான் சந்தோஷமடைந்தால் எதைத்தான் அடையமுடியாது. ஆயினும் மன்னவனே! அவரைச்சார்ந்த பக்தர்கள் ஒன்றையும் விரும்பார்கள். தேவகிபுத்திரனான பகவான் மாலைப் போஜனத்தை முடித்துக்கொண்டு அக்ரூரரிடம் தன் பந்துக்களின் க்ஷேமத்தையும் அவர்களிடம் கம்ஸன் நடந்து வருவதையும், அவன் இனிச் செய்ய விரும்பியதையும் கேட்கலானார்.

श्रीभगवानुवाच—तात सौम्याऽऽगतः कच्चित्स्वागतं भद्रमस्तु वः । अपि स्वज्ञातिबन्धूनामनमीवमनामयम् ॥ ४ ॥ किंनु नः कुशलं पृच्छे एधमाने कुलामये । कंसे मातुलनाम्न्यङ्ग स्वानां नस्तत्प्रजासु च ॥ ५ ॥

"பெரியோரே! நீர் கம்ஸனிடமிருந்து க்ஷேமமாய் வந்ீரா! உம்முடைய வரவு நல்வரவு ஆகுக. நம்முடைய உற்றார் உறவினர்கள் அனைவரும் க்ஷேமமாக இருக்கிறார்களா? கம்ஸனுகிற குலவியாதி மாமன் வடிவமெடுத்து வளர்ந்தோங்கும்பொழுது நமது பந்துக்களின் க்ஷேமத்தையும், மற்றுமுள்ள குடிகளின் க்ஷேமத்தையும் கேட்கவேண்டியது யாது இருக்கிறது.

**अहो अस्मदभूद्भूरि पित्रोर्वृजिनमार्ययोः । यद्धेतोः पुत्रमरणं यद्धेतोर्बन्धनं तयोः ॥ ६ ॥ दिष्ट्याऽद्य दर्शनं स्वानां मह्यं वः सौम्य काङ्क्षितम् । संजातं वर्ण्यतां तात तवाऽऽगमनकारणम् ॥ ७ ॥**

அந்தோ! என் காரணமாகத்தான் எங்களுடைய தாய் தந்தையர்கள் பெருங்கஷ்டத்திற்குள்ளானார்கள். என் காரணமாக அவர்கள் பல சிசுக்களை இழந்தார்கள். என் காரணமாகத்தான் அவர்கள் சிறையிலும் வைக்கப்பட்டார்கள். பெரியோரே! நான் வெகுநாளாக பந்துக்களைப் பார்க்க ஆவல்கொண்டிருந்தேன். இன்றுதான் என் அதிருஷ்டவசத்தால் அதை அடைந்தேன். நீங்கள் இங்குவந்த காரணத்தை உரைக்கவேண்டும்."

**श्रीशुक उवाच—पृष्टो भगवता सर्वं वर्णयामास माधवः । वैरानुबन्धं यदुषु वसुदेववधोद्यमम् ॥८॥ यत्संदेशो यदर्थं वा दूतः संप्रेषितः स्वयम् । यदुक्तं नारदेनास्य स्वजन्माऽऽनकदुन्दुभेः ॥ ९ ॥ श्रुत्वाऽक्रूरवचः कृष्णो बलश्च परवीरहा । प्रहस्य नन्दं पितरं राज्ञाऽऽदिष्टं विजज्ञतुः ॥ १० ॥**

பகவான் இவ்விதம் கேட்க, மதுவின் வம்சத்தில் உதித்த அக்ரூரர் பகவானைப்பார்த்து, கம்ஸன் யாதவர்களைப் பகைத்துவருவதையும் வசுதேவரை அவன் கொல்ல முயன்றதையும், அவன் சொல்லியனுப்பிய செய்தியையும் அவனுடைய உள்ளக்கருத்தையும், தானே நேரில் தூதுவந்த காரணத்தையும் ஒன்றுவிடாது உரைத்தார். மறுபடியும் அவர், கம்ஸனிடத்தில் நாரதமுனிவர் ரகஸ்யமாகக் கூறியதையும், கிருஷ்ணரை வசுதேவரின் புதல்வர் என்று கம்ஸன் அறிந்துகொண்டதையும், அவரிடம் விரிவாகத் தெரிவித்தார். அதன்பின் பலராமரும் கிருஷ்ணபகவானும் நந்தரிடம் கம்ஸனின் கட்டளையைத் தெரிவித்தார்கள்.

गोपान् समादिशत्सोऽपि गृह्यतां सर्वगोरसः । उपायनानि गृह्णीध्वं युज्यन्तां शकटानि च ॥ ११ ॥ यास्यामः श्वो मधुपुरीं दास्यामो नृपते रसान् । द्रक्ष्यामः सुमहत्पर्व यान्ति जानपदाः किल ।

நந்தர் கோபாலர்களை அழைத்து, " ! நெய், பால், தயிர் யாவற்றையும் நிரம்பச் சேகரியுங்கள். கப்பப் பணத்தை எடுத்துக்கொள்ளுங்கள். வண்டிகளைப் பூட்டுங்கள். நாம் எல்லோரும் நாளைய தினமே மதுராபுரிக்குச் சென்று, அரசனிடம் அவைகளைக் கொடுத்து, அங்கு நிகழும் தனுர்பாகத்தைப் பார்த்துவருவோம்" என்று கட்டளை யிட்டார்.

गोप्यस्तास्तदुपश्रुत्य बभूवुर्व्यथिता भृशम् । रामकृष्णौ पुरीं नेतुमक्रूरं व्रजमागतम् ॥ १३ ॥ काश्चित्तत्कृतहृत्तापश्वासम्लानमुखश्रियः । स्रंसद्दुकूलवलयकेशग्रन्थ्यश्च काश्चन ॥ १४ ॥ अन्याश्च तदनुध्याननिवृत्ताशेषवृत्तयः । नाभ्यजानन्निमं लोकमात्मलोकं गता इव ॥ १५ ॥

ராமகிருஷ்ணர்களை அழைத்துச்செல்ல அக்ரூரர் வந்திருப்பதை கோபஸ்திரிகள் கேட்டு வருந்தினர்கள். அவர்களில் சிலர் பெருமூச்சுவிட்டுக்கொண்டு முகவாட்ட மடைந்தார்கள். வேறு சிலர் கிருஷ்ணனையே நினைத்துக்கொண்டு இவ்வுலக சிந்தனையற்று மரம் போல் நின்றார்கள்.

गतिं सुललितां चेष्टां स्निग्धहासावलोकनम् । शोकापहानि नर्माणि प्रोद्दामचरितानि च ॥ १७ ॥ चिन्तयन्त्यो मुकुन्दस्य भीता विरहकातराः समेताः सङ्घशः प्रोचुरश्रुमुख्योऽच्युताशयाः ॥ १८ ॥

பிறகு அவர்களனைவரும் ஒன்றுகூடி கிருஷ்ணனுடைய புன்சிரிப்பையும் அழகான லீலைகளையும் அவருடைய இராஸக்கிரீடைகளையும் நினைத்து அவரைப் பிரிய மனம் சகியாது கண்ணீரைப் பெருக்கிக்கொண்டு அவரிடத்தில் வைத்த அன்பால் ஒருவருக்ொருவர் பின்வருமாறு புலம்பலானார்கள்.

अहो विधातस्तव न क्वचिद्दया संयोज्य मैत्र्या प्रणयेन देहिनः ।
तांश्चाकृतार्थान्वियुनङ्क्ष्यपार्थकं विक्रीडितं तेऽर्भकचेष्टितं यथा ॥ १९ ॥

"பிரம்மதேவ! நீ சிறிதும் கருணையின்றி என்ன செய்யத்துணிந்தனை? மனிதர்களைச் சினேகத்தாலும் காமத்தாலும் சிலகாலம்

ஒன்று சேர்த்து, அவர்கள் மனோரதம் நிறைவேறு முன்னர், ஒரு காரணமுமின்றி அவர்களைப் பிரிக்கின்றாய். உன்னுடைய செய்கை, குழந்தைகளின் விளையாட்டுப்போன்று உபயோக மற்றது.

यस्त्वं प्रदर्श्यासितकुन्तलावृतं मुकुन्दवक्त्रं सुकपोलमुन्नसम् ।
शोकापनोदस्मितलेशसुन्दरं करोषि पारोक्ष्यमसाधु ते कृतम् ॥ २० ॥

கருத்துச் சுருண்ட மயிரால் சிறிது மறைக்கப்பட்ட நெற்றியையும், கண்ணாடி போன்று அழகிய கன்னத்தையும் உயர்ந்த நாசிகையையும், துக்கத்தைப் போக்கும் மந்தஹாசத்தையுமுடைய முகுந்தனின் அழகான முகத்தை, சிறிதுகாலம் எங்களுக்குக் காண்பித்து இப்பொழுது கண்ணுக்கெட்டாத தூரத்தில் மறைத்து வைப்பது உனக்குத் தகுமா?

क्रूरस्त्वमक्रूरसमाख्यया स्म नश्चक्षुर्हि दत्तं हरसे बताज्ञवत् ।
येनैकदेशेऽखिलसर्गसौष्ठवं त्वदीयमद्राक्ष्म वयं मधुद्विषः ॥ २१ ॥

கொடுத்ததைத் திரும்பவாங்கும் மூடா! நீ கொடுத்த கண்களால் நாங்கள் உனது சிருஷ்டித் திறமை அனைத்தையும் கிருஷ்ணனுடைய பாதாதிகேசம்வரையுள்ள ஒவ்வொரு அவயவத்திலும் கண்டுகளித்தோம். இப்பொழுது நாங்கள் படும்பாடு அறியாதவன்போன்று, நீ கொடுத்த கண்களையே நீ மறுபடியும் பறித்துச் செல்லுகிறாய். ஆதலால் நீ கொடிய எண்ண முள்ளவனே. ஆயினும் அக்ரூரன் என்ற பெயருடன் நீ இவ்விடத்தில்தோன்றியிருக்கிறாய் என்பதில் சந்தேகமில்லை.

न नन्दसूनुः क्षणभङ्गसौहृदः समीक्षते नः स्वकृतातुरा बत ।
विहाय गेहान्स्वजनान्सुतान्पतींस्तद्दास्यमद्धोपगता नवप्रियः ॥ २२ ॥

"நாம், வீடுவாசல்களையும், பந்துக்களையும், கணவனையும், விட்டு அவருடைய பணிவிடையிலேயே ஈடுபட்டு அவருடைய லீலைகளை நினைத்துப் பரவசமாயிருப்பினுங்கூட கிருஷ்ணன், புதுமைப் பெண்களில் ஆசைகொண்டு, நம்முடைய சிநேகத்தை நொடிப்பொழுதில் மறந்து, நம்மைக் கண்ணெடுத்தும் பார்க்கவில்லை.

सुखं प्रभाता रजनीयमाशिषः सत्या बभूवुः पुरयोषितां ध्रुवम् ।
याः संप्रविष्टस्य मुखं व्रजस्पतेः पास्यन्त्यपाङ्गोत्कलितस्मितासवम् ॥ २३ ॥

இன்றிரவு சுகமாகவும் சுபமாகவும் மதுராபட்டணத்து ஸ்திரீகளுக்கு விடிந்தது. பெரியோர்கள் கூறிய ஆசிர்வாதமும் உண்மையாயிற்று. ஏனெனில் அவர்கள் மதுராபுரியில் பிரவேசிக்கும் கோகுலநாயகனாகிய கிருஷ்ணனுடைய அழகிய முகத்தையும் கடைக்கண் பார்வையையும் புன் சிரிப்பையும் கண்டு களிக்கப்போகிறார்கள்.

तासां मुकुन्दो मधुमञ्जुभाषितैर्गृहीतचित्तः परवान्मनस्व्यपि ।
कथं पुनर्नः प्रतियास्यतेऽबला ग्राम्याः सलज्जस्मितविभ्रमैर्भ्रमन् ॥ २४ ॥

மனோதைரியமுள்ளவனாயினும் தாய் தந்தையர்களுக்கு அடங்கினவனாயினும் முகுந்தன், அப்பெண்களின் அழகிய பார்வைகளிலும், இனியசொற்களிலும், மனதைப் பறிகொடுத்து அவர்கள் வசமாகிய பிறகு, நாகரிகமற்ற நம்மைப் பார்ப்பதற்கு எங்ஙனம் திரும்பி வருவான்?

नैतद्विधस्याकरुणस्य नाम भूदक्रूर इत्येतदतीव दारुणः ।
योऽसावनाश्वास्य सुदुःखितं जनं प्रियात्प्रियं नेष्यति पारमध्वनः ॥ २६ ॥

நம்முடைய உயிருக்குயிரான கிருஷ்ணனை வெகுதூரம் அழைத்துச்செல்லும் இத்தகைய கொடியவனுக்கு அக்ரூரர் என்ற பெயர் எங்ஙனம் ஏற்பட்டது. ஓய்வில்லாது வருந்தும் நம்மை ஒரு தேறுதலான வார்த்தையும் சொல்லி ஆற்றாது செல்வதால் இவன் கொடிய எண்ணமுள்ளவனே.

अनार्द्रधीरेष समास्थितो रथं तमन्वमी च त्वरयन्ति दुर्मदाः ।
गोपा अनोभिः स्थविरैरुपेक्षितं दैवं च नोऽद्य प्रतिकूलमीहते ॥ २७ ॥

சகிகளே! இந்த கிருஷ்ணனும் நெஞ்சில் ஈரமில்லாதவன். இதோ ரதத்தில் ஏறிவிட்டான். கெடுமதியுடைய கோபாலர்களும் வண்டிகளைத் தயாராக நிறுத்திக்கொண்டு, அவனை முடுக்குகின்றார்கள். முதியவர்களும் நம் கஷ்டத்தை அறியாது மௌனமாயிருக்கின்றனர். சகுனத் தடைகள் ஒன்றும் இன்னும் தோற்றாததால், தெய்வமும் நமக்கு இன்று அனிஷ்டத்தையே செய்கின்றது போலும்.

निवारयामः समुपेत्य माधवं किं नोऽकरिष्यन्कुलवृद्धबान्धवाः ।
मुकुन्दसङ्गान्निमिषार्धदुस्त्यजाद्दैवेन विध्वंसितदीनचेतसाम् ॥ २८ ॥

நாமெல்லோரும் ஒன்றுகூடி மாதவனருகிற் சென்று அவனைத் தடுப்போம். நம் பெரியோர்களும், பந்துக்களும் நம்மை என்ன செய்வார்கள்? முகுந்தனைவிட்டு அரை நிமிஷமேனும் பிரிந்திருப்பதை எவ்விதம் நாம் சகிக்கவல்லவர்களாவோம். ஆயினும் தெய்வமே நம்மை அவரிடமிருந்து பிரித்து வைத்ததால், தெய்வமே நம் புத்தியையும் திறமையையும் கெடுத்துவிட்டது.

यस्यानुरागललितस्मितवल्गुमन्त्रलीलाऽवलोकपरिरंभणरासगोष्ठ्याम् ।
नीताः स्म नः क्षणमिव क्षणदा विना तं गोप्यः कथं न्वतितरेम तमो दुरन्तं ॥

எவருடைய அழகிய புன்சிரிப்பையும், மதுரமான சல்லாபங்களையும், பரிஹாசத்துடன் கூடிய பார்வையையும், ஆசையுடன் கூடிய ஆலிங்கனத்தையும், நாம் ராஸக்கிரீடையில் சுகமாக அனுபவித்து அனேகம் இரவுகளை க்ஷணம்போல் கழித்தோமோ, அந்த கிருஷ்ணனை விட்டுப்பிரிந்து, கடத்தற்கரிய சமுத்திரம் போன்று நீடித்திருக்கும் இரவை இனி எங்ஙனம் கழிக்கவல்லவர்களாவோம். அவரது விரகதாபத்தை எங்ஙனம் சகிப்போம்.

योऽह्नःक्षये व्रजमनन्तसखः परीतो
गोपैर्विशन्खुररजश्छुरितालकस्रक् ।
वेणुं क्वणन् स्मितकटाक्षनिरीक्षणेन
चित्तं क्षिणोत्यमुमृते नु कथं भवेम ॥ ३० ॥

மேலும் கோபிகைகளே! எவன் மாலைப்பொழுதில் சிநேகிதர்களால் சூழப்பட்டும், பசுக்களை முன்னிட்டுக்கொண்டும் வேணுகானம் செய்துகொண்டும், அழகான முகமண்டலத்துடன் கோகுலத்தில் பிரவேசித்து, நம் மனதைக் கவர்ந்தானோ அந்தக் கிருஷ்ணனைவிட்டுப் பிரிந்து நாம் எவ்விதம் உயிர் தரிப்போம்."

एवं ब्रुवाणा विरहातुरा भृशं व्रजस्त्रियः कृष्णविषक्तमानसाः ।
विसृज्य लज्जां रुरुदुः स्म सुस्वरं गोविन्द दामोदर माधवेति ॥ ३१ ॥

இவ்விதம் கோபிகைகள் கிருஷ்ணனுடைய பிரிவை நினைத்து வருந்தி கிருஷ்ணனிடமிருந்து தம் மனதைத் திருப்புவதற்குச் சக்தியற்றவர்களாய், உலக வழக்கத்தையும் மீறி லஜ்ஜையன்னியில் "கோவிந்தா! தாமோதரா! மாதவா!" என்று கூக்குரலிட்டுக் கதறலானார்கள்.

स्त्रीणामेवं रुदन्तीनामुदिते सवितर्यथ । अक्रूरश्चोदयामास कृत-
मैत्रादिको रथम् ॥ ३२ ॥ गोपास्तमन्वसज्जन्त नन्दाद्याः शकटैस्ततः ।
आदायोपायनं भूरि कुंभान्गोरससंभृतान् ॥ ३३ ॥ गोप्यश्च दयितं कृष्ण-
मनुव्रज्यानुरञ्जिताः । प्रत्यादेशं भगवतः काङ्क्षन्त्यश्चावतस्थिरे ॥ ३४ ॥

இவ்விதம் அப்பெண்கள் அழுதுகொண்டிருக்கையில் சூரியன் உதயமானான். அக்ரூரர் மித்திரோபஸ்தானம் முதலியவைகளை முடித்து, ரதத்திலேறி மதுராபுரியை நோக்கி அதைச் செலுத்தலானார். நந்தர் முதலிய கோபாலர்கள் கம்ஸனுக்குக் கொடுக்கவேண்டிய கப்பப்பணங்களையும், நெய், தயிர், பால், முதலியவைகளையும் எடுத்துக்கொண்டு, வண்டியில் ஏறி அவர்களுக்குப்பின் சென்றார்கள். கோபிகைகளும் தங்கள் பிரியநாயகனான கிருஷ்ணனைப் பின் தொடர்ந்து சென்று, அவரிடமிருந்து தூதமொழிகளை ஆவலுடன் எதிர்பார்த்து நின்றார்கள்.

तास्तथा तप्यतीर्वीक्ष्य स्वप्रस्थाने यदूत्तमः । सान्त्वयामास स प्रेमैरा-
यास्य इति दौत्यकैः ॥ ३५ ॥ यावदालक्ष्यते केतुर्यावद्रेणू रथस्य च । अनु-
प्रस्थापितात्मानो लेख्यानीवोपलक्षिताः ॥ ३६ ॥ ता निराशा निववृतुर्गो-
विन्दविनिवर्तने । विशोका अहनी निन्युर्गायन्त्यः प्रियचेष्टितम् ॥ ३७ ॥

யதுகுலோத்தமரான பகவான் தான் புறப்படுகையில் அவர்கள் படும் துன்பத்தைப் பார்த்து "நான் வெகுசீக்கிரம் திரும்பி வருகிறேன்" என்று தூதர்கள் மூலம் சொல்லியனுப்பி அவர்களைத் தேற்றினார். ரதத்தின் கொடி எதுவரை கண்ணுக்குப் புலப்பட்டதோ, எதுவரை ரதத்தினின்று கிளம்பிய புழுதி கண்ணுக்குத் தென்பட்டதோ, அதுவரை கிருஷ்ணனிடம் மனதைப் பறிகொடுத்த கோபிகைகள் அவரைவிட்டுத் தமது ஐம்புலன்களையும் பெயர்த்து இழுத்துக்கொள்ள முடியாமல் சித்திரத்தில் எழுதின படம்போல் அத்திசையையே பார்த்து நின்றார்கள். தேரின் கொடியும் அதினின்று கிளம்பிய புழுதியும் கண்ணுக்குப் புலப்படாமற் போகவே அவர்கள் கிருஷ்ணனைத் திருப்புவதில் ஆசை ஒழிந்தவர்களாய் வீட்டை நோக்கித் திரும்பினார்கள். பிறகு அவர்கள் கிருஷ்ணனுடைய லீலைகளை கானம் செய்துகொண்டு, தங்கள் வருத்தத்தை ஒருவாறு ஆற்றி, தங்கள் வாழ்நாட்களைக் கழித்தார்கள்.

भगवानपि संप्राप्तो रामाक्रूरयुतो नृप । रथेन वायुवेगेन कालिन्दी-मघनाशिनीम् ॥ ३८ ॥ तत्रोपस्पृश्य पानीयं पीत्वा मृष्टं मणिप्रभम् । वृक्ष-षण्डमुपव्रज्य सरामो रथमाविशत् ॥ ३९ ॥ अक्रूरस्तावुपामन्त्य निवेश्य च रथोपरि । कालिन्द्या ह्रदमागत्य स्नानं विधिवदाचरत् ॥ ४० ॥

ராஜனே! பகவானான கிருஷ்ணனும் பலராமனும் அக்ரூரரும் ரதத்தை வாயுவேகமாக ஓட்டிக்கொண்டு, பாவத்தைப்போக்கும் யமுனா நதியை வெகு சீக்கிரத்திலடைந்தார்கள். அவர்கள் அந் நதியிலிறங்கி ஜலத்தை ஆசமனம் செய்து ஸ்படிகம்போல் தெளி வாயிருக்கும் நீரைப் பருகினார்கள். பிறகு அவர்கள் கரையிலிருந்த தோப்பில் சிறிதுநேரம் உட்கார்ந்து, பின் ரதத்தினருகில் சென் றார்கள். அப்பொழுது அக்ரூரர் அவர்களை ரதத்தின் மேலேற்றி பின் அவர்களிடம் விடைபெற்றுக்கொண்டு, யமுனா நதிக்குச் சென்று அங்கு விதிப்படி ஸ்நானஞ்செய்யலானார்.

निमज्ज्य तस्मिन्सलिले जपन्ब्रह्म सनातनम् । तावेव ददृशेऽक्रूरो रामकृष्णौ समन्वितौ ॥ ४१ ॥ तौ रथस्थौ कथमिह सुतावानकदुन्दुभेः । तर्हि स्वित्स्यन्दने न स्त इत्युन्मज्ज्य व्यचष्ट सः ॥ ४२ ॥ तत्रापि च यथा-पूर्वमासीनौ पुनरेव सः । न्यमज्जद्दर्शनं यन्मे मृषा किं सलिले तयोः ॥

ஜலத்தில் முங்கியிருந்து வேதருக்குகளை ஜபிக்கையில் அக்ரூரர் ராமனையும் கிருஷ்ணனையும் தனக்கெதிரில் ஜலத்திற்குள் கண்டு "ரதத்திலிருந்த வசுதேவரின் புதல்வர்கள் இங்கு எவ் விதம் வந்தார்கள். ரதத்தில் இப்பொழுது இருக்கிறார்களா? பார்ப்போம்" என்று நினைத்து ஜலத்தினின்றும் மேலே கிளம்பி ரதத்தைப் பார்த்தார். அச்சமயம் முன்போல் அவர்களிருவர் களும் ரதத்திலிருப்பதைப் பார்த்து அக்ரூரர் "நான் ஜலத்தில் முன் பார்த்தது பொய்யோ" வென்று நினைத்து மறுபடியும் ஜலத்தில் மூழ்கினார்.

भूयस्तत्रापि सोऽद्राक्षीत्स्तूयमानमहीश्वरम् । सहस्रशिरसं देवं सहस्र फणमौलिनम् । नीलांबरं विसश्वेतं शृङ्गैः श्वेतमिव स्थितम् ॥ ४५ ॥

மறுபடியும் அக்ரூரர் அதே யமுனையின் மடுவில் அவர்களிருவரையும் தரிசனஞ்செய்தார். அப்பொழுது பலராமர்,

ஆயிரந்தலைகளுடனும், ரத்தினங்களோடு கூடிய ஆயிரம் படங்களுடனும், நீலப்பட்டுத் தரித்து தாமரைத் தண்டுபோல் வெண்ணிறமான உடலுடனும், சிகரங்களுடன் கூடிய கைலாச பருவதம் போன்று விற்றிருந்தார்.

**तस्योत्सङ्गे घनश्यामं पीतकौशेयवाससम् । पुरुषं चतुर्भुजं शान्तं पद्मपत्रारुणेक्षणम् ॥ ४६ ॥ चारुप्रसन्नवदनं चारुहासनिरीक्षणम् । प्रलंबपीवरभुजं तुङ्गांसोरस्थलश्रियम् । कंबुकण्ठं निम्ननाभिं वलिमत्पल्लवोदरम् ॥ ४८ ॥ श्रीवत्सवक्षसं भ्राजत्कौस्तुभं वनमालिनम् ॥ ५२ ॥**

அவர்மடியில் ஸ்ரீ கிருஷ்ணபகவான், சாந்த ஸ்வரூபியாய் நீலமேகச்யாமளராய் மஞ்சப்பட்டுத்தரித்தவராய், நாலு கைகளுடனும், தாமரை இதழ்போன்று நீண்ட கண்களுடனும், அழகான முகத்துடனும், அழகான பார்வை புன்சிரிப்பு இவைகளுடனும், உயர்ந்த தோள் சங்குபோன்ற கழுத்து குழிந்த நாபி இவைகளுடனும் கூடினவராய், வனமாலை தரித்தவராய், மார்பில் லக்ஷ்மீ தேவியையுடையவராய், ஸ்ரீவத்ஸம் என்ற மருவையும் ஜொலிக்கும் கௌஸ்துப ரத்தினத்தையும் உடையவராய், வீற்றிருப்பதைப் பார்த்தார்.

**सुनन्दनन्दप्रमुखैः पार्षदैः सनकादिभिः । सुरेशैर्ब्रह्मरुद्राद्यैर्नवभिश्च द्विजोत्तमैः ॥ ५३ ॥ सिद्धचारणगन्धर्वैरसुरैर्नतकन्धरैः ॥ स्तूयमानं पृथग् भावैर्वचोभिरमलात्मभिः ॥ ५४ ॥**

ஸித்தர், கந்தர்வர், சாரணர், தேவர் முதலியவர்கள் தலை வணங்கித் துதித்தார்கள். ஸுநந்தர், நந்தர், முதலிய பார்ஷதர்களும், ஸநகர் முதலிய யோகிகளும், பிரம்மா ருத்திரர் முதலிய தேவசிரேஷ்டர்களும், பரிசுத்தமான பதங்களால் அவர்களைத் துதித்தார்கள்.

**विलोक्य सुभृशं प्रीतो भक्त्या परमया युतः । हृष्यत्तनूरुहो भावपरिक्लिन्नात्मलोचनः ॥ ५६ ॥ गिरा गद्गदयाऽस्तौषीत्सत्त्वमालंब्य सात्वतः । प्रणम्य मूर्ध्नाऽवहितः कृताञ्जलिपुटः शनैः ॥ ५७ ॥**

இத்திவ்விய தரிசனத்தைப் பார்த்து அக்ரூரர் உள்ளங்களித்து பக்தியினால் பரவசமாகி ஒருவாறு மனதைத் தைரியப்படுத்திக் கொண்டு, மெதுவாக தத்தளிட்ட வார்த்தைகளால் அவரைத் துதிக்கலானார்.

# நாற்பதாவது அத்தியாயம்.



{ चत्वारिंशे ततोऽक्रूरः कृष्णं मत्वेश्वरेश्वरम् ।
प्रणम्य भक्त्या तुष्टाव सगुणागुणभेदतः ॥ }

[அக்ரூரர் கிருஷ்ணனை ஈசுவரனென்றறிந்து வணங்கி, ஸகுண மாகவும் நிர்க்குணமாகவும் துதித்தல்.]

नतोऽस्म्यहं त्वाऽखिलहेतुहेतुं नारायणं पूरुषमाद्यमव्ययम् ।
यन्नाभिजातादरविन्दकोशाद्ब्रह्माऽऽविरासीद्यत एष लोकः ॥ १ ॥

எவருடைய உந்திக்கமலத்தினின்றும் உலகமனைத்திற்கும் சிருஷ்டி கர்த்தாவாகிய பிரம்மதேவர் உண்டானரோ, எவர் எல்லாவற்றிற்கும் காரணமான பஞ்சபூதங்களுக்கும் மூலகாரணமோ, அத்தகைய ஆதிபுருஷனும் ஆதி அந்தமுமற்ற நாராயணருமான உம்மை நமஸ்காரம் செய்கிறேன்.

भूस्तोयमग्निः पवनः खमादिर्महानजादिर्मन इन्द्रियाणि ।
सर्वेन्द्रियार्था विबुधाश्च सर्वे ये हेतवस्ते जगतोऽङ्गभूताः ॥ २ ॥
नैते स्वरूपं विदुरात्मनस्ते ह्यजादयोऽनात्मतया गृहीताः ।
अजोऽनुबद्धः सगुणैरजाया गुणात्परं वेद न ते स्वरूपम् ॥ ३ ॥

உலக சிருஷ்டிக்கு மூலகாரணமான அவ்வியக்தம், அகங்காரம், மனசு, இந்திரியங்கள், சப்தாதி விஷயங்கள், இந்திரியாதிஷ்டான தேவர்கள், பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம் முதலிய பூதங்கள், இவையெல்லாம் ஜகத்தை சிருஷ்டித்தபோதிலும் அவைகள் உம்மிடமிருந்தே தோன்றின. உம்முடைய மாயாகுணமற்ற இந்த ஸ்வரூபத்தை மாயைக்கு வசப்பட்ட பிரம்மா முதலியவர்கள் அறியவில்லை. அப்படியாயின் ஜடமான ப்ரகிருதி முதலியவைகள், உம்முடைய ஸ்வரூபத்தை எங்ஙனம் அறியும்?

त्वां योगिनो यजन्त्यद्धा महापुरुषमीश्वरम् । साध्यात्मं साधिभूतं च साधिदैवं च साधवः ॥ ४ ॥ त्रय्या च विद्यया केचित्त्वां वै वैतानिका द्विजाः । यजन्ते विततैर्यज्ञैर्नानारूपामराख्यया ॥५॥ एके त्वाऽखिलकर्माणि संन्यस्योपशमं गताः । ज्ञानिनो ज्ञानयज्ञेन यजन्ति ज्ञानविग्रहम् ॥ ६ ॥

ஸாங்கியர்கள் உம்மை பூதங்கள், இந்திரியங்கள், இந்திரியாதிஷ்டான தேவதைகள், இவைகளின் ஸாக்ஷியாக விளங்கும் மகாபுருஷனாக உபாஸிக்கின்றனர். ஹிரண்யகர்ப்பரை உபாஸிக்கும் யோகிகள் உம்மை அந்த மாகாபுருஷனிடம் அந்தர்யாமியாய் விளங்கும் ஈச்வரனாக ஆராதிக்கின்றனர். கர்மானுஷ்டானம் செய்யும் பிராமணர்கள் மூன்றுவேதங்களிலும் சொல்லிய முறைப்படி பற்பல யாகங்களைச்செய்து, இந்திரன் முதலிய பல தேவர்களாக அழைக்கப்படும் உம்மையே ஆராதிக்கின்றனர். ஞானிகள் வேதத்திற்கூறிய எல்லாக் கர்மங்களையும் ஒழித்து உபசாந்தியடைகிறார்கள். அவர்கள் ஞானவடிவமான உம்மை ஞானமான யாகத்தினால் ஆராதிக்கின்றார்கள்.

**अन्ये च संस्कृतात्मानो विधिनाऽभिहितेन ते । यजन्ति त्वन्मयास्त्वां वै बहुमूर्त्येकमूर्तिकम् ॥ ७ ॥ त्वामेवान्ये शिवोक्तेन मार्गेण शिवरूपिणम् । बह्वाचार्यविभेदेन भगवन्समुपासते ॥ ८ ॥ सर्व एव यजन्ति त्वां सर्वदेवमयेश्वरम् । येऽप्यन्यदेवताभक्ता यद्यप्यन्यधियः प्रभो ॥ ९ ॥ यथाऽद्रिप्रभवा नद्यः पर्जन्यापूरिताः प्रभो । विशन्ति सर्वतः सिन्धुं तद्वत्त्वां गतयोऽन्ततः ॥ १० ॥**

சிலர், வைஷ்ணவ தீக்ஷைபெற்று உம்மால் உரைக்கப்பட்ட பாஞ்சராத்திர விதிகளை அனுஷ்டித்து உம்முடைய ஸ்வரூபமாகிய வாசுதேவன், ஸங்கர்ஷணன், பிரத்யும்னன், அநிருத்தன் என்ற பேதத்தால் நானுவிதமாகவும், நாராயணனென்ற ரூபத்தால் ஒரே மூர்த்தியாகவுமிருக்கும், உம்மையே பூஜிக்கின்றனர். சிலர், பரமசிவன் உரைத்த மார்க்கப்படி சிவதீக்ஷைபெற்று, அதில் சைவம் பாசுபதம் என்ற பிரிவுகளை அனுஸரித்து பரமசிவன் வடிவமான உம்மையே ஆராதிக்கின்றார்கள். பிரபுவே! இவ்விதம் எந்த மார்க்கத்தை அனுஸரித்து எந்த தெய்வத்தை ஆராதித்தாலும், அவர்கள் எல்லோரும், எல்லா தேவர்களின் வடிவமான உம்மையே பூஜிக்கிறார்கள் என்பது நிச்சயம். மலையிலிருந்து உற்பத்தியாகும் நதிகள், ஓடும் மார்க்கத்தில் ஆங்காங்கு தண்ணீர்ப் பெருக்கை அடைந்து, கடைசியில் சமுத்திரத்தில் விழுந்து அதில் கலந்துகொள்வதுபோல், மனிதர்கள், எவ்வகை எண்ணங்கொண்டு

எந்தெந்த தேவதையை ஆராதித்தபோதிலும், அந்த பூஜைகள் யாவும் முடிவில் உம்மையே அடைகின்றன.

अग्निर्मुखं तेऽवनिरङ्घ्रिरीक्षणं सूर्यो नभो नाभिरथो दिशः श्रुतिः ।
द्यौः कं सुरेन्द्रास्तव बाहवोऽर्णवाः कुक्षिर्मरुत्प्राणबलं प्रकल्पितम् ॥ १३ ॥
रोमाणि वृक्षौषधयः शिरोरुहा मेघाः परस्यास्थिनखानि तेऽद्रयः ।
निमेषणं रात्र्यहनी प्रजापतिर्मेढ्रस्तु वृष्टिस्तव वीर्यमिष्यते ॥ १४ ॥

எங்கும் நிறைந்த ஈசா! அக்னி பகவானை உம்முடைய முகமாகவும், பூமியைப் பாதமாகவும், சூரியனைக்கண்ணுகவும், ஆகாயத்தை நாபியாகவும், திசைகளைக் காதாகவும், சுவர்க்கத்தை சிரசாகவும், தேவர்களைக் கைகளாகவும், சமுத்திரத்தை மூத்திரப்பையாகவும், வாயுவை பிராணனுகவும் பலமாகவும், விருக்ஷங்களையும் கொடிகளையும் ரோமங்களாகவும், மேகங்களை கேசங்களாகவும், மலைகளை எலும்பு நகம் இவைகளாகவும், இராப்பகல்களை இமைக்கொட்டாகவும், மழையை வீர்யமாகவும், பெரியோர்கள் கூறுகிருர்கள்.

यानियानीह रूपाणि क्रीडनार्थं बिभर्षि हि । तैरामृष्टशुचो लोका मुदा गायन्ति ते यशः ॥१६॥ नमः कारणमत्स्याय प्रलयाब्धिचराय च ।

பகவானே! நீர் விளையாடுவதற்காக என்னென்ன அவதாரங்களை எடுத்தீரோ, அந்தந்த அவதாரங்களின் மகிமையால் உலகத்தின் துக்கத்தை அகற்றினீர். உம்முடைய கீர்த்தியைச் சந்தோஷத்துடன் எல்லா உலகத்தார்களும் கானஞ்செய்கிருர்கள். நீர், மத்ஸியகூர்மாதி அவதாரங்களை எடுத்து பல ஸாதுக்களை ரக்ஷித்தீர். உம்முடைய ஒவ்வொரு அவதாரத்தையும் வணங்குகிறேன்.

अहं चात्मात्मजागारदारार्थस्वजनादिषु । भ्रमामि स्वप्नकल्पेषु मूढः सत्यधिया विभो ॥ २४ ॥ अनित्यानात्मदुःखेषु विपर्ययमतिर्ह्यहम् । द्वन्द्वारामस्तमोविष्टो न जाने त्वात्मनः प्रियम् ॥ २५ ॥ यथाऽबुधो जलं हित्वा प्रतिच्छन्नं तदुद्भवैः । अभ्येति मृगतृष्णां वै तद्वत्त्वाहं पराङ्मुखः ॥ २६ ॥

பிரபுவே! சொப்பனம் போன்று பொய்யாயிருக்கும் தேகம், மனைவி, மக்கள், பொருள், இவைகளை உண்மையெனக்

கருதி, அவைகளில் மோகமடைந்து, துக்கத்தைச் சுகமென்றும், அநித்யத்தை சாசுவதமென்றும், ஜடத்தை ஆத்மாவென்றும், அறிவின்மையால் நினைத்து, மோஹத்தால் சுழன்று, உண்மைப்பொருளும் பிரியரும் ஆனந்த ஸ்வரூபியுமான உம்மை அறியாது, இதுவரை என் காலத்தை வீணாகக்கழித்தேன். எவ்விதம் ஒரு மூடன் ஜலத்தில் படர்ந்திருக்கும் புல் முதலியவைகளால் மறைக்கப்பட்ட ஜலத்தை அறியாது, அதை விட்டுவிட்டு வெகுதூரத்தில் தோன்றும் கானல் ஜலத்தைக் குறித்து ஓடுவானோ, அவ்விதமே நான் ஆனந்த ஸ்வரூபியான உம்மை அறியாது விஷயசுகங்களை நாடினேன். உம்மை இன்னாரென்றறியாமல் இதுவரை அநாதரவு செய்தேன்.

**सोऽहं तवाङ्घ्र्युपगतोऽस्म्यसतां दुरापं तच्चाप्यहं भवदनुग्रह ईश मन्ये।**
**पुंसो भवेद्यर्हि संसरणापवर्गस्त्वय्यब्जनाभ सदुपासनया मतिः स्यात्॥**

ஈசா! நான் இந்த நிலைமையில் உம்முடைய திருவடிகளில் சரணமடைந்திருக்கிறேன். துஷ்டர்களுக்கு எளிதில் கிட்டாத உமது அனுக்கிரஹமும் எனக்குக்கிடைத்தது என்று நினைக்கிறேன். பத்மநாபா! எப்பொழுது மனிதனுக்கு ஸம்ஸாரத்தினின்று விடுதலை யேற்படுமோ அச்சமயம்தான் சாதுக்களின் சேர்க்கையும் அதன் மூலம் உம்மிடத்தில் பக்தியும் ஏற்படும்.

**नमस्ते वासुदेवाय सर्वभूतक्षयाय च।**
**हृषीकेश नमस्तुभ्यं प्रपन्नं पाहि मां प्रभो॥ ३०॥**

வாசுதேவா! ஹ்ருஷீகேசா! எல்லாப் பிராணிகளையும் ஒடுக்குகின்றவரே! உம்மை வணங்குகிறேன். சரணமடைந்த என்னைக் காத்தருளும்.

# நாற்பத்தொன்றாவது அத்தியாயம்.

**एकचत्वारिंशकेऽहत्रजकं प्रविशन्पुरीम्।**
**ततो वरानदात्तुष्टः सुदाम्नो वायकस्य च॥**

[வண்ணானை வதைத்தல். தையல் காரனுக்கும் ஸுதாமனுக்கும் வரமளித்தல்.]

श्रीशुक उवाच—स्तुवतस्तस्य भगवान् दर्शयित्वा जले वपुः । भूयः समाहरत्कृष्णो नटो नाट्यमिवात्मनः ॥ १ ॥ सोऽपि चान्तर्हितं वीक्ष्य जलादुन्मज्ज्य सत्वरः । कृत्वा चाऽऽवश्यकं सर्वं विस्मितो रथमागमत् ॥ २ ॥ तमपृच्छद्धृषीकेशः किं ते दृष्टमिवाद्भुतम् । भूमौ वियति तोये वा तथा त्वां लक्षयामहे ॥ ३ ॥

இவ்விதம் பகவான் அக்ரூரருக்குத் தன் ஸ்வரூபத்தை ஜலத்தில் காண்பிவித்து அவர் துதித்துக்கொண்டிருக்கும் பொழுதே, நாடகக் கொட்டகையினின்று மறையும் நடன்போன்று, திடீரென்று மறைந்தார். பகவான் மறைந்த பிறகு அக்ரூரர் ஜலத்தினின்றும் விரைவாக வெளிவந்து முக்கியமான நியமங்களை யனுஷ்டித்து ஆச்சரியத்துடன் ரதத்தில் ஏறினர். அப்பொழுது ஹ்ருஷீகேசர் "ஐயா! பூமியிலோ ஆகாசத்திலோ ஏதேனும் அற்புதமான விஷயத்தைப் பார்த்தீர்களா? உங்களைப் பார்க்கும்பொழுது அவ்விதம் தோன்றுகிறது" என்று வினவ,

अक्रूर उवाच—अद्भुतानीह यावन्ति भूमौ वियति वा जले । त्वयि विश्वात्मके तानि किं मेऽदृष्टं विपश्यतः ॥ ४ ॥ यत्राद्भुतानि सर्वाणि भूमौ वियति वा जले । तं त्वाऽनुपश्यतो ब्रह्मन्किं मे दृष्टमिहाद्भुतम् ॥ इत्युक्त्वा चोदयामास स्यन्दनं गान्दिनीसुतः । मथुरामनयद्रामं कृष्णं चैव दिनात्यये ॥ ६ ॥

அக்ரூரர் "க்ருஷ்ணா! பூமியிலும் ஆகாசத்திலும் ஜலத்திலும் என்னென்ன அற்புதங்கள் உள்ளனவோ அவையனைத்தும் பிரபஞ்ச வடிவமான உம்மிடத்திலேயே காணப்படுகின்றமையால் உம்மைத் தரிசனம் செய்தபிறகு நான் பாராத அற்புதமும் ஒன்று உளதோ!" என்று மறுமொழிகூறி ரதத்தை ஒட்டலானர். பிறகு அவர்கள் மாலைப்பொழுதில் மதுராபட்டணத்தை யடைந்தார்கள்.

तावद्व्रजौकसस्तत्र नन्दगोपादयोऽग्रतः । पुरोपवनमासाद्य प्रतीक्षन्तोऽवतस्थिरे ॥ ८ ॥ तान् समेत्याऽऽह भगवानक्रूरं जगदीश्वरः । भवान् प्रविशतामग्रे सहयानः पुरीं गृहम् । वयं त्विहावमुच्याथ ततो द्रक्ष्यामहे पुरीम् ॥ १० ॥

நந்தகோபர் முதலிய கோபாலர்கள் முன்னமே அங்கு சென்று பட்டணத்திற் கருகிலுள்ள ஒரு உத்தியானவனத்தில் இவர்கள் வரவை எதிர்பார்த்துக்கொண்டு தங்கியிருந்தார்கள். அவர்களைக் கண்டதும் கிருஷ்ணர், அக்ரூரரிடம் "ஐயா! நீங்கள் ரதத்தில் ஏறிக் கொண்டு உங்கள் கிருஹஞ்செல்லுங்கள். நாங்கள் இவ்விடம் களைப் பாறிவிட்டுக் காலையில் பட்டணத்தைப் பார்க்கிறோம்" என்று கூறவே

अक्रूरः—नाहं भवद्भ्यां रहितः प्रवेक्ष्ये मथुरां प्रभो ।
त्यक्तुं नार्हसि मां नाथ भक्तं ते भक्तवत्सल ॥ ११ ॥

அக்ரூரர், "பக்தவத்ஸலா! நாதா! கிருஷ்ணா! உம்மைவிட்டுப் பிரிந்து நான் மட்டும் மதுராபட்டணத்திற்குள் போக விரும் பேன். என்னை இவ்விதம் கைவிடுவது உமக்குத் தகுதியன்று.

आगच्छ याम गेहान्नः सनाथान् कुर्वधोक्षज । सहाग्रजः सगोपालैः सुहृद्भिश्च सुहृत्तम ॥ १२ ॥ पुनीहि पादरजसा गृहान्नो गृहमेधिनाम् । यच्छौचेनानुतृप्यन्ति पितरः साग्नयः सुराः ॥ १३ ॥ अवनिज्याङ्घ्रियुगल मासीत् श्लोक्यो वलिर्महान् । ऐश्वर्यमतुलं लेभे गतिं चैकान्तिनां तु या ॥ देवदेव जगन्नाथ पुण्यश्रवणकीर्तन । यदूत्तमोत्तमश्लोक नारायण नमोऽस्तुते ॥ १६ ॥

உம்முடைய தமையனுடனும் பந்துக்களுடனும் மற்றுமுள்ள கோபாலர்களுடனும் என் கிரஹத்திற்கு வந்து, உம்மையே நாத ஞகக்கொண்ட எங்களை உம்முடன் சேர்த்துக்கொள்ளும். கிரு கஸ்தர்களான எங்களுடைய வீடுகளை உம்முடைய பாததூளி யால் பரிசுத்தஞ்செய்யும். உம்முடைய பாதங்களில் தீர்த்தத்தை அபிஷேகம் செய்வதால் என் பிதிருக்களும், அக்னி, தேவர் முத லியவர்களும் சந்தோஷமடைவார்கள். மஹாபலிசக்கிரவர்த்தி இந்தப் பாதாரவிந்தங்களில் தீர்த்தமிட்டு பெரிய ஐசுவரியத்தையும் ஒரு வராலும் அடையமுடியாத உயர்ந்த பதவியையும் அடைந்தான். தேவதேவா! ஜகந்நாதா! யதுசிரேஷ்டா! நாராயணு! உம்மை வணங்குகிறேன்" என்று பிரார்த்தித்துக் கேட்கலானுர்.

श्रीभगवानुवाच—आयास्ये भवतो गेहमहमार्यसमन्वितः ।
यदुचक्रद्रुहं हत्वा वितरिष्ये सुहृत्प्रियम् ॥ १७ ॥

"யதுகுல துரோகியான கம்ஸனைக் கொன்று பந்துக்களுக்கு ஹிதத்தைச் செய்தபிறகு தமையனுரையும் அழைத்துக்கொண்டு உங்கள் கிருஹத்திற்கு வருகிறேன்" என்முர் பகவான்.

श्रीशुक उवाच—एवमुक्तो भगवता सोऽक्रूरो विमना इव । पुरीं प्रविष्टः कंसाय कर्माऽऽवेद्य गृहं ययौ ॥ १८ ॥ अथापराह्णे भगवान्कृष्णः सङ्कर्षणान्वितः । मथुरां प्राविशद्गोपैर्दिदृक्षुः परिवारितः ॥ १९ ॥

பகவான் இவ்வாறு உரைத்தபின் அக்ரூரர் மனதில்லாதவர்போன்று பட்டணத்திற்குள் பிரவேசித்து கம்ஸனிடஞ் சென்று தான் தூதுசென்று திரும்பிய வரலாற்றை உரைத்துவிட்டுத் தன் வீட்டிற்குச் சென்முர். பிறகு கிருஷ்ணர் பலராமரை அழைத்துக்கொண்டு கோபாலர்களால் சூழப்பட்டு, மதுராபுரிக்குள் பிற்பகலில் பிரவேசித்தார்.

ददर्श तां स्फाटिकतुङ्गगोपुरद्वारां बृहद्धेमकपाटतोरणाम् ।
ताम्रारकोष्ठां परिखादुरासदामुद्यानरम्योपवनोपशोभिताम् ॥ २० ॥

அம்மதுராபுரியின் பிரதான கோபுரவாசல் ஸ்படிகக் கற்களிஞல் இழைக்கப்பட்டு உயர்ந்த கோபுரத்துடனும், தங்கமிழைத்த கதவு, தோரணம், இவைகளுடனும் அழகாக விளங்கிற்று. அந்நகரத்தில் தாமிரத்திஞலும் பித்தளையிஞலுமாய நெற்களஞ்சியம், குதிரைலாயம் இவைகளையும், ஒருவராலும் அணுகமுடியாத அகழியையும், அழகான நந்தவனங்களுடன் கூடின உத்தியானவனத்தையும் அவர்கள் பார்த்தார்கள்.

सौवर्णशृङ्गाटकहर्म्यनिष्कुटैः श्रेणीसभाभिर्भवनैरुपस्कृताम् ।
वैदूर्यवज्रामलनीलविद्रुमैर्मुक्ताहरिद्भिर्वलभीषु वेदिषु ॥ २१ ॥

இன்னும் அவர்கள் அப்பட்டணத்தில், நாற்சந்திகளையும் அவைகளில் சுவர்ணமயமான கட்டிடங்களையும், பல பூந்தோட்டங்களையும், தொழிலாளர்களின் தொழிற்சாலைகளையும், அழகான வீடுகளையும், வைடூரியம், வஜ்ரம், படிகம், நீலம், பவழம் இவைகளாலும் நல்முத்து மரகதப்பச்சை இவைகளாலும் இழைக்கப்பட்ட கொடுங்கைகளையும், திண்ணைகளையும் பார்த்தார்கள்.

जुष्टेषु जालामुखरन्ध्रकुट्टिमेष्वाविष्टपारावतबर्हिनादिताम् ।
संसिक्तरथ्यापणमार्गचत्वरां प्रकीर्णमाल्यांकुरलाजतण्डुलाम् ॥ २२ ॥

திண்ணைத்தளவரிசைகளிலும், ஜன்னல்துவாரங்களிலும், மயில்களும் மாடப்புறுக்களும் களித்துக் கூத்தாடிக்கொண்டும், இனிமை யாய்ச் சப்தித்துக்கொண்டு மிருந்தன. மேலும் அந்நகரத்திலுள்ள ராஜவீதிகளும், கடைத்தெருக்களும், பொது ஸ்தலங்களும் நன் ருகத் தண்ணீர் தெளிக்கப்பட்டும், புஷ்பங்கள், பொரிகள், மொட்டு கள், அரிசி இவைகளால் சிங்காரிக்கப்பட்டு மிருந்தன.

आपूर्णकुम्भैर्दधिचन्दनोक्षितैः प्रसूनदीपावलिभिः सपल्लवैः ।
सवृन्तरंभाक्रमुकैः सकेतुभिः स्वलंकृतद्वारगृहां सपट्टिकैः ॥ २३ ॥

அப்பட்டணத்துவாசிகள் தங்கள் வீடுகளில் பூர்ண கும்பங்களை வைத்து அவைகளைச்சுற்றி தீபங்களை வரிசைவரிசையாக வைத்திருந் தார்கள். ஒவ்வொரு வீட்டின் வாசலிலும் குலைவாழை, கமுகு தோரணம், முதலியவைகளைக் கட்டியும் அப்பட்டணத்தை அலங் கரித்திருந்தார்கள்.

तां संप्रविष्टौ वसुदेवनन्दनौ वृतौ वयस्यैर्नरदेववर्त्मना ।
द्रष्टुं समीयुस्त्वरिताः पुरस्त्रियो हर्म्याणि चैवाऽऽरुरुहुर्नृपोत्सुकाः ॥२४॥

அரசனே! வசுதேவகுமாரர்களான ராமகிருஷ்ணர்கள் சிநேகி தர்களால் சூழப்பட்டு இவ்வழகிய மதுராபட்டணத்தைப் பார்த்துக் கொண்டு ராஜவீதியில் செல்லுகையில் பட்டணத்து ஸ்திரீகள் அவர்களைப் பார்க்க ஆசைகொண்டு பரபரப்புடன் உப்பரிகைகளில் ஏறி நின்ருர்கள்.

काश्चिद्विपर्यग्धृतवस्त्रभूषणा विस्मृत्य चैकं युगलेष्वथापराः ।
कृतैकपत्रश्रवणैकनूपुरा नाङ्क्त्वा द्वितीयं त्वपराश्च लोचनम् ॥ २५ ॥

அப்பொழுது சிலமாதர்கள் அவசரத்தில் ஆடையாபர ணங்களை மாறுதலாகத் தரித்துக்கொண்டார்கள். சிலர் ஜோடியாக அணியவேண்டிய ஆபரணங்களில் ஒன்றைவிட்டு ஒன்றைமட்டும் அணிந்துகொண்டார்கள். சிலர் ஒருகாலில் மட்டும் பாதசரத்தை அணிந்து கொண்டும், மற்றும் சிலர் ஒரு கண்ணுக்கு மட்டும் மையிட்டும் சென்ருர்கள். சிலர் சாப்பிடும் மத்தியில் எழுந்திருந் தும், வேறு சிலர் தூக்கத்தினின்று எழுந்தும், கிருஷ்ணனைப் பார்க்கச் சென்ருர்கள்.

**मनांसि तासामरविन्दलोचनः प्रगल्भलीलाहसितावलोकैः ।**
**जहार मत्तद्विरदेन्द्रविक्रमो दृशां ददच्छ्रीरमणात्मनोत्सवम् ॥ २७ ॥**

அம்புஜாக்ஷனுகிய கிருஷ்ணன், அம்மாதர்களின் மனதை, சிரிப்பு, கடைக்கண் பார்வை, இவைகளால் அபகரித்துக்கொண்டும், மதங்கொண்ட கஜேந்திரம் போல் கம்பீரமாக நடந்தும், லக்ஷ்மீ தேவியும் ஆசைப்படும் தன் சரீரத்தால் அவர்களின் கண்களுக்குச் சந்தோஷத்தை அளித்தார்.

**दृष्ट्वा मुहुश्श्रुतमनुद्रुतचेतसस्तं तत्प्रेक्षणोत्स्मितसुधोक्षणलब्धमानाः ।**
**आनन्दमूर्तिमुपगुह्य दृशाऽऽत्मलब्धं हृष्यत्त्वचो जहुरनन्तमरिंदमाधिम् ॥**

சத்துருவை ஜயித்த பரிக்ஷித்து மன்னவனே! அம்மாதர்கள் அடிக்கடி கிருஷ்ணனுடைய அழகையும் குணத்தையும் கேள்வியுற்று அவரிடத்தில் ஆசைகொண்டிருந்ததால், இப்பொழுது காமத்தை வளர்க்கும் அவருடைய பார்வை புன்சிரிப்பு, இவையாகிற அமுதப்பெருக்கில் மூழ்கி, வெகுமானமடைந்து, லாவண்ய மூர்த்தியான கிருஷ்ணனைக்கண்ணுல் ஆலிங்கனஞ்செய்து, உடல்புளகித்தும் மயிர்க்கூச்சலடைந்தும் தங்கள் தாபத்தைப் போக்கிக்கொண்டனர்.

**प्रासादशिखरारूढाः प्रीत्युत्फुल्लमुखांबुजाः । अभ्यवर्षन् सौमनस्यैः प्रमदा बलकेशवौ ॥ २९ ॥ दध्यक्षतैः सोदपात्रैः स्रग्गन्धैरप्युपायनैः । तावानर्चुः प्रमुदितास्तत्र तत्र द्विजातयः ॥ ३० ॥**

குற்றமற்ற அம்மாதர்கள் முகமலர்ச்சியடைந்து மேல்மாடங்களில் ஏறி நின்று அவர்மீது பூமழை சொரிந்தார்கள். வேதியர்கள், பூர்ணகும்பத்துடன் கிருஷ்ணனை எதிர்கொண்டழைத்து அக்ஷதைகளாலும் புஷ்பங்களாலும் அவரை அர்ச்சித்தார்கள்.

**रजकं कञ्चिदायान्तं रङ्गकारं गदाग्रजः । दृष्ट्वाऽयाचत वासांसि धौतान्यत्युत्तमानि च ॥ ३२ ॥ स याचितो भगवता परिपूर्णेन सर्वतः । साक्षेपं रुषितः प्राह भृत्यो राज्ञः सुदुर्मदः ॥ ३४ ॥**

அச்சமயத்தில் கம்ஸனுடைய வஸ்திரங்களை வெளுத்துச் சாயமேற்றி வர்ணமிடும் ஒரு வண்ணுன் தற்செயலாய் அவ்விடம் வருவதைப் பார்த்து, பகவான், அவனிடம் சில விலையுயர்ந்த வஸ்திரங்களைக் கேட்கலானுர். "எல்லா ஸம்பத்துக்களையும் பூர்ணமாகப் பெற்ற பகவான் இவ்வாறு யாசிக்கிருர்" என்பதை அறியாத அம்

மூடன், ராஜஸேவகன் என்ற கர்வத்தால் கோபமடைந்து, அவ ருடைய வேண்டுகோளை மறுத்து,

ईदृशान्येव वासांसि नित्यं गिरिवनेचराः । परिधत्त किमुद्वृत्ता राज-
द्रव्याण्यभीप्सथ ॥३५॥ याताऽऽशु बलिशा मैवं प्रार्थ्यं यदि जिजीविषा ।
बध्नन्ति घ्नन्ति लुंपन्ति दृप्तं राजकुलानि वै ॥ ३६ ॥ एवं विकत्थमानस्य
कुपितो देवकीसुतः । रजकस्य कराग्रेण शिरः कायादपातयत् ॥ ३७ ॥

"கெட்டநடத்தையுடையவர்களே! எப்பொழுதும் காடு களிலும், மலைகளிலும் சஞ்சரிக்கும் நீங்கள் இதற்கு முன் எப் பொழுதாவது இம்மாதிரி ஆடைகளை அணிந்ததுண்டா? அரச னுடைய வஸ்திரங்களையா விரும்புகிறீர்கள்! சீக்கிரம் இவ்விடத்தை விட்டுச்செல்லுங்கள். உங்களுக்கு உயிரில் ஆசையிருந்தால், சிறு பிள்ளைத்தன்மையைக் காட்டி மறுபடியும் இவ்விதம் கேட்காதீர்கள். இவ்விஷயம் அரண்மனைவரை எட்டுமேயானல் சேவகர்கள் உங் களைக்கட்டியடித்து உங்கள் கொழுப்பை யடக்கி உங்கள் பணத் தையும் பிடுங்கிக்கொள்வார்கள்" என்ருன். இவ்விதம் பிதற்றும் வண்ணனிடம் பகவான் கோபங்கொண்டு அவனுடைய் தலை யைத் தன் கரத்தால் முறித்தெறிந்தார்.

तस्यानुजीविनः सर्वे वासःकोशान्विसृज्य वै । दुद्रुवुः सर्वतो मार्गं
वासांसि जगृहेऽच्युतः ॥॥ वसित्वाऽऽत्मप्रिये वस्त्रे कृष्णः संकर्षणस्तथा ।
शेषाण्यादत्त गोपेभ्यो विसृज्य भुवि कानिचित् ॥ ३९ ॥ ततस्तु वायकः
प्रीतस्तयोर्वेषमकल्पयत् । विचित्रवर्णैश्चैलेयैराकल्पैरनुरूपतः ॥ ४० ॥

அவனைச்சார்ந்து பிழைக்கும் மற்றய வண்ணன்களும் தங்கள் துணிமூட்டைகளைப் போட்டுவிட்டு நாலா பக்கங்களி லும் ஓடலானுர்கள். பகவான் அவைகளிலிருந்து பலராமருக்கும் தமக்கும் வேண்டிய வஸ்திரங்களை எடுத்துக்கொண்டு மீதியிருந் ததை கோபாலர்களுக்குக் கொடுத்து, சிலவற்றை பூமியிலும் எறிந் தார். பிறகு ஒருசேணியன் பலவர்ணங்களுள்ள வஸ்திரங்களால் வடிவத்திற்கும் உருவத்திற்கும் தகுந்தபடி அவர்களை யலங்கரித்தான்.

तस्य प्रसन्नो भगवान् प्रादात्सारूप्यमात्मनः ।
श्रियं च परमां लोके बलैश्वर्यस्मृतीन्द्रियम् ॥ ४२ ॥

பகவான் அந்தச் சேணியனிடம் திருப்தியடைந்து இக லோகத்தில் ஐசுவரியத்தையும் பலத்தையும், பரத்தில் ஸாரூப்பியத்தையும் கொடுத்தார்.

ततः सुदाम्नो भवनं मालाकारस्य जग्मतुः । तौ दृष्ट्वा स समुत्थाय ननाम शिरसा भुवि ॥ तयोरासनमानीय पाद्यं चार्घ्यार्हणादिभिः । पूजां सानुगयोश्चक्रे स्रक्ताम्बूलानुलेपनैः ॥ ४४ ॥ प्राह नः सार्थकं जन्म पावितं च कुलं प्रभो । पितृदेवर्षयो मह्यं तुष्टा ह्यागमनेन वाम् ॥ ४५ ॥ तावाज्ञापयतं भृत्यं किमहं करवाणि वाम् । पुंसोऽत्यनुग्रहो ह्येष भवद्भिर्यन्नियुज्यते ॥ ४८ ॥

பிறகு பலராமரும் கிருஷ்ணரும் பூமாலை தொடுக்கும் சுதாமனுடைய கிருஹத்திற்குச்சென்றார்கள். அவர்களைப்பார்த்ததும் சுதாமன் விரைவில் எழுந்து தண்டம்போல் பூமியில் விழுந்து தலையால் வணங்கினான். பிறகு அவன், அவர்களை ஆசனத்தில் அமர்த்தி அவர்களது பாதங்களில் தீர்த்தமிட்டு அர்க்கியம் ஆசமனீயம் முதலியவைகளைச் சமர்ப்பித்து, அவர்களுக்கும் அவர்களுடன் வந்தவர்களுக்கும் சந்தனம், தாம்பூலம், புஷ்பம், முதலியவற்றைக்கொடுத்து, மறுபடியும் உபசரித்தான். பின்பு சுதாமன் அவர்களைப்பார்த்து "பிரபுவே! இன்றுதான் என் ஜன்மம் ஸபலமாயிற்று. என்னுடைய வம்சமும் பரிசுத்தமாயிற்று. பிதிருக்களும், தேவர்களும், ரிஷிகளும் உங்கள் வரவால் திருப்தியடைந்தார்கள். நான் உங்கள் தாசன். நான் செய்யவேண்டியது யாது? என்னைக் கட்டளையிடுங்கள். ஒருவன் உங்களால் கட்டளையிடப்படுவானேயாகில் அதுவே அவனுக்குப் பெரும்பாக்கியம்" என்றான்.

इत्यभिप्रेत्य राजेन्द्र सुदामा प्रीतमानसः ।
शस्तैः सुगन्धैः कुसुमैर्माला विरचिता ददौ ॥ ४९ ॥

இவ்விதம் சுதாமன் பகவானிடம் தன் அபிப்பிராயத்தைத் தெரிவித்துவிட்டு நறுமணம் வீசும் உயர்தர புஷ்பங்களால் மாலைகளைச் செய்து சந்தோஷமனதுடன் பகவானுக்குச் சூட்டினான்.

ताभिः स्वलंकृतौ प्रीतौ कृष्णरामौ सहानुगौ । प्रणताय प्रपन्नाय ददतुर्वरदौ वरान् ॥ ५० ॥ सोऽपि वव्रेऽचलां भक्तिं तस्मिन्नेवाखिलात्मनि ।

तद्भक्तेषु च सौहार्दं भूतेषु च दयां पराम् ॥ ५१ ॥ इति तस्मै वरं दत्वा श्रियं चान्वयवर्धिनीम् । बलमायुर्यशः कान्तिं निर्जगाम सहाग्रजः ॥५२॥

பகவான் சுதாமனிடம் திருப்தியடைந்து, அவன் கேட்டபடி என்றும்குன்றாத பக்தியையும், பக்தர்களிடத்தில் அன்பையும் பிராணிகளிடத்தில் தயையையும் அருளிவிட்டு, வம்ச பரம்பரையாய்ப் பெருகும் செல்வத்தையும், நீண்ட ஆயுளையும், பலம், புகழ், காந்தி, இவைகளையும் அவனுக்கு வரமளித்து, பின் பலராமருடன் அவ்விடம் விட்டுப்புறப்பட்டார்.

## நாற்பத்திரண்டாவது அத்தியாயம்.



{ द्विचत्वारिंशके कुब्जोन्नमनं धनुषो भिदा ।
वधस्तद्रक्षिणां कंसारिष्टं रङ्गोत्सवादि च ॥ }

[கூனியின் கூனெடுத்தல்—வில் முறித்தல்—காவலர்களை வதைத்தல்—கம்ஸன் துர்நிமித்தம் காணுதல்—ரங்கமண்டபத்தை அலங்கரித்தல்.]

अथ व्रजन्राजपथेन माधवः स्त्रियं गृहीताङ्गविलेपभाजनाम् ।
विलोक्य कुब्जां युवतीं वराननां पप्रच्छ यान्तीं प्रहसन्रसप्रदः ॥ १ ॥
का त्वं वरोर्वेतदुहानुलेपनं कस्याङ्गने वा कथयस्व साधु नः ।
देह्यावयोरङ्गविलेपमुत्तमं श्रेयस्ततस्ते नचिराद्भविष्यति ॥ २ ॥

இவ்விதம் மாதவன் சுதாமனுக்கு அனுக்கிரஹம் செய்துவிட்டு, ராஜவீதியின் வழியாய்ச் செல்லும்பொழுது, அவர் இளமைப் பருவத்திலிருக்கும் ஒரு கூனியைப் பார்த்தார். அவளுடைய உடல் வளைந்திருந்தபோதிலும் அவளது முகம் அழகாயிருந்தது. சரீரத்தில் பூசிக்கொள்வதற்குத் தகுதியான உயர்ந்த சந்தனத்தை அவள் ஒரு பாத்திரத்தில் வைத்துக்கொண்டிருந்தாள். அவளைப் பார்த்துப் பகவான் சிறிது புன்னகைசெய்துகொண்டு “சுந்தரீ! நீ யார்? இந்தச் சந்தனத்தை யாருக்குக் கொண்டுபோகின்றாய்?

எங்களிடமுரைப்பாய். அவ்வுயர்ந்த சந்தனத்தை எங்களிருவர்களுக்கும் கொடு. அதனால் நீ பெரிய ஸம்பத்தை சீக்கிரத்தில் அடைவாய்" என்றார்.

सैरन्ध्री उवाच—

दास्यस्म्यहं सुन्दर कंससंमता त्रिवक्रनामा ह्यनुलेपकर्मणि ।
मद्भावितं भोजपतेरतिप्रियं विना युवां कोऽन्यतमस्तदर्हति ॥ ३ ॥

அந்தப்புரப் பெண்களுக்கு அலங்காரம் செய்யும் அக்கூனி "சுந்தர புருஷர்களே! வாசனைப் பூச்சுகளைத் தயாரித்துக்கொடுப்பதில் நான் கம்ஸனுக்குப் பிரியமான வேலைக்காரி. என் பெயர் திருவக்கிரை. நான் தயாரிப்பதைக் கம்ஸன் சந்தோஷத்துடன் ஏற்றுக்கொள்வான். இந்தச் சந்தனத்தை உங்களைத் தவிர வேறு யார் பூசிக்கொள்வதற்குத் தகுதியானவர்கள்!" என்றுரைத்தாள்.

रूपपेशलमाधुर्यहसितालापवीक्षितैः । धर्षितात्मा ददौ सान्द्रमुभयोरनुलेपनम् ॥ ४ ॥ प्रसन्नो भगवान्कुब्जां त्रिवक्रां रुचिराननाम् । ऋज्वीं कर्तुं मनश्चक्रे दर्शयन् दर्शने फलम् ॥ ६ ॥

அவர்களது அழகு புன்சிரிப்பு இனியபேச்சு இவைகளில் மயங்கி, அச்சந்தனத்தை அவர்களுக்குக்கொடுத்தாள். பகவான் அக்கூனியை நேராகச் செய்வதற்கு எண்ணங்கொண்டு,

पद्भ्यामाक्रम्य प्रपदे द्व्यङ्गुल्युत्तानपाणिना । प्रगृह्य चुबुकेऽध्यात्ममुदनीनमदच्युतः ॥ ७ ॥ सा तदर्जुसमानाङ्गी बृहच्छ्रोणिपयोधरा । मुकुन्दस्पर्शनात्सद्यो बभूव प्रमदोत्तमा ॥ ८ ॥ ततो रूपगुणौदार्यसंपन्ना प्राह केशवम् । उत्तरीयान्तमाकृष्य स्मयन्ती जातहृच्छया ॥ ९ ॥

அவளுடைய கால் நுனிகளைத் தன்கால்களால் மிதித்தும், இரண்டு விரல்களை அவளுடைய முகவாய்க் கட்டையில் வைத்தும் அவளை உயர்த்தினார். முகுந்தன் அந்தக்கூனியைத் தொட்டமாத்திரத்தில் அவள், நேரான சரீரத்தையும், சமமான அங்கங்களையும், பருத்த ஸ்தனங்களையும் பின்பாகங்களையும் அடைந்து, ஒரு உத்தம ஸ்திரீயாக விளங்கினாள். பிறகு ரூபம், குணம், ஔதார்யம் இவைகளால் அழகாக விளங்கும் அம்மாது, பகவானிடத்தில் மன்மத தாபமடைந்து அதனால் மனங்கலங்கி, சிறிது சிரித்துக்கொண்டு கிருஷ்ணனுடைய உத்தரீயத்தை யிழுத்து,

एहि वीर गृहं यामो न त्वां त्यक्तुमिहोत्सहे । त्वयोन्मथितचित्तायाः प्रसीद पुरुषर्षभ ॥ १० ॥ एवं स्त्रिया याच्यमानः कृष्णो रामस्य पश्यतः । मुखं वीक्ष्यानु गोपानां प्रहसंस्तामुवाच ह ॥ ११ ॥ एष्यामि ते गृहे सुभ्रूः पुंसामाधिविकर्शनम् । साधितार्थोऽगृहाणां नः पान्थानां त्वं परायणम् ॥

"நாதா! என் வீட்டிற்கு வந்து என் மனோரதத்தைநிறைவேற்றும். உம்மைவிடேன்" என்று வேண்டிக்கொண்டாள். இவ்விதம் பலராமர் முன்னிலையில் கூனி தன்னைப் பிரார்த்திக்க, பகவான் அவளைப் பார்த்துச் சிரித்துக்கொண்டு, "அழகிய புருவமுடையவளே! எடுத்த காரியத்தை முடித்துவிட்டு உன்னுடைய கிருஹத்திற்கு வருகிறேன். உன்னுடைய கிருஹம் மனோவியாகூலமடைந்த மனிதர்களின் துன்பத்தைப் போக்கக்கூடியது. அதுவுமின்றி வீட்டை விட்டு வெளியில் சஞ்சரிப்பவர்களுக்கு உன்னுடைய கிருஹமே மேலான தங்குமிடமாகின்றது" என்றார்.

विसृज्य माध्व्या वाण्या तां व्रजन्मार्गे वणिक्पथैः । नानोपायनतांवूल-स्रग्गन्धैः साग्रजोऽर्चितः ॥ १३ ॥ ततः पौरान्पृच्छमानो धनुषः स्थान मच्युतः । तस्मिन्प्रविष्टो ददृशे धनुरैन्द्रमिवाद्भुतम् ॥ १५ ॥ पुरुषैर्बहुभिर्गुप्तमर्चितं परमर्द्धिमत् । वार्यमाणो नृभिः कृष्णः प्रसह्य धनुराददे ॥

இவ்விதம் கிருஷ்ணபகவான் தேன்போன்ற இனிமையான வார்த்தையால் அவளைச் சமாதானப்படுத்தி அனுப்பிவிட்டு கடைவீதிவழியாகச்சென்றார். அச்சமயம் வியாபாரிகள் தாம்பூலம் புஷ்பம் முதலிய பல காணிக்கைகளைக்கொண்டு அவர்களைப் பூஜித்தார்கள். அச்சுதர் ஆங்காங்கு பட்டணத்து ஜனங்களிடம் வில்லிருக்குமிடத்தை விசாரித்து, கடைசியில் அவ்விடத்தையடைந்து, அங்கு இந்திரதனுஸ் போன்று அத்புதமாயிருக்கும் ஒரு வில்லைப் பார்த்தார். பல புருஷர்களால் நன்கு காக்கப்பட்டதும், தினந்தோறும் பூஜிக்கப்பட்டதும், விலைமதிக்க முடியாததுமான அந்த வில்லை பகவான், காவலர்கள் தடுத்ததையும் லக்ஷியஞ் செய்யாது, பலாத்காரமாகக் கையிலெடுக்கலானார்.

करेण वामेन सलीलमुद्धृतं सज्यं च कृत्वा निमिषेण पश्यताम् ।
नृणां विकृष्य प्रबभञ्ज मध्यतो यथेक्षुदण्डं मदकर्युरुक्रमः ॥ १७ ॥

திருவிக்கிரமாவதாரஞ்செய்த பகவான் தம் இடது கையினால் அந்தனுஸை சிரமமின்றித் தூக்கி நாணேற்றி, அங்கு கூடியிருந்த ஜனங்கள் பார்த்துக்கொண்டிருக்கும் பொழுதே, மதங்கொண்ட கஜேந்திரன் ஒருசிறுகரும்பை ஒடிப்பதுபோல், மத்தியில்முறித்தார்.

धनुषो भज्यमानस्य शब्दः खं रोदसी दिशः । पूरयामास यं श्रुत्वा कंसस्त्रासमुपागमत् ॥ १८ ॥ तद्रक्षिणः सानुचराः कुपिता आततायिनः । ग्रहीतुकामा आववुर्गृह्यतां वध्यतामिति ॥ १९ ॥ अथ तान् दुरभिप्रायान् विलोक्य बलकेशवौ । क्रुद्धौ धन्वन आदाय शकले तांश्च जघ्नतुः ॥ २० ॥

அப்பொழுது ஒரு பெருஞ்சப்தம் கிளம்பி ஆகாசம், பூமி, சுவர்க்கம், திக்குகள் எங்கும் பரவிற்று. அதைக்கேட்டு கம்ஸன் நடுக்கமுற்றான். அவ்வில்லின் காவலாளிகள் கோபமுற்று ஆயுதங்களை எடுத்துக்கொண்டு கிருஷ்ணனைப் பிடித்துக் கட்ட முயன்றார்கள். அப்பொழுது பலராமரும் கிருஷ்ணரும் முறிந்த வில்லின் துண்டுகளை யெடுத்துக்கொண்டு, அவர்களை யடித்துக் கொன்றார்கள்.

बलं च कंसप्रहितं हत्वा शालामुखात्ततः । निष्क्रम्य चेरतुर्हृष्टौ निरीक्ष्य पुरसंपदः ॥ २१ ॥ तयोर्विचरतोः स्वैरमादित्योऽस्तमुपेयिवान् । कृष्णरामौ वृतौ गोपैः पुराच्छकटमीयतुः ॥२३॥

பின் அவர்கள் கம்ஸனனுப்பிய சைன்யங்களையும் கொன்றுவிட்டு, யாகசாலையினின்று வீதிவழியே சென்று பட்டணத்தின் செழிப்பைப் பார்த்துக்கொண்டிருக்கையில், சூரியனும் அஸ்தமனமானான். அதன்பின் அவர்கள் கோபாலர்களுடன் தங்கள் ஜாகையையடைந்தார்கள்.

अवनिक्ताङ्घ्रियुगलौ भुक्त्वा क्षीरोपसेचनम् । ऊषतुस्तां सुखं रात्रिं ज्ञात्वा कंसचिकीर्षितम् ॥ २५ ॥ कंसस्तु धनुषो भङ्गं रक्षिणां स्वबलस्य च । वधं निशम्य गोविन्दरामविक्रीडितं परम् ॥ २६ ॥ दीर्घप्रजागरो भीतो दुर्निमित्तानि दुर्मतिः । बहून्यचष्टोभयथा मृत्योर्दौत्यकराणि च ॥ २७ ॥

பிறகு அவர்கள் கால்கழுவி பாலுணவை அருந்தி கம்ஸனின் எண்ணத்தை அறிந்து கொண்டவர்களாய் சுகமாக நித்திரைசெய்தார்கள். இது நிற்க, கெடுமதியுடைய கம்ஸன், அவ்விரு குழந்தை

களும் வில்லை முறித்து, காவலர்களையும் தன் சைனியத்தையும் கொன்றதைக் கேள்வியுற்று, கவலைகொண்டு வெகுநேரம் தூக்கமின்றி வருந்தி, மரணத்தைக்குறிக்கும் பல துர்நிமித்தங்களைக் கனவிலும் நினைவிலும் பார்த்தான்.

अदर्शनं स्वशिरसः प्रतिरूपे च सत्यपि । असत्यपि द्वितीये च द्वैरूप्यं ज्योतिषां तथा ॥ २८ ॥ छिद्रप्रतीतिश्छायायां प्राणघोषानुपश्रुतिः । स्वर्ण प्रतीतिर्वृक्षेषु स्वपदानामदर्शनम् ॥ २९ ॥ स्वप्ने प्रेतपरिष्वङ्गः खरयानं विषादनम् । यायान्नलदमाल्येकस्तैलाभ्यक्तो दिगंबरः ॥ ३० ॥

தனக்குத் தலையிருந்தும் அவன்கண்ணாடியில் தலையில்லாதமுண்டத்தையே பார்த்தான். சந்திரன் ஒன்றாயிருந்தும் அவனுக்கு இரண்டாகப் புலப்பட்டது. தன் நிழலில் பல துவாரங்களைப் பார்த்தான். தன் செவிக்குள் பிராணசப்தம் கேட்கப்படாது அடங்கியிருந்தது. இன்னும் விருக்ஷங்கள் தங்கமயமாகத் தோன்றின. புழுதியில் அவன்காலடிகள் அவனுக்குப் புலப்படவில்லை. அவன், பிரேதத்தைக் கட்டிக்கொள்வதாகவும், கழுதையின்மேல் ஏறிப் போவதாகவும், விஷத்தை உண்பதாகவும், கனவு கண்டான். செம்பருத்தி மாலையை அணிந்தவனாகவும் எண்ணை தேய்த்துக் கொண்டு வஸ்திரமில்லாமலிருப்பவனாகவும் கனவு கண்டான்.

अन्यानि चेत्थंभूतानि स्वप्नजागरितानि च । पश्यन् मरणसन्त्रस्तो निद्रां लेभे न चिन्तया ॥ ३१ ॥ व्युष्टायां निशि कौरव्य सूर्ये चाद्भ्यः समुत्थिते । कारयामास वै कंसो मल्लक्रीडामहोत्सवम् ॥ आनर्चुः पुरुषा रङ्गं तूर्यभेर्यश्च जघ्निरे । मञ्चाश्चालंकृताः स्रग्भिः पताकाचैलतोरणैः ॥ ३३ ॥

இம்மாதிரி சொப்பனங்களைக்கண்டதால் தனக்கு மரணம் நேரிடுமோவென்று பயந்து, கவலையால் கம்ஸன் நித்திரையற்றிருந்தான். குரு சிரேஷ்டா! அன்றிரவு சென்று சூரியன் உதயமானவுடன் கம்ஸன் மல்லயுத்தத்திற்கு வேண்டியவைகளைத் தயார் செய்யும்படி மல்லர்களைக் கட்டளையிட்டான். அவ்விதமே சிலர் ரங்கமண்டபத்தை அலங்கரித்தார்கள். நாதஸ்வரம் பேரிகை முதலிய வாத்தியங்கள் முழங்கின. சிலர், மஞ்சங்களை புஷ்பமாலைகளாலும் கொடிகளாலும் தோரணங்களாலும் வஸ்திரங்களாலும் அலங்கரித்தார்கள்.

तेषु पौरा जानपदा ब्रह्मक्षत्रपुरोगमाः । यथोपजोषं विविशू राजानश्च कृतासनाः ॥ ३४ ॥ कंसः परिवृतोऽमात्यै राजमञ्च उपाविशत् । मण्डलेश्वरमध्यस्थो हृदयेन विदूयता ॥ ३५ ॥ वाद्यमानेषु तूर्येषु मल्लतालोत्तरेषु च । मल्लाः स्वलंकृता दृप्ताः सोपाध्यायाः समासत ॥ ३६ ॥

அம்மஞ்சங்களில் நாலுவர்ணத்தார்களும் நாட்டார் நகரத்தார் எல்லோரும் சுகமாக உட்கார்ந்திருந்தார்கள். அச்சமயம் கம்ஸன், தன் மந்திரிகளால் சூழப்பட்டு ரங்கமண்டபத்திற்குள் பிரவேசித்து, சிற்றரசர்களின் மத்தியில் ஒரு ராஜமஞ்சத்தில் உட்கார்ந்தான். ஆயினும் அவன் மனம் துன்புற்றிருந்தது. மல்லர்கள் தங்களை நன்ருய் அலங்கரித்துக்கொண்டு, தங்கள் குருக்களுடன் ரங்கமண்டபத்திற்குள் கர்வத்துடன் பிரவேசித்தார்கள்.

चाणूरो मुष्टिकः कूटः शलस्तोशल एव च । त आसेदुरुपस्थानं वल्गुवाद्यप्रहर्षिताः ॥ ३७ ॥ नन्दगोपादयो गोपा भोजराजसमाहुताः । निवेदितोपायनास्ते एकस्मिन्मञ्च आविशन् ॥ ३८ ॥

சாணூரன், முஷ்டிகன், கூடன், சலன், தோசலன், முதலிய மல்லர்கள் அழகான வாத்தியங்களைக் கேட்டு உள்ளங்களித்து, தங்கள் தங்கள் ஸ்தானத்தை யடைந்து உட்கார்ந்தார்கள். கம்ஸனுல் அழைக்கப்பட்ட நந்தகோபர் முதலியவர்களும், கம்ஸனிடத்தில் காணிக்கைகளைச் செலுத்தி, அதன்பின் மஞ்சத்தில் உட்கார்ந்தார்கள்.



# நாற்பத்து மூன்ருவது அத்தியாயம்.



{ त्रिचत्वारिंशके हत्वा गजेन्द्रं रामकृष्णयोः ।
रङ्गप्रवेशसौभाग्यं चाणूरेण च भाषणम् ॥ }

[குவலயாபீடவதம்—ராமகிருஷ்ணர்கள் ரங்கமண்டபத்தில் நுழையும் அழகு—மல்லனுடன் சம்பாஷணை.]

**श्रीशुक उवाच–अथ कृष्णश्च रामश्च कृतशौचौ परन्तप । मल्लदुंदुभि निर्घोषं श्रुत्वा द्रष्टुमुपेयतुः ॥ १ ॥ रङ्गद्वारं समासाद्य तस्मिन्नागमवस्थितम् । अपश्यत्कुवलयापीडं कृष्णोऽम्बष्ठप्रचोदितम् ॥ २॥ बद्ध्वा परिकरं शौरिः समुह्य कुटिलालकान् । उवाच हस्तिपं वाचा मेघनादगभीरया ॥ ३ ॥**

சத்துருக்களை தபிக்கச்செய்யும் பரீக்ஷித்தே! பலராமனும் கிருஷ்ணனும் தனுஸை முறித்துவிட்டு அன்றிரவை சுகமாகக் கழித்தார்கள். பிறகு மறுநாள் காலையில் அவர்கள் காலைக்கடன்களை முடித்துக்கொண்டு, "கம்ஸனைக் கொல்லுவதில் அணுவளவும் தோஷம் ஏற்படாது" என்று மனதில் தீர்மானஞ்செய்து கொண்டார்கள். பிறகு மல்லர்களின் ஆரவாரத்தையும், துந்துபியின் சப்தத்தையும் கேட்டு அவர்கள், ரங்கமண்டபத்தைப் பார்க்க ஆவல்கொண்டு அதன் வாயிலையடைந்து, அங்கு குவலயாபீடம் என்ற ஒரு பெரிய யானையையும், அதை நடத்தும் ஒரு சூரனான யானைப்பாகனையும் கண்டார்கள். கிருஷ்ணன், நன்றாய்க் கச்சை கட்டிக்கொண்டும், முகத்தில் தொங்கும் முன் மயிர்களை ஒதுக்கிக் கொண்டும், இடிமுழக்கம்போன்ற கம்பீரமான குரலுடன் யானைப் பாகனைப் பார்த்து,

**अंबष्ठांबष्ठ मार्गं नौ देह्यपक्रम माचिरम् । नो चेत्सकुञ्जरं त्वाऽद्य नयामि यमसादनम् ॥ ४ ॥ एवं निर्भर्त्सितोंबष्ठः कुपितः कोपितं गजम् । चोदयामास कृष्णाय कालान्तकयमोपमम् ॥ ५ ॥ करीन्द्रस्तमभिद्रुत्य करेण तरसाऽग्रहीत् । कराद्विगलितः सोऽमुं निहत्याङ्घ्रिष्वलीयत ॥ ६**

"யானைப்பாகா! அடா! சீக்கிரம் எங்களிருவர்களுக்கும் வழியை விட்டு அப்புறஞ்செல். இல்லாவிடில் உன்னையும் யானையையும் யமனிடம் அனுப்புவேன்" என்றார். இதைக் கேட்டு யானைப்பாகன் கடுங்கோபங்கொண்டு யமனுக்கொப்பான யானையை அவர்கள் மீது ஏவினான். அந்த கஜேந்திரனும் கிருஷ்ணனைத் தூரத்திச்சென்று அவரை பலாத்காரமாகத் துதிக்கையால் இழுத்தது. பகவான் அதின் துதிக்கையினின்று நழுவி, அதை இடித்துவிட்டு அதின் கால்களுக்கிடையில் மறைந்துகொண்டார்.

**संक्रुद्धस्तमचक्षाणो घ्राणदृष्टिः स केशवम् । परामृशत्पुष्करेण स**

प्रसह्य विनिर्गतः ॥ ७ ॥ पुच्छे प्रगृह्यातिबलं धनुषः पञ्चविंशतिम् । विचकर्ष यथा नागं सुपर्ण इव लीलया ॥ ८ ॥
குவலயாபீடம் என்ற அந்த யானை கிருஷ்ணனைக் காணுது கோபங்கொண்டு, துதிக்கையால் இங்குமங்கும் முகர்ந்து அவரைப் பிடித்துக்கொள்ள, பகவானும் அதினின்று தப்பி வெளிவந்தார். மிக்க பலம் வாய்ந்த கிருஷ்ணன் அந்த யானையின் வாலைப்பிடித்து, கருடன் ஸர்ப்பத்தை இழுத்துத் தள்ளுவதுபோல் இருபத்தைந்து விற்கடைதூரம் சிரமமின்றி இழுத்தார்.

ततोऽभिमुखमभ्येत्य पाणिनाऽऽहत्य वारणम् । प्राद्रवन्पातयामास स्पृश्यमानः पदेपदे ॥ १० ॥ चोद्यमानो महामात्रैः कृष्णमभ्यद्रवद्रुषा ॥ १२ ॥
பிறகு பகவான் அதன் முன் தோன்றி அதைக் கையினுல் அடித்துவிட்டு ஓடத்தொடங்கினுர். யானைப்பாகனுல் தூண்டப்பட்டு அந்த கஜேந்திரனும் அவரைத் துரத்திச் சென்றது. பகவான் இடையிடையில் அதற்கு அகப்படுவதுபோன்று இங்குமங்கும் ஓடி, அந்த யானையைக் கீழேவிழும்படி செய்தார்.

तमापतन्तमासाद्य भगवान्मधुसूदनः । निगृह्य पाणिना हस्तं पातयामास भूतले ॥ १३ ॥ पतितस्य पदाऽऽक्रम्य मृगेन्द्र इव लीलया । दन्तमुत्पाट्य तेनेभं हस्तिपांश्चाहनद्धरिः ॥ १४ ॥
பின்பு அவர் அதனெதிரிற்சென்று, துதிக்கையைப் பிடித்துக் கீழே வீழ்த்தினுர். யானை கீழே விழுந்ததும், பகவான் அதை சிங்கம் போன்று தன்காலால் மிதித்து, விளையாட்டாகவே அதன் கொம்பைப் பிடுங்கி, அதனுல் யானையையும் யானைப்பாகனையும் கொன்ருர்.

मृतकं द्विपमुत्सृज्य दन्तपाणिः समाविशत् । अंसन्यस्तविषाणोऽसृङ्मदविन्दुभिरङ्कितः । रङ्गं विविशतू राजन् गजदन्त वरायुधौ ॥ १६ ॥
பிறகு அவர்கள் அதன் கொம்பைத் தம் தோளில் வைத்துக் கையால் ஏந்திக்கொண்டு, ரத்தத்துளிகளும் மதஜலமும் தேகத்தில் படிந்தபடி ரங்கமண்டபத்திற்குள் பிரவேசித்தார்கள்.

मल्लानामशनिर्नृणां नरवरः स्त्रीणां स्मरो मूर्तिमान्
गोपानां स्वजनोऽसतां क्षितिभुजां शास्ता स्वपित्रोः शिशुः ।
मृत्युर्भोजपतेर्विराडविदुषां तत्त्वं परं योगिनां
वृष्णीनां परदेवतेति विदितो रङ्गं गतः साग्रजः ॥ १७ ॥

அச்சமயம் பலராமருடன் நின்ற கிருஷ்ணர், மல்லர்களுக்கு இடியாகவும், மற்றுமுள்ள மனிதர்களுக்கு ஒரு புருஷோத்தமனாக வும், பெண்டிர்களுக்கு உருவெடுத்த மன்மதனாகவும், கோபாலர் களுக்கு தன்னைச்சேர்ந்த பந்துவாகவும், துஷ்ட அரசர்களுக்கு தண்டனை விதிப்பவராகவும், தாய் தந்தையர்களுக்கு குழந்தையாக வும், போஜராஜனான கம்ஸனுக்கு யமனாகவும், பகவானின் மகிமை யறியாதவர்களுக்கு திறமையற்றவராகவும், யோகிகளுக்கு பரமாத் மாவாகவும், விருஷ்ணிகளுக்கு மேலான தெய்வமாகவும் தோன் றினர்.

हतं कुवलयापीडं दृष्ट्वा तावपि दुर्जयौ ।
कंसो मनस्यपि तदा भृशमुद्विविजे नृप ॥ १८ ॥

அரசே! குவலயாபீடமென்ற யானை கொல்லப்பட்டதைக் கேள்வியுற்ற கம்ஸன், திடனாயிருப்பினும் அவ்விருகுழந்தைகளைப் பார்த்ததும் நடுநடுங்கினான்.

निरीक्ष्य तावुत्तमपूरुषौ जना मञ्चस्थिता नागरराष्ट्रका नृप ।
प्रहर्षवेगोत्कलितेक्षणाननाः पपुर्न तृप्ता नयनैस्तदाननम् ॥ २० ॥

மன்னவனே! அச்சமயம் மஞ்சத்திலிருந்த நாட்டார், நகரத்தார் அனைவரும் அந்த புருஷோத்தமர்களைப் பார்த்து சந் தோஷத்தால் மலர்ந்த கண்களையுடையவர்களாகி முகமலர்ச்சியுடன் அவர்களுடைய முகத்தின் அழகையே பார்த்து நின்றார்கள்.

पिबन्त इव चक्षुर्भ्यां लिहन्त इव जिह्वया । जिघ्रन्त इव नासाभ्यां
श्लिष्यन्त इव बाहुभिः ॥ २१ ॥ ऊचुः परस्परं ते वै यथादृष्टं यथाश्रुतम् ।
तद्रूपगुणमाधुर्यप्रागल्भ्यस्मारिता इव ॥ २२ ॥ एतौ भगवतः साक्षाद्धरे-
र्नारायणस्य हि । अवतीर्णाविहांशेन वसुदेवस्य वेश्मनि ॥ २३ ॥

அவர்கள் அவ்விரு குழந்தைகளை, கண்களால் பருகுவதுபோன் றும், நாக்கினால் நக்குவது போன்றும், மூக்கினால் முகர்வது போன்றும், கைகளினால் அணைப்பதுபோன்றும், உள்ளத்தில் பாவித்து, முன் அவர்களுடைய ரூபம், குணம்,இவைகளைப்பற்றி எவ்விதம் கேட்டிருந்தனரோ, அவ்விதமே இப்பொழுதும் பார்ப் பவர்களாய், ஒருவரோடொருவர் பேசலானார்கள். "இவ்விரு குழந்தைகளும் ஸாக்ஷாத் பகவானான ஸ்ரீநாராயணனின் கலைகள்.

இவர்கள் வசுதேவருடைய கிருஹத்தில் இப்பொழுது அவதரித்திருக்கிறார்கள்.

एष वै किल देवक्यां जातो नीतश्च गोकुलम् । कालमेतं वसन्गूढो ववृधे नन्दवेश्मनि ॥ २४ ॥ पूतनाऽनेन नीतान्तं चक्रवातश्च दानवः । अर्जुनौ गुह्यकः केशी धेनुकोऽन्ये च तद्विधाः ॥ २५ ॥ कालियो दमितः सर्प इन्द्रश्च विमदः कृतः ॥ २६ ॥

இதோ நிற்கும் கிருஷ்ணர் தேவகியிடம் காராகிருஹத்தில் அவதரித்ததும் கோகுலத்தில் விடப்பட்டு, அங்கு நந்தரின் கிருஹத்தில் ரகசியமாக வளர்ந்து வருகிறார். இவர்தான் பூதனை, தேனுகன், கேசி, விருஷபன் முதலியவர்களைக் கொன்றவர். கோவர்த்தன மலையைக் குடையாகப்பிடித்து, இந்திரனின் கர்வத்தை யடக்கினவரும் இவரே!

गोप्योऽस्य नित्यमुदितहसितप्रेक्षणं मुखम् । पश्यन्त्यो विविधांस्तापांस्तरन्तिस्माश्रमं मुदा ॥ २८ ॥ वदन्त्यनेन वंशोऽयं यदोः सुबहुविश्रुतः । श्रियं यशो महत्त्वं च लप्स्यते परिरक्षितः ॥ २९ ॥

புன்சிரிப்புடன் கூடின இவருடைய அழகிய சிருங்கார லீலைகளில் ஈடுபட்டு, இவருடைய சுந்திரவதனத்தை இடைவிடாது பார்த்து, கோபஸ்திரீகள், தங்கள் தாபத்தை ஒழித்துக்கொள்ளுகிறார்கள். இவர் யதுவம்சத்தில் பிறந்து அதை நன்கு பாதுகாப்பதால் அந்த வம்சம் உலகமெங்கும் பிரஸித்தி பெற்ற புகழையும், ஐசுவரியத்தையும், மேன்மையையும் அடையப்போகின்றது.

अयं चास्याग्रजः श्रीमान्रामः कमललोचनः । प्रलंबो निहतो येन वत्सको ये बकादयः ॥ ३० ॥ जनेष्वेवंब्रुवाणेषु तूर्येषु निनदत्सु च । कृष्णरामौ समाभाष्य चाणूरो वाक्यमब्रवीत् ॥ ३१ ॥ हे नन्दसूनो हे राम भवन्तौ वीरसंमतौ । नियुद्धकुशलौ श्रुत्वा राज्ञाऽऽहूतौ दिदृक्षुणा ॥ ३२ ॥

அதோ, தங்க நிறமமைந்தவராய், தாமரை யிதழ்போன்ற கண்களமைந்தவராய், எல்லா லக்ஷணங்களும் பொருந்தியவராய் நிற்கின்றாரே, அவர்தான் இவருடைய தமையனாகிய பலராமர். இவரே வத்ஸகன் பிரலம்பன் முதலிய அசுரர்களைக் கொன்றவர்." ஜனங்கள் இவ்வாறு பேசிக்கொண்டிருக்கையிலேயே, தாரி, பேரி

முதலிய வாத்தியங்கள் ஒலிக்க, பேரொலி முழங்கும் அம்மண் டபத்தில், சாணூரன், அவ்விரு குழந்தைகளையும் போருக் கழைத்து, பின்வருமாறு சொல்லலானன். "நந்தகுமாரா! ராமா! நீவிர் இருவரும் வீரப்புலிகள் என்றும், மல்லயுத்தஞ்செய் வதில் சமர்த்தர்கள் என்றும் அரசன் கேள்வியுற்று, உங்கள் திறமையைப்பார்க்க ஆவல்கொண்டு, உங்களை அழைத்திருக்கின்ருர்.

**प्रियं राज्ञः प्रकुर्वत्यः श्रेयो विन्दन्ति वै प्रजाः । मनसा कर्मणा वाचा विपरीतमतोऽन्यथा ॥ ३३ ॥ नित्यं प्रमुदिता गोपा वत्सपाला यथास्फुटम् । वनेषु मल्लयुद्धेन क्रीडन्तश्चारयन्ति गाः ॥ तस्माद्राज्ञः प्रियं यूयं वयं च करवामहे । भूतानि नः प्रसीदन्ति सर्वभूतमयो नृपः ॥ ३५ ॥**

அரசரின் விருப்பத்தைத் தெரிந்து நடப்பவர்கள் உயர்ந்த பதவி யை அடைகிருர்கள். மற்றவர்கள் அவ்விதம் அடைவதில்லை. நீங்கள் கன்றுகளை மேய்த்துக்கொண்டு உல்லாசமாய் காடுகளில் சஞ்சரித்து மல்லயுத்தம் முதலிய விளையாட்டுகளில் தேர்ச்சிபெற்று வரு கிறீர்கள் என்பதை நாங்கள் கேட்டிருக்கிருேம். ஆதலால் நாம் அரசன் விரும்பியவாறுசெய்து எல்லோரையும் மகிழ்விப்போம். எல் லாப்பிராணிகளின் வடிவமாகவும் அரசன் இருக்கிருரன்ருே!

**चाणूर उवाच— न बालो न किशोरस्त्वं बलश्च बलिनां वरः । लीलयेभो हतो येन सहस्रद्विपसत्त्वभृत् ॥ ३९ ॥ तस्माद्भवद्भ्यां बलिभि- र्योद्धव्यं नानयोऽत्र वै । मयि विक्रम वार्ष्णेय बलेन सह मुष्टिकः ॥ ४० ॥**

கிருஷ்ண! நீ சிறுபிள்ளையன்று. பலவான்களுக்கும் பலசாலி. ராமா! நீயும் குழந்தையன்று. சிறந்த பலசாலிதான். கிருஷ்ண! ஆயிரம் யானையின் வலுவுள்ள குவலயாபீடமென்ற யானையை விளை யாட்டாகக் கொன்ருயன்ருே? என்போன்ற பலவான்களுடன் நீங்கள் யுத்தஞ்செய்வதில் ஒரு தோஷமும் ஏற்படாது. விருஷ் ணிகளுள் சிறந்த கிருஷ்ண! நீ என்னிடம் உன் பராக்கிரமத் தைக்காட்டுவாயாக. பலராமனும் முஷ்டிகனிடம் அவ்விதமே செய்யட்டும்."



# நாற்பத்து நான்காவது அத்தியாயம்.



{ चतुश्चत्वारिंशके तु मल्लकंसादिमर्दनम् ।
कंसयोषित्समाश्वासस्ताभ्यां पित्रोश्च दर्शनम् ॥ }

[பகவான் மல்லர்களையும் கம்ஸனையும் வதைத்தல்-கம்ஸனது மஹிஷிகளைத் தேற்றுதல்-தாய் தந்தையர்களை வணங்குதல்.]

श्रीशुक उवाच-एवं चर्चितसंकल्पो भगवान्मधुसूदनः । आससादाथ चाणूरं मुष्टिकं रोहिणीसुतः ॥ १ ॥ हस्ताभ्यां हस्तयोर्बद्ध्वा पद्भ्यामेव च पादयोः । विचकर्षतुरन्योन्यं प्रसह्य विजिगीषया ॥ २ ॥

சாணூரன் இவ்விதம் கூறிமுடிந்ததும், கம்ஸனை வதைப்பதில் முன்னரே உறுதிகொண்ட மதுஸூதனன், அவனை எதிர்த்துச்சென்றார். அவ்விதமே ரோகிணி புதல்வரான பலராமரும் முஷ்டிகனை எதிர்க்கலானார். அவர்கள், கைகளால் தோள்களையும் துடைகளையும் தட்டிக்கொண்டு, போரில் ஜயத்தை விரும்பி ஒருவரையொருவர் இடித்துக்கொண்டார்கள்.

अरत्नी द्वे अरत्नीभ्यां जानुभ्यां चैव जानुनी । शिरः शीर्ष्णोरसोरस्तावन्योन्यमभिजघ्नतुः ॥३॥ परिभ्रामणविक्षेपपरिरंभावपातनैः । परस्परं जिगीर्षन्तावपचक्रतुरात्मनः ॥ ५ ॥

கைவிரல்களால் விரல்களையும் முழங்காலால் முழங்கால்களையும், தலையினால் தலையையும், தோளினால் தோளையும் முட்டிக்கொண்டனர். பிறகு அவர்கள் ஒருவரையொருவர் கீழே தள்ளி பலவாறு சுற்றிக் கழுத்தைக் கட்டிக்கொண்டு பயங்கரமாக யுத்தம் செய்தார்கள்.

तद्बलाबलवद्युद्धं समेताः सर्वयोषितः । ऊचुः परस्परं राजन् सानुकंपा वरूथशः ॥ ६ ॥ महानयं बताधर्म एषां राजसभासदाम् । ये बलाबलवद्युद्धं राज्ञोऽन्विच्छन्ति पश्यतः ॥ ७ ॥ क्व वज्रसारसर्वाङ्गौ मल्लौ शैलेन्द्रसन्निभौ । क्व चातिसुकुमाराङ्गौ किशोरौ नाप्तयौवनौ ॥ ८ ॥

பலத்தில் அதிகமான ஏற்றத்தாழ்வையுடைய கிருஷ்ண பகவானும் சாணூரனும் இவ்விதம் மல்லயுத்தம் செய்யும்பொழுது அங்கு கூடியிருந்த ஸ்திரீகள் அனைவர்களும் பகவானிடம் மன மிரங்கி "இது என்ன பெரிய அநியாயம். அந்தோ கஷ்டம்! ராஜசபையிலுள்ளோர்களைத்தான் இந்தப் பாபமடையும். ஏனெனில் பலமுள்ளோனுக்கும் பலம் குன்றியவனுக்கும் நடக்கும் இந்த யுத்தத்தை அரசன் தடுக்காமல் பார்த்துக்கொண்டிருக்கிறான். சபையோர்களும் அவனை ஆமோதிக்கின்றனர். வஜ்ஜிராயுதம்போன்று கடினமான சரீரத்தையுடைய மல்லர்கள் எங்கே? புஷ்பம்போன்று அதிகமிருதுவான அவயவங்களையுடைய இச்சிறுவர்கள் எங்கே? மலைபோன்ற பருத்த உடலையுடைய மல்லர்கள் எங்கே? பால் குடி மாறாத இளங்குழந்தைகள் எங்கே?

**धर्मव्यतिक्रमो ह्यस्य समाजस्य ध्रुवं भवेत् । यत्राधर्मः समुत्तिष्ठेन्न स्थेयं तत्र कर्हिचित् ॥ ९ ॥ न सभां प्रविशेत्प्राज्ञः सभ्यदोषाननुस्मरन् । अब्रुवन्विब्रुवन्नज्ञो नरः किल्बिषमश्नुते ॥ १० ॥ वल्गतः शत्रुमभितः कृष्णस्य वदनांबुजम् । वीक्ष्यतां श्रमवार्युप्तं पद्मकोशमिवांबुभिः ॥११॥ किं न पश्यत रामस्य मुखमाताम्रलोचनम् । मुष्टिकं प्रति सामर्षं हाससंरम्भशोभितम् ॥**

தர்மத்தை உல்லங்கனம் பண்ணின பாபம் நிச்சயமாய் நம்மை அடையும். எவ்விடத்தில் தீச்செயல்கள் நடைபெறுகின்றனவோ, அவ்விடத்தில் ஒருக்காலும் புத்திமான்களிருக்கமாட்டார்கள். அதனாலேதான், சபையின் தோஷத்தை நன்கு உணர்ந்த வித்துவான், அதை மனதில் நினைத்துக்கொண்டு, சபைக்குப் போகமாட்டான். மூடனாயிருப்பினும், நியாயத்தைச் சொல்லாமலிருத்தலும் அல்லது அதை மாற்றிச்சொல்லுதலும் பாபமே. சத்துருவைச் சுற்றிச்சுற்றி வருவதால் கிருஷ்ணனுடைய முகத்தில் வேர்வை படிந்திருப்பதைப் பார்த்தீர்களா? பலராமருடைய முகம் கோபத்தாலும், சிரிப்பாலும் அழகாக விளங்குவதைப் பார்த்தீர்களா?

**पुण्या बत व्रजभुवो यदयं नृलिङ्गगूढः पुराणपुरुषो वनचित्रमाल्यः । गाः पालयन्सहबलः क्वणयंश्च वेणुं विक्रीडयाञ्चति गिरित्ररमार्चिताङ्घ्रिः ॥**

மானிடவேஷந்தரித்தும், வனத்திலுள்ள விசித்திரமாலை யணிந்தும், வேணுகானஞ்செய்து பசுக்களை மேய்த்துக்கொண்டும், பலராம

ருடன் விளையாடிக்கொண்டும், புருஷோத்தமனான பகவான் லக்ஷ்மீ தேவியால் பூஜிக்கப்படும் திருவடிகளை எவ்விடத்தில் உலாத்தி னரோ, அந்த கோகுலமே மிக்க புண்ணியஞ்செய்தது!

**गोप्यस्तपः किमचरन्यदमुष्य रूपं लावण्यसारमसमोर्ध्वमनन्यसिद्धम् ।**
**दृग्भिः पिबन्त्यनुसवाभिनवं दुरापमेकान्तधाम यशसः श्रिय ऐश्वरस्य ॥**

கோபஸ்திரீகள் என்ன தவத்தைச்செய்து இவருடைய அழகான ரூபத்தைப் பிரதிதினமும் புதிதுபுதிதாகப் பார்க்கும் பாக்கியத்தைப் பெற்றார்களோ! லாவண்யமே திரண்டு உருவெடுத்தாற் போன் றிருப்பவரும், ஒப்புயர்வற்றவரும், லக்ஷ்மீதேவிக்கும் புகழுக்கும் இருப்பிடமானவருமான கிருஷ்ணனை, அவர்கள் கண்ணாரக்கண்டு களிக்கும் பாக்கியத்தைப் பெற்றார்கள்.

**या दोहनेऽवहनने मथनोपलेपप्रेङ्खेङ्खनार्भरुदितोक्षणमार्जनादौ ।**
**गायन्ति चैनमनुरक्तधियोऽश्रुकण्ठ्यो धन्या व्रजस्त्रिय उरुक्रमचित्तयानाः ॥**

எந்த கோபஸ்திரீகள் பால் கறக்கும்பொழுதும், நெல் குத்தும்பொழுதும், தயிர் கடையும்பொழுதும், வீட்டை மெழுகும்பொழுதும், தொட்டிலை ஆட்டும்பொழுதும், குழந்தை களுக்குப் பாலூட்டும்பொழுதும், குழந்தைகளைக் கொஞ்சும் பொழுதும், வீட்டைப் பெருக்கும்பொழுதும், இந்தக் கிருஷ்ண பகவானிடம் மனமுவந்து, ஆனந்தக் கண்ணீர் பெருக்கி, தொண்டை யடைபட்டு இவருடைய திருவிக்கிரமாவதாரம் முதலிய லீலைகளைத் தியானம் செய்து அவைகளைக் கானஞ்செய்தார்களோ, அவர்களே மிக்கபாக்கியம் பெற்றவர்கள்."

**एवं प्रभाषमाणासु स्त्रीषु योगेश्वरो हरिः । शत्रुं हन्तुं मनश्चक्रे भगवान्भरतर्षभ भगवद्गात्रनिष्पातैर्वज्रनिष्पेषनिष्ठुरैः । चाणूरो भज्यमानाङ्गो मुहुर्ग्लानिमवाप ह ॥ २० ॥ सश्येनवेग उत्पत्य मुष्टीकृत्य करावुभौ । भगवन्तं वासुदेवं क्रुद्धो वक्षस्यबाधत ॥ २१ ॥**

பரதவம்சத்தில் பிறந்த உத்தமனே! இவ்விதம் ஸ்திரீகள் ஒருவருக்கொருவர் பேசிக்கொண்டிருக்கும்பொழுது யோகீச்வரரான பகவான் சத்துருவைக்கொல்லுவதற்கு மனதில் நினைத்தார். அச்சம யம் இடிபோன்று கடுமையாகத் தாக்கும் பகவானுடைய சரீரத்

தால், சாணூரனது உடல் நொறுங்கவே அவன் அடிக்கடி மூர்ச்சை அடைந்தான். உடனே அவன் கழுகுபோன்று வேகமாக உயரே கிளம்பி, தன் இருகைகளையும் சேர்த்து வைத்துக்கொண்டு பக வானைக் கோபத்துடன் மார்பில் அடித்தான்.

**नाचलत्तत्प्रहारेण मालाहत इव द्विपः । बाह्वोर्निगृह्य चाणूरं बहुशो भ्रामयन् हरिः ॥ २२ ॥ भूपृष्ठे पोथयामास तरसा क्षीणजीवितम् । विस्रस्ताकल्पकेशस्रगिन्द्रध्वज इवापतत् ॥ २३ ॥ तथैव मुष्टिकः पूर्वं स्वमुष्ट्याभिहतेन वै । बलभद्रेण बलिना तलेनाभिहतो भृशम् ॥ २४ ॥**

பூமாலையாலடிபட்ட கஜம்போன்று பகவான் சிறிதும் கலங்கவில்லை. பிறகு அவர் சாணூரனின் இருகைகளையும் பிடித்துக்கொண்டு, அவனைப் பலவாறு சுழற்றி பூமியில் ஒரே அடியாக அடித்தார். அவ்வசுரன் உடனே உயிர் துறந்தான். அவ்விதமே முஷ்டிகன் பல ராமரைக் கைமுஷ்டியால் முதலில் அடித்தான். மஹாபலசாலியான பலராமரும், அவனைக் கையால் ஓர் அறை அறைய,

**प्रवेपितः सरुधिरमुद्वमन्मुखतोऽर्दितः ।**
**व्यसुः पपातोर्व्युपस्थे वाताहत इवाङ्घ्रिपः ॥ २५ ॥**

அம்மல்லன் வாயினின்றும் ரத்தம் கக்கிக்கொண்டு சுழல் காற்றால் வீழ்த்தப்பட்ட மரம்போல் உயிர் துறந்து கீழேவிழுந்தான்.

**चाणूरे मुष्टिके कूटे शले तोशलके हते । शेषाः प्रदुद्रुवुर्मल्लाः सर्वे प्राणपरीप्सवः ॥ २८ ॥ गोपान् वयस्यानाकृष्य तैः संसृज्य विजह्रतुः । जनाः प्रजहृषुः सर्वे कर्मणा रामकृष्णयोः । ऋते कंसं विप्रमुख्याः साधवः सधु साध्विति ॥ ३० ॥**

பிறகு அவர்கள், கூடன், சலன், தோசலன், முதலியவர் களையும் இவ்விதமே கொன்றார்கள். மற்றுமுள்ள மல்லர்கள் உயிர் தப்ப ஆவல்கொண்டு, நாலுதிசைகளிலும் ஓடினார்கள். பிறகு பலராமரும் கிருஷ்ணரும், தங்கள் ஸ்நேகிதர்களையும் கோபாலர் களையும் அழைத்து, அவர்களுடன் வாத்தியத்திற்கேற்ப ஆடியும் பாடியும் களிப்புற்றிருந்தார்கள். அச்சமயம் கம்ஸனைத் தவிர மற்றுமுள்ளவர்களனைவரும் இந்த அத்புதக்காட்சியைப் பார்த்து மகிழ்ந்தார்கள்.

हतेषु मल्लवर्येषु विद्रुतेषु च भोजराट्। न्यवारयत्स्वतूर्याणि वाक्यं चेदमुवाच ह ॥ ३१ ॥ निःसारयत दुर्वृत्तौ वसुदेवात्मजौ पुरात्। धनं हरत गोपानां नन्दं बध्नीत दुर्मतिम् ॥ ३२ ॥ वसुदेवस्तु दुर्मेधा हन्यतामाश्वसत्तमः। उग्रसेनः पिता चापि सानुगः परपक्षगः ॥ ३३ ॥

மல்லசிரேஷ்டர்கள் மாண்டபின் மற்றுமுள்ளவர்கள் ஓடுவதைப் பார்த்து போஜராஜாவான கம்ஸன், தூரிமுதலிய வாத்தியங்களை நிறுத்தும்படி கட்டளையிட்டு, தன் வேலைக்காரர்களைப் பார்த்து "கெட்ட நடத்தையுள்ள வசுதேவமைந்தர்களை பட்டணத்திலிருந்தும் ஓட்டுங்கள். கோபாலர்களின் பணத்தைப் பறியுங்கள். துஷ்டனான நந்தனை விலங்கில் மாட்டுங்கள். கெடுமதியுள்ள வசுதேவனையும் பகைவரைச் சார்ந்த உக்கிரசேனனையும், அவன் தம்பியையும் கொல்லுங்கள்" என்று பிதற்றினான்.

एवं विकत्थमाने वै कंसे प्रकुपितोऽव्ययः। लघिम्नोत्पत्य तरसा मञ्चमुत्तुङ्गमारुहत् ॥ ३४ ॥ तमाविशन्तमालोक्य मृत्युमात्मन आसनात्। मनस्वी सहसोत्थाय जगृहे सोऽसिचर्मणी ॥ ३५ ॥

இவ்விதம் பிதற்றுவதைக்கேட்டு பகவான் கடுஞ்சினங் கொண்டு கம்ஸன் வீற்றிருந்த மஞ்சத்தின் மீது ஓரே குதியாய் ஏறினார். யமன்போன்று தன்னை எதிர்த்துவரும் பகவானைப் பார்த்து தீரனான கம்ஸன் ஆசனத்தினின்றும் பரபரப்புடன் எழுந்து கத்தி கேடயங்களைக் கையிலெடுத்தான்.

तं खड्गपाणिं विचरन्तमाशु श्येनं यथा दक्षिणसव्यमंबरे।
प्रगृह्य केशेषु चलत्किरीटं निपात्य रङ्गोपरि तुङ्गमञ्चात्।
तं संपरेतं विचकर्ष भूमौ हरिर्यथेभं जगतो विपश्यतः।
हाहेति शब्दः सुमहांस्तदाऽभूदुदीरितः सर्वजनैर्नरेन्द्र ॥ ३८ ॥

ஆகாசத்தில் இடதுபுரமும் வலதுபுரமும் கழுகு சுற்றுவது போன்று இங்குமங்கும் ஓடித்தாவும் கம்ஸனை பகவான் கெட்டியாகப் பிடித்துக்கொண்டார். பிறகு பகவான் அவன் கிரீடத்தை கீழே தள்ளி அவனை மஞ்சத்திலிருந்து ரங்கமண்டபத்தின் தரையில் வீழ்த்தி, பூமியில் இழுத்து, மூன்று உலகமும் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே, மிருகராஜன் யானையை வதைப்பதுபோல் வதைத்தார். நரேந்திரா! அச்சமயம் அங்கு கூடியிருந்த

ஜனங்கள் அனைவரும் "ஹா! ஹா!" என்று பெரிதாய் கூக்குரலிட்டார்கள்.

**स नित्यदोद्विग्नधिया तमीश्वरं पिबन्वदन्वा विचरन्स्वपन्श्वसन् ।**
**ददर्श चक्रायुधमग्रतो यतस्तदेव रूपं दुरवापमाप ॥ ३९ ॥**

எப்பொழுதும் கம்ஸன் நடுநடுங்கின மனதுடன், தண்ணீர் பருகும் பொழுதும், உண்ணும்பொழுதும், வெளியில் சஞ்சரிக்கும்பொழுதும், தூங்கும்பொழுதும், சுவாசம் விடும்பொழுதும் கிருஷ்ணனை நினைத்து வந்ததாலும், சாகும் தருவாயிலும் தனக்கு எதிரில் அவரையே சக்கிராயுதத்துடன் பார்த்ததாலும், இறந்த பிறகும் அடைதற்கரிய அவருடைய ஸாரூப்பியத்தை எளிதில் அடைந்தான்.

**तस्याऽनुजा भ्रातरोऽष्टौ कङ्कन्यग्रोधकादयः । अभ्यधावन्नभिक्रुद्धा भ्रातुर्निर्वेशकारिणः ॥ ४० ॥ तथाऽतिरभसांस्तांस्तु संयत्तान् रोहिणीसुतः । अहन्परिघमुद्यम्य पशूनिव मृगाधिपः ॥ ४१ ॥ नेदुर्दुन्दुभयो व्योम्नि ब्रह्मेशाद्या विभूतयः । पुष्पैः किरन्तस्तं प्रीताः शशंसुर्ननृतुः स्त्रियः ॥ ४२ ॥**

கங்கன், நியக்ரோதன் முதலிய அவனது எட்டு சகோதரர்களும் தங்கள் சகோதரனின் கொலைக்குப் பதில் பழி வாங்க எண்ணங்கொண்டு பரபரப்புடன் யுத்தஸந்நத்தர்களாக பகவானை எதிர்த்தார்கள். பலராமர் பரிகம் என்ற ஆயுதத்தை எடுத்துக்கொண்டு, சிங்கம் அற்ப மிருகங்களைக் கொல்லுவது போன்று, அவர்களைக்கொன்றார். அச்சமயம் ஆகாசத்தில் துந்துபி முதலிய வாத்தியங்கள் முழங்கின. பிரம்மா ருத்திரர் முதலிய தேவர்களும் பூமாரி பொழிந்தார்கள். தேவஸ்திரீகள் நர்த்தனம் செய்தார்கள்.

**तेषां स्त्रियो महाराज सुहृन्मरणदुःखिताः । तत्राभीयुर्विनिघ्नन्त्यः शीर्षाण्यश्रुविलोचनाः ॥ ४३ ॥ शयानान् वीरशय्यायां पतीनालिङ्ग्य शोचतीः । विलेपुः सुस्वरं नार्यो विसृजन्त्यो मुहुः शुचः ॥ हा नाथ प्रिय धर्मज्ञ करुणानाथवत्सल । त्वया हतेन निहता वयं ते सगृहप्रजाः ॥ ४५**

அவர்களின் மனைவிகள் அம்மரணத்தைக் கேட்டு துக்கித்து, தலையிலடித்து அழுதுகொண்டு அவ்விடத்திற்கு வந்து, யுத்தகளத்தில் மாண்டு வீரசுவர்க்கம் சென்றிருக்கும் கணவர்களை ஆலிங்கனஞ்

செய்துகொண்டு, "நாதா! பிரியா! கருணை நிறைந்தவரே! அநாதைகளை ரக்ஷிப்பவரே! நீர் இறந்தபிறகு எங்களையும் குழந்தைகளையும் யார் ரக்ஷிப்பார்கள்? நாங்களும் நாதனற்று இறந்தவர்கள் போல் ஆனோம்" என்று உரத்த கூக்குரலுடன் அழுதார்கள்.

श्रीशुक उवाच—राजयोषित आश्वास्य भगवाँल्लोकभावनः । यामाहुलौंकिकीं संस्थां हतानां समकारयत् ॥ मातरं पितरं चैव मोचयित्वाऽथ बन्धनात् । कृष्णरामौ ववन्दाते शिरसाऽऽस्पृश्य पादयोः ॥५०॥ देवकी वसुदेवश्च विज्ञाय जगदीश्वरौ । कृतसंवन्दनौ पुत्रौ सस्वजाते न शङ्कितौ ॥

அப்பொழுது அண்டபிண்ட சராசரங்களைக் காக்கும் பகவான் அந்த ராஜஸ்திரீகளைத் தேற்றி, இறந்தவர்களுக்குரிய கிரியைகளைச் செய்துவைத்தார். பிறகு ராமரும் கிருஷ்ணரும் மாதாபிதாக்களை விலங்கினின்று விடுவித்து, அவர்கள் பாதங்களில் விழுந்து நமஸ்கரித்தார்கள். ஆனால் தேவகியும் வசுதேவரும் தங்கள் பாதங்களில் வணங்கிநின்ற குழந்தைகளை, அகிலலோகேச்வரர்களாக சங்கித்து, அவர்களைத் தழுவி உச்சிமுகர்ந்து கொள்ளவில்லை.

## நாற்பத்தைந்தாவது அத்தியாயம்.

पञ्चचत्वारिंशकेऽथ पितृनन्दादिसान्त्वनम् ।
उग्रसेनाभिषेकश्च गुरौ वासात् पुरागमः ॥

[பகவான் வஸுதேவரையும் நந்தகோபரையும் தேற்றுதல்—உக்கிரஸேன பட்டாபிஷேகம்—குருகுலவாஸம் செய்துவிட்டு பட்டணத்திற்குத் திரும்புதல்.]

श्रीशुक उवाच—पितरावुपलब्धार्थौ विदित्वा पुरुषोत्तमः । माभूदिति निजां मायां ततान जनमोहिनीम् ॥ उवाच पितरावेत्य साग्रजः सात्वतर्षभः। प्रश्रयावनतः प्रीणन्नंव तातेति सादरम् ॥२॥ नास्मत्तो युवयोस्तात नित्योत्कण्ठितयोरपि । बाल्यपौगण्डकैशोराः पुत्राभ्यामभवन्कचित् ॥ ३ ॥

புருஷோத்தமனான கிருஷ்ணன் தாய் தந்தையர்களின் நிலைமையை யறிந்து, அவர்களுக்குத் தன்னிடத்தில் உண்மை யறிவு ஏற்படக்கூடாது என்று நிச்சயித்து, ஜனங்களை மோகிக்கச்செய்யும்

மாயையை அவர்கள்முன் பரப்பினர். பிறகு அவர், பலராமருடன் அவர்களருகிற்சென்று, வணக்கத்துடன் தலை குனிந்து, "அம்மா! அப்பா! நீங்கள் எங்களைப் பார்ப்பதில் எப்பொழுதும் ஆவல் கொண்டவர்களாயிருந்தும், உங்கள் அருகிலிருந்து சிறு குழந்தைகளின் விளையாட்டுகளால் உங்களை இதுவரை நாங்கள் மகிழ்ச்செய்யவில்லை.

**न लब्धो दैवहतयोर्वासो नौ भवदन्तिके । यां बालाः पितृगेहस्था विन्दन्ते लालिता मुदम् ॥४॥ सर्वार्थसंभवो देहो जनितः पोषितो यतः । न तयोर्याति निर्वेशं पित्रोर्मर्त्यः शतायुषा ॥ ५ ॥ यस्तयोरात्मजः कल्प आत्मना च धनेन च । वृत्तिं न दद्यात्तं प्रेत्य स्वमांसं खादयन्ति हि । ६ ।**

தெய்வத்தினல் கெடுக்கப்பட்ட நாங்கள் இருவர்களும் உங்கள் அருகிலிருந்து உங்களால் லாலனை செய்யப்பட்டு, தாய் தந்தையருடன் வீடுகளில் வளர்ந்துவரும் குழந்தைகள் என்னென்ன சுகங்களை அடைகின்றனவோ, அத்தகைய சுகமொன்றையும் அடையவில்லை. நால்வகை புருஷார்த்தங்களை ஈட்டுவதற்கு இன்றியமையாத இந்தச் சரீரத்தை ஈன்று வளர்த்த தாய் தந்தையர்களுக்குப் பிரத்யுபகாரமாக ஒரு மனிதன் நூறு வருஷம் உழைத்தாலும் ஈடாகாது. அவ்விதமிருக்க, சரீரத்தாலும் பணத்தாலும் தாய் தந்தையர்களைத் தன்னல் இயன்ற அளவு காப்பாற்றாதவன் இறந்தபின் யமலோகத்தில் தன் மாமிசத்தையே புஜிக்கிறன்.

**मातरं पितरं वृद्धं भार्यां साध्वीं सुतं शिशुम् । गुरुं विप्रं प्रपन्नं च कल्पोऽबिभ्रच्छ्वसन्मृतः ॥७॥ तन्नावकल्पयोः कंसान्नित्यमुद्विग्नचेतसोः । मोघमेते व्यतिक्रान्ता दिवसा वामनर्चतोः ॥ ८ ॥ तत्क्षन्तुमर्हथस्तात मातर्नौ परतन्त्रयोः । अकुर्वतोर्वां शुश्रूषां क्लिष्टयोर्दुर्हृदा भृशम् ॥ ९ ॥**

தாய் தந்தை மனைவி இவர்களைக் காப்பாற்றாதவன் உயிருடனிருந்தும் அவன் பிணத்திற்கொப்பானவனே. கம்ஸனிடமிருந்து எப்பொழுதும் நடுங்கினமனதுடைய உங்களை, நன்கு பாதுகாத்து பணிவிடை செய்வதற்குச் சக்தியற்று, இவ்வளவு காலத்தையும் வீணுகக் கழித்துவந்தோம். தாய் தந்தையர்களே! எங்களைப் பொருத்தருளவேண்டும்" என்று அன்பு பெருகும்படி, மழலைச் சொற்களை சொன்னர்.

मायामनुष्यस्य हरेर्विश्वात्मनो गिरा ।
मोहितावङ्कमारोप्य परिष्वज्याऽऽपतुर्मुदम् ॥१०॥

எங்கும் நிறைந்த பகவான் சாதாரண மானிடக் குழந்தைபோன்று கூறியதைக் கேட்டு வசுதேவரும் தேவகியும் மோகமடைந்து, அவர்களிருவர்களேயும் மடியிலேற்றி வாரியணேத்துக் கொண்டு ஸந்தோஷமடைந்தார்கள்.

मातामहं तूग्रसेनं यदूनामकरोन्नृपम् ॥ १२ ॥
आह चास्मान्महाराज प्रजाश्चाऽऽज्ञप्तुमर्हसि ।
ययातिशापाद्यदुभिर्नासितव्यं नृपासने ॥ १३ ॥

பிறகு பகவான் பாட்டனை உக்கிரஸேனனே யாதவர்களுக்கு அரசனுக முடிசூட்டி, "மஹாராஜா! நாங்கள் எல்லோரும் உங்கள் பிரஜைகள். எங்களேக் கட்டளே யிடுங்கள். யதுகுலத்திலுதித்தவர்கள் யயாதியின் சாபத்தால் சிம்மாஸனம் ஏறக் கூடாது.

मयि भृत्य उपासीने भवतो विबुधादयः । बलिं हरन्त्यवनताः कि-
मुतान्ये नराधिपाः ।१४। सर्वान्स्वान्ज्ञातिसंबन्धान्दिग्भ्यः कंसभयाकुलान् ।
यदुवृष्णयन्धकमधुदाशार्हकुकुरादिकान् ॥ १५ ॥ सभाजितान् समाश्वास्य
विदेशावासकर्शितान् । न्यवासयत्स्वगेहेषु वित्तैः संतर्प्य विश्वकृत् ॥ १६ ॥

நான் தங்கள் ஊழியனுயிருக்கும்பொழுது, தேவர்களும் உங்களுக்குக் காணிக்கைகளேக் கொடுப்பார்கள். அவ்விதமிருக்க மற்ற அரசர்களேப்பற்றிச் சொல்லவும் வேண்டுமா" என்றுரைத்தார். பிறகு கிருஷ்ணர் வாயுவை இந்திரனிடம் அனுப்பி ஸுதர்மை என்ற ஸபையை எடுத்துவரும்படி செய்து, அதை உக்கிரஸேன மஹாராஜனுக்குக் கொடுத்தார். கம்ஸனிடமிருந்து பயந்து வெளியேறின ஞாதிகளேயும், பந்துக்களேயும், மதுராபுரிக்கு வரவழைத்து, வேண்டிய அளவு பணத்தைக்கொடுத்து அவர்களேக் குடியேற்றினர்.

अथ नन्दं समासाद्य भगवान्देवकीसुतः । सङ्कर्षणश्च राजेन्द्र परि-
ष्वज्येदमूचतुः ॥ २० ॥ पितर्युवाभ्यां स्निग्धाभ्यां पोषितौ लालितौ भृशम् ।
पित्रोरभ्यधिका प्रीतिरात्मजेष्वात्मनोऽपि हि ॥ २१ ॥

பரிக்ஷித்து ராஜனே! பிறகு தேவகி புதல்வரான கிருஷ்ணரும், ரோகிணி புதல்வரான பலராமரும் நந்தரிடம் சென்று, அவரை ஆலிங்கனஞ் செய்துகொண்டு, "அன்னையர்களே! நீங்கள் எங்களை அன்புடன் வளர்த்து லாலனை செய்தீர்கள். அதில் என்ன ஆச்சரியம்! தாய் தந்தையர்களுக்குத் தங்கள் தேஹத்தைவிட குழந்தைகளிடத்தில் அதிகமான அன்பு எற்படுவது இயற்கையன்றோ!

**यात यूयं व्रजं तात वयं च स्नेहदुःखितान् । ज्ञातीन्वो द्रष्टुमेष्यामो विधाय सुहृदां सुखम् ॥ २३ ॥ एवं सान्त्वय्य भगवान्नन्दं सव्रजमच्युतः । वासोलङ्कारकुप्याद्यैरर्हयामास सादरम् ॥२४॥ इत्युक्तस्तौ परिष्वज्य नन्दः प्रणयविह्वलः । पूरयन्नश्रुभिर्नेत्रे सह गोपैर्व्रजं ययौ ॥ २५ ॥**

அன்னையே! தந்தையே! நீங்கள் கோகுலத்திற்குச் செல்லுங்கள். எங்களிடம் வைத்த ஸிநேகத்தால், எங்களைப் பிரிந்து வருந்தும் பந்துக்களைப் பார்ப்பதற்கு வெகு சீக்கிரத்தில், நாங்கள் கோகுலம் வருகிறோம்" என்று கோபாலர்களையும் நந்தரையும் தேற்றி, உயர்ந்த வஸ்திரங்களையும், ஆபரணங்களையும், பாத்திரங்களையும், ஸந்தோஷத்துடன் அவர்களுக்குக் கொடுத்தார்கள். நந்தர் அவர்களைத் தழுவிக்கொண்டு, கண்களில் நீர் ததும்ப கோபாலர்களுடன் கோகுலஞ் சென்றார்.

**अथ शूरसुतो राजन् पुत्रयोः समकारयत् । पुरोधसा ब्राह्मणैश्च यथावद्द्विजसंस्कृतिम् ॥ २६ ॥ तेभ्योऽदाद्दक्षिणा गावो रुक्ममालाः स्वलंकृताः । स्वलंकृतेभ्यः संपूज्य सवत्साः क्षौममालिनीः ॥ याः कृष्णरामजन्मर्क्षे मनोदत्ता महामतिः । ताश्चाददादनुस्मृत्य कंसेनाधर्मतो हृताः ॥२८॥**

அரசே! பிறகு வஸுதேவர் பிராமணர்களையும் குலகுருவையும் வரவழைத்து தன்னிரு குமாரர்களுக்கும் நாமகரணம் முதல் உபநயனம் வரையுள்ள ஸம்ஸ்காரங்களை நடத்தி, அவர்களுக்கு ஸ்வர்ணமாலைகளால் அலங்கரிக்கப்பட்ட பசுக்களையும் கன்றுகளையும் தானம் கொடுத்தார். புத்தியிற் சிறந்த வஸுதேவர், தன்னிருகுழந்தைகளின் ஜனனகாலத்தில் தான் காராகிருஹத்திலிருக்குங்கால் என்னென்ன தானங்களை மனதினால் செய்தனரோ,

அவைகளனைத்தையும், அச்சமயம், நினைத்து நினைத்து தானஞ் செய்யலானார். தவிரவும் கம்ஸன் அநியாயமாகக் கொள்ளையிட்டு வைத்திருந்த பணத்தையும் அவரவர்களுக்குத் திருப்பக்கொடுத்தார்.

अथो गुरुकुले वासमिच्छन्तावुपजग्मतुः । काश्यं सान्दीपनिं नाम ह्यवन्तीपुरवासिनम् ॥ ३१ ॥ यथोपसाद्य तौ दान्तौ गुरौ वृत्तिमनिन्दिताम् । ग्राहयन्तावुपेतौ स्म भक्त्या देवमिवाऽऽदृतौ ॥ ३२ ॥ तयोर्द्विजवरस्तुष्टः शुद्धभावानुवृत्तिभिः । प्रोवाच वेदानखिलान्साङ्गोपनिषदो गुरुः ॥

பிறகு அவ்விருபாலர்களும் குருகுலவாஸஞ்செய்ய என்னங்கொண்டு, அவந்திபுரத்தில் வசித்துவந்த ஸாந்தீபனி என்னும் முனிவரை அடைந்து, அவரைத் தெய்வமென நினைத்து இந்திரியங்களை அடக்கி வணக்கத்துடன் பணிவிடைசெய்து குருவிடம் சிஷ்யன் நடக்கவேண்டிய முறையை மற்றவர்களுக்கு உபதேசித்துக்கொண்டு குற்றமற்ற பக்தியுடன் அவரை ஸேவித்தார்கள். அம்முனிவர் அவர்களுடைய மாசற்ற பக்தியில் திருப்தியடைந்து, வேதங்களையும் உபநிஷத்துக்களையும் அவர்கட்கு உபதேசித்தார்.

सरहस्यं धनुर्वेदं धर्मान् न्यायपथांस्तथा । तथा चान्वीक्षिकीं विद्यां राजनीतिं च षड्विधाम् ॥ ३४ ॥ सर्वं नरवरश्रेष्ठौ सर्वविद्याप्रवर्तकौ । सकृन्निगदमात्रेण तौ संजगृहतुर्नृप ॥ ३५ ॥ अहोरात्रैश्चतुःषष्ट्या संयत्तौ तावतीः कलाः । गुरुदक्षिणयाऽऽचार्यं छन्दयामासतुर्नृप ॥ ३६ ॥

எல்லா வித்தைகளுக்கும் நாயகர்களான அப் புருஷோத்தமர்களுக்கு தனுர்வேதத்தின் ரகசியத்தையும் தர்மசாஸ்திரங்களையும் தர்க்கம் மீமாம்ஸை முதலிய நூல்களையும் ஆறுவகை ராஜநீதிகளையும் அறுபத்துநான்கு கலைகளையும் அம்முனிவர் உபதேசித்தார். அவர்களும் ஒருதடவை கேட்டமாத்திரத்திலேயே அவைகளை முழுதும் அறிந்துகொண்டார்கள். பிறகு அவர்கள், குருவிடஞ்சென்று, குரு தக்ஷிணையைப் பெற்றுக் கொள்ளுமாறு அவரைப் பிரார்த்தித்தார்கள்.

द्विजस्तयोस्तं महिमानमद्भुतं संलक्ष्य राजन्नतिमानुषीं मतिम् ।
संमन्त्र्य पत्न्या स महार्णवे मृतं बालं प्रभासे वरयांबभूव ह ॥ ३७ ॥

அரசே! அந்த முனிசிரேஷ்டர், அவர்களுடைய அதிக ஆச்சரியமான திறமையையும், அமானுஷமான புத்தியையும் தனக்குள் உணர்ந்து, தன் பத்தினியுடனும் ஆலோசனை செய்து, பிரபாஸ தீர்த்தத்திற்கு அருகிலிருக்கும் பெரிய ஸமுத்திரத்தில் முன்னொரு சமயம் காணமற்போன தன் புத்திரனையே, குருதக்ஷிணையாகக் கேட்கலானார்.

**तथेत्यथाऽऽरुह्य महारथौ रथं प्रभासमासाद्य दुरन्तविक्रमौ ।**
**वेलामुपव्रज्य निषीदतुः क्षणं सिन्धुर्विदित्वाऽर्हणमाहरत्तयोः ॥ ३८ ॥**

ஒருவராலும் தடுக்க முடியாத பராக்கிரமத்துடன் கூடின அவ்விருவீரர்களும், "அவ்விதமே யாகட்டும்" என்று அவரிடம் உரைத்துவிட்டு, ரதத்தில் ஏறி பிரபாஸ தீர்த்தத்தை அடைந்து, ரதத்தைவிட்டிறங்கி அதன் கரையில் உட்கார்ந்தார்கள். சிறிதுநேரஞ் சென்றதும் ஸமுத்திர ராஜன் அவர்களின் வருகையை யறிந்து தக்க காணிக்கைகளைக் கொணர்ந்து அவர்களைப் பூஜித்தான்.

**तमाह भगवानाशु गुरुपुत्रः प्रदीयताम् ।**
**योऽसाविह त्वया ग्रस्तो बालको महतोर्मिणा ॥ ३९ ॥**

பகவான் அவனிடம் "நீ இவ்விடத்தில் எங்கள் குரு புத்திரனை, பெரிய அலைகளால் இழுத்துச்சென்றாய். அவனை விரைவில் எங்களிடம் கொணர்ந்து சேர்ப்பாய்" என்றார்.

**समुद्र उवाच—नैवाहार्षमहं देव दैत्यः पञ्चजनो महान् । अन्तर्जलचरः कृष्ण शङ्खरूपधरोऽसुरः ॥ आस्ते तेनाऽऽहृतो नूनं तच्छ्रुत्वा सत्वरं प्रभुः । जलमाविश्य तं हत्वा नापश्यदुदरेऽर्भकम् ॥ तदङ्गप्रभवं शङ्खमादाय रथमागमत् । ततः संयमनीं नाम यमस्य दयितां पुरीम् ॥ ४२ ॥**

ஸமுத்திர ராஜன் அதைக் கேள்வியுற்று "தேவா! நான் அவனை இழுத்துச்செல்லவில்லை. பஞ்சஜனன் என்ற ஒரு பெரிய அஸுரன் ஜலத்திற்குள் வசித்துக்கொண்டிருக்கிறான். அவன் சங்கு உருவங் கொண்டு உலாவுகிறான். அவன்தான் உமது குருபுத்திரனை அபஹரித்துச்சென்றவன். ஆதலால் தாங்கள் ஜலத்திற்குள் பிரவேசித்து, அவனைக்கொன்று அப்பாலகனை மீட்டிவாருங்கள்" என்

ருன். பிரபுவான பகவான், அவ்விதமே ஜலத்தில் மூழ்கி, அவ் வஸுரனைக்கொன்று அவன் உதரத்தைக் கிழித்தார். ஆனால் அங்கு குழந்தையைக் காணவில்லை. அப்பொழுது பகவான் அவன் தேஹத்தினின்றும் உண்டான சங்கைக் கையிலெடுத்துக்கொண்டு ரதத்தில் ஏறி, யமனுடைய பிரதான நகரமாகிற ஸம்யமனீ என்ற பட்டணத்திற்குச் சென்றார்.

**गत्वा जनार्दनः शङ्खं प्रदध्मौ सहलायुधः । शङ्खनिर्ह्रादमाकर्ण्य प्रजासंयमनो यमः ॥ ४३ ॥ तयोः सपर्यां महतीं चक्रे भक्त्युपबृंहिताम् । उवाचावनतः कृष्णं सर्वभूताशयालयम् । लीलामनुष्य हे विष्णो युवयोः करवाम किम् ॥ ४४ ॥**

பகவான் ராமருடன் அங்குசென்று சங்கத்தை ஊதினார். பிராணிகளை அழிக்கும் யமன், சங்கத்தொனியைக் கேட்டு, பக்திடன் அவருக்குப் பெரும் பூஜைசெய்து, எல்லாப் பிராணிகளின் அந்தக்கரணத்தில் வசிக்கும் கிருஷ்ணனைப் பார்த்து "லீலையாக அவதரித்த விஷ்ணுவே! யான் செய்யவேண்டியது யாது" என்று வணக்கமாய்க் கேட்கலானான்.

**श्रीभगवानुवाच— गुरुपुत्रमिहाऽऽनीतं निजकर्मनिबन्धनम् । आनयस्व महाराज मच्छासनपुरस्कृतः ॥ ४५ ॥ तथेति तेनोपानीतं गुरुपुत्रं यदूत्तमौ । दत्त्वा स्वगुरवे भूयो वृणीष्वेति तमूचतुः ॥ ४६ ॥**

குருபுத்திரனைத் திரும்பிக் கொடுக்கும்படி பகவான் அவனை கட்டளையிட யமன் 'அவ்விதமே யாகட்டும்' என்று சொல்லி அவர்களிடம் குருபுத்திரனைக் கொடுத்தான். பிறகு அந்த யதுச்சிரேஷ்டர்கள் தங்கள் குருவினிடம், பாலனைக்கொடுத்து, மறுபடியும் வேண்டியவற்றைக் கேட்குமாறு பிரார்த்தித்தார்கள்.

**गुरुरुवाच— सम्यक् संपादितो वत्स भवद्भ्यां गुरुनिष्क्रयः । को नु युष्मद्विधगुरोः कामानामवशिष्यते ॥ ४७ ॥ गच्छतं स्वगृहं वीरौ कीर्तिर्वामस्तु पावनी ।**

ஸாந்திபனி முனிவர் அவர்களிடம் ஸந்தோஷமடைந்து, "குழந்தைகளே! நீங்கள் ஒருவராலும் கொடுக்கமுடியாத குருதக்ஷிணையைக் கொடுத்தீர்கள். உங்களை சிஷ்யர்களாக அடைந்த குருவிற்கு, எந்த விருப்பம்தான் நிறைவேறாமலிருக்கும். ஆதலால்

வீரர்களே! நீங்கள் வீடு செல்லுங்கள். பரிசுத்தமான புகழை என் அனுக்கிரஹத்தால் அடைவீர்கள்" என்றார்.

**गुरुणैवमनुज्ञातौ रथेनानिलरंहसा । आयातौ स्वपुरं तात पर्जन्य निनदेन वै ॥४९॥ समनन्दन्प्रजाः सर्वा दृष्ट्वा रामजनार्दनौ । अपश्यन्त्यो बह्वहानि नष्टलब्धधना इव ॥ ५० ॥**

பிறகு அவர்கள் குருவினிடம் அனுமதி பெற்றுக்கொண்டு வாயு வேகமாகச் செல்லும் ரதத்தில் ஏறி தங்கள் இருப்பிடஞ் சென்றார்கள். அவர்களைக்கண்ட பிரஜைகளனைவரும், இழந்த பொருளைத் திரும்ப அடைந்தவர்கள்போன்று ஸந்தோஷமடைந்தார்கள்.

## நாற்பத்தாறுவது அத்தியாயம்.



{ षट्चत्वारिंशके घोषमुद्धवं प्रेष्य तद्गिरा ।
यशोदानन्दयोश्चक्रे कृष्णः शोकापनोदनम् ॥ }

[பகவான் உத்தவரை நந்தகோகுலத்திற்கு அனுப்புதல்—தம் வார்த்தைகளால் யசோதை நந்தர் இவர்களின் துக்கத்தை ஆற்றுதல்.]

**श्रीशुक उवाच— वृष्णीनां प्रवरो मन्त्री कृष्णस्य दयितः सखा । शिष्यो बृहस्पतेः साक्षादुद्धवो बुद्धिसत्तमः ॥ १ ॥ तमाह भगवान् प्रेष्ठं भक्तमेकान्तिनं क्वचित् । गृहीत्वा पाणिना पाणिं प्रपन्नार्तिहरो हरिः ॥**

கிருஷ்ண பகவானுக்கு உத்தவர் என்ற ஓர் அந்தரங்க நண்பரிருந்தார். அவர் விருஷ்ணிகளுள் முதல்வர். மந்திராலோசனையிற் சிறந்தவர். பிறவியிலேயே புத்திமான். மேலும் பிரஹஸ்பதியிடமிருந்து நேராக வித்தையைக் கற்றவர். எப்பொழுதும் கிருஷ்ணரின் நன்மையில் கண்ணும் கருத்துமாயிருப்பவர். தன்னைச் சரணமடைந்தவர்களின் கஷ்டங்களைப் போக்குகின்றவரான கிருஷ்ண பகவான் ஒரு சமயம், தனிமையில், தன் நண்பரும் அந்தரங்க பக்தருமான உத்தவரின் கரத்தை தன் கரத்தாற் பற்றி, பின்வருமாறு சொல்லலானார்.

गच्छोद्धव व्रजं सौम्य पित्रोर्नौ प्रीतिमावह । गोपीनां मद्वियोगाधिं मत्सन्देशैर्विमोचय ॥ ३ ॥ ता मन्मनस्का मत्प्राणा मदर्थे त्यक्तदैहिकाः । ये त्यक्तलोकधर्माश्च मदर्थे तान्बिभर्म्यहम् ॥ ४ ॥ मयि ताः प्रेयसां प्रेष्ठे दूरस्थे गोकुलस्त्रियः । स्मरन्त्योऽङ्ग विमुह्यन्ति विरहौत्कण्ठ्यविह्वलाः ॥ धारयन्त्यतिकृच्छ्रेण प्रायः प्राणान्कथञ्चन । प्रत्यागमनसन्देशैर्वल्लव्यो मे मदात्मिकाः ॥ ६ ॥

"சாந்த ஸ்வரூபரே! உத்தவரே! நீர் இப்பொழுதே நந்த கோகுலஞ் சென்று நமது தாய் தந்தையர்களின் க்ஷேமத்தை விசாரித்து, அவர்களை மகிழச் செய்யும். என்னைப்பிரிந்து வருந்தும் கோபஸ்திரீகளையும் என் வார்த்தைகளைக் கூறித் தேற்றும். அவர்கள் என்னிடத்தில் மனதைச் செலுத்தி, என்னையே பிராணனாகக் கருதி, எனக்காகத் தங்கள் தேகத்தையும் விடுவதற்குச் சித்தமாயிருக்கிறார்கள். அவர்கள் லௌகிக முறைகளையும் கடந்து, என்னையே தஞ்சமென்றடைந்திருக்கிறார்கள். அவர்களை நான் எவ்விதத்திலும் காப்பாற்றவேண்டும். அவர்களை விட்டுப்பிரிந்து வெகுதூரத்திலிருப்பதால், அவர்கள் என்னையே நினைத்துக்கொண்டு, என் பிரிவைச் சகியாது வருந்தி, 'சீக்கிரத்தில் திரும்பி வருவேன்' என்று நான் கூறிய வார்த்தைகளை நம்பி, என்னைப் பார்க்கலாமென்ற ஆசையால் ஒருவாறு உயிருடனிருக்கிறார்கள்."

श्रीशुक उवाच—इत्युक्त उद्धवो राजन् संदेशं भर्तुराद्दतः । आदाय रथमारुह्य प्रययौ नन्दगोकुलम् ॥ ७ ॥ प्राप्तो नन्दव्रजं श्रीमान्निम्लोचति विभावसौ । छन्नयानः प्रविशतां पशूनां खुररेणुभिः ॥ ८ ॥

அரசே! இவ்விதம் கிருஷ்ணபகவான் கூறியதும், உத்தவர் அவரது கட்டளையை ஏற்றுக்கொண்டு, ரதத்தில் ஏறி, சூரியன் அஸ்தமயமாகும்பொழுது கோகுலஞ் சென்றார். அச்சமயம் பசுக்கள் கூட்டங் கூட்டமாக வீட்டிற்குத் திரும்பிச் சென்றுகொண்டிருந்தன. அவைகளின் அடிவைப்புகளால் கிளம்பிய புழுதி ரதத்தை மறைத்தது.

वासितार्थेऽभियुध्यद्भिर्नादितं शुष्मिभिर्वृषैः । धावन्तीभिश्च वास्राभिरूधोभारैः स्ववत्सकान् ॥९॥ गोदोहशब्दाभिरवं वेणूनां निःस्वनेन च

॥ १० ॥ गायन्तीभिश्च कर्माणि शुभानि बलकृष्णयोः । स्वलंकृताभिर्गोपीभिर्गोपैश्च सुविराजितम् ॥ ११ ॥

அந்த நந்த கோகுலத்தில், கொழுத்த காளைகள் ரஜஸ்வலையான பசுக்களை கோஷத்துடன் விரட்டிச்சென்று, ஒன்றுக்கொன்று சண்டையிட்டன. ஈன்ற பசுக்கள் பால் நிரம்பிய மடுவுடன் கன்றுகளை நோக்கி ஓடின. பால் கரக்கும் சப்தமும், வேணு கானமும், கோகுலத்தின் நாற்புறங்களிலும் அளாவியிருந்தன. கோபஸ்திரிகள் ஆடை ஆபரணங்களை அணிந்து, பலராமருடைய புகழையும், கிருஷ்ணருடைய புகழையும், அவர்களுடைய மங்களகரமான கதைகளையும் இனியகுரலுடன் பாடிக்கொண்டிருந்தார்கள்.

तमागतं समागम्य कृष्णस्यानुचरं प्रियम् ।
नन्दः प्रीतः परिष्वज्य वासुदेवधियाऽर्चयत् ॥ १४ ॥
भोजितं परमान्नेन संविष्टं कशिपौ सुखम् ।
गतश्रमं पर्यपृच्छत्पादसंवाहनादिभिः ॥ १५ ॥

நந்தகோபர் கிருஷ்ணரின் பிரிய நண்பரான உத்தவர் வரவை யறிந்து, அவரை வரவேற்றுஅன்புடன் ஆலிங்கனஞ்செய்து வாசுதேவனென்ற நினைப்புடன் பூஜித்தார். அறுசுவை கூடின உணவை யளித்து ஆசனத்திலமர்த்தி, அவரது கைகால்களைப் பிடித்து வழிநடந்த சிரமத்தைப் போக்கி, பின்வருமாறு கேட்கலானார்.

कच्चिदङ्ग महाभाग सखा नः शूरनन्दनः ।
आस्ते कुशल्यपत्याद्यैर्युक्तो मुक्तः सुहृद्वृतः ॥ १६ ॥
दिष्ट्या कंसो हतः पापः सानुगः स्वेन पाप्मना ।
साधूनां धर्मशीलानां यदूनां द्वेष्टि यः सदा ॥ १७ ॥

“ ஆர்ய ! உத்தவா ! நம் ஸகாவான வசுதேவரும் அவரது குழந்தைகளும், மனைவிகளும் க்ஷேமமாயிருக்கிறார்களா ? அது போன்று, அவரைச்சேர்ந்தவர்களும், கம்ஸன் இழைத்த பல தீங்குகளினின்றும் தப்பி சௌக்கியமாயிருக்கிறார்களா? தெய்வாதீனமாக பாபியான கம்ஸன் தன் உறவினர்களுடன் மாண்டான். தர்ம

நெறிவழுவாதவர்களும், நல்லோர்களுமான யாதவர்களை அவன் எப்பொழுதும் பகைத்தானன்றோ!

अपि स्मरति नः कृष्णो मातरं सुहृदः सखीन् । गोपान्व्रजं चाऽऽत्मनाथं गावो वृन्दावनं गिरिम् ॥ अप्यायास्यति गोविन्दः स्वजनान् सकृदीक्षितुम् । तर्हि द्रक्ष्याम तद्वक्त्रं सुनसं सुस्मितेक्षणम् ॥ १९ ॥

கிருஷ்ணன், மாதா பிதாக்களான எங்களையும் அவன் உறவினர்களையும், நண்பர்களையும், அவனையே நாதனாகக்கொண்ட கோகுலத்தையும், பசுக்களையும், பிருந்தாவனத்தையும், கோவர்த்தன மலையையும், எப்பொழுதாவது நினைப்பதுண்டா? எங்களைப் பார்ப்பதற்கு ஒருமுறையாவது இங்கு வருவானா? அழகிய மூக்கும், மந்தஹாஸத்துடன் கூடிய பார்வையுமுள்ள அவனுடைய முகத்தை எப்பொழுது நான் பார்க்கப்போகிறேன்?

दावाग्नेर्वातवर्षाच्च वृषसर्पाच्च रक्षिताः । दुरत्ययेभ्यो मृत्युभ्यः कृष्णेन सुमहात्मना ॥ २० ॥ स्मरतां कृष्णवीर्याणि लीलापाङ्गनिरीक्षितम् । हसितं भाषितं चाङ्ग सर्वा नः शिथिलाः क्रियाः ॥ २१ ॥ सरिच्छैलवनोद्देशान् मुकुन्दपदभूषितान् । आक्रीडानीक्षमाणानां मनो याति तदात्मताम् ॥

காட்டுத் தீயினின்றும் தேவேந்திரன் பெய்த கல்மழையினின்றும், விருஷபாஸுரனிடமிருந்தும், காளியன் என்ற கொடிய சர்ப்பத்தினின்றும், இதுபோன்ற மற்றும் கொடிய ஆபத்துகளினின்றும், அம்மஹானுபாவன் எங்களை ரக்ஷித்தான். அவனுடைய அத்புதச் செயல்களையும், அவனுடைய விளையாட்டு, சிரிப்பு, இனிய பேச்சு இவைகளையும் நினைக்கும்பொழுது எங்கள் மனம் பரவசமாகி, வீட்டுவேலைகளில் நாடுகிறதில்லை. அவன் அடிவைப்புகளால் அலங்கரிக்கப்பட்ட கோவர்த்தன மலையையும், பிருந்தாவனத்தையும், யமுனைக்கரையிலுள்ள விளையாடுமிடங்களையும் பார்க்குங்கால், எங்கள் மனம் கிருஷ்ணனை நினைத்து பரவசமாகின்றது.

मन्ये कृष्णं च रामं च प्राप्ताविह सुरोत्तमौ ।
कंसं नागायुतप्राणं मल्लौ गजपतिं तथा ।
अवधिष्टां लीलयैव पशूनिव मृगाधिपः ॥ २४ ॥

ராமனும் கிருஷ்ணனும் பதினாயிரம் யானையின் பலம் வாய்ந்த கம்ஸனையும், மல்லர்களையும், குவலயாபீடத்தையும், சிங்கக்குட்டி அற்ப மிருகங்களைக் கொல்லுவதுபோல், எளிதிற்கொன்றார்கள். அதை நினைக்கும்பொழுது, அவர்கள் இருவர்களையும் தேவ சிரேஷ்டர்கள் என்று எண்ணுகிறேன்."

**श्रीशुकः—इति संस्मृत्य संस्मृत्य नन्दः कृष्णानुरक्तधीः । अत्युत्कण्ठोऽभवत्तूष्णीं प्रेमप्रसरविह्वलः ॥ यशोदा वर्ण्यमानानि पुत्रस्य चरितानि च । शृण्वन्त्यश्रूण्यवास्राक्षीत्स्नेहस्नुतपयोधरा ॥२८॥ तयोरित्थं भगवति कृष्णे नन्दयशोदयोः । वीक्ष्यानुरागं परमं नन्दमाहोद्धवो मुदा ॥ २९ ॥**

இவ்விதம் நந்தகோபர் ஸ்ரீ கிருஷ்ணருடைய லீலைகளை நினைத்து நினைத்து, அவரிடம் வைத்த அன்பின் பெருக்கால் பரவசமாகி, துக்கத்தால் நெஞ்சடைபட்டு, பேசுவதற்கு சக்தியற்று, மௌனமாயிருந்தார். அவ்விதமே உத்தமியான யசோதையும் தன் குழந்தையின் வரலாற்றைக் கேட்டு கண்ணீர் பெருக்கியவாறிருந்தாள். இவ்விதம் நந்தரும் யசோதையும் கிருஷ்ணபகவானிடம் உயர்ந்த அன்பு பாராட்டியதை உத்தவர் பார்த்துக் களிப்புற்று,

**युवां श्लाघ्यतमौ नूनं देहिनामिह मानद ।**
**नारायणेऽखिलगुरौ यत्कृता मतिरीदृशी ॥ ३० ॥**

"மகிமை வாய்ந்த நந்தரே! நீங்களிருவரும் இப்புவியில் எல்லோராலும் கொண்டாடத் தக்கவர்கள். ஏனெனில் எல்லா உலகங்களுக்கும் ஈசுவரனான ஸ்ரீ நாராயணனிடம் இத்தகைய பக்தி உங்களுக்கு இயற்கையில் உண்டாயிருக்கிறதல்லவா?

**एतौ हि विश्वस्य च बीजयोनी रामो मुकुन्दः पुरुषः प्रधानम् ।**
**अन्वीय भूतेषु विलक्षणस्य ज्ञानस्य चेशात इमौ पुराणौ ॥ ३१ ॥**

ராமரும் கிருஷ்ணரும் உலகமனைத்திற்கும் நிமித்தகாரணமாகவும், உபாதான காரணமாகவும் இருக்கிறார்கள். நிமித்த காரணமான புருஷனும் இவர்களே. உபாதான காரணமான மாயாசக்தியுமிவர்களே. எல்லா பூதங்களிலும் தொடர்ந்துசென்று ஞானத்தின் ஏற்றத்தாழ்வால் பல வடிவங்களாகத் தோன்றும் ஜீவர்களும் இவர்களே.

यस्मिञ्जनः प्राणवियोगकाले क्षणं समावेश्य मनो विशुद्धम् ।
निर्हृत्य कर्माशयमाशु याति परां गतिं ब्रह्ममयोऽर्कवर्णः ॥ ३२ ॥

இந்த புராண புருஷர்களிடத்தில், எவன் மரணகாலத்தில் ஒரு க்ஷணமேனும் மனதைச் செலுத்தி, அதனால் அதைப் பரிசுத்தமாகச் செய்கிறானோ, அவன் எல்லாக் கர்மவாசனைகளையும் சீக்கிரத்தில் அறுத்து, கோடி சூரியன்போன்று பிரகாசிக்கும் பிரம்ம ரூபமாகிற மேலான கதியை அடைகிறான்.

तस्मिन्भवन्तावखिलात्महेतौ नारायणे कारणमर्त्यमूर्तौ ।
भावं विधत्तां नितरां महात्मन्किं वाऽवशिष्टं युवयोः सुकृत्यम् ॥ ३३ ॥

மஹானுபாவர்களே! எல்லா ஜீவர்களுக்கும் காரணமாயிருப்பவரும் இப்பொழுது மானிட சரீரத்தை எடுத்தவருமான ஸ்ரீ நாராயணனிடத்தில் இடைவிடாது மிகுந்த பக்தியை நீங்கள் செய்துவருங்கால் இனிச்செய்யவேண்டிய நற்செய்கை யாதிருக்கிறது? ஒன்றுமில்லை.

आगमिष्यत्यदीर्घेण कालेन व्रजमच्युतः । प्रियं विधास्यते पित्रोर्भगवान् सात्वतां पतिः ॥ ३४ ॥ हत्वा कंसं रङ्गमध्ये प्रतीपं सर्वसात्वताम् । यदाह वः समागत्य कृष्णः सत्यं करोति तत् ॥ मा खिद्यतं महाभागौ द्रक्ष्यथः कृष्णमन्तिके । अन्तर्हृदि स भूतानामास्ते ज्योतिरिवैधसि ॥३६॥

அச்சுதர் வெகுசீக்கிரத்தில் இவ்விடம் வந்து உங்களை சந்தோஷப்படுத்துவார். கம்ஸனைக் கொன்றபிறகு ரங்கமண்டபத்தில் என்னென்ன உறைத்தவரோ, அவையனைத்தையும் ஸத்தியமாகச் செய்வார். பெரும் பாக்கியம் பெற்றவர்களே! இனி வருந்தாதீர்கள். கிருஷ்ணனை உங்களருகில் பார்ப்பீர்கள். கட்டையில் அக்னி யிருப்பதுபோன்று, அவர் எல்லாப் பிராணிகளுடைய ஹிருதயத்திலும் இருக்கின்றாரன்றோ?

न ह्यस्यास्ति प्रियः कश्चिन्नाप्रियो वास्त्य मानिनः । नोत्तमो नाधमो वाऽपि समानस्यासमोऽपि वा ॥ ३७ ॥ न माता न पिता तस्य न भार्या न सुतादयः । नात्मीयो न परश्चापि न देहो जन्म एव च ॥ न चास्य कर्म वा लोके सदसन्मिश्रयोनिषु । क्रीडार्थः सोपि साधूनां परित्राणाय कल्पते ॥

ஒன்றிலும் பற்றுதல் வைக்காத அந்த பகவானுக்கு வேண்டியவன், விரோதி, மேலானவன், தாழ்ந்தவன், தாயார்,

தந்தை, மனைவி, குழந்தைகள், தன்னைச் சேர்ந்தவன் என்ற வித்தியாசங்கிடையாது. அவருக்கு இவ்வுலகத்தில் தேகத்தை எடுத்துச் செய்யவேண்டியது ஒன்றுமில்லை. ஆயினும் சாதுக்களை ரக்ஷிக்கும் பொருட்டு, வேஷந்தரிப்பதுபோல் பல சரீரங்களை எடுக்கிறார். ஆதலால் அந்தச் சரீரத்தைச் சார்ந்த குணங்களோ, தோஷங்களோ, அவரை ஒருபொழுதும் அடைகின்றனவில்லை.

यथा भ्रमरिकादृष्ट्या भ्राम्यतीव महीयते ।
चित्ते कर्तरि तत्राऽऽत्मा कर्तेवाहं धिया स्मृतः ॥
युवयोरेव नैवायमात्मजो भगवान् हरिः ।
सर्वेषामात्मजो ह्यात्मा पिता माता स ईश्वरः ॥ ४२ ॥

பம்பரம்போல் தன்னைத்தானே சுற்றுபவன் கண்ணுக்குப் பூமியும் ஆகாசமும் சுற்றுவதாக புலப்படுவதுபோன்று அந்தக்கரணம் செய்கையைச் செய்யுங்கால் அதில் அபிமானத்தை வைத்த ஜீவனும் அச்செய்கையைத் தன்னுடையதாக உணர்கிறான். மஹாத்மாக்களே! இந்த கிருஷ்ணபகவான் உங்களுக்குமட்டும் குழந்தையல்ல. எல்லோருக்கும் குழந்தை. எல்லோருக்கும் ஆத்மா. எல்லோருக்கும் தாயும் தந்தையும் அவரே. அவரே எல்லோருக்கும் ஈசுவரன்.

दृष्टं श्रुतं भूतभवद्भविष्यत्स्थास्नुश्चरिष्णुर्महदल्पकं च ।
विनाऽच्युताद्वस्तुतरां न वाच्यं स एव सर्वं परमार्थभूतः ॥ ४३ ॥

சுருக்கமாய்ச் சொல்லுமளவில், நந்தகோபரே! நாம் பார்ப்பதும், கேட்பதும், நடந்ததும், நடப்பதும், நடக்கப் போவதும் எல்லாம் அந்தக் கிருஷ்ணனே. அசையும் பொருள், அசையாப் பொருள் இவைபனைத்தும் இன்னும் உலகத்தில் பெரிது, சிறிது என எவையுண்டோ, அவையனைத்தும் அச்சுதனேயாகும். அந்த அச்சுதனைக் காட்டிலும் வேறாக ஒருபொருள் சொல்லுவதற்கில்லை. அவரே எல்லாவற்றிற்கும் உண்மைப் பொருளாக விளங்குகிறார்" என்று கிருஷ்ணரைப்பற்றி நந்தரிடம் உரைத்தார்.

एवं निशा सा ब्रुवतोर्व्यतीता नन्दस्य कृष्णानुचरस्य राजन् ।
गोप्यः समुत्थाय निरूप्य दीपान् वास्तून्समभ्यर्च्य दधीन्यमन्थन् ॥

பரீக்ஷித்தே! இவர்கள் இவ்விதம் பேசிக்கொண்டிருக்கையில், அன்றிரவானது ஒரு நொடிபோல் கழிந்தது. கோபஸ்திரீகள் காலை நேரத்தில் எழுந்து, தீபங்களை ஏற்றி, வீட்டை சுத்தஞ்செய்து தயிர்கடையத் தொடங்கினார்கள்.

**उद्गायतीनामरविन्दलोचनं व्रजाङ्गनानां दिवमस्पृशत् ध्वनिः ।**
**दध्नश्च निर्मन्थनशब्दमिश्रितो निरस्यते येन दिशाममङ्गलम् ॥ ४६ ॥**

அவர்கள் செந்தாமரைக் கண்ணனின் லீலைகளை உயர்ந்த குரலுடன் இனிமையாய்க் கானஞ்செய்தார்கள். அந்த சப்தம் தயிர்கடைவதாலுண்டான சப்தத்துடன் கலந்து, ஆகாசம்வரை அளாவிச்சென்று, எங்கும் பரவி, நாற்றிசைகளிலுமுள்ள பாபத்தைப்போக்கி, கேட்போர்களுக்கு மங்களத்தை விளைவித்தது.

**भगवत्युदिते सूर्ये नन्दद्वारि व्रजौकसः । दृष्ट्वा रथं शातकौंभं कस्या ऽयमिति चाब्रुवन् ॥ ४७ ॥ अक्रूर आगतः किं वा यः कंसस्यार्थसाधकः । येन नीतो मधुपुरीं कृष्णः कमललोचनः ॥ किं साधयिष्यत्यस्माभिर्भर्तुः प्रीतस्य निष्कृतिम् । इति स्त्रीणां वदन्तीनामुद्धवोऽगात् कृताह्निकः ॥ ४९ ॥**

அச்சமயம் சூரியபகவான் கீழ்த்திசையில் உதயமானார். கோகுலவாசிகள் நந்தர் வீட்டு வாயிலில் சுவர்ண மயமான தேரைக் கண்டு, "இது யாருடையது? முன்னொரு சமயம் கம்ஸனிடமிருந்து தூது வந்து நம்மழகிய கிருஷ்ணனை மதுராபுரிக்கு அழைத்துச்சென்ற அக்ரூரர்தான் வந்திருக்கிறாரா? அவர் நம்மைக்கொண்டு கம்ஸனுக்கு சந்தோஷத்தை விளைவிக்கப்போகிறாரா?" என்று ஒருவருக்கொருவர் பேசிக்கொண்டார்கள். இவ்விதம் அந்த ஸ்திரீகள் பேசிக்கொண்டிருக்கையில், உத்தவர், காலைக்கடனை முடித்துக்கொண்டு அவ்விடம் வந்தார்.



# நாற்பத்தேழாவது அத்தியாயம்.



{ सप्तचत्वारिंशकेऽथ कृष्णादेशेन गोपिकाः ।
बोधयित्वोद्धवस्तत्त्वमनुज्ञाप्यागमत्पुरीम् ॥ }

[உத்தவர் கிருஷ்ணர் உத்திரவின்படி கோபஸ்திரீகளுக்கு தத்துவத்தை உபதேசித்தல்—கோபிகைகளிடம் விடைபெற்று மதுரைக்குத் திரும்புதல்.]

तं वीक्ष्य कृष्णानुचरं व्रजस्त्रियः प्रलंबबाहुं नवकञ्जलोचनम् ।
पीतांबरं पुष्करमालिनं लसन्मुखारविन्दं मणिमृष्टकुण्डलम् ॥ १ ॥

கோகுலஸ்திரிகள் உத்தவருடைய பருத்து நீண்ட கைகளையும், தாமரைபோல் விசாலமான நேத்திரங்களையும், மஞ்சள் பட்டாடையையும், தாமரைப்பூ மாலையையும், ரத்னமிழைத்த மகர குண்டலங்களையும், அழகாக விளங்கும் முகாரவிந்தத்தையும், பார்த்து அவரைக் கிருஷ்ணரின் அந்தரங்க நண்பரென்று எண்ணலானார்கள்.

शुचिस्मितः कोऽयमपीच्यदर्शनः कुतश्च कस्याच्युतवेषभूषणः ।
इति स्म सर्वाः परिवव्रुरुत्सुकास्तमुत्तमश्लोकपदांबुजाश्रयम् ॥ २ ॥

பிறகு அவர்களெல்லோரும் ஒன்றுகூடி, "இந்த அழகிய புன்சிரிப்புடன் விளங்கும் இவர் யார்? இவருடைய அழகிய தோற்றத்தைப் பார்த்தீர்களா? இவர் எங்கிருந்து வந்திருக்கிறார்? இவர் எவரைச் சார்ந்தவர்? இவர் கிருஷ்ணரைப்போன்று ஆடையாபரணங்களை அணிந்திருக்கின்றனரே!" என்று ஒருவருக்கொருவர் பேசலானார்கள். அப்பெண்மணிகள் அவரைச்சரிவரத் தெரிந்துகொள்வதில் ஆவலுற்று, பகவானுடைய பாதாரவிந்த ஸேவையைச் செய்துவரும் உத்தவரைச் சூழ்ந்து கொண்டார்கள்.

तं प्रश्रयेणावनताः सुसत्कृतं सव्रीडहासेक्षणसूनृतादिभिः ।
रहस्यपृच्छन्नुपविष्टमासने विज्ञाय सन्देशहरं रमापतेः ॥ ३ ॥

பிறகு அவர்கள் அந்த உத்தவரை லக்ஷ்மீபதியான கிருஷ்ணரிடமிருந்து நற்செய்தி கொணர்ந்திருக்கும் தூதரென

நிச்சயித்து, வணக்கத்துடன் தலைகுனிந்து, லஜ்ஜையுடன் கூடின பார்வையாலும் புன்சிரிப்பாலும் இனிய சொற்களாலும் அவரை உபசரித்தார்கள். அதன் பின் ஏகாந்தமான இடத்திற்கு அவரை அழைத்துச்சென்று ஓர் ஆசனத்திலமர்த்தி,

जानीमस्त्वां यदुपतेः पार्षदं समुपागतम् । भर्त्रेह प्रेषितः पित्रोर्भवान् प्रियचिकीर्षया ॥ ४ ॥ अन्यथा गोव्रजे तस्य स्मरणीयं न चक्ष्महे । स्नेहानुबन्धो बन्धूनां मुनेरपि सुदुस्त्यजः ॥ ५ ॥ अन्येष्वर्थकृता मैत्री यावदर्थ विडंबनम् । पुंभिः स्त्रीषु कृता यद्वत्सुमनस्स्विव षट्पदैः ॥ ६ ॥

"நீர் யதுபதியைச் சார்ந்தவரென்றும், அவரது தூதரென்றும் நாங்கள் அறிவோம். தாய் தந்தையர்களைத் தேற்றுவதற்காக அவர் இங்கு உம்மை அனுப்பினரா? அன்றேல் அவருக்கு கோகுலத்தைப்பற்றிய ஞாபகம் சிறிதும் இருப்பதற்குக் காரணம் ஒன்றும் எங்களுக்குப் புலப்படவில்லை. முனியாயிருப்பினும் பந்துக்களின் சிநேகத்தை எளிதில் விடமுடியாது. ஆனல் மற்றவர்களிடம் கொண்ட நட்பு, ஏதேனும் ஒரு பிரயோஜனத்தை முன்னிட்டிருப்பதால் அக்காரியம் கைகூடும்வரைதான் அந்த நட்பும் நிலைபெற்றிருக்கும். பகவான் எங்களிடம் வைத்த சிநேகமானது புருஷர்கள் ஸ்திரீகளிடம் வைக்கும் சிநேகம் போன்றும், வண்டுகள் புஷ்பங்களிடம் பூந்தேனைப் பருகுவதற்கு சிநேகம் பாராட்டுவது போன்றுமிருக்கிறது.

निःस्वं त्यजन्ति गणिका अकल्पं नृपतिं प्रजाः । अधीतविद्या आचार्यमृत्विजो दत्तदक्षिणम् ॥ ७ ॥ खगा वीतफलं वृक्षं भुक्त्वा चातिथयो गृहम् । दग्धं मृगास्तथाऽरण्यं जारो भुक्त्वारतां स्त्रियम् ॥ ८ ॥ इति गोप्यो हि गोविन्दे गतवाक्कायमानसाः । कृष्णदूते व्रजं याते उद्धवे त्यक्तलौकिकाः ॥

வேசியர்கள் பணமிழந்த புருஷர்களைக் கைவிடுவது போன்றும், பலம் குன்றிய அரசனை பிரஜைகள் கைவிடுவதுபோன்றும், வித்தையைக் கற்றபின் ஆசாரியனை சிஷ்யன் கவனியாதது போன்றும், தக்ஷிணைகளைப் பெற்ற பிறகு ருத்விக்குகள் யஜமானை மறப்பதுபோன்றும், பகவான் எங்களைக் கைவிட்டார். பறவைகள் பூத்துக்காய்த்த மரங்களை அடைந்து பட்டுப்போனபின் அவைகளை விட்டுச் செல்வதுபோன்றும், விருந்தாளி அறுசுவை

யுணவை யுண்டு உண்டபின் அந்த வீட்டை மறப்பதுபோன்றும், காட்டில் வசித்துவரும் மான்கள் அக்காட்டிலுள்ள தடாகங்களில் நீர் வற்றியபின் அவ்விடத்தைவிட்டு நீர்வளம் பொருந்திய வேறு இடம் செல்வது போன்றும், சோரபுருஷன் தன்னிடம் ஆசை கொண்ட பெண்மணியை அனுபவித்தபிறகு அவளை உபேக்ஷிப்பது போன்றும், பகவான் எங்களை உபேக்ஷை செய்துவிட்டார்" என்று கோபஸ்திரீகள் கோவிந்தனிடத்தில் மனஸ், வாக்கு, காயம் இவைகளைச் செலுத்தி அவரிடம் ஈடுபட்டு, லோகமுறைகளை மறந்து, வரைதவறி, கிருஷ்ண தூதரான உத்தவரிடம் முறையிட்டார்கள்.

गायन्त्यः प्रियकर्माणि रुदत्यश्च गतह्रियः । तस्य संस्मृत्य संस्मृत्य यानि कैशोरबाल्ययोः ॥ १० ॥ काचिन्मधुकरं दृष्ट्वा ध्यायन्ती कृष्णसङ्गमम् । प्रियप्रस्थापितं दूतं कल्पयित्वेदमब्रवीत् ॥ ११ ॥

சிலர் கிருஷ்ணரின் பாலலீலைகளை கானஞ்செய்து அவரை நினைத்து நினைத்து லஜ்ஜையின்றிக் கதறினார்கள். அச்சமயம் ஒரு கோபிகை அவ்விடம் ரீங்காரஞ் செய்துகொண்டிருந்த ஒரு வண்டைப் பார்த்து, கிருஷ்ணருடைய சேர்க்கையை மனதால் நினைத்து, அவ்வண்டை தன் பிரியநாயகனால் அனுப்பப்பட்ட தூதனாகப் பாவித்து, பின்வருமாறு சொல்லலானாள்.

## பிரமரகீதை.

मधुप कितवबन्धो मा स्पृशाङ्घ्रिं सपत्न्याः
कुचविलुलितमालाकुङ्कुमश्मश्रुभिर्नः ।
वहतु मधुपतिस्तन्मानिनीनां प्रसादं
यदुसदसि विडम्ब्यं यस्य दूतस्त्वमीदृक् ॥ १२ ॥

"பூந்தேனைப் பருகும் வண்டே! வஞ்சகனைச்சார்ந்தவனே! உனது சிவந்த மீசையால் எங்கள் பாதங்களைத் தொடாதே! மதுராபுரியிலிருக்கும் ஸ்ரீகிருஷ்ணனின் வனமாலையினின்று பூந்தேனைப் பருகுங்கால் எங்கள் சக்களத்திகளின் ஸ்தனங்களில் பூசிய குங்குமம் அம்மாலையில் படிந்திருந்ததை நீ அறியவில்லைபோலும்!

ஆதலால்தான் உன் மீசை சிவந்திருக்கிறது. இப்பொழுது யாதவர்களுக்கு நாயகனுயிருக்கும் கிருஷ்ணனுக்கு அம்மாதர்களின் தயவே விரும்பக்கூடியதாகும். உனது வேஷத்தைக் கண்ட ஸபையோர்கள் அதைக்குறித்து நகைப்பார்கள்.

सकृदधरसुधां स्वां मोहिनीं पाययित्वा
सुमनस इव सद्यस्तत्यजेऽस्मान्भवादृक् ।
परिचरति कथं तत्पादपद्मं तु पद्मा
ह्यपि बत हृतचेता उत्तमश्लोकजल्पैः ॥ १३ ॥

நீ பூந்தேனைப் பருகியபின் புஷ்பங்களைத் தள்ளுவது போன்று, உன்னைப்போன்ற கிருஷ்ணனும் ஒரு தடவை தன் அதராமிருதத்தை எங்களுக்கூட்டி எங்களை மயங்கச்செய்து அதன்பின் எங்களைக் கைவிட்டான். வண்டே! செய்நன்றியற்ற இவனுடைய பாதாரவிந்தங்களை லக்ஷ்மீதேவி எங்ஙனம் சேவிக்கின்றுளோ! ஒருவேளை புகழ்பொருந்திய இவனுடைய பொய்வார்த்தைகளில் மதிமயங்கியிருந்தாள்போலும்! கஷ்டம்!

किमिह बहु षडङ्घ्रे गायसि त्वं यदूनां
अधिपतिमगृहाणामग्रतो नः पुराणम् ।
विजयसखसखीनां गीयतां तत्प्रसङ्गः
क्षपितकुचरुजस्ते कल्पयन्तीष्टमिष्टाः ॥ १४ ॥

ஆறுகாலுள்ள வண்டே! இதற்குமுன் பலதடவை நாங்கள் அவனை அனுபவித்தோம். அவன் இப்பொழுது யாதவர்களுக்கு அரசனுயிருக்கிறுன். வீடு வாசல்களைத் துறந்து வனத்தில் ஸஞ்சரிக்கும் எங்களிடம் ஏன் திரும்பவும் திரும்பவும் அவனைப்பற்றிப் பாடி துன்பத்தை மூட்டுகின்றுய்? அவனுடைய பெருமையை அவனுடைய சகிகளின் முன்பே பாடுவாயாக. அவர்களை கிருஷ்ணன் அன்புடன் ஆலிங்கனஞ் செய்து அவர்களின் ஹிருதய தாபத்தை இப்பொழுதுதான் போக்கியிருக்கிறுன். ஆதலால் அவர்கள் உனக்கு உயர்தர வெகுமதிகளை அளிப்பார்கள்.

दिवि भुवि च रसायां काः स्त्रियस्तद्दुरापाः
कपटरुचिरहासभ्रूविजृम्भस्य याः स्युः ।

चरणरज उपास्ते यस्य भूतिर्वयं का
अपि च कृपणपक्षे ह्युत्तमश्लोकशब्दः ॥ १५ ॥

வஞ்சகனே ! பூமியிலும், சுவர்க்கத்திலும், பாதாளத்திலும், வசிக்கும் எந்த ஸ்திரீ அவனுடைய அழகான பார்வையையும் புன்சிரிப்பையும் பார்த்து மோஹமடையாதிருப்பாள்? லக்ஷ்மீதேவியும் அவனுடைய ஸேவையைச் செய்துவரும்பொழுது நாங்கள் எம்மாத்திரம். ஆயினும் அனாதைகளிடத்தில் மனமிரங்குபவருக்குத்தான் புருஷோத்தமன் என்ற சப்தம் பொருந்தும் என்பதை அவனிடம் எடுத்துக் கூறுவாய்.

विसृज शिरसि पादं वेद्म्यहं चाटुकारैः
अनुनयविदुषस्तेऽभ्येत्य दौत्यैर्मुकुन्दात् ।
स्वकृत इह विसृष्टापत्यपत्यन्यलोका
व्यसृजदकृतचेताः किं नु सन्धेयमस्मिन् ॥ १६ ॥

தூதா! எங்கள் காலை உன் தலையால் தொட்டு வணங்காதே ! எடுத்துவிடு. எங்கள் கோபத்தைத் தணிப்பதற்காக முகுந்தனால் அனுப்பப்பட்ட நீ, அவனிடமிருந்து நயவார்த்தைகளையும் கற்றுக் கொண்டு வந்திருப்பதை நாம் அறிவோம். தனக்காகக் கணவன், குழந்தை, பரலோகம், முதலியவற்றைத் தியாகஞ்செய்தவர்களையும், நெஞ்சத்தில் கொஞ்சமும் தயையின்றி எவன் கைவிட்டானோ, அவன் விஷயத்தில் நம்பிக்கை எங்ஙனம் ஏற்படக்கூடும்.

मृगयुरिव कपीन्द्रं विव्यधे लुब्धधर्मा
स्त्रियमकृत विरूपां स्त्रीजितः कामयानाम् ।
बलिमपि बलिमत्त्वाऽवेष्टयद्ध्वाङ्क्षवद्यः
तदलमसितसख्यैर्दुस्त्यजस्तत्कथार्थः ॥ १७ ॥

அவனது முன்னவதார நடத்தைகளைக் கவனிக்கும்பொழுதும் அவனைக் கண்டு பயப்படுகிறோம். முன் ராமாவதாரத்தில் பிராணி ஹிம்சை செய்யும் வேடன்போன்று நிரபராதியான வாலி யென்ற வானர ராஜனை மறைந்து கொன்றான். ஒரு ஸ்திரீயால் ஜயிக்கப்பட்டு, காமத்தால் தன்னை விரும்பி வந்த மற்றொரு ஸ்திரீயை விரூபகரணஞ் செய்தான். காக்கை பலியை உண்டு அவ்விடமே விஷ்டிப்பதுபோல் நிரபராதியான பலிச்சக்கிரவர்த்தி

யிடம் பூஜைபெற்று, அவனை வருணபாசத்தால் கட்டி சுவர்க்கத்தினின்றும் அதோகதியாகத் தள்ளினன். ஏ வண்டே! இந்தக் கிருஷ்ணவர்ணத்துடன் கூடினவர்களுடைய நட்பு இத்துடன் போதும். இனி வேண்டாம். ஆயினும், தூதா! அவனுடைய கதைகளைத் தள்ளமுடியவில்லை. அவைகளை நினைத்துக்கொண்டே இருக்கிறோம்.

यदनुचरितलीलाकर्णपीयूषविप्रुट्
सकृददनविधूतद्वन्द्वधर्मा विनष्टाः ।
सपदि गृहकुटुंबं दीनमुत्सृज्य दीना
बहव इह विहङ्गा भिक्षुचर्यां चरन्ति ॥ १८ ॥

இவனுடைய அவதார லீலைகளாகிற கர்ணாம்ருதத்தின் ஒரு துளியையேனும் ஒரு தரம் பானஞ்செய்தவர்கள், உடனேயே சுகம், துக்கம், பயம், மோஹம், ராகம், த்வேஷம், இவைகளை ஒழிக்கின்றார்கள். அக்ஷணமே அவர்கள் ஹம்ஸம்போன்று ஸாராஸாரங்களைப் பகுத்தறிந்து, துக்கத்தை விளைவிக்கும் வீடுவாசல்களைத் துறந்து, தரித்திரர்கள் போன்றும், வெளிச்சுகங்களை ஒழித்தவர்கள் போன்றும், சந்நியாசிகள் போன்றும், காட்டில் பிக்ஷையெடுத்துத் திரிகின்றனர்.

वयमृतमिव जिह्मव्याहृतं श्रद्दधानाः
कुलिकरुतमिवाज्ञाः कृष्णवध्वो हरिण्यः ।
ददृशुरसकृदेतत्तन्नखस्पर्शतीव्र
स्मररुज उपमन्त्रिन्भण्यतामन्यवार्ता ॥ १९ ॥

வேடனுடைய இனிய சங்கீதத்தைக் கேட்டு அறிவிழந்து அதில் லயித்திருக்கும் மான்பேடுகள், அந்த வேடனுடைய பாணங்களாலேயே அடிபட்டு வருந்துவதுபோல் கிருஷ்ணனைச் சேர்ந்த நாங்கள் அவன் வஞ்சகமாக உரைத்ததை மெய்யென நம்பி, அதில் சிரத்தைகொண்டு, அவனுடைய நகஸ்பரிசத்தால் தூண்டப்பட்டு மன்மத தாபத்தை அடிக்கடி அடைந்து, இப்பொழுது வருந்துகிறோம். ஆதலால், தூதா! நீ அவனுடைப பேச்சுக்களை விட்டு வேறு விஷயங்களைப் பேசுவாய்.

प्रियसख पुनरागाः प्रेयसा प्रेषितः किं
वरय किमनुरुन्धे माननीयोऽसि मेऽङ्ग ।
नयसि कथमिहास्मान्दुस्त्यजद्वन्द्वपार्श्वं
सततमुरसि सौम्य श्रीर्वधूः साकमास्ते ॥ २० ॥

"பிரிய சகா! எங்கள் பிரியநாயகனின் தோழனே! கொஞ்சநேரத்திற்குமுன் இவ்விடம் விட்டுச்சென்று உடனேயே இங்கு திரும்பிவரக் காரணமென்ன? எங்கள் பிராணநாயகன் உன்னை மறுபடியும் அனுப்பினனே? உனக்கு வேண்டியதைக் கேள். நண்ப! நீ எங்களால் உபசரிக்கத்தக்கவன். நற்குணம் வாய்ந்தவனே! தள்ளமுடியாத ஸ்திரீயின் சேர்க்கையில் இருக்கும் அக்கிருஷ்ணனின் சமீபத்தில் எங்களை எங்ஙனம் அழைத்துச் செல்வாய்? அவனுடைய மார்பில் லக்ஷ்மீ என்றொருபெண் இடைவிடாது வசித்துவருகிருளே! அதை நீ மறந்தனையோ?

अपि बत मधुपुर्यामार्यपुत्रोऽधुनाऽऽस्ते
स्मरति स पितृगेहान्सौम्य बन्धूंश्च गोपान् ।
क्वचिदपि स कथा नः किङ्करीणां गृणीते
भुजमगुरुसुगन्धिं मूर्ध्न्यधास्यत्कदानु ॥ २१ ॥

ஆர்யபுத்திரர் இப்பொழுது மதுராபுரியில் சௌக்யமாயிருக்கின்றனரா? சுமுகா! மாதா பிதாக்களையும், வீடுவாசல்களையும் பந்துக்களையும், மற்றுமுள்ள கோபாலர்களையும் அவர் நினைக்கின்றனரா? எப்பொழுதாவது ஊழியர்களான எங்கள் பேச்சுக்களைப் பேசுவாரா? நறுமணம் வீசும் சந்தனம் பூசிய அவரது புஜத்தை எங்கள் சிரசில் எப்பொழுதாவது வைப்பாரா?"

अथोद्धवो निशम्यैवं कृष्णदर्शनलालसाः ।
सान्त्वयन्प्रियसन्देशैर्गोपीरिदमभाषत ॥ २२ ॥

கோபிகைகள் கிருஷ்ணனைப் பார்க்கவேண்டுமென்ற ஆவலுடன் மறைபொருளாக இவ்வாறு தூஷிப்பதுபோல் துதித்ததை உத்தவர் கேள்வியுற்று, கிருஷ்ணருடைய அன்பான மொழிகளாலேயே அவர்களைத் தேற்றிப் பதில் உரைக்கலானர்.

उद्धव उवाच—अहो यूयं स्म पूर्णार्था भवत्यो लोकपूजिताः । वासुदेवे भगवति यासामित्यर्पितं मनः ॥ दानव्रततपोहोमजपस्वाध्यायसंयमैः ।

श्रेयोभिर्विविधैश्चान्यैः कृष्णे भक्तिर्हि साध्यते ॥ २४ ॥ भगवत्युत्तमश्लोके भवतीभिरनुत्तमा । भक्तिः प्रवर्तिता दिष्ट्या मुनीनामपि दुर्लभा ॥ २५ ॥

"ஸ்திரீ ரத்தினங்களே! நீங்கள் இந்த ஜன்மத்தில் சதுர்வித புருஷார்த்தங்களையும் அடைந்தீர்கள். பகவான் வாஸுதேவரிடம் உங்கள் மனம் வேரூன்றியிருப்பதால், இவ்வீரேழு உலகங்களி லும் நீங்கள் பூஜிக்கத்தக்கவர்கள். தியானம், விரதம், தபஸ் முத லியவைகளால் கிருஷ்ணரிடத்தில் எவ்வித பக்தி யேற்படுமோ, முனிவர்களுக்கும் எளிதில் கிட்டாத அவ்வுயர்தர பக்தி, உத்தம சுலோகனிடத்தில் உங்களுக்குத் தெய்வவசத்தால் உண்டாயிற்று.

दिष्ट्या पुत्रान्पतीन्देहान् स्वजनान्भवनानि च । हित्वाऽवृणीत यूयं यत्कृष्णाख्यं पुरुषं परम् ॥२६॥ सर्वात्मभावोऽधिकृतो भवतीनामधोक्षजे । विरहेण महाभागा महान् मेऽनुग्रहः कृतः ॥ २७ ॥ श्रूयतां प्रियसंदेशो भवतीनां सुखावहः । यमादायागतो भद्रा अहं भर्तू रहस्करः ॥ २८ ॥

தெய்வவசத்தால் வீடு வாசல், கணவன், குழந்தை இவை களைத் துறந்து அந்த பரமபுருஷனை கிருஷ்ணனையே அடைந்தீர் கள். பெரும் பாக்கியம் பெற்றவர்களே! இந்திரியங்களுக்குப் புலப் படாத அதோக்ஷஜரான கிருஷ்ணரிடத்தில் உங்களுக்கு ஏகாந்த பக்தி உண்டாயிருக்கிறது. அவருடைய பிரிவால் உங்களுடைய பிரேமாதிசயத்தைப் பார்க்கும்படியான சந்தர்ப்பம் எனக்குக்கிடைத் ததும் எனது பெரும் பாக்கியமே. கல்யாணிகளே! பிரியநாயக னுடைய அன்பார்ந்த மொழிகளைக் கேட்டு சந்தோஷ மடையுங்கள். பகவான் ரஹஸ்யத்தில் எவைகளை என்னிடத்தில் கூறினரோ அவைகளைக் கூறுகிறேன்.

श्रीभगवानुवाच—भवतीनां वियोगो मे न हि सर्वात्मना क्वचित् । यथाभूतानि भूतेषु खं वाय्वग्निर्जलं मही । तथाऽहं च मनःप्राणभूतेन्द्रिय गुणाश्रयः ॥ २९ ॥

பகவான் கூறியதாவது :—"பிரிய சகிகளே! நான் எங்கும் நிறைந்திருப்பதாலும், எல்லாவற்றிற்கும் காரணமாயிருப்பதாலும் உங்களை ஒருபொழுதும் பிரிந்திலேன். சராசரங்களில், அவை களின் காரணமான பஞ்சபூதங்கள் தொடர்ந்திருப்பது போன்று,

நானும், மனஸ் பிராணன் முதலிய காரியங்களில் காரணவடிவ மாகத் தொடர்ந்திருக்கிறேன்.

**आत्मा ज्ञानमयः शुद्धो व्यतिरिक्तोऽगुणान्वयः। सुषुप्तिस्वप्नजाग्रद्भि-र्मायावृत्तिभिरीयते ॥ ३१ ॥ येनेन्द्रियार्थान् ध्यायेत मृषा स्वप्नवदुत्थितः। तन्निरुंध्यादिन्द्रियाणि विनिद्रः प्रत्यपद्यत ॥ ३२ ॥ एतदन्तः समाम्नायो योगः सांख्यं मनीषिणाम् । त्यागस्तपो दमः सत्यं समुद्रान्ता इवापगाः ॥**

ஆத்மா ஞானவடிவமானது. மாயா குணங்களின் கலப்பின்றிச் சுத்தமானது. குணங்களைக்காட்டிலும் வேறுபட்டது. ஆதலால் அந்த ஆத்மா, மனஸ் புத்தி இந்திரியம் முதலிய குணங்களில் சம்பந்தப்படுவதில்லை. ஆயினும் மாயாகார்யமான மனதின் செயல்களால் ஜாக்ரதாவஸ்தையில் விச்வன் என்றும், ஸ்வப்னவஸ்தையில் தைஜஸன் என்றும், ஸுஷுப்தி அவஸ்தையில் பிராக்ஞன் என்றும், அவன் அறியப்படுகிறான். தூக்கத்தினின்றும் எழுந்த மனிதன் பொய்யான ஸ்வப்னத்தை நினைத்துக்கொள்வது போன்று, ஒருவன் பொய்யான சப்தாதி விஷயங்களை எந்த மனதால் நினைக்கின்றானோ, அவைகளை நினைத்து இந்திரியங்களையும் வெளியில் விடுகிறானோ, அந்த மனதை ஜாக்கிரதையாக அடக்கவேண்டும். அத்தகைய மனதை அடக்கினவன் ஆத்மாவை ஸ்வப்பிரகாசமாய் அறிகிறான். இதுதான் வேதங்களின் முடிவு. அஷ்டாங்க யோகமும், ஆத்மா அனாத்மா இவைகளை விசாரிக்கும் சாங்கிய சாஸ்திரமும், ஸன்யாசமும், தபஸும், இந்திரியத்தை யடக்குவதும், எல்லாம், பல வேறுபட்ட மார்க்கங்களை உபதேசிப்பதுபோல் தோன்றினாலும் முடிவில், நதிகள் ஸமுத்திரத்தையே அடைவது போன்று, இவ்வொன்றையே பிரயோஜனமாகக் கொண்டன.

**यत्त्वहं भवतीनां वै दूरे वर्ते प्रियो दृशाम् । मनसः सन्निकर्षार्थं मदनुध्यानकाम्यया ॥ ३४ ॥ या मया क्रीडता रात्र्यां वनेऽस्मिन्व्रज आ-स्थिताः । अलब्धरासाः कल्याण्यो माऽऽपुर्मद्वीर्यचिन्तया ॥ ३७ ॥**

நான் உங்களுக்கு பிரியநாயகனாக இருந்தும், உங்கள் கண்ணுக்கெட்டாத தூரத்திலிருப்பதால், நீங்கள் என்னையே தியானித்து, உங்கள் மனதில் என்னை எப்பொழுதும் பார்ப்பீர்கள்.

அதனாலல்லவோ, ஸுந்தரிகளே! ராஸக்ரீடையில் பிருந்தாவனத்தில் என்னுடன் விளையாடாத சில கோபிகைகள் தங்கள் புருஷர்களால் வீட்டில் அடைபட்டிருந்து, என் மகிமையை நினைத்து நினைத்து என் ஸாரூப்பியத்தை யடைந்தார்கள். அதை நீங்கள் மறந்தீர்களா?"

एवं प्रियतमादिष्टमाकर्ण्य व्रजयोषितः ।
ता ऊचुरुद्धवं प्रीतास्तत्सन्देशागतस्मृतीः ॥ ३८ ॥

இவ்விதம் கிருஷ்ணபகவான் சொல்லி யனுப்பிய மனதுக்கினிய மொழிகளை உத்தவரிடமிருந்து கேட்டு கோபிகைகள், உத்தவரைப் பார்த்து மறுபடியும் சொல்லலானார்கள்.

दिष्ट्याऽहितो हतः कंसो यदूनां सानुगोऽघकृत् ।
दिष्ट्याऽऽप्तैर्लब्धसर्वार्थैः कुशल्यास्तेऽच्युतोऽधुना ॥ ३९ ॥
अपि स्मरति नः साधो गोविन्दः प्रस्तुते क्वचित् ।
गोष्ठीमध्ये पुरस्त्रीणां ग्राम्याः स्वैरकथान्तरे ॥ ४२ ॥

"தெய்வவசத்தால், யாதவர்களுக்குத் தீங்கிழைத்த கம்ஸன் அவனது உறவினர்களுடன் மாண்டான். தெய்வவசத்தால் பகவான் எல்லா சம்பத்துக்களையுமடைந்து சுகமாய் வாழ்ந்துவருகிறார். அவர் எங்களைப்பற்றி எப்பொழுதாவது நினைப்பதுண்டா? அப்பட்டணத்து ஸ்திரீகளுக்கு மத்தியில் நாகரீகமற்ற எங்களைப் பற்றி எப்பொழுதாவது அவர் பேசுவாரா?

ताः किं निशाः स्मरति यासु तदा प्रियाभिः
वृन्दावने कुमुदकुन्दशशाङ्करम्ये ।
रेमे क्वणच्चरणनूपुररासगोष्ठ्यां
अस्माभिरीडितमनोज्ञकथः कदाचित् ॥ ४३ ॥

குமுதம், குந்தம் இவைகள் மலர்ந்து சந்திரனின் நிலவு பரவியதால் அழகாக விளங்கும் பிருந்தாவனத்தில் பாதசரங்களின் சப்தத்திற்கேற்ப அவருடைய புகழை இனிமையாய்ப் பாடியும் ஆடியும் அவரிடத்தில் காதல்கொண்ட எங்களுடன் ராஸக்கிரீடையில் விளையாடின அவ்விரவுகளை அவர் எப்பொழுதாவது நினைப்பதுண்டா?

अप्येष्यतीह दाशार्हस्तप्ताः स्वकृतया शुचा । सञ्जीवयन्नु नो गात्रैर्यथेन्द्रो वनमंबुदैः ॥ ४४ ॥ कस्मात्कृष्ण इहायाति प्राप्तराज्यो हताहितः । नरेन्द्रकन्या उद्वाह्य प्रीतः सर्वसुहृद्वृतः ॥ ४५ ॥ किमस्माभिर्वनौकोभिरन्याभिर्वा महात्मनः । श्रीपतेराप्तकामस्य क्रियेतार्थः कृतात्मनः ॥ ४६ ॥

உத்தவரே! எப்பொழுதாவது கிருஷ்ணர் பலராமருடன் இங்கு வருவாரா? அவருடைய அழகிய முகத்தை எப்பொழுதாவது நாங்கள் பார்த்துக் களிப்போமா? மழையில்லாது வாடும் செடிகொடிகளை இந்திரன் மேகங்களை வர்ஷித்து பிழைப்பிப்பது போல், கிருஷ்ணரைப் பிரிந்து வருந்தும் எங்களை, அவர் தனது அங்க ஸங்கத்தால் பிழைப்பிப்பாரா? கிருஷ்ணபகவான் சத்துருக்களைக்கொன்று ராஜ்யத்தை யடைந்து, ராஜகன்னிகைகளை விவாஹஞ் செய்துகொண்டு, எல்லாபந்துக்களுடன் சௌக்கியமாய் வாழ்ந்துவரும்பொழுது, யாதுகாரணத்தால் இங்குவரப்போகிறார்? அவாப்த ஸமஸ்த காமராயும் லக்ஷ்மீபதியுமான பகவானுக்கு, காட்டில் திரியும் எங்களால் யாது பயன்?

सरिच्छैलवनोद्देशा गावो वेणुरवा इमे ।
संकर्षणसहायेन कृष्णेनाचरिताः प्रभो ॥ ४९ ॥

உத்தவரே! இந்த பிருந்தாவனமும், யமுனையும் இந்தக் கோவர்த்தனமலையும், இந்த பசுக்கூட்டமும், இடையிடையே கேட்கும் வேணுகானமும், அடிக்கடி இந்தக் கிருஷ்ணனையும் பலராமனையும் நினைவு மூட்டுகின்றன.

पुनःपुनः स्मारयन्ति नन्दगोपसुतं वत ।
श्रीनिकेतैस्तत्पदकैर्विस्मर्तुं नैव शक्नुमः ॥ ५० ॥

அவனுடைய அழகிய அடிவைப்புகளைப் பார்க்கும்பொழுதெல்லாம் நந்தகுமாரன் ஞாபகம் எங்கள் மனதில் உதிக்கின்றது. அவனை எவ்வகையிலும் மறக்கச் சக்தி யற்றவர்களா யிருக்கிறோம்.

हे नाथ हे रमानाथ व्रजनाथाऽऽर्तिनाशन ।
मग्नमुद्धर गोविन्द गोकुलं वृजिनार्णवात् ॥ ५२ ॥

ஹே நாதா! ஹே பிரியநாயக! கோகுல நாயக! கோவிந்த! உன்னைப் பிரிந்து துக்கசாகரத்தில் மூழ்கியிருக்கும் இந்தக் கோகுலத்தைக் கரைசேற்றுவாய்."

श्रीशुकः— ततस्ताः कृष्णसंदेशैर्व्यपेतविरहज्वराः । उद्धवं पूजयांचक्रुर्ज्ञात्वाऽऽत्मानमधोक्षजम् ॥ ५४ ॥ उवास कतिचिन्मासान् गोपीनां विनुदञ्शुचः । कृष्णलीलाकथां गायन्रमयामास गोकुलम् ॥ ५५ ॥

கோபிகைகள் கிருஷ்ணரின் தூதுமொழிகளைக்கேட்டு தாபம் நீங்கி கிருஷ்ணரை அதோக்ஷஜரென்றும் தங்களுக்கு ஆத்மாவென்றும் அறிந்து, பகவானின் அந்தரங்க நண்பரும் தூதருமான உத்தவரை நன்கு உபசரித்தார்கள். உத்தவர் கிருஷ்ணருடைய லீலைகளை கானஞ்செய்துகொண்டும், அவருடைய கதைகளை உரைத்துக்கொண்டும், கோபிகைகளின் துக்கத்தை யாற்றி, அவர்களுடன் சில மாதங்களைக் கழித்தார்.

यावन्त्यहानि नन्दस्य व्रजेऽवात्सीत्स उद्धवः । व्रजौकसां क्षणप्रायाण्यासन्कृष्णस्य वार्तया ॥ दृष्ट्वैवमादि गोपीनां कृष्णावेशात्मविक्लवम् । उद्धवः परमप्रीतस्ता नमस्यन्निदं जगौ ॥ ५७ ॥

கிருஷ்ண கதைகளைக் கேட்டதால் அம்மாதங்கள் கோபிகைகளுக்கு க்ஷணம் போல் கழிந்தன. உத்தவரும் கோபிகைகளின் உயர்ந்த பக்தியையும், கிருஷ்ணரைப் பிரிந்ததால் அவர்கள் படும் துன்பத்தையும் பார்த்து, அவர்களின் அன்பை மெச்சி, அவர்களை நமஸ்காரம் செய்ய விருப்பங்கொண்டு, பின்வருமாறு அவர்களைத் துதித்தார்.

एताः परं तनुभृतो भुवि गोपवध्वो
गोविन्द एव निखिलात्मनि रूढभावाः ।
वाञ्छन्ति यद्भवभियो मुनयो वयं च
किं ब्रह्मजन्मभिरनन्तकथारसस्य ॥ ५८ ॥

“இப்புவியில் சரீரமெடுத்தவர்களில் இந்த கோபவதுக்களே சிறந்தவர்கள். எல்லா உலகத்திற்கும் காரணமான ஸ்ரீ கோவிந்தனிடத்தில் இவர்களின் மனம் வேரூன்றியிருக்கிறது. முனிவர்களும் என்போன்றவர்களும், ஜனன மரண ஸம்ஸாரத்தினின்றும் கரைபேறுவதற்காக இந்த பக்தியையே விரும்புகிறார்கள். அந்த பகவானுடைய கல்யாண குணங்களில் ஆசைகொண்டவர்கள், எந்த ஜாதியில் பிறந்திருப்பினும் மோக்ஷத்தை யடைவார்கள் என்பதில் ஐயமுண்டோ!

क्वेमाः स्त्रियो वनचरीर्व्यभिचारदुष्टाः
कृष्णे क्व चैष परमात्मनि रूढभावः ।
नन्वीश्वरोऽनुभजतोऽविदुषोऽपि साक्षात्
श्रेयस्तनोत्यगदराज इवोपयुक्तः ॥ ५९ ॥

வனத்தில் திரிந்துகொண்டு நாகரீகமில்லாது விபசாரிகள்போல் தோன்றும் இந்த ஸ்திரிகள் எங்கே? பரமாத்மாவான கிருஷ்ண ரிடத்தில் வேரூன்றியிருக்கும் இவர்களின் பக்தி எங்கே? ஔஷ தத்தின் குணம் தெரியாது அதை உட்கொண்டவனுக்கும், எவ் விதம் ஔஷதம், வியாதியைப் போக்கி சுகத்தைக் கொடுக்கின் றதோ, அதுபோன்று ஈசுவரனும், தன்னை ஈசுவரன் என்று அறி யாமல் பஜித்தவனுக்கும் நேரில் க்ஷேமத்தைச் செய்கிறார்.

नायं श्रियोऽङ्ग उ नितान्तरतेः प्रसादः
स्वर्योषितां नलिनगन्धरुचां कुतोऽन्याः ।
रासोत्सवेऽस्य भुजदण्डगृहीतकण्ठ-
लब्धाशिषां य उदगाद्व्रजवल्लवीनाम् ॥ ६० ॥

இந்த கோபிகைகளை பகவான் அனுக்கிரஹித்தது போன்று லக்ஷ்மீ தேவியையும் அனுக்கிரஹிக்கவில்லை. தாமரை மலர்போன்று அழகிய அப்ஸரஸ்திரீகளுக்கும் அவரது பிரஸாதம் கிடைக்கவில்லை. அப் படியாகில் மற்றவர்களைப் பற்றிச் சொல்லவும் வேண்டுமா? பகவான் ராஸக்கிரீடையில் இந்தக் கோபஸ்திரீகளின் கழுத்தைத் தன் நீண்ட கைகளால் கட்டி ஆலிங்கனஞ்செய்து, அவர்களது மனோரதத்தை நிறைவேற்றி, அவர்களுக்குப் பூர்ண அனுக்கிர ஹத்தைச் செய்தார். என்ன ஆச்சரியம்!

आसामहो चरणरेणुजुषामहं स्यां
वृन्दावने किमपि गुल्मलतौषधीनाम् ।
या दुस्त्यजं स्वजनमार्यपथं च हित्वा
भेजुर्मुकुन्दपदवीं श्रुतिभिर्विमृग्याम् ॥ ६१ ॥

நான் இப்பிருந்தாவனத்தில் செடி கொடிகளின் மத்தியில், ஏதேனும் ஒன்றாகப் பிறந்து, இவர்களின் பாத தூளியைப் பெறுவேனாகில் அதுவே எனக்குப் பெரும் பாக்கியமாகும். ஏனெனில், வேத விசாரத்தைச் செய்து அடையவேண்டிய முகுந்தனுடைய பாதாரவிந்

த்தை, இந்த ஸ்திரீகள், தள்ளுதற்கரிய உற்றார் உறவினர்களைத் துறந்தும், உலக வழக்கங்களைக் கடந்தும், எளிதில் அடைந்தார்கள்.

या वै श्रियाऽर्चितमजादिभिराप्तकामैः
योगेश्वरैरपि यदात्मनि रासगोष्ठ्याम् ।
कृष्णस्य तद्भगवतश्चरणारविन्दं
न्यस्तं स्तनेषु विजहुः परिरभ्य तापम् ॥ ६२ ॥

இப் பாதாரவிந்தங்களையே லக்ஷ்மீதேவி, ஆசையுடன் பிரதி தினமும் அர்ச்சித்து வருகிறாள். எல்லா ஸம்பத்துக்களையும் நிரம்பவும் பெற்ற பிரம்மாதி தேவர்களும், இந்த பாதாரவிந்தத்தையே வணங்குகிறார்கள். இதையே அஷ்டாங்க யோகிகளும் தியானஞ் செய்து வருகிறார்கள். கிருஷ்ணனுடைய இந்தப் பாதாரவிந்தத்தைத்தான் கோபஸ்திரீகள் ராஸக்கிரீடையில் தங்கள் ஸ்தனங்களின் மத்தியில் வைத்து அணைத்துக்கொண்டு மன்மத தாபத்தை யொழித்தார்கள்.

वन्दे नन्दव्रजस्त्रीणां पादरेणुमभीक्ष्णशः ।
यासां हरिकथोद्गीतं पुनाति भुवनत्रयम् ॥ ६३ ॥

ஆதலால் நான் இந்த நந்த கோகுலத்திலுள்ள ஸ்திரீ ரத்தினங்களின் பாததூளியைப் பன்முறை வணங்கி, சிரசில் தரிக்கிறேன். பகவானுடைய புகழைப் பாடும் இவர்களது சப்தம் மூன்று உலகங்களையும் புனிதமாக்குகிறதன்றோ !"

श्रीशुकः— अथ गोपीरनुज्ञाप्य यशोदां नन्दमेव च । गोपानामन्त्र्य दाशार्हो यास्यन्नारुरुहे रथम् ॥ ६४ ॥ तं निर्गतं समासाद्य नानोपायनपाणयः । नन्दादयोऽनुरागेण प्रावोचन्नश्रुलोचनाः ॥ उद्धवः पुनरागच्छन् मथुरां कृष्ण पालिताम् ॥ कृष्णाय प्रणिपत्याऽऽह भक्त्युद्रेकं व्रजौकसाम् । वसुदेवाय रामाय राज्ञे चोपायनान्यदात् ॥ ६९ ॥

பிறகு உத்தவர் கோபிகைகளிடம் அனுமதி பெற்றுக்கொண்டும், அவ்விதமே யசோதை, நந்தகோபர், மற்றுமுள்ள கோபாலர்கள், இவர்களிடம் விடைபெற்றுக்கொண்டும் மதுராபுரிக்குத் திரும்புவதற்காக ரதத்தில் ஏறினார். அப்பொழுது

நந்தகோபர் முதலியவர்கள் பல காணிக்கைகளைக் கொடுத்து, கிருஷ்ணரைப் பலவாறு சிலாகித்தார்கள். பிறகு உத்தவர் மதுராபுரியை அடைந்து கிருஷ்ணரை வணங்கி கோகுலவாசிகளின் பக்திப் பெருக்கை உரைத்து, வஸுதேவர், பலராமர், உக்கிரஸேன மகாராஜர் முதலியோர்களுக்கு, தான் கொண்டுவந்த வெகுமதிகளைக் கொடுத்தார்.

## நாற்பத்தெட்டாவது அத்தியாயம்.



{ अष्टचत्वारिंशकेऽथ कृष्णः कुब्जामरीरमत् ।
अक्रूरस्य गृहं गत्वा तं गजाह्वयमादिशत् ॥ }

[கூனியை ஸந்தோஷப்படுத்துதல்—அக்ரூரின் வீட்டிற்குச் சென்று அவரை ஹஸ்தினாபுரத்திற்கு அனுப்புதல்.]

श्रीशुक उवाच– अथ विज्ञाय भगवान्सर्वात्मा सर्वदर्शनः । सैरन्ध्र्याः कामतप्तायाः प्रियमिच्छन्गृहं ययौ ॥ १ ॥ महार्होपस्करैराढ्यं कामोपायोपबृंहितम् । मुक्तादामपताकाभिर्वितानशयनासनैः । धूपैः सुरभिभिर्दीपैः स्रग्गन्धैरपि मण्डितम् ।

பிறகு கிருஷ்ணபகவான் மன்மத தாபத்தால் துன்புற்றிருக்கும் திரிவக்ரையின் கிருஹத்திற்குச் சென்றார். அவள் வீடு, விலையுயர்ந்த பல சாமான்களாலும், சிருங்காரத்தை நினைவூட்டி வளர்க்கும் பல படங்களாலும், நல்முத்துச்சரங்கள் தொங்குகின்ற மஞ்சங்களாலும், அழகாக விளங்கிற்று. நறுமணம் வீசும் தூபங்கள் கமழ்ந்தன. ஸ்வர்ண தீபங்கள் வரிசை வரிசையாக வைக்கப்பட்டிருந்தன.

गृहं तमायान्तमवेक्ष्य साऽऽसनात्सद्यः समुत्थाय हि जातसंभ्रमा ।
यथोपसङ्गम्य सखीभिरच्युतं सभाजयामास सदासनादिभिः ॥ ३ ॥

கிருஷ்ணபகவான் தன்னுடைய கிருஹத்தை நோக்கி வருவதை அறிந்து திரிவக்ரை, மிகவும் பரபரப்புடன்

ஆஸனத்தினின்றும் எழுந்து சகிகளுடன் அவரை எதிர்சென்றழைத்து ஆஸனத்திலமர்த்தி உபசரித்தாள்.

सा मज्जनालेपदुकूलभूषणस्रग्गन्धताम्बूलसुधासवादिभिः ।
प्रसाधितात्मोपससार माधवं सव्रीडलीलोत्स्मितविभ्रमेक्षितैः ॥ ५ ॥

அவள் ஸ்நானஞ்செய்து, வாசனைகளைப் பூசிக்கொண்டு, நல்ல ஆடை ஆபரணங்களை யணிந்து, பூமாலை தரித்து, தாம்பூலமிட்டு மதுவுண்டு, பகவான் ஆசையுடன் ஏற்றுக்கொள்ளுமாறு தன்னை அலங்கரித்துக்கொண்டாள். அதன்பின் அவள் மாதவனை யணுகி, நாணத்துடன் சிறிது புன்னகை செய்து புருவநெறிப்புடன் கூடின கடைக்கண்ணால் அவரை அழகாகப் பார்த்தாள்.

आहूय कान्तां नवसङ्गमह्रिया विशङ्कितां कङ्कणभूषिते करे ।
प्रगृह्य शय्यामधिवेश्य रामया रेमेऽनुलेपार्पणपुण्यलेशया ॥ ६ ॥

அப்பொழுது பகவான், சிறிது வெட்கத்துடனிருக்கும் அவளைத் தமதருகில் அழைத்து, அவளுடைய கையை தமது கரத்தால் பிடித்து மஞ்சத்திலமர்த்தி,அவளுடன் ரமித்தார். சிறிது சந்தனத்தைக் கொடுத்த புண்ணிய லேசத்தால் இப்பெரும் பாக்கியத்தை அவள் அடைந்தாள்.

.साऽनङ्गतप्तकुचयोरुरसस्तथाऽक्ष्णोर्जिघ्रन्त्यनन्तचरणेन रुजो मृजन्ती ।
दोर्भ्यां स्तनान्तरगतं परिरभ्य कान्तमानन्दमूर्तिमजहादतिदीर्घतापम् ॥

அப்பெண்மணி, பிரிய நாயகனின் பாதங்களை, கொதிக்கும் ஸ்தனங்களிலும் மார்பிலும் ஆசைதீர வைத்துத் தழுவி, தன்னிரு கண்களிலும் ஒத்தி முத்தமிட்டாள். அதன்பின் அவள், ஆனந்தவடிவமான காந்தனை, தன் ஸ்தனங்களுக்கிடையில் வைத்து, மார்போடணைத்து, வெகுகாலமாய் வருத்திய மன்மத தாபத்தைப் போக்கலானாள்.

तस्यै कामवरं दत्त्वा मानयित्वा च मानदः ।
सहोद्धवेन सर्वेशः स्वधामागमदर्चितम् ॥ १० ॥

பிறகு ஸர்வேச்வரனான பகவான், அவள் மனதுக்குவந்த வரங்களை யளித்து, பல வெகுமதிகளைக் கொடுத்து, உத்தவரையும் அழைத்துக்கொண்டு தனது திருஹஞ் சென்றார்.

अक्रूरभवनं कृष्णः सहरामोद्धवः प्रभुः । किंचिच्चिकीर्षयन्प्रागादक्रूरप्रियकाम्यया ॥ १२ ॥ स तान् नरवरश्रेष्ठानारात् वीक्ष्य स्वबान्धवान् । प्रत्युत्थाय प्रमुदितः परिष्वज्याभिनन्द्य च ॥ १३ ॥ प्रश्रयावनतोऽक्रूरः कृष्णरामावभाषत ॥ १६ ॥

அதன் பிறகு பிரபுவான கிருஷ்ணர், முன் அக்ரூருக்கு வாக்களித்ததை மனதில் நினைத்து, அவரை மகிழச் செய்வதற்கும், அவர் மூலம் பாண்டவர்களின் வரலாற்றை அறிவதற்கும் எண்ணங்கொண்டு, உத்தவரையும் பலராமரையும் அழைத்துக் கொண்டு, அவருடைய கிருஹத்திற்குச் சென்றார். அக்ரூரர் புருஷோத்தமர்களின் வருகையைப் பார்த்து, உள்ளங்களித்து, எதிர் கொண்டழைத்து, ஆலிங்கனஞ்செய்து, தலைவணங்கி,

दिष्ट्या पापो हतः कंसः सानुगो वामिदं कुलम् । भवद्भ्यामुद्धृतं कृच्छ्राद्दुरन्ताच्च समेधितम् ॥ १७ ॥ युवां प्रधानपुरुषौ जगद्धेतू जगन्मयौ ।

“கிருஷ்ண! நற்காலத்தால் துஷ்டனான கம்ஸன் அவனது சுற்றத்தாருடன் மாண்டான். யதுகுலம் துக்கக் கடலினின்றும் உத்தாரணஞ் செய்யப்பட்டு, இப்பொழுது செழிப்புற்று ஓங்குகிறது. நீங்கள் உலகத்திற்குக் காரணமான புருஷோத்தமர்கள்.

त्वयोदितोऽयं जगतो हिताय यदा यदा वेदपथः पुराणः ।
बाध्येत पाखण्डपथैरसद्भिस्तदा भवान्सत्त्वगुणं बिभर्ति ॥ २३ ॥

உலக க்ஷேமத்தைக் கருதி, நீர் வேதமார்க்கத்தை உரைத்தீர். அந்த அநாதி மார்க்கத்தை எப்பொழுது கெடுமதியுடைய நாஸ்திகர்கள் கெடுக்க முயலுகிறார்களோ, அப்பொழுது நீர், சுத்த ஸத்துவ குணத்துடன் அவதரிக்கின்றீர்.

स त्वं प्रभोऽद्य वसुदेवगृहेऽवतीर्णः स्वांशेन भारमपनेतुमिहासि भूमेः ।
अक्षौहिणीशतवधेन सुरेतरांशराज्ञाममुष्य च कुलस्य यशो वितन्वन् ॥

பிரபுவே! நீர் இப்பொழுது வஸுதேவரின் கிருஹத்தில் பலராமருடன் அவதரித்து, அஸுரப்பிராயமான அரசர்களையும் அவர்களது பலகோடி சைன்யங்களையும் கொன்று, பூபாரத்தைப் போக்கி, உமது குலத்தின் புகழை எங்கும் பரவச் செய்கிறீர்.

**अद्येश नो वसतयः खलु भूरिभागा यः सर्वदेवपितृभूतनृवेदमूर्तिः ।
यत्पादशौचसलिलं त्रिजगत्पुनाति स त्वं जगद्गुरुरधोक्षज याः प्रविष्टः ॥**

ஈசா! அதோக்ஷஜா! ஜகத்குருவே! எல்லா தேவர்களின் வடிவமாகவும், பிதிருக்களின் வடிவமாகவும், எல்லாப் பிராணிகளின் வடிவமாகவும் இருக்கும் நீர், இப்பொழுது நரோத்தமனாக அவதரித்து என் கிருஹத்திற்கு வந்தமையால், நாங்கள் வசித்துவரும் கிருஹமனைத்தும் தபோவனத்தினும் மிகுதியான பாக்யத்தைப் பெற்றதாயின. உமது பாதங்களை அபிஷேகம் செய்த தீர்த்தம் மூன்று உலகங்களின் பாபத்தையும் போக்கி, பரிசுத்தமாகச் செய்கின்றது.

**दिष्ट्या जनार्दन भवानिह नः प्रतीतो योगेश्वरैरपि दुरापगतिः सुरेशैः ।
छिन्ध्याशु नः सुतकलत्रधनाप्तगेहदेहादिमोहरशनां भवदीयमायाम् ॥**

தேவ சிரேஷ்டர்களாலும் யோகிகளாலும் அறிய முடியாத வழியையுடைய நீர் அவிவேகிகளான எங்களை அனுக்கிரஹஞ் செய்வதற்கென்றே எங்கள் கிருஹத்திலேயே தரிசனங் கொடுத்தீர். அது எங்கள் பாக்கியமே! ஆதலால் ஜநார்தன! மக்கள், மனைவி, பணம், முதலியவைகளில் மோஹத்தை விளைவிக்கும் உமது மாயையாகிற பாசத்தை அறுத்துவிடும். இதுதான் என் பிரார்த்தனை" என்று பிரார்த்தித்தார்.

**इत्यर्चितः संस्तुतश्च भक्तेन भगवान्हरिः ।
अक्रूरं सस्मितं प्राह गीर्भिः संमोहयन्निव ॥ २८ ॥**

இவ்வாறு அக்ரூரர் துதித்து முடிந்ததும், பகவான் புன்னகையுடன் பின்வருமாறு உரைத்து அவரை மோஹிக்கச் செய்தார்.

**श्रीभगवानुवाच—त्वं नो गुरुः पितृव्यश्च श्लाघ्यो बन्धुश्च नित्यदा ।
वयं तु रक्ष्याः पोष्याश्च अनुकंप्याः प्रजा हि वः ॥ भवद्विधा महाभागा
निषेव्या अर्हसत्तमाः । श्रेयस्कामैर्नृभिर्नित्यं देवाः स्वार्था न साधवः ॥**

"அக்ரூரரே! நீர் எனது தந்தையின் சகோதரர். சிறந்த குணம் வாய்ந்த பந்து. மோக்ஷத்தை விரும்பும் மனிதன், எக்காலத்திலும் உங்களைப் போன்ற பாகவதோத்தமர்களை யடைந்து, அவர்களுக்குப் பணிவிடை செய்து உபசரிக்கவேண்டும். அவர்கள்

போன்று தேவர்களும் நன்மையைச் செய்வதில்லை. ஏனெனில் தேவர்கள் தங்கள் காரியத்திலேயே கண்ணுயிருப்பவர்கள். சாதுக்களோவெனில் அவர்கள் போலன்று. பிறர் நன்மையையே கருதி வருவார்கள்.

**न ह्यम्मयानि तीर्थानि न देवा मृच्छिलामयाः । ते पुनन्त्युरुकालेन दर्शनादेव साधवः ॥ ३१ ॥ स भवान्सुहृदां वै नः श्रेयाञ्छ्रेयश्चिकीर्षया । जिज्ञासार्थं पाण्डवानां गच्छस्व त्वं गजाह्वयम् ॥३२॥ पितर्युपरते बालाः सह मात्रा सुदुःखिताः । आनीताः स्वपुरं राज्ञा वसन्त इति शुश्रुम ॥**

அவ்விதமிருப்பினும் சாதாரண புண்ணிய தீர்த்தங்களை வெறும் ஜலமென்றே, தேவதைகளை மண்சிலையென்றே, கருதக்கூடாது. அவைகள் தன்னைச் சேவித்த மனிதனை பரிசுத்தம் செய்வதில்லை யென்பதும் பொருந்தாது. ஆனல் அவைகள் வெகுகாலத்திற்குப் பிறகே தன்னைச் சேவித்தவனை பரிசுத்தஞ் செய்கின்றன. உங்கள் போன்ற மஹான்களோவெனில் பார்த்த மாத்திரத்திலேயே க்ஷேமத்தைச் செய்கிறீர்கள். ஆதலால் நீர் நம் ஞாதிகளிற் சிறந்தவர். பெரியோரே! நீர் பாண்டவர்களின் நன்மையைக் கருதி ஹஸ்தினபுரஞ் சென்று அவர்களின் தற்கால நிலைமையை அறிந்து வாரும். பிதாவான பாண்டு மஹாராஜன் சுவர்க்கம் சென்ற பிறகு, சிறுவர்களான பாண்டவர்களையும் குந்தி தேவியையும், திருதராஷ்ட்ர மஹாராஜன் ஹஸ்தினபுரத்திற்கு அழைத்துச் சென்றிருப்பதாகவும், அங்கு அவர்கள் பல கஷ்டங்களை அநுபவித்துக்கொண்டு அவன் கீழ் வசித்துவருவதாகவும் கேள்விப்படுகிறேன்.

**तेषु राजाम्बिकापुत्रो भ्रातृपुत्रेषु दीनधीः । समो न वर्तते नूनं दुष्पुत्र-वशगोऽन्धदृक् ॥ ३४ ॥ गच्छ जानीहि तद्वृत्तमधुना साध्वसाधु वा । विज्ञाय तद्विधास्यामो यथा शं सुहृदां भवेत् ॥ ३५ ॥ इत्यक्रूरं समादिश्य भगवान् हरिरीश्वरः । सङ्कर्षणोद्धवाभ्यां वै ततः स्वभवनं ययौ ॥ ३६ ॥**

துஷ்டப் பிள்ளைகளின் சொற்களைக் கேட்டு, அம்பிகா புத்திரனை அவ்வரசன் பாண்டவர்களிடம் இரக்கம் கொள்ளாது, சமமாகவும் நடப்பதில்லை என்றும் கேள்விப்படுகிறேன். ஆதலால்

பெரியோரே! நீர் ஹஸ்தினபுரஞ் சென்று அவ்வரசன் இப்பொழுது நியாயமாக நடந்து வருகிறுனை அல்லது அநியாய மாக நடந்துவருகிறுனை என்பதைத் தெரிந்து வாரும். அதன் பின் நாம் நன்கு ஆலோசனைசெய்து பாண்டவர்களுக்கு எது நன்மையோ அதைச்செய்வோம்." இவ்விதம் அக்ரூரரிடம் உரைத்து விட்டு பகவான், பலராமரையும் உத்தவரையும் அழைத்துக்கொண்டு தன்னிருப்பிடஞ் சென்ருர்.

## நாற்பத்தொன்பதாவது அத்தியாயம்.



{ ऊनपञ्चाशत्तमे तु गत्वाऽक्रूरो गजाह्वयम् ।
राज्ञः स्वभ्रातृपुत्रेषु बुद्ध्वा वैषम्यमागमत् ॥ }

[அக்நூரர் ஹஸ்தினபுரம் சென்று திருதராஷ்ட்ரன் பாண்டவர் களிடம் விஷமந் தன்மையுடன் இருப்பதை அறிந்து திரும்புதல்.]

**श्रीशुक उवाच—स गत्वा हास्तिनपुरं पौरवेन्द्रयशोऽङ्कितम् । ददर्श तत्राम्बिकेयं सभीष्मं विदुरं पृथाम् ॥ उवास कतिचिन्मासान्राज्ञो वृत्त-विवित्सया । दुष्प्रजस्याल्पसारस्य खलच्छन्दानुवर्तिनः ॥ ४ ॥**

அக்ரூரர், பகவான் இட்ட கட்டளைப்படி, கௌரவ சிரேஷ் டர்களின் புகழை விளக்கும் ஹஸ்தினபுரத்திற்குச் சென்று, அங்கு அம்பிகா புத்திரனை திருதராஷ்ட்ர மஹாராஜனையும், பீஷ்மாச் சாரியரையும், விதுரரையும், குந்தியையும், பார்த்தார். துஷ்டப் பிள்ளைகளைப் பெற்று மதியிழந்தவனும், துஷ்டர்களான துர் யோதனன், கர்ணன், முதலியோர்களை அனுசரித்து நடப்பவனு மான, திருதராஷ்ட்ரனின் விருத்தாந்தத்தைச் சரிவரத் தெரிந்து கொள்ளுவதற்கு எண்ணங்கொண்டு, அக்ரூரர் அங்கு சில மாதங்களைக் கழிக்கலானுர்.

**पृथा तु भ्रातरं प्राप्तमक्रूरमुपसृत्य तम् । उवाच जन्मनिलयं स्मरन्त्यश्रु-कलेक्षणा ॥ ७ ॥ अपि स्मरन्ति नः सौम्य पितरौ भ्रातरश्च मे । भगिन्यो**

भ्रातृपुत्राश्च जामयः सख्य एव च ॥ ८॥ भ्रात्रेयो भगवान्कृष्णः शरण्यो भक्तवत्सलः । पैतृष्वस्रेयान्स्मरति रामश्चांबुरुहेक्षणः ॥ ९ ॥

அப்பொழுது குந்திதேவி தன் சகோதரராகிய அக்ரூரர் வந்திருப்பதைக் கேள்வியுற்று, அவரருகிற் சென்று, தான் பிறந்ததையும், மணந்ததையும், தற்கால நிலைமையையும், நினைத்து வருந்தி, கண்ணீரைப் பெருக்கி, கலங்கின கண்களுடன் சொல்ல லுற்றாள். "அன்பா! என் தாய் தந்தையர்களும், சகோதரர்களும் சகோதரிகளும், சகோதரரின் புத்திரர்களும், என் சகிகளும், மற்றுமுள்ள ஞாதிப் பெண்களும், என்னையும் என் குழந்தைகளையும் நினைக்கிறார்களா? தமையன் குழந்தைகளான கிருஷ்ணரும் பலராமரும், என் குழந்தைகளை நினைக்கின்றார்களா?

सपत्नमध्ये शोचन्तीं वृकाणां हरिणीमिव ।
सान्त्वयिष्यति मां वाक्यैः पितृहीनांश्च बालकान् ॥ १० ॥

செந்நாய்களுக்கிடையில் அகப்பட்டுத் தத்தளிக்கும் மான்பேடு போன்று, சத்துருக்களுக்கிடையில் பல கஷ்டங்களை அனுபவிக்கும் என்னையும், தந்தையை யிழந்து அனாதைகளாக இருக்கும் என் குழந்தைகளையும், சமாதான வார்த்தைகளைக்கூறி பாவது கிருஷ்ணர் ஆற்றுவாரா?"

समदुःखसुखोऽक्रूरो विदुरश्च महायशाः । सान्त्वयामासतुः कुन्तीं तत्पुत्रोत्पत्तिहेतुभिः ॥ १५ ॥ यास्यन्राजानमभ्येत्य विषमं पुत्रलालसम् । अवदत्सुहृदां मध्ये बन्धुभिः सौहृदोदितम् ॥ १६ ॥

அரசே! குந்தியின் துக்கத்தைப் பார்த்து அவளுடைய சகதுக்கங்களைத் தம்முடையதாகவே பாவிக்கும் அக்ரூரரும், மாட்சிமைபொருந்திய விதுரரும், பாண்டவர்களின் உத்பத்தியையும் அவர்களின் தேவத்தன்மையையும் எடுத்துரைத்து அவளைத்தேற்றினார்கள். பிறகு அக்ரூரர், மதுராபுரிக்குத் திரும்பு முன்னர், புத்திரவாஞ்சையால் மதிகெட்டிருக்கும் திருதராஷ்ட்ரனிடஞ் சென்று, பந்துக்களின் சபையில், ராமரும், கிருஷ்ணரும், சிநேகத்தால் கூறிய நல்வார்த்தைகளைச் சொல்லலுற்றார்.

अक्रूर उवाच-भोभो वैचित्रवीर्य त्वं कुरूणां कीर्तिवर्धन। भ्रातर्युपरते पाण्डावधुनाऽऽसनमास्थितः ॥ धर्मेण पालयन्नुर्वीं प्रजाः शीलेन रञ्जयन्। वर्तमानः समः स्वेषु श्रेयः कीर्तिमवाप्स्यसि ॥ १८ ॥ अन्यथा त्वाचरँल्लोके गर्हितो यास्यसे तमः। तस्मात्समत्वे वर्तस्व पाण्डवेष्वात्मजेषु च ॥ १९ ॥

"விசித்திரவீரியன் புத்திரரே! மஹாராஜனே! கௌரவர்களின் கீர்த்தியை வளர்ப்பவரே! தம்பி பாண்டு மஹாராஜன் சுவர்க்கம் சென்றபின், அவருக்குப் புத்திரர்களிருந்தும், அந்த சிம்மாசனத்தில் நீர் வீற்றிருக்கின்றீர். இதை நாம் அறிவோம். எந்த அரசன் பூமியைத் தர்மநெறி வழுவாது அரசு புரிந்தும், பிரஜைகளைச் சீலத்தினால் மகிழச் செய்தும், தன்னைச் சார்ந்தவர்களிடம் பக்ஷபாதமின்றி சமமாக நடந்தும்வருகிறானோ, அவ்வரசன் பெரும் புகழையும், சம்பத்தையும் அடைகிறான். அன்றேல் அவன், உயிருடனிருக்கும்பொழுதே உலகத்தோரால் இகழப்படுகிறான். மரித்தபின் பாழும் நரகத்தில் விழுகிறான். ஆதலால் மஹாராஜனே! பாண்டவர்களையும் உமது புத்திரர்களையும் சமமாக பாவிப்பீராக.

नेह चात्यन्तसंवासः कर्हिचित्केनचित्सह। राजन्स्वेनापि देहेन किमु जायात्मजादिभिः ॥ २० ॥ तस्माल्लोकमिमं राजन् स्वप्नमायामनोरथम्। वीक्ष्याऽयम्यात्मनाऽऽत्मानंसमःशान्तो भव प्रभो ॥

ஒருவனுக்குத் தன்னுடைய தேகத்துடனுங்கூட இடைபிரியாச் சம்பந்தம் ஏற்படாதெனில், அவனுக்கு மனைவி மைந்தர்களின் சம்பந்தம் எங்ஙனம் நிலைத்ததாகும்? ஆகையால் பிரபுவே! இவ்வுலகத்தை ஸ்வப்னம் போன்றும் மாயைபோன்றும் பொய்யாகத் தோன்றுகிறதென்று நிச்சயித்து, மனதை யடக்கி எல்லாவற்றையும் சமமாகப் பாவித்து, ஆசை வெறுப்பு இவைகளை ஒழித்து, சாந்தராய் வாழ்வீராக."

धृतराष्ट्रः-यथा वदति कल्याणीं वाचं दानपते भवान्। तथाऽनया न तृप्यामि मर्त्यःप्राप्य यथाऽमृतम् ॥ तथाऽपि सूनृता सौम्य हृदि न स्थीयते चले। पुत्रानुरागविषमे विद्युत्सौदामनी यथा। ईश्वरस्य विधिं कोऽनु विधुनोत्यन्यथा पुमान्। भूमेर्भारावतराय योऽवतीर्णो यदोः कुले ॥ २८ ॥

அக்ரூரர் இவ்வாறு கூறியதைக் கேட்டு திருதராஷ்ட்ரன் "அக்ரூரரே! நீர் உரைத்தவை யாவும் மங்களத்தைக் கொடுப்பன. நீர் மங்களத்தைக் கொடுக்கும் நல்வார்த்தைகளைக் கூறினீர். மரிக்கும் இயல்புடைய மனிதன் அமிருதத்தை யடைந்து போதுமென்று திருப்தியடையாதது போன்று, நானும் உம்முடைய அழகான உபதேசங்களைக் கேட்பதில் மிகுதியும் ஆவல்கொள்கிறேன். ஆயினும் ஸுதாமா என்ற பர்வதத்தில் தோன்றி மறையும் மின்னற் கொடிபோன்று, புத்திரனிடம் வைத்த அன்பால் மதிகெட்டிருக்கும் என் மனதில், தர்மத்தை அநுசரித்தனவும், எனக்கு நன்மை பயப்பனவுமான உமது உபதேசங்கள் சிறிதும் தங்கவில்லை. ஈசுவர ஸங்கல்பத்தை யாரால் தடுக்கமுடியும்? அந்த ஈசுவரனே இப்பொழுது யதுகுலத்தில் அவதரித்திருக்கிறார்.

**यो दुर्विमर्शपथया निजमाययेदं सृष्ट्वा गुणान्विभजते तदनुप्रविष्टः ।**
**तस्मै नमो दुरवबोधविहारतन्त्रसंसारचक्रगतये परमेश्वराय ॥ २९ ॥**

அந்த ஈசுவரனே ஒருவராலும் ஊஹிக்கமுடியாத வழியில் தன் மாயாசக்தியால் இப்பிரபஞ்சத்தை சிருஷ்டித்து அதனுள் பிரவேசித்து, கர்மத்துக்குத் தகுந்தபடி பலன்களை அளிக்கிறார். இந்த ஸம்ஸார சக்ரம் அவரது திருவிளையாடலையே முக்கிய காரணமாகக்கொண்டது. அத் திருவிளையாடலோ ஒருவராலும் எளிதில் அறியமுடியாத மகிமை வாய்ந்தது. இந்த ஸம்ஸார சக்ரத்தின் கதியும் அவரே. அந்த ஈசுவரனுக்கு என் மனமார்ந்த வந்தனத்தைச் செலுத்துகிறேன்" என்று உரைக்கலானார்.

**श्रीशुक उवाच— इत्यभिप्रेत्य नृपतेरभिप्रायं स यादवः । सुहृद्भिः समनुज्ञातः पुनर्यदुपुरीमगात् ॥ ३० ॥ शशंस रामकृष्णाभ्यां धृतराष्ट्रविचेष्टितम् । पाण्डवान्प्रति कौरव्य यदर्थं प्रेषितः स्वयम् ॥ ३१ ॥**

இவ்விதம் அக்ரூரர் அரசனின் அபிப்பிராயத்தை அறிந்தபின் பந்துக்களிடம் விடைபெற்றுக்கொண்டு மதுராபுரிக்குத் திரும்பினார். பிறகு அவர், ராமகிருஷ்ணர்களிடம் திருதராஷ்ட்ரனின் நிலைமையையும், பாண்டவர்களிடம் அவன் நடந்துவருவதையும், தான் தூதுசென்ற வரலாற்றையும், எடுத்துக்கூறினார்.

பூர்வார்த்தம் முற்றிற்று.